# தமிழ் இலக்கிய வரலாறு

## பதினாறாம் நூற்றாண்டு

### இரண்டாம் பாகம்



மு. அருணாசலம்

# தமிழ் இலக்கிய வரலாறு

## பதினாறாம் நூற்றாண்டு

### பாகம் - 2

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*

*இராயப்பேட்டை*

*சென்னை - 14.*

# தமிழ் இலக்கிய வரலாறு

**பதினாறாம் நூற்றாண்டு, பாகம் – 2**

**மு. அருணாசலம்**



*முதற் பதிப்பு : அக்டோபர் 1975.*
*திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.*
*பக்கம் : xl + 304 = 344.*

*பதிப்பு :*
**தி பார்க்கர்**
*293, அகமது வணிக வளாகம்,*
*இராயப்பேட்டை நெடுஞ்சாலை,*
*இராயப்பேட்டை, சென்னை - 600 014.*

**விலை : 262. 00**

*வடிவமைப்பு :*
**வே. கருணாநிதி**

*அச்சிட்டோர்:*
**தி பார்க்கர்**
*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,*
*இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.*

# முகவுரை

திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.

'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.

திருச்சிற்றம்பலம். **அ. சிதம்பரநாதன்**
15. 11. 2004.

# நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பால சுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், 16ஆம் நூற்றாண்டு வரலாற்றை மூன்று பாகங்களாக ஆசிரியர் எழுதி வெளியிட்டுள்ளார். இது 16ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகம்.

அவர் வெளியிட்டுள்ள நூற்றாண்டு முறையிலான தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களில் இந்த 16ஆம் நூற்றாண்டு வரலாறு மட்டுமே மூன்று பாகங்களாக அவரால் எழுதப்பட்டுள்ளது. இவை மூன்றும் சேர்ந்து 1124 பக்கங்கள் கொண்டதாக இத் திருத்தப்பதிப்பு வெளிவருகிறது. ஆசிரியர் வெளியிட்ட முதல் பதிப்பு மூன்று பாகங்களும் 1428 பக்கங்களில் கிரௌன் அளவில் வெளிவந்தது குறிப்பிடத்தக்கது.

இதேபோல் 9ஆம் நூற்றாண்டு வரலாற்றை அவர் மூன்று பாகங்களாக வெளியிடத் திட்டமிட்டிருந்தார். ஒரு பாகம் மட்டுமே அவரால் வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாம் மூன்றாம் பாகங்கள் அவர் மறைவு வரை வெளியிடப்படவில்லை. இரண்டாம் பாகத்தின் 'நம்மாழ்வார்' என்ற பகுதி மட்டும் தனி நூலாக அவரால் வெளியிடப்பட்டிருந்தது. இதனை இவ்வரலாற்றுத் தொகுதிகளுடன் 9ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகமாக நாம் வெளியிட்டுள்ளோம்.

அவரால் எழுதி வெளியிடப்பட்ட இலக்கிய வரலாற்றுத் தொகுதிகள் அனைத்தும் பக்கத்துக்குப் பக்கம் வெள்ளைத் தாள் இடையிட்டுக் கட்டமைப்புச் செய்யப்பட்ட ஒரு தொகுப்பு அவரது நூலகத்தில் காணப்பட்டது. இத்தொகுதிகளில் பல புதிய செய்திகளும் ஆங்காங்கே திருத்தங்களும் ஆசிரியரால் குறித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றை ஒவ்வொரு தொகுதியிலும் சேர்த்தும் திருத்தியும் முறைப்படுத்தியுள்ளோம்.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளிவருகின்றன. ஆசிரியர் வெளியிட்டவை 11. நாம் புதிதாகச் சேர்த்தவை 3. இவற்றுள் 14வது தொகுதியானது மேற்படி நூல்களில்

உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

திருச்சிற்றம்பலத்திலுள்ள ஆசிரியரது வீட்டில் இப்பணி தொடர்பாக நாம் சிலகாலம் தங்கியிருந்தோம். அங்குள்ள அவரது நூலகத்தில் தொடர்ந்து இந்த வரலாற்று நூல்களை எழுதும் பணியில் சில ஆண்டுகளுக்கான குறிப்புகளை அவர் எழுதி வைத்துள்ளார். அவர் எழுதத் தொடங்கி குறையாக நின்று போனவை 8ஆம், 9ஆம், 17ஆம் நூற்றாண்டுகள் என்பது அவர் வைத்திருந்த குறிப்புக்களில் இருந்து உணர முடிந்தது.

எழுதும் பணியையும் வெளியிடும் பணியையும் ஆசிரியர் ஒருவரே மேற்கொண்டதால் அவரது எழுத்துப் பணி தடைப் பட்டுப் போனதாகவே கருதவேண்டியுள்ளது. தமிழகத்தில் எழுத் தாளருக்கும் பதிப்பாளருக்கும் இடையிலான மனப்போராட் டங்களால் எழுத்தாளரே பதிப்பாளராகவும் மாறிவிடும் போக்கு நீண்ட காலமாகவே இருந்து வருகிறது. அச்சகத்தில் நுழைந்து மூளையைக் கசக்கிக் கொள்ளும் எழுத்தாளர்களால் தொடர்ந்து எப்படி எழுதமுடியும். அறிஞர் மு. அருணாசலம் அவர்களின் இப்பணியானது தடைப்பட்டுப்போனதும் இந்நிலை சார்ந்ததே.

தன் தந்தையாரின் இவ்விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக்கொணர எமக்கு அனுமதியளித்து, தனது வீட்டில் தங்கவைத்து எம்மை ஊக்கப்படுத்திய அவர் மகனார், உணவளித்து எம்மை உபசரித்த அவர் மருமகளார் இருவரும் மிகுந்த போற்றுதலுக்கு உரியவர்கள்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செல விட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடு கொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக் குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படை யில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

சென்னை
25. 12. 2005.

**வே. கருணாநிதி**

# முதல் பதிப்பின் முகவுரை

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
　　கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை ஏற்றான் தன்னைச்
　　சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
　　தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவாலவாய்ச்
　　சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

– அப்பர் சுவாமிகள்

## இந்நூற்றாண்டு வரலாறு

*இந்த இலக்கிய வரலாற்று நூல் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் - 1501 - 1660 ஆகிய கால எல்லைக்குள் வாழ்ந்த புலவர் வரலாற்றையும் அவர்கள் செய்த நூல்களையும் ஆராய்கிறது. வெறும் செய்திகளைச் சொல்வது மட்டுமல்ல, இலக்கியத்தின் பொதுவான போக்கும் வளர்ச்சியும் எத்தகையன என்பதை ஆராய்வதும், ஓரளவு, தோன்றிய இலக்கியங்களின் விமரிசனமும் (திறனாய்வும்), இந்நூல்களின் நோக்கமாகும். இதுவரை 10, 11, 12 (2 பாகம்), 13, 14, 15 ஆகிய ஆறு நூற்றாண்டு இலக்கிய வரலாறுகள் முழுமையாகவும், 9ஆம் நூற்றாண்டு வரலாறு மூன்று பாகங்களில் முதல் பாகமும் ஆக எட்டு நூல்கள் வெளிவந்துள்ளன. இப்போது வெளிவருவது ஒன்பதாவது வரலாற்று நூலாகும். 9ஆம் நூற்றாண்டுக்குரிய ஏனைய இரு பாகங்களும் 16ஆம் நூற்றாண்டுக்குரிய ஏனைய இரு பாகங்களும் விரைவில் வெளியாகும்.*

---

* இம்முகவுரைச் செய்திகள் பல இத்திருத்தப் பதிப்பில் மாற்றத்திற்கு உட்பட்டிருக்கிறது.

இப்போது வெளிவருவது 16ஆம் நூற்றாண்டு வரலாற்றில் இரண்டாம் பாகமாகும். முதல் பாகம் இன்னும் அச்சு முடிய வில்லை. முதல் பாகத்துக்கு, 16ஆம் நூற்றாண்டின் புராண இலக் கியம் என்று பெயர் சூட்டித் தனிப்புத்தகமாக வெளியிடும் நோக் கத்தோடு 1973ஆம் ஆண்டு தொடக்கத்தில், புதிய அச்சகத்தார் ஒருவரிடம், அவருக்கு ஆதரவு அளிக்கும் நோக்கத்துடன், ஓரளவு முன்பணத் தொகையும் தந்து, அச்சுக்குக் கொடுத்தோம். ஆண்டுகள் ஏறக்குறைய மூன்றாகியும் அப்புத்தகம் பாதியில் நின்றிருக்கிறது, முடிவடையவில்லை. இறைவன் அருள் இருந் தால் அப்பாகம் 1975 இலாவது முடிவு பெறவேண்டும்.

இந்த நிலையில் எஞ்சிய பகுதியையும், 9 - 1 பாகத்தை முன் அச்சிட்ட நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ் இடமே கொடுத்து அச்சிட முயன்றபோது, இங்கும் பல தொந்தரவுகளால் நீண்ட தாமதம் நேர்ந்து விட்டது. கழுத்தை நீட்டிய பிறகு, இழுத்துக் கொள்வது எளிதல்ல. எப்படியோ இப்பகுதி இப்போது வெளிவருகிறது. இரண்டாம் பகுதியாகிய எஞ்சிய நூலை ஒரே பாகமாக வெளி யிட முயன்றபோது, இது அளவில் பெரிதாயிருப்பது புலப்பட் டது. 700க்கு மேற்பட்ட பக்கங்களை ஒரே பாகமாக வெளியிடு வது முன்வந்த நூல்களோடு ஒத்திராதாகையால், இதையும் இரண்டாகப் பிரித்து, இரண்டாம் பாகம் மூன்றாம் பாகம் என அச்சிடுகிறோம். இது இரண்டாம் பாகம். இதற்கு முன்னுரை அகராதிகள் முதலியன தனியாகவே செய்யப்பெற்றுள்ளன. மூன்றாம் பாகம் அடுத்துத் தனி நூலாக வெளிவரும்.

முன் சொன்னது போல, 16ஆம் நூற்றாண்டு இலக்கிய வர லாற்றின் முதற்பாகம் புராணம் இலக்கியம் மட்டும் ஆராய்வது. இந்த நூற்றாண்டில் எண்ணற்ற புராணங்கள் தோன்றியிருக் கின்றன. அவையனைத்தையும் தென்காசிப் பாண்டியர், கமலை ஞானப்பிரசாகர் வழி சைவ எல்லப்ப நாவலர், பிற சைவ புராண ஆசிரியர், வைணவ புராண ஆசிரியர் என்ற ஐந்து அத்தியாயங் களில் விரிவாக ஆராய்ந்திருக்கிறோம். அப்பாகம் நீங்க இவ் விரண்டாம் பாகத்தில் இலக்கியம், நீதிநூல், இலக்கிய உரைகள், இலக்கணம், இலக்கண உரைகள், சைவ இலக்கியம் என்ற ஆறு அத்தியாயங்களில் எஞ்சிய நூல்களில் ஒரு பகுதியை ஆராய்ந்து உரிய முன்னுரை அட்டவணைகளோடு தனி நூலாக இப்போது வெளியிடுகிறோம். மூன்றாம் பாகத்தில் சைவ சாத்திர உரைகள், வைணவ இலக்கியம், சைன இலக்கியம், தோத்திர இலக்கியம்,

சித்தர் பாடல், பிரபந்த இலக்கியம், பிறவகை இலக்கியம், உரைநடை என்ற எட்டு அத்தியாயங்களும் அவற்றுக்குரிய முன்னுரை அகராதிகளோடு தனி முழுநூலாக அடுத்து வெளிவரும்.

## முன்னூல்

முதன்முதல் இவ்வகை நூற்றாண்டு முறை வரலாற்று நூலாக வெளிவந்த புத்தகம், இலக்கண விளக்க பரம்பரை சோம சுந்தரதேசிகர் எழுதிய 'தமிழ்ப் புலவர்கள் வரலாறு பதினாறாம் நூற்றாண்டு' என்ற புத்தகம் ஆகும். வெளியான ஆண்டு 1936. இதன்கண் 39 ஆசிரியர் வரலாறுகள் சொல்லப்பட்டுள்ளன. பெயரகராதியும் திரு. வையாபுரிப்பிள்ளை எழுதிய முகவுரையும் கொண்டது. இதுவே நூற்றாண்டு முறையனைத்துக்கும் தோற்றுவாயான முதல் நூலாகும். தேசிகர் தம் முதல்நூல் எழுதிய காலத்து யாம் உடன் இருந்திருக்கிறோம். அவர் 17ஆம் நூற்றாண்டின் புலவர் வரலாறு எழுதி அச்சிடும் வேலை முடியுமுன் காலமாகி விட்டார். அவர் இவ்வாறு இவ்விரு காலப் பகுதிகளை எழுதியமையாலேயே, யாம் காலத்தில் பின்னோக்கிச் சென்று 15, 14, 13 என்று நூற்றாண்டு முறையாக எழுதத் தலைப்பட்டோம். தேசிகர் எழுதிய புத்தகம் மிகவும் சுருங்கிய அளவினது; பக்கம் 250. ஆனால் யாம் இப்போது எழுதி வெளிவர இருக்கும் மூன்று பாகங்களும் 1250 பக்கம் ஆகும்.

சிறப்பு, அளவில் மட்டுமல்ல. தேசிகர் புலவர் வரலாற்றைக் கூறுவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டார். எமது நோக்கம் இலக்கிய வரலாறு; இதில் புலவர் வரலாறு ஒரு பகுதியாய் அமைகிறது. அவ்வளவே. ஆனால் இங்கு இலக்கியப் பாகுபாடு, இலக்கிய வளர்ச்சி, புலவர் வரலாறு, கதைகள், கல்வெட்டுச் சான்றுகள், இவற்றின் ஆராய்ச்சி, கால வரையறை என்ற இவையும், இவற்றின் மேலாக நூல்களும் நூல்களின் திறனாய்வும், சிறப்பிடம் பெறுகின்றன. இவை தேசிகர் சிறுநூலில் இல்லை. இவ்வம்சங்களைத் தமிழ் அறிஞர் பெருமக்கள் போற்றியிருப்பதிலிருந்து இவை வரலாற்று நூலில் எத்துணைச் சிறப்புடையவை என்பதை நன்குணரலாம்.

## வரலாற்றுப் பார்வை

எந்த இலக்கியத்தை ஆய்வதற்கும் கால அறிவு இன்றியமையாதது. காலமே குறித்த வகை இலக்கியம் உதிப்பதற்கான

சூழ்நிலையைப் படைத்துத் தருகிறது. இச்சூழ்நிலை அரசியல், சமுதாயம் இரண்டினாலும் விளைவது. சமுதாய நிலையும் கூட அரசியலினாலேயே உருவங்கொள்கிறது இந்த நூற்றாண்டு, புராண இலக்கிய வளர்ச்சியில் எவ்வளவு பங்கு கொண்டிருக்கிற தென்பதை இந்த வரலாற்றின் முதற்பாகத்தில் கூறியிருக்கிறோம்.

புராண இலக்கியம் போலவே, சமய இலக்கியமும், சமய இலக்கிய விளக்கமும் மிகவும் விரிவாகப் பெருகியிருக்கின்றன. புராண இலக்கியத்துக்குச் சொன்ன தோற்றுவாய் முழுமையும் இவற்றுக்குப் பொருந்தும். தமிழர்களுடைய ஆட்சி 150 ஆண்டுகளுக்கு முன்னமேயே ஒடுங்கிவிட்டது. சோழர் இல்லை, பல்லவர் இல்லை. சேரநாடு தனிமொழியை உண்டாக்கிக் கொண்டு தனியே பிரிந்து விட்டது. பாண்டியர் மதுரையை விட்டோடித் தென்காசி, சங்கரன் கோயில் முதலான இடங்களில் தங்கிச் சமயத்தையும் இலக்கியத்தையும் கலைகளையும் போற்றிப் பாதுகாத்தமை போற்றிக் கூறத்தக்க சிறப்புச் செய்தியாகும். இப்பாண்டியர்கள் தாங்களே சிறந்த கவிஞர்களாக விளங்கியது. இன்னும் பெருமை கொள்ளத்தக்க செய்தி.

தமிழ்நாட்டின் பெரும்பகுதி விசயநகர மன்னர் ஆட்சியில் அடங்கிவிட்டது. அவர்களுடைய பிரதிநிதிகளாக நாயக்கர் தலைவர் மதுரையிலும் தஞ்சையிலும் இருந்து ஆட்சிபுரிந்தார்கள். இவர்கள் தங்களையே அரசர்களென்றும் சொல்லிக் கொண்டார்கள். இவர்களெல்லோரும் தெலுங்கைத் தாய்மொழியாக உடையவர்கள். இருப்பினும் தங்கள் அவைகளில் தெலுங்குடன் கூடத் தமிழுக்கும் சிறப்பான ஆதரவளித்திருக்கிறார்கள். விசயநகர அரசரான கிருஷ்ண தேவராயர் (1509 - 1531) தாமே சிறந்த தெலுங்குக் கவிஞராக இருந்ததோடு, தமிழ்ப் புலவர்களுக்கும் ஆதரவளித்தவர். சூடாமணி நிகண்டு செய்த மண்டல புருடர் ராயரைக் குறிப்பிடுகிறார். இவர் சைனராயினும் இவருக்கும் ராயர் போதிய ஆதரவளித்திருக்கிறார். அரிதாசரென்ற வைணவப் புலவரும் தத்துவப் பிரகாசரென்ற சைவப் புலவரும் இவருடைய ஆதரவைப் பெற்றிருக்கிறார்கள். இவையெல்லாம் ராயருடைய விரிவான சமயப் பொறையை உணர்த்துகின்றன.

ராயர் முதலியவருடைய ஆட்சி காரணமாக வடபுறம் தெலுங்கு நாட்டில் போர்களிருந்த போதிலும் தமிழ்நாட்டில்

போரும் போரின் விளைவுகளும் இல்லை. இதன் பயனாக நாட்டில் அமைதி நிலவவே பலவகையாலும் தமிழ் தழைத்தோங்கியது. சைவபுராணங்கள், வைணவ புராணங்கள், சைவ சமயசாத்திரங்கள், உரைகள், வீரசைவம், இலக்கண நூல்களான பாட்டியல், நிகண்டு, அலங்காரம், அகப்பொருள் முதலியன எல்லாம் அளவின்றிப் பெருகின. திருவாரூரில் வாழ்ந்த கமலை ஞானப்பிரகாசர் விசயநகர மன்னரிடமிருந்து மானியங்களைப் பெற்றிருக்கிறார். கமலை ஞானப்பிரகாசர் வழியாக வளர்ந்த சமய வளமும் இலக்கியவளமும் பெரிது.

பாண்டியர் நூல் செய்ததற்குக் கூட நாயக்கர் ஆட்சி மறைமுகமான காரணமாகலாம். தென்காசிப் பக்கம் தங்களை நிலை நிறுத்திக் கொண்ட பாண்டியர்களுக்கு அரசியல் சூழலால் எவ்வித இடையூறும் நிகழவில்லை. சிறந்த தமிழ் அவைகளைக் கூட்டி இவர்கள் தமிழ் வளர்த்தார்கள் என்று தெரிகிறது. இவர்கள் போலவே திருக்குருகையிலும் பெரும் புலவர்களிருந்தார்கள். அவர்களுக்குத் தலைவராகத் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் விளங்கிப் பல நூல்கள் செய்தார்.

இவைபோலவே இக்காலத்தில் சமயம் பற்றிய வடமொழி நூல்களும் விரிவாக வளர்ந்தன. தஞ்சை நாயக்கருடைய ஆதரவில் சிவாக்கிரயோகி பல வடமொழி நூல்கள் செய்தார். மறை ஞான சம்பந்தரும் சில வடமொழி நூல்கள் செய்தாரென்று அறிகிறோம். நூல்களில்லை.

சில நீதி நூல்கள் தோன்றுவதற்கும்கூட அரசியலின் பிரதிபலிப்பே காரணமென்று நாம் கருதலாம்.

## இலக்கியத் திறனாய்வு

இப்பொருள் வழக்கம் போல் இந்நூலிலும் சிறப்பிடம் பெறுகிறது, இதுவரையில் இலக்கிய உலகில் சங்க நூல்கள் பாசுர இலக்கியங்களும் கம்பராமாணம் பெரியபுராணம் போன்ற காப்பியங்களுமே திறனாய்வுக்குப் பொருளாகக் கொள்ளப்பட்டு வந்திருக்கின்றன. ஆனால் தமிழ் இலக்கிய வளர்ச்சி இவற்றின் பின்னும் சிறப்பாக நிகழ்ந்திருக்கிறது. காலப்போக்கில், வெவ்வேறு வகையான தகுதிகள் பெற்ற இலக்கியங்கள் தோன்றி வந்துள்ளன. அவற்றையும் ஆய்வு செய்வது, வரலாற்றாசிரியர் கடமை. அந்த முறையில் இந்த நூலுள் மூன்று காப்

பியங்கள் இடம்பெறுகின்றன. இங்கெல்லாம் மேற்கோட் பாடல்கள் சிறப்பாகப் பெய்யப் பெற்றிருக்கக் காணலாம்; காரணம், இவை பற்றிய ஆய்வு நிகழாதிருப்பதால் இப்போது சிறிது விரித்தே சொல்ல வேண்டியிருக்கிறது.

இவைபோலவே, நீதி நூல்களைக் குறித்த அத்தியாயத் திலும் சைவ இலக்கியங்கள் குறித்த அத்தியாயத்திலும் இலக்கியத் திறனாய்வு ஓரளவு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. பல புத்தகங் கள் இன்று எளிதில் கிடைப்பதில்லை. ஆதலால் மேற்கோள்கள் பலவற்றையும் முழுமையாகவே எடுத்துத் தந்திருக்கிறோம். சாத் திரம் செய்த ஆசிரியர் பலர் தங்கள் நூல்கள் மூலம் தமிழில் புதுத்துறைகளை வகுத்துச் சென்றிருக்கிறார்கள். ஆதலால் அவர் கள் செய்த நூல்கள் பற்றிய விரிவான ஆய்வு, சமய நூல் என்ற அளவில் அல்லாமல், இலக்கியம் என்ற அளவில் பொருந்துவ தேயாகும்.

**தலைப்புக்கள்**

16ஆம் நூற்றாண்டின் இலக்கிய வரலாற்றைப் பேசும் போது, இதுவரை மேற்கொண்டுள்ள அத்தியாயத் தலைப்புக் கள் போதவில்லை. காரணம், புதிய இலக்கியப் போக்குக்கள் பெருகியுள்ளமையே. எடுத்துக்காட்டாக, புராணம் என்ற தலைப் பைச் சொல்லலாம். இப்பகுதி மட்டும் தனியாக மிகவும் விரிந்து சென்றமையால், இதைப் புராண இலக்கியம் என்று ஒரு தனிப் பகுதியாக்கி, இந்நூற்றாண்டு வரலாற்றில் முதல் பாகமாக அச் சிட நேர்ந்திருக்கிறது. அதுபோன்ற தலைப்புக்கள் மற்றும் பல. சங்ககாலத்தின் பின்தோன்றிய நூல் தொகுப்பாகிய பதினெண் கீழ்க்கணக்கினுள் பதினொரு நூல்கள் நீதி நூல்களாயுள்ளன. பின்னரும் நூற்றாண்டு தோறும், அவ்வை நூல்கள் அருங்கலச் செப்பு அறநெறிச்சாரம் போன்ற நீதிநூல்கள் எழுந்திருக்கின்றன. அந்த முறையில் இந்த நூற்றாண்டுக்குரியனவாக நான்கு சிறு நூல்கள் கிடைப்பதால் அவற்றுக்கு நீதி நூல்கள் என்ற தனி அத்தியாயத் தலைப்பு அமைக்கப்பெற்றது.

அதுபோலவே, இக்காலம் முதல் தோத்திர நூல்கள் பெருகி விட்டன. பிரபந்தங்களும் ஒருவகையில் தோத்திர நூல்களே. இருப்பினும், பிரபந்தம் அல்லாமல் தனியான தோத்திர நூல்கள் இக்காலத்து அதிகமாய் எழத் தொடங்கிப் பின்னர் பெருவளர்ச்சி

பெறுகின்றன. ஆகவே இவற்றை ஒரு தனி அத்தியாயமாக்கியுள் ளோம் (மூன்றாம் பாகம்).

இக்காலத்து, சைவ சாத்திர உரைகள் மிகவும் அதிகம். செம்மையான முறையில் அவற்றைத் தனியே ஆராய்ந்தால், புராண இலக்கியம்போல அவ்வாராய்ச்சியும் ஒரு தனிப் பாக மாகவல்லது. எனினும், அது இந்த நூற்றாண்டு வரலாற்று மூன் றாம் பாகத்தில் முதல் அத்தியாயமாகச் சுருங்கிய அளவில் இடம் பெறுகிறது.

**விளக்கங்கள்**

இந்நூலில் ஆராயப்பெற்ற எல்லா வரலாறுகளுமே இங்கு புது விளக்கம் பெறுகின்றன. வரலாற்றில் பலவாறு சிதறுண்ட செய்திகள் இங்கு ஒருங்கு தொகுக்கப்பெற்று முதன்முதலாக முறைப்படுத்தப்படுகின்றன. பல பரம்பரைகள், செய்திகள், நூல் அமைப்புக்கள் ஒழுங்குபடுத்தப் பெற்றுள்ளன. அச்சில் வராத பல நூல்கள் பற்றிய செய்திகள் ஏடு பார்த்து விளக்கப் பெற் றுள்ளன.

இது சமயக் கிளர்ச்சி மிகவும் அதிகமாய் எழுந்த காலம். இக்காலத்துக்குச் சிறிது முன்னதாக, காஞ்சி ஞானப்பிரகாசர் மடம் ஏற்பட்டது. அங்கு வாழ்ந்த ஆசாரியர் எந்த நூல்களும் செய்யவில்லை. ஆனால் அம்மடத்தின் சீடர்களாயிருந்த புரா ணத் திருமலைநாதரும் அவர் புதல்வர் பரஞ்சோதியும் சிறந்த இலக்கிய இலக்கணப் புலவர்களாயிருந்திருக்கிறார்களென்று அறிகிறோம். இந்த நூற்றாண்டில் நிலைக்கொண்டு வளர்ந்த சிறப்பான வேறு சைவ மடங்கள் நான்கு. திருவாவடுதுறையில் நமசிவாய மூர்த்திகள் இன்றும் விளங்கி வருகின்ற திருவாவடு துறையாதீனத்தை ஸ்தாபித்தார். ஆனால் இந்த நூற்றாண்டில் அங்கு ஆசாரியர் யாரும் நூல் செய்யவில்லை. சூரியனார் கோயி லில் ஸ்கந்த பரம்பரையில் ஒரு சைவ மடம் நிறுவப்பெற்றது. அதன் ஆசாரியரான வீழிச்சிவாக்கிர யோகிகள் வடமொழியிலும் தமிழிலும் சைவ சாத்திர நூல்கள் பல செய்தார். அந்தப் பரம் பரை நெடுங்காலம் சிறப்பாக ஓங்கி வளர்ந்து, இப்போது முழுமையும் மங்கி ஒடுங்கிவிடுகிற நிலையில் இருக்கிறது. மற் றோர் ஆசாரிய பீடம் தருமபுரத்திலுள்ளது. குருஞான சம்பந் தர் இங்கு மடத்தை நிறுவியதோடு, தோத்திர சாத்திர நூல்களும்

பல செய்தார். மற்றோர் மடம் இக்காலத்தில் பிரசித்தியடைந்தது துழாவூர் மடம். இங்கு குருஞான சம்பந்தரின் ஒருசாலை மாணாக் கரான நிரம்ப அழகிய தேசிகர் என்ற துறவி ஆசாரியராக இருந்து புராணங்களும் சித்தாந்த சாத்திர உரைகளும் செய்தார். இந்த ஆசாரியர் பரம்பரைகளைக் குறித்த விளக்கம் இந்த நூலில் விரித்துரைக்கப்படுவது இதன் சிறப்பு. நிரம்ப அழகிய தேசிகரின் வரலாறு, இந்த நூற்றாண்டு வரலாறு முதல் பாகத்திலும் மூன் றாம் பாகத்திலும் உரைக்கப்படுகிறது.

இனி, இந்த நூல் தரும் விளக்கங்களைப் பின்வருமாறு காட்டலாம்.

நூல் பற்றிய விளக்கம்: அரிச்சந்திர சரித்திரம், புரூரவ சரிதை, ஞானாவருண விளக்கம், திருச்செந்தூரகவல், சிவ ஞான தீபம், சைவ பரிபாஷை.

வரலாறு பற்றிய விளக்கம்: மேற்கூறிய ஆசாரியர்கள்; மறை ஞான சம்பந்தர், கமலை ஞானப்பிரகாசர், உலகநாத முனிவர், திருக்குருகைப் பெருமாள், இரேவண சித்தர்.

காலம் பற்றிய விளக்கம்: நீதிவெண்பா, உலகநீதி, திருச் செந்தூரகவல், தினகரவெண்பா.

கருத்துவிளக்கம்: பிராசாதயோகம், பிரபந்த மரபியல், அக ராதி நிகண்டு, நீதிநூல்கள், பாப்பாவினம், குறட்பா நூல்கள், இரத்தினச் சுருக்கம்.

ஏட்டுச்சுவடிகள்: பிரபந்த மரபியல், சிவாபூஜை பத்ததி; தனிநூலாக வெளியாகாத புரூரவ சரிதை, திருக்குறள் நுண் பொருள்மாலை, பரமத திமிரபானு.

### அட்டவணைகள்

இலக்கிய வரலாற்று அட்டவணைகளின் சிறப்பையும் பயனையும் குறித்து முன்வந்த நூல்களில் பல இடங்களில் விளக்க மாக எழுதியிருக்கிறோம். அவற்றையும் இங்கு உடன் வாசித்துக் கொள்ளுதல் பயனுடையது. இந்த நூலிலும் பல அட்டவணை கள் இடம் பெறுகின்றன. இரண்டு காப்பியங்களைக் குறித்தவை; ஒன்று பொதுவான காப்பிய இயல்பையும், மற்றது இந்த நூற் றாண்டில் எழுந்த மூன்று காப்பியங்களுக்கிடையில் உள்ள சிறப் பான கதைப்போக்கையும் எடுத்து விளக்குவனவாகும். உவமான

சங்கிரகம், அணியிலக்கணம் என்ற இரண்டும் பற்றிய அட்ட வணைகள் தமிழில் இவ்விரு இலக்கணப் பிரிவுகளும் பற்றிய நூல்களைக் கோவைப்படுத்திச் சொல்லும்.

அடுத்து, ஒரே பெயருடைய ஆசிரியர் பலர் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்து நூல் செய்திருக்கிறார்கள். இவர்களைக் காலத்தால் பிரித்து வேறாகக் கருதாமையால் வரலாற்றாராய்ச்சி யில் பெருங் குழப்பமுண்டாகியிருக்கிறது. அகத்தியர், அவ்வை யார் என்ற நன்கு தெரிந்த பெயர்களே இந்த நிலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள். இங்கு நாம் ஆராயும் காலப் பகுதிக்குரியவர் களான மூன்று ஆசிரியர்களை இங்கு குறிப்பிடலாம்: மறை ஞான சம்பந்தர், பரஞ்சோதி, ஞானப்பிரகாசர் என்போர். இவர் களைக் குறித்து விரிவான விளக்க அட்டவணைகள் இங்கு உள்ளன. இதே காலத்துக்குரிய தத்துவப் பிரகாசர் முதலியோர் பற்றிய செய்திகளும் அட்டவணைகளும் மூன்றாம் பாகத்தில் வெளிவரும்.

இனி, சில ஆசிரியர் மாணாக்கர் பரம்பரை குறித்த செய்தி களும் அவர்கள் நூல்களும் விளக்கமில்லாமல் உள்ளன. அவை யும் இங்கு தனியே அட்டவணைப்படுத்தி அமைக்கப் பெற்றிருக் கலாம். குறிப்பிடத்தக்கவை, சிவாக்கிரயோகி பரம்பரை, கமலை ஞானப்பிரகாசர் பரம்பரை, தருமபுர ஆதீன பரம்பரை என்பன. சிவாக்கிரயோகி பரம்பரை அவர் ஆதீன நூல்கள் சிலவற்றில் காட்டப் பெற்றிருக்கும்; வேறிடத்தில் அதைக் காண்பது அரிது. கமலை ஞானப்பிரகாசர் பரம்பரையை யாரும் வரையறுத்துக் காட்டவில்லை; எமது 14ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற் றில் மட்டும் காட்டப்பட்டுள்ளது. தருமபுர ஆதீன பரம்பரை, ஆதீன நூல்கள் சிலவற்றில் காட்டப்பட்டுள்ளது; போதிய விளக்கம் அங்கு இல்லை. முத்தி நிச்சயப் பேருரையில் வெள் ளியம்பலவாணத் தம்பிரான் தரும் குறிப்புக்களைக் கொண் டும், எமது ஆராய்ச்சி முடிவுகளைக் கொண்டும், இங்கு விளக்க மாகத் தரப்பட்டுள்ளது. இதில் சிறப்பானது, குருஞான சம்பந் தருக்கு முன்னிருந்த ஆசாரியர் செய்த நூல்கள் பற்றிய விளக்கம். இதன் அடிப்படையில் அருள் நமச்சிவாயர், சிற்றம் பலநாடிகள், சம்பந்த முனிவர், கமலை ஞானப்பிரகாசர் ஆகி யோர் நூல்களும் குருஞான சம்பந்தர் நூல்கள் போல தரும புர ஆதீனத்துக்குரிய பண்டார சாத்திரங்களாகக் கொள்ளத் தக்கவையாகும்.

இவ்வட்டவணைகளுட் சில, நூலில் கட்டுரையினிடையேயும், சில நூலிறுதியில் பிற்சேர்க்கைப் பகுதியிலும் உள்ளன. இவற்றின் தனிப்பட்டியலைப் பொருளடக்கத்தை அடுத்துக் காணலாம். இப்பாகத்துக்குரிய ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணையும் அங்கு சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால் வழக்கமாய் உடன் வரவேண்டிய பெயர் கால அகராதிமுறை அட்டவணையென்பது, முழுமை கருதி, மூன்றாம் பாகத்தின் இறுதியில் அமைக்கப்பட்டுள்ளது.

**பிற்சேர்க்கை**

நூலகத்தே இருக்கத்தக்க சில குறிப்புக்கள், அங்கு விடப்பட்டமையால், தனியே எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளன. இவற்றைக் குறிப்பிட்ட பக்கங்களுடன் சேர்த்து வாசித்துக் கொள்க.

இவ்வாண்டுத் தொடக்கத்தில் வெளியான எமது 9ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு முதல் பாகத்தின் முகவுரையில், 16ஆம் நூற்றாண்டு முதல் பாகம் அடுத்து வெளியாகும் என்று சொல்லப்பட்டது. அதை அச்சுக்குக் கொடுத்த அச்சகம் வேலையொன்றும் செய்யாமையால் இரண்டாம் பாகம் இப்போது வெளியாகிறது. இதைத் தொடர்ந்து முதல் பாகம் முடித்து வெளியிடப்பெறும். பின்னர் மூன்றாம் பாகமும், இவற்றின் பின்னர் 9ஆம் நூற்றாண்டுக்குரிய பின்னிரு பாகங்களும் அச்சாகி வெளிவரும். தாமதமும் தொடர்பின்மையும் அன்பர்கள் பொறுக்க.

16ஆம் நூற்றாண்டு தமிழ்ப் புலவர் வரலாறு எழுதிய தேசிகர் நூலையும் குறிப்பிட்டிருந்தபோதிலும் கூட, ஆதார நூல்கள் அனைத்தையும் யாம் புதிதாய் ஆராய்ந்து இப்பாகம் எழுதப் பெறுகிறது. தேசிகருடைய கருத்தைத் தழுவியும் மறுத்தும் விளக்கியும் பெருக்கியும், பெரும்பகுதி புதியன ஆய்ந்து சேர்த்தும், இந்நூல் எழுதப் பெற்றிருக்கிறது. நூல்களை ஆய்ந்து வெளியிட்டோருடைய குறிப்புக்கள் ஆங்காங்கு சொல்லப்பட்டுள்ளன. குருஞான சம்பந்தர் பற்றிய ஆய்வு, இவர் இன்றும் சிறப்பாய் விளங்குகின்ற ஒரு ஞானபீடத்தை நிறுவிய முதல் ஆசாரியராதல் பற்றி, தனி நூலாகவும் வெளியிடப் பெறுகிறது.

வெளியாகின்ற இலக்கிய வரலாற்று வரிசையில் இது ஒன்பதாவது புத்தகமாக வருகிறது. இப்புத்தகம் அச்சான காலத்து, இடையே சுமார் ஆறுமாத காலம் சென்னையில் பெரும்பாலும்

எல்லா அச்சகங்களிலும் அச்சு வேலைகளை நிறுத்தி வைத்து அரசியல் காரணமாக வேறு வேலையை மேற்கொள்ளும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. இதனால் வெளியீட்டு வேலையில் தாமதம், அதனால் சோர்வு இத்தனையும் கடந்த நிலையிலேயே நூல் இப்போது வெளிவருகிறது.

இந்த நூல் யாம் எழுதியது, திருச்சிற்றம்பலத்தில் இருந்து கொண்டு; ஆனால் அச்சிடுவது, இப்போது யாம் சென்னையில் தங்க நேர்ந்த காரணத்தால், சென்னையில் இருந்து கொண்டு. இதில் பெரும் குறைபாடு உள்ளது. ஆராய்ச்சிக்கே அடிப்படை யான எமது நூல்கள் யாவும் திருச்சிற்றம்பலத்தில் உள்ளன. அவை இன்றி எதையும் இங்கு ஒப்புநோக்க இயல்வதில்லை. நூல்கள் அனைத்தையும் இங்கு கொண்டுவந்து சேர்த்துக் கொள்வது சாத்தியமும் அல்ல. இந்த நிலையில் புத்தகம் அச் சாகி வெளிவருவதில் உள்ள குறைகளை யாம் அறிவோம். அன் பர்கள் இவையும் பொறுக்க.

எம்மை இத்துறையில் எந்த நேரமும் ஈடுபடுத்தி நடத்தி வருகின்ற தோன்றத் துணையாகிய இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

இடரீர், உமக்கோர் இடம்நாடிக் கொண்டு
நடவீரோ காலத்தால்; நாங்கள் – கடல்வாய்க்
கருப்பட்டோங் கொள்முகில்சேர் காளத்தி காண
ஒருப்பட்டோம், கண்டீர் உணர்ந்து. – நக்கீரதேவர்.

சென்னை
02- 10- 1975.

மு. அருணாசலம்

# பொருளடக்கம்

# அட்டவணைகள்

இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் பயன் கருதி அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.



ooo

# இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்



---

1. இல்லாத நூல்கள்
2. அச்சாகாத நூல்கள்
3. புத்தக வடிவில் வராத நூல்கள்
4. வடமொழி நூல்கள்

# முன்னுரை

இப்போது வெளியாகின்ற 16ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு மூன்று பாகங்களுக்கும் பொதுவான சில கருத்துக்களை இங்கு ஆய்ந்து கூறலாம். 9ஆம் நூற்றாண்டில் தொடங்கிய சோழர் பேரரசு 13ஆம் நூற்றாண்டின் இறுதியில் மறைந்து போயிற்று. அதைத் தொடர்ந்து ஆதிக்கம் பெற்றிருந்த பாண்டியர் பேரரசு 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் நிலை குலைந்து சிதறிற்று. ஒரு பகுதியினர் தென்காசிப் பக்கம் ஓடித் தங்கள் பழைய நாட்டின் ஒரு பகுதிக்குத் தலைவர்களாக வாழ்ந்து வந்தார்கள். இந்த நிலையில் தமிழ்நாடு முழுமையிலோ அதன் எந்தப் பகுதியிலுமோ சிறப்பான ஒரு தனியான தமிழ் அரசர் ஆட்சி நடைபெறவில்லை. இந்தக் கோளாற்றால் காப்பியம் முதலான பலதுறை விரிவுகள் இந்த நூற்றாண்டில் இடம்பெறவில்லை. அவற்றுக்குப் பதிலாக, சூழ்நிலைக்கேற்றவாறு இலக்கியப் போக்கில் பெரு மாறுதல் ஏற்படுவதைக் காண்கிறோம். பண்டை நிலைமையின் முடிவுக்கும் பல புது நிலைமைகளின் தோற்றத் திற்கும் நிலைக்களமாக இந்த நூற்றாண்டு இடம்பெறுகிறது.

## அரசியல்

1498இல் வாஸ்கோ -ட - காமா என்ற மாலுமி ஐரோப்பாவில் போர்ச்சுகல் நாட்டிலிருந்து தென்னாப்பிரிக்காவின் தென்கோடி முனையாகிய நன்னம்பிக்கை முனை வழியாக, அக்காலம் பொன் விளையும் பூமி என்று ஐரோப்பியர் கருதிய இந்தியாவிற்குக் கடல் வழி ஒன்றை அமைத்து, மேல் கரையில் உள்ள கள்ளிக்கோட்டைக்கு வந்து சேர்ந்தான். அவனைத் தொடர்ந்து பிற ஐரோப்பிய நாட்டார் பலரும் கடல் வழியாக வரலாயினர். தொடக்கத்தில் இவ்வாறு வந்தவர்களுக்கு வாணிகம் ஒன்றே நோக்கம். வந்த இடத்தில் நாடு பிடிக்கும் எண்ணமோ, இந் நாட்டு மக்களைத் தங்கள் மதத்துக்கு மாற்றும் எண்ணமோ, இருக்கவில்லை. காலம் மாற மண்ணாசையும் சமய வெறியும் மேலோங்கின. வாஸ்கோ - ட - காமாவைத் தொடர்ந்து வந்த போர்ச்சுகீசியர் விரைவாகத் தங்கள் ஆதிக்கத்தைப் பெருக்கிக்

கொண்டார்கள். கொல்லம், கோவா முதலான இடங்களில் தங்கி ராணுவ அமைப்பையும் சமய அமைப்பையும் நிலை நிறுத்திக் கொண்டார்கள். ஐரோப்பியர் அனைவரிலும் இவர்கள் மிகவும் கொடுமையானவர் என்ற இகழ்ச்சி பெற்றிருந்தார்கள். இந்திய நாட்டு மக்களை இரக்கமில்லாமல் துன்புறுத்திக் கொலை செய்தார்கள். துப்பாக்கி முனையில் கணக்கில்லாமல் மதமாற்றமும் நடந்தது. தென்பாண்டி நாட்டுக் கடற்கரைப் பகுதியிலுள்ள பல்லாயிரக் கணக்கான மீனவர் போர்ச்சுகீசியர் கொடுமையால், உயிர் தப்ப வேண்டிக் கிறித்தவரானார்கள். அவர்கள் இடித்து நிறுவிய சைவ வைணவக் கோயில்களுக்கு எல்லையில்லை. ஓர் உதாரணம் - நாகூரில் இருந்த அரங்கநாதர் ஆலயம்.*

இந்தப் போர்ச்சுகீசியரின் வேலைக்குச் சிகரமாக ராபர்ட்டி - நொபிலி என்ற இத்தாலியப் பாதிரி இந்த நாட்டுக்கு வந்து மதுரையில் தங்கி இந்தியத்துறவி போல வேடம் பூண்டு, பெரும் அளவில் மதமாற்றம் செய்தார். அவர் வேலை எல்லாம் பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான். இவர்களால் விளைந்த ஒரே ஒரு நற்பலன் தமிழில் அச்சுத்தொழில் நிறுவப்பெற்றதாகும்.❖ இந்தியாவிலேயே முதன்முதலாக அச்சைக் கண்டது தமிழ்மொழி. ஒரு கிறித்தவத் தமிழ் ஏடு தமிழ் மொழியில் ரோமன் எழுத்தில் போர்ச்சுகல் நாட்டில் 1554இல் முதன்முதலில் அச்சிடப்பட்டது. தொடர்ந்து கொல்லத்தில் தமிழ் உலோக எழுத்துக்கள் 1577இல் செய்யப்பெற்றன. 1578இல் அங்கேயே ஒரு தமிழ்க் கிறித்தவப் புத்தகம் அச்சிடப் பெற்றது. இந்தியாவிலேயே முதல் முதலாக அச்சிடப் பெற்ற புத்தகம் இதுவே.

விசயநகரத்தின் பிரதிநிதியாகத் தென்னாடு போந்த குமார கம்பண்ணன் 1313இல் முகம்மதியர் ஆட்சியை ஒழித்தார் பிறகு தமிழ்நாட்டு ஆட்சிகளில் பெரும் குழப்பங்கள் விசய நகரத்தில் 1509 - 31இல் அரசாண்ட புகழ்பெற்ற கிருஷ்ண தேவராயர் காலத்தில் நாடெங்கும் ஒரு புதிய எழுச்சி உண்டாயிற்று. ராயர் தாமே சிறந்த தெலுங்குக் கவிஞராயும் விளங்கினார். வடமொழிக்கும் தமிழுக்கும் நிரம்ப ஆதரவு அளித்தார் தாம் வைணவ

---

* இவ்விவரங்களை டாக்டர் கே.கே. பிள்ளை எழுதிய தமிழக வரலாறு (1972) 15ஆம் அத்தியாயத்தில் விளங்கக் காணலாம்.

❖ இவர்கள் அச்சை இந்நாட்டில் புதிதாக அறிமுகப்படுத்தாது போயினும் கூட, காலத்தால் ஏற்படும் உலக மாறுதல்கள் இந்தியாவிலும் விளைந்து, அச்சுத்தொழிலும் தானே இங்கு (ஒருகால் சில ஆண்டுகள் பிற்பட்டு) வந்திருக்கும்.

ராயினும். சைவத்துக்கும் சைனத்துக்கும் கூட ஆதரவு கொடுத்தார். பின்னால் 1565இல் தாலிக்கோட்டைப் போரில் விசயநகரம் தோற்று விசயநகரப் பேரரசு அழிந்தபோது, அதன் பிரதிநிதிகளாக மதுரையிலும் தஞ்சையிலும் காவல் புரிந்த நாயக்கர் தனியான சிற்றரசர்களாக ஆகிவிட்டார்கள். இவர்களில் வலிமை வாய்ந்த சிலர் காலத்தில் மொழிக்கும் சமயத்துக்கும் சிறப்பு நிகழ்ந்தது உண்மை. அடுத்த நூற்றாண்டின் இடைப்பகுதியில் ஆட்சிபுரிந்த மதுரைத் திருமலை நாயக்கர் வரலாறு தமிழுலகம் நன்கு அறிந்தது. வேலூரில் ஆட்சி புரிந்த சின்னபொம்ம நாயக்கன் ஆதரவில் சிறந்த வடமொழிப் புலவராக அப்பைய தீட்சிதர் வாழ்ந்து கடல் போன்ற பரப்புடைய வடமொழிச் சைவ நூல்கள் செய்தார். தஞ்சையில் ஆட்சி புரிந்த சேவப்ப நாயக்கன் காலத்தில் கோவிந்த தீட்சிதர் வாழ்ந்து பல நாட்டு நிர்மாணச் செயல்கள் புரிந்திருக்கிறார். இவனால் ஆதரிக்கப்பெற்ற ஒரு சமய ஆசாரியர் சிவாக்கிரயோகி. அவருக்கு மடம் முதலியன இவனே கட்டிக் கொடுத்தான்.

இந்தச் செய்திகளை ஆராயும்போது தமிழ்நாட்டில் எந்த இடத்திலும் நிலைத்த ஒரு பேரரசு இல்லை என்பது விளங்கும். ஆகவே புலவர்களுக்குச் சிறப்பான ஆதரவோ பெருங்காப்பியங்கள் இயற்றும் சூழ்நிலையோ இல்லை. இதன் விளைவாக, நூல் செய்த ஆசிரியர் அனைவருமே, கடவுள் மீது புராணமும் தோத்திரமும், சமய தத்துவ நூல்களும் விளக்க நூல்களுமே செய்தார்கள்.

### தனி இலக்கியங்கள்

இரு வகையான தனி இலக்கியங்கள் இக்காலத்தில் தோன்றி இருக்கின்றன. ஒன்று காப்பியம் மற்றது நீதி நூல். மூன்று காப்பியங்கள் வெளிவந்துள்ளன. இவற்றுக்கு ஆதரவு தந்தவர்கள், முகம்மதியர் தாக்குதலின் பின் மதுரையைவிட்டு ஓடிய பாண்டியர் வழிவந்து தென்காசியில் தங்கள் தலைமையை நிறுவிக் கொண்ட பாண்டியர். அந்த மூன்று காப்பியங்களும் இவர்களுடைய ஆதரவிலே எழுந்தவை. அவை அரிச்சந்திரன், புரூரவன், நளன் ஆகிய மூன்று சக்கரவர்த்திகளின் வரலாறுகளைக் காப்பிய நயம்படச் சொல்லும். இம்மூவரும் தங்கள் நாடு நகரைப் பிரிந்து, மனைவி மக்களைப் பிரிந்து, சொல்ல முடியாத அல்லலுறுகிறார்கள். பாடிய புலவர்களில் ஒருவர் அதிவீரராம பாண்டியராகிய அரசர். மற்ற இருவரும் இரு கவிராசர். இவர்கள் தமிழ்நாட்டில் பேரரசுகளெல்லாம் நிலைகுலைந்து அழிந்து, அரச பரம்பரையினர் பட்ட அல்லல்களைக் கண்ணாரக் கண்டவர்

கள். ஆகவே இவர்கள் காப்பியம் செய்ய எண்ணியபோது இந்த அரசர்களைப் போலத் துன்பப்பட்ட மன்னர்களின் இதிகாச வரலாறுகளே நினைவில் வந்து பாடல் செய்யத் தூண்டியிருக் கிறது. இவ்வாறு விளைந்த காப்பியங்களே அரிச்சந்திர சரித் திரம், புரூரவ சரிதை, நைடதம் என்று மூன்றுமாகும்.

மற்றொரு பிரிவு நீதி நூல். சிறப்பான நூல்கள் இல்லா விட்டாலும், நான்கு நூல்கள் இக்காலத்தில் தோன்றியுள்ளன. வெற்றி வேற்கையானது ஓர் அரசரால் செய்யப்பெற்ற சிறப்பு டையது. நீதிவெண்பா தினகர வெண்பா இரண்டும் வெண்பா நூல்கள். நீதிவெண்பாவானது இன்றும் கூட, படிப்பில்லாத பாமர மக்கள் நாவிலும் வழங்கி வருகின்ற சாமானிய நூல் தின கர வெண்பா என்பது பின் இரு வரிகளில் ஒரு குறள் பாவை உள் ளடக்கி முன் இருவரிகளில் ஒரு நீதிக் கதையைக் குறிப்பிட்டு, பிற்காலத்தில் இதுபோன்ற அமைப்புடைய புதிய இலக்கிய மரபு தோன்றுவதற்கு வழிவகுத்திருக்கிறது. நான்காவதான உலக நீதி என்பது, இன்றும் கூட முதல் வகுப்புப் பிள்ளைகள் சாமானிய மாய்ப் பள்ளியில் பயிலும் வரிகளைக் கொண்டதாகும்.

### இலக்கண வளர்ச்சி

தொல்காப்பியமோ நன்னூலோ போன்ற பேரிலக்கணங் கள் இக்காலத்தில் தோன்றாவிட்டாலும், சிறப்புடைய நூல்கள் சில தோன்றி இருக்கக் காண்கிறோம்.

தமிழ் நாட்டில் இன்றுவரை பெரும் ஆட்சி பெற்றிருந்த சூடாமணி நிகண்டும், புதிதாக முதல் எழுத்தை அகராதி முறை யில் அமைத்துச் செய்யப்பெற்ற அகராதி நிகண்டும் இக்காலத் தில் தோன்றிய நிகண்டு நூல்கள். இந்த அகராதி அமைப்பே பதினெட்டாம் நூற்றாண்டில் சதுரகராதி தோன்றுவதற்கு வழி வகுத்துக் கொடுத்து, இன்றைய அகராதிகளுக்கெல்லாம் வித்திட் டது. பாட்டியலும் பிரபந்தங்களும் கூறும் இரு இலக்கண நூல் கள் இக்காலத்தே தோன்றின. அவை பிரபந்த மரபியல், சிதம்பரப் பாட்டியல் என்பன. வரலாற்றுக் கண்கொண்டு பார்க்கும் போது, பிரபந்த மரபியல் என்ற சிறு நூல்தான் முதன் முதலாக 96 பிரபந்தங்களைக் குறிப்பிடுகிறது என்ற செய்தி சிறப்புடை யது. திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்ற பெரும் புலவர் இக்காலத்தே வாழ்ந்து நம்மாழ்வார் பெயரால் பாவினம் கூறும் நூல் ஒன்றும், அகப்பெருள் கூறும் நூல் ஒன்றும், மாறனலங் காரம் என்ற அணியிலக்கண நூல் ஒன்றும் செய்திருக்கிறார்.

தண்டியலங்காரமும் மாறனலங்காரமுமே தமிழில் உள்ள அலங் கார நூல்கள் என்பது நினைவு கூரத்தக்கது. சங்ககாலப் பரி பாடலுக்குப் பிறகு பரிபாடல் என்ற பெயரில், இவர் செய்த பாப்பாவினம் என்ற நூலில்தான் பாடல்கள் காணப்படுகின்றன. வேறெங்குமே பரிபாடல் இல்லை.

## உரைநூல்கள்

முந்திய நூற்றாண்டுகளில் தோன்றிய சிறப்பான இலக்கிய இலக்கண உரைகள் போல இந்தக் காலப்பகுதியில் எந்த உரை யுமே தோன்றவில்லை. தோன்றிய இரண்டொரு சிறு உரைகளை 3, 5ஆம் அத்தியாயங்களில் ஆராய்ந்திருக்கிறோம்.

ஆனால் மிக விரிவான அளவில் சைவ சமய சாத்திர உரை கள் எழுந்துள்ளன. அவை விரிந்த பரப்புடையவை; தனியாகவே ஒரு புத்தகமாக அமையும் தகுதி உடையவை. அவற்றை இவ்வர லாற்றின் மூன்றாம் பாகத்து முதல் அத்தியாயத்தில் சுருக்கமாக ஆராய்ந்திருக்கிறோம். வைணவத்தில் மணிப்பிரவாள நடையில் சில உரைகளும் தோன்றி உள்ளன. அவையும் அப்புத்தகத்தில் ஆராயப்பெறுகின்றன.

## சைவ இலக்கியம்

இக்காலத்தில் அளவு கடந்த சைவ சமய எழுச்சி ஏற்பட் டுள்ளது. இவ்வெழுச்சியின் ஒரு பகுதி புராண இலக்கியமாகும். எண்ணற்ற புராணங்கள் - மகா புராணங்கள், தல புராணங்கள் போன்றன - தமிழில் செய்யப் பெற்றிருக்கின்றன. பேரரசர்களும் பெரும் புலவர்களும் சமய ஆசாரியரும் புராணம் செய்திருக் கிறார்கள், புராணம் செய்த ஆசிரியர் 21 புலவர்; புராணங்கள் 40; இவற்றின் பாடல் தொகை அறுபதாயிரத்து மேற்பட்ட செய் யுட்கள். இவற்றின் விரிவுகாரணமாக இவை இந்நூற்றாண்டு வரலாற்றின் முதல் பாகம் என்ற தனிப் புத்தகமாக வெளியிடப் படுகின்றன. ஒரு குறிப்பு புலப்படுகின்றது. தென்காசிப் பாண்டி யர்களுக்குக் குலகுருவாக இருந்தவர்கள் சிவாசாரியர். காலத் தின் அலங்கோலத்தை நன்கு உணர்ந்து இவர்கள் தங்கள் மாணாக்கராயிருந்த பாண்டியர்களைப் புராணம் செய்யும்படி தூண்டியிருக்கிறார்கள் என்று நாம் ஊகிக்கலாம்.

புராணங்களுக்கு அடுத்தபடியாக, கல்வியாளர் மனம் தத் துவ நூல் செய்வதில் சென்றிருக்கிறது. 12 - 14 நூற்றாண்டுகளில் சைவ ஆசாரியர்களான மெய்கண்டார், அருள்நந்தி, மறை

ஞான சம்பந்தர், உமாபதி சிவம் ஆகிய நால்வரும் வாழ்ந்து தங்கள் ஆசாரியத் தன்மையாலும் பின்வந்தோருக்குச் செய்து கொடுத்த சைவ சாத்திர ஞானநூல்களாலும், முன்னமே வழங்கி வந்த சைவ சமயக்கொள்கைகளுக்குச் சைவசித்தாந்தம் அல்லது சுத்த அத்வைதம் என்ற சிறப்பான பெயர் சூட்டி முறைப்படுத்தித் தந்தார்கள். உமாபதியாருக்குப் பின் அவரிடம் இருந்த மாணாக்கர் வழியாகப் பல கிளைகள் எழுந்தன. இவ்வாறு எழுந்தவற்றுள் சிறப்பான ஆசாரியர் பலர் தோன்றி இருக்கிறார்கள். இவர்களுள் மறைஞான சம்பந்தர், கமலை ஞானப்பிரகாசர், குருஞானசம்பந்தர் என்ற மூவரும் சிறந்த சைவ சித்தாந்த ஞானாசாரியராய் விளங்கி, சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு பாதங்களையும் விளக்கும் பல நூல்கள் செய்தார்கள். இவை சந்தான ஆசாரியருடைய சித்தாந்தக் கருத்துக்களுக்கு அரண் செய்து மேலும் உயிர் கொடுத்துவளர்த்தன. மெய்கண்டார் முதலியோர் நூல்கள் ஞானத்தைப் பெரிதும் விளக்கி உரைத்தன. எனினும், அக்காலத்தில் பல ஆசாரிய பீடங்கள் ஏற்பட்டமையால் சமய ஒழுக்கமும் சிவபூசையும் முக்கியமாக ஆயின. இந்த இரண்டு நெறிகளிலும் நூல்கள் பல இக்காலத்துச் செய்யப்பட்டன. இவ்வாசாரியருக்கு முன்னதாக யோக மார்க்கத்தில் அட்டாங்கயோகம் ஒன்றுமே வழங்கி வந்தது. புதிதாக இப்போது பிராசாத யோகம் என ஒரு புதிய யோகம் நெறி விரிவாகச் சொல்லப்படுகிறது.

இந்த மூவரையன்றி, மெய்கண்டார் பரம்பரையில் அல்லாமல் கந்தசுவாமி பரம்பரையில் ஒரு புதிய ஆதீனம் தோன்றி வளர்ந்தது. அதன் தலைவராக சிவாக்கிரயோகிகள் அமர்ந்து மிகவும் சிறப்புடைய தமிழ் நூல்களும் வடமொழி நூல்களும் செய்கிறார். அன்றி இவரே மணிப்பிரவாள நடையிலும் ஒரு புதிய உரை செய்கிறார். மேலும் இவர் கந்த பரம்பரையினராயிருப்பினும், வேறு பரம்பரையினரான மெய்கண்டார் பரம்பரையில் எழுந்த சிவஞான சித்திக்கு அரிய உரையும் எழுதினார். இதுவே அந்த மணிப்பிரவாள உரை.

இவையல்லாமல் இக்காலத்தில் தமிழில் முதலாவது வீரசைவ நூல் எழுகிறது. 12ஆம் நூற்றாண்டின் மத்தியில் கன்னட நாட்டில் வாழ்ந்த பசவர் சாதிகடந்த ஒரு புதுச் சமயம் பரப்பினார். அதுவே வீரசைவம் என்று பின்னால் பெயர் பெற்றது. நான்கு நூற்றாண்டுகள் கழித்துத்தான் இது தமிழ்நாட்டில் தலைகாட்டுவதை இலக்கிய வரலாற்றில் காண்கிறோம். ரேவண

சித்தர்* இந்த நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் சிவஞான தீபம் என்ற ஒரு சைவ சித்தாந்த நூல் செய்கிறார். 174 பாடல் கொண்ட இந்த நூலில் முழுமையும் சைவ சித்தாந்தம் சொல்லிய பிறகு, இறுதி ஐந்து பாடல்களில் மட்டும் வீரசைவத்தைக் குறிப்பிடு கிறார். அவருடைய வீரசைவம் சைவ சித்தாந்தத்தினும் வேறான தன்று. இருபதாம் நூற்றாண்டின் இரண்டாவது கால்கூறு காலத்தில் தமிழ்நாடு முழுமையும் சுற்றிச் சமயப்பிரசாரம் செய்த திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் போல இவர் நூல் செய்தார். அவர் வீரசைவராயினும் பேசியதெல்லாம் சைவ சித் தாந்தமே. அவரைப் போலவே இவரும் நூல் முழுமையும் சைவ சித்தாந்தமே சொல்கிறார். பிற்காலத்து 19, 20 நூற்றாண்டுகளில் வீரசைவம் அத்வைத வேதாந்தமாக மாறிவிட்டது.

இவ்வாறு பார்க்கும்போது, இந்த நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் பெரும்பகுதி சைவ இலக்கிய வரலாறாகவே அமை கிறது. இந்த நூலில் பாதி அளவு இந்த இலக்கிய ஆய்வுதான் என்பதும் புலப்படும் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல இந்த நிலைமைக்கு முக்கிய காரணம் அரசியல் நிலைமையே.

இந்த இலக்கியம் போலவே சைவ சமய இலக்கிய உரை களும் இக்காலத்தில் மிகவும் பெருகி இருக்கின்றன. இதற்கு முந்திய காலங்களில் இருபா இருபது - தத்துவநாதர்•உரை, சிவப்பிரகாசம் - மதுரை ஞானபிரகாசர் உரை மதுரை சிவப் பிரகாசர் உரைகள் போன்ற பேருரைகள் எழுந்திருந்தன. ஆனால் இக்காலத்தில்தான் மிகவும் சிறப்புடைய உரையாசிரியர்கள் பலர் வாழ்ந்திருக்கிறார்கள். இவர்கள் வேறிலக்கியங்கள் செய்திருந் தும் கூட உரைகளும் செய்கிறார்கள். உதாரணம்: மறைஞான தேசிகர் - சமய நூலும் உரைகளும், சிவாக்கிரயோகி - சமயதத்

---

* 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ஸ்ரீபதி பண்டிதர் பிரம்மசூத்திரத்துக்கு வீரசைவ பரமாகத் தாம் எழுதிய ஸ்ரீகர பாஷ்யத்தில் ரேவண சித்தர், மருளசித்தர், ராம சித்தர், உத்படா ராத்தியர், வேமனாராத்தியர் என்ற ஐவரும் தங்கள் கொள்கை களை நூல்களாக எழுதினர் என்று சொல்வர். இந்நூல்களே, கொள்கைகளோ இன்று தெரிய வழியில்லை. இது வெறும் ஐதிகக் கூற்று என்றே கருதப்படும். இவ்வைவருமே வீரசைவத்தில் பஞ்சா சாரியார், ரேவணார்யர், சேவணாசாரியர், ரேவணராத்தியர் என் றும் பெயர் பெறுகின்ற இந்த ரேவண சித்தர் சோமேசலிங்கத்தில் தோன்றியவர் என்பதும் ஒரு புராண வரலாறு. ரேவணாசாரியர், பசவருக்கும் பிற்காலத்தில் (ஸ்ரீபதிக்கு முன்) சித்தாந்த சிகாமணி (வடமொழி) எழுதினார் என்றும் சொல்வர். தமிழ் ரேவணர் அவர் பெயரைத் தரித்துக் கொண்டவர்.

துவ சாத்திரங்களும் உரைகளும், நிரம்ப அழகிய தேசிகர் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் முதலியோர் - புராணங்களும் சாத்திர உரைகளும். இவை எல்லாம், அரசியல் கொந்தளிப்புக்கள் காரணமாக அறிஞர் மனத்தில், புராணங்களும் உரைகளும், சாத்திரங்களும் உரைகளும் செய்வதில் எத்துணை ஆத்திரம் அளித்திருக்கின்றன என்பதைக் காட்டும். சாத்திர உரைகள் இந்நூல் மூன்றாம்பாகம் முதல் அத்தியாயத்தில் காணலாம்.

சைவ சமயத்தில் இலக்கியம் செய்த ஆசிரியர் பெயர்களிலும் ஒரு நயம் அமைந்திருக்கிறது. அவர்களுடைய பெயர் ஏதோ ஒரு பெயரல்ல: ஏறக்குறைய எல்லாப் பெயர்களும் சிறப்பான சிவ சம்பந்தமுடையவாயுள்ளன:* ஞானசம்பந்தர் இருவர் - ஒருவர் மறைஞான சம்பந்தர், மற்றவர் குருஞானசம்பந்தர். புராணகாரரர் ஒரு சம்பந்தர் (அளகை). ஞானப்பிரகாசர், தத்துவப் பிரகாசர் என்ற பெயர்கள் பல. நமசிவாயர் இருவர் (குகை, குரு). கூத்தர் இருவர் - ஆனந்தக்கூத்தர், ஞானக்கூத்தர். சிவக்கொழுந்து - சிவாக்கிரயோகி, நந்தி சிவாக்கிரயோகி.

### போலிக் குருமார்

குருஞான சம்பந்தர் பாடலிலிருந்து ஒரு செய்தி நமக்குக் கிடைக்கிறது. அவருடைய சிவபோகசாரத்தில் உள்ள பின்வரும் பாடல் எல்லோரும் ஊன்றிச் சிந்தித்தற்குரியது:

**தன்னை அறியார், தலைவன் தனையறியார்**
**முன்னை வினையின் முடிவறியார்: – பின்னைக்**
**குருக்கள் என்றும் பேரிட்டுக் கொள்ளுவர்கள்; அந்தோ,**
**தெருக்கள் தனிலே சிலர்.**

இப்பாடலால் நாம் அறிவது போலிக் குருமார் பலர் அக்காலத்தில் உலவினார்கள். அரசியல் கேட்டினால் மக்கள் மனம் சமயத்துறையில் திரும்பி இருந்ததைப் பயன்படுத்தி அக்குருமார் மக்களைத் தவறான சமய நெறியில் செலுத்தி விடுவார்களோ என்று குருஞான சம்பந்தர் அஞ்சினார் என்பதாகும். இவர் அச்சத்துக்குக் காரணங்களும் இருந்தன.

ஒரு காரணம் அக்காலத்தில் முதல் முதலாகத் தமிழ் நாட்டில் வீரசைவத் தொடர்பு ஏற்படுகிறது. இதை முன்னமே காட்டி

---

* இங்கு சொல்லப்படும் பெயர்களில் இந்தப் புத்தகத்தில் பெயர் வராத ஆசிரியர்களையும் அவர்களுடைய நூல்களையும் இந்த 16ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு முதல் பாகம் மூன்றாம் பாகங்களில் காணலாம்.

னோம். முதல் வீரசைவ நூல் இக்கால இறுதியில் தோன்றிற்று என்று குறிப்பிட்டோம். இரண்டாவதாக, 15ஆம் நூற்றாண்டில் சிறந்த வேதாந்தியான தத்துவராயர் ஏராளமான வேதாந்த நூல்கள் செய்தார். அந்நூல்கள் அக்காலத்தில் பரவி வந்தன: குருஞான சம்பந்தர் காலத்தில் புதிய வேதாந்த நூல்கள் எவையும் எழாவிட்டாலும், முன்னிருந்த தத்துவராயருடைய செல்வாக்கு ஓரளவு பரவியிருந்தது. மூன்றாவது, தமிழ் நாடெங்கும் ஆங்காங்கு துறவிகள் சிறு மடம் அமைத்துக் கொண்டு வாழ்ந்தார்கள். அந்த மடங்கள் குகை எனப்பட்டன. இது சோழர் காலத்திலிருந்தே தொடர்ந்து வரும் செய்தி. திருஞான சம்பந்தன் குகை, திருநாவுக்கரசு குகை, ஆலாலசுந்தரன் குகை, காழிக்கற்பகம் குகை, திருமுறைத் தேவார செல்வன் குகை முதலிய எண்ணற்ற குகைகள் நாடெங்கும் இருந்தன. என்று சோழர் காலக் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.* இந்தக் குகைகளை இடமாகக் கொண்டு பல சந்நியாசிகள் தனித்த நிலையில் வாழ்ந்தார்கள். இவர்களுக்குச் சீடர்களும் இருந்தனர். ஆனால் இவர்கள் மெய்கண்ட நெறி போன்ற ஒரு பெருநெறித் தொடர்பு பெறவில்லையாதலால், இவர்களை உண்மை ஞான விளக்கம் பெறாத போலிக் குருமார் என்று குருஞான சம்பந்தர் கருதினார்.

நான்காவதாக, 15 நூற்றாண்டில் கண்ணுடைய வள்ளல், திருஞான சம்பந்தருக்கு அடிமை பூண்டு, முறையான சைவ சித்தாந்த நெறியினின்றும் வேறுபட்டு, வள்ளல் மரபு என்ற ஒன்றைப் புதிதாக அமைத்துக் கொண்டார். அம்மரபு, இல்லறத்தாரையே ஆசாரியராக உடையதாகத் தொடர்ந்து நிலவியிருந்து, இந்த இருபதாம் நூற்றாண்டின் மத்தியில் மறைந்துவிட்டது. இதையும் குருஞான சம்பந்தர் கண்டார். ஐந்தாவதாக, மறைஞான சம்பந்தர் தம் நூலில் காட்டிய முத்திநிலை. இது இந்நூலகத்து விரிவாகப் பேசப்பட்டுள்ளது. இது சைவசித்தாந்த மரபுக்கு மாறானது என்பது குருஞான சம்பந்தர் கருத்து.

இவற்றோடு கூட, தொடக்கத்தில் காட்டிய நிலைமையும் இங்கு கருதத்தக்கது. போர்ச்சுகீசியர் வருகையால் இங்கு கிறித்துவ மதப்பிரச்சாரம் ஏற்பட்டது. அவர்களில் சிலர் சைவ சந்நியாசிகள் போல் உடையுடுத்து வைதிக சமயத்துக்கு முற்றிலும் மாறாகச் சமயப் பிரச்சாரம் செய்து வந்தனர். டிநொபிலி போன்றார் மதுரையில் மதமாற்றம் செய்ததெல்லாம் குருஞான சம்பந்தருக்கும் பிற்பட்ட காலமெனினும், அவருக்கு முன்னோடி

* கா.ம. வேங்கடராமையா, கல்லெழுத்துக்களில் 1968, பக்கம் 23-22.

யாக மேல் கடற்கரையில் கோவா, கொச்சி, கண்ணனூர் முதலான இடங்களில் நிகழ்ந்த சமய மாற்றங்கள் குருஞான சம்பந்தர் காதில் நிச்சயம் விழுந்திருக்கும். இவற்றை எல்லாம் எண்ணி மனம் வருந்தியே அவர் தம் நூலில் இவ்வாறு போலிக் குருமாரை நிந்திக்கிறார்.

## வடமொழி நூல்கள்

வடமொழியிலும் நூல் செய்யும் போக்கு இந்த நூற்றாண்டில் சைவரிடையே அதிகமாயிருக்கிறது. முன்னெல்லாம் வைணவர்களே வடமொழியில் தனி நூல்களும் மணிப்பிரவாள நடை நூல்களும் செய்து வந்திருக்கிறார்கள். இப்போது, மறைஞான சம்பந்தர் ஆன்மார்த்த பூசாபத்ததி என்று ஒரு கிரியா மார்க்க நூல் வடமொழியிலும் செய்தாரென்று அறிகிறோம். (ஆனால் இந்நூல் இன்று கிடைக்கவில்லை.) பூசாபத்ததியை வெள்ளியம் பலவாணத்தம்பிரானும் தம் உரையில் எடுத்து மேற்கோள் காட்டுகிறார். (ஞானாவரண பாடியம், பக்கம் 767. அடுத்து கமலை ஞானப்பிரகாசரும், திருவாரூர்த் தியாகராசப் பெருமானுக்குரிய புராணம் போல தியாகராச லீலை என்ற ஒரு வடமொழி நூல் செய்தார் என்று சொல்வர். (அந்த நூலும் இன்று இல்லை) ஆனால் இவர்கள் அனைவரிலும் மேலாகச் சிவாக்கிர யோகிகளே வடமொழி நூல்கள் பல மிகவும் விரிவாகச் செய்திருக்கிறார். யாவுமே பெரு நூல்கள். கிரியா தீபிகை சைவ சந்நியாச பத்ததி இரண்டும் கிரியா மார்க்கத்துக்கான சிறந்த நூல்கள். சைவ பரிபாஷை சிவஞான போத லகுடீகை சிவாக்கிர பாஷ்யம் மூன்றும் ஞான மார்க்கத்துக்குரிய சிறந்த நூல்கள். இவையன்றிச் சிவாக்கிர யோகிகள், அருணந்தி சிவத்தின் சிவஞான சித்திக்கு மிகவும் விரிவான மணிப்பிரவாள நடையுரை எழுதியிருக்கிறார்.* சைவ சமயத்தில் இந்த உரையையன்றி வேறு மணிப்பிரவாள நடைநூல் எதுவும் இல்லை.

இவ்வாறு பார்க்கும்போது, சமயத்துறையில் வடமொழியில் சைவ நூல்கள் எழுந்த காலம் இந்த நூற்றாண்டு. தமிழாசிரியர் அல்லாதவரான சைவர் பலர் நெடுங்காலமாய் வட மொழி நூல் செய்து வந்துள்ளனர். ஆனால் தமிழ்ப் புலவர் செய்வது இந்த நூற்றாண்டில்தான். வைணவத்தில் 12ஆம் நூற்றாண்டு முதலே ஆசிரியர் வடமொழி நூல்களும் மணிப்பிரவாள நூல்களும் செய்து வந்திருக்கிறார்கள்.

---

1. இதை 16ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு மூன்றாம் பாகத்தில் விரிவாக ஆராய்ந்திருக்கக் காணலாம்.

இந்த நூற்றாண்டின் இறுதியிலும் அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்திலும், வேலூர் சின்னபொம்ம நாயக்கன் ஆதரவில், அடைய வலம் - அப்பையதீட்சிதர் வாழ்ந்து, நீலகண்ட சிவாசாரியருடைய பிரம்ம சூத்திர சைவ பாஷ்யத்துக்கு விளக்கமாக சிவார்க்க மணிதீபிகை என்ற பெருநூல் செய்தார். இவர் செய்த சிவார்ச்சனா சந்திரிகை மிகவும் பிரசித்தமானது. பின்னும் அதிகமான நூல்களும் இவர் செய்திருக்கிறார். இவருடைய கொள்கை அத்வைதமேயாயினும், எண்ணற்ற நூல்களால் சிவ பரத்துவத்தை நிறுவித் தம் காலத்தில் சைவசமய வளர்ச்சிக்கு அருந்துணையாற்றியிருக்கிறார்.

### சில குறிப்புக்கள்

கவிராசர் என்ற பெயர் புனைந்த அல்லது சூட்டப்பெற்ற புலவர் பலர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்திருக்கிறார்கள். வீரன் - ஆசுகவிராசன் என்ற சிறந்த புலவர் அரிச்சந்திர சரித்திரம் (புராணம்) என்ற நல்ல காப்பியம் பாடினார். ஒரு கவிராச பண்டிதர் ஆதிசங்கரரின் சௌந்தரியலகரியைத் தமிழில் அழகாகப் பாடினார். (இதற்குச் சமகாலத்துப் பெரும் புலவரான சைவ - எல்லப்ப நாவலர் உரை எழுதினார்). இவர் புகழ்பெற்ற வேம் பத்தூரினர். ஆனந்தமாலை, வராகி மாலையும் இவர் பாடியன. சேறைக் கவிராச பிள்ளை என்ற மற்றொரு பெரும்புலவர் காளத்தி நாதர் உலா திருவாட்போக்கி நாதர் (இரத்தினகிரி) உலா முதலிய பல சிறு பிரபந்தங்கள் பாடினார். இவர் பாடிய அண்ணாமலை யார் வண்ணம் என்ற பாடல் புதிய அமைப்புடையதாய்ப் பிற் காலத்தில் பலர் இப்படி வண்ணம் பாடுவதற்கு வழி வகுத்துக் கொடுத்தது. ஐயம் பெருமாள் சிவந்த கவிராசர் புரூரவ சரிதை என்ற அழகிய காப்பியம் பாடினார். இது சிறந்த நடையுடையது; பாண்டியர் ஆதரவில் செய்யப்பட்டது. இவர்கள், வரலாற்றில் நன்கறியப்பட்ட பெரும் புலவர்கள்.

அடுத்து, சில புலவர்கள் குடும்பமே புலமை நிறைந்ததா யிருக்கிறது. இது பெரும் சிறப்பு, தென்காசிப் பாண்டியர் வரகுண ராமர், வரதுங்க ராமர், அதிவீரராமர் என்ற மூவரும் உடன் பிறந்தார். மூவரும் மிகவும் சிறப்பான நூல் செய்திருக்கிறார்கள். வரகுண ராமர் இருவிரிந்த புராணங்கள் செய்திருக்கிறார். வர துங்கராம பாண்டியர் பிரமோத்தர காண்டம் என்ற சிறப்பான புராணமும் காமச்சுவையை விரித்துக் கூறும் கொக்கோகம் என்ற காமநூலும், பக்திச்சுவை ததும்பும் கருவை அந்தாதிகள்

மூன்றும் பாடியிருக்கிறார். இவருடைய மனைவியாரும் சிறந்த புலமை வாய்ந்தவர் என்பது வரலாறு. அப்படியே பல புராணங் களும் பிரபந்தங்களும் செய்த சைவ - எல்லப்ப நாவலருடைய மனைவியாரும், நிரம்பிய புலமையுடையவர். இவர் பாடிய 'கருடனோட மச்சமாமை என்ற பாடல் நன்கு தெரிந்தது.* இவர் கள் போலவே புராணத் திருமலை நாதரும் அவர் மகனார் பரஞ்சோதியும் சிறந்த புலவர்கள். திருமலைநாதர் சிதம்பர புராணம் முதலிய சில புராணங்களும் மதுரைச் சொக்கநாதரு லாவும் பாடியவர். பரஞ்சோதி சிதம்பரப் பாட்டியல் என்ற பாட்டியல் இலக்கணநூல் பாடினார். இனி, திருவாரூர்ச் செட்டித் தெரு ஞானப்பிரகாசர் சிறந்த சைவ ஆசாரியர் (நூல் செய்ததாக வரலாறு இல்லை). அவர் புதல்வர் கமலை ஞானப் பிரகாசர்; இவர் தம் தந்தைக்குத் திருக்கயிலாய பரம்பரையில் சீடரும், குருஞான சம்பந்தருக்கு ஞானாசிரியரும் ஆவர். கமலை ஞானப்பிரகாசர் எண்ணற்ற சமய நூல்கள் செய்தவர். சைவ மரபில் தந்தை மகன் இருவரும் முறையே ஆசாரியராக வருவது இந்த இருவர் மட்டுமே.

மற்றுமொரு குறிப்பு: புரூரவச் சக்கரவர்த்தி கதையில் ஒரு முக்கியமான அம்சம் திருட்டுக்குற்றத்தால் அவன் ஒரு கை ஒரு கால் வெட்டப்பட்டு நொண்டி ஆவது. இடைக்காலத்தில் திருட் டுக் குற்றத்துக்கு அரசாங்க தண்டனை கை கால் குறைத்தல். புரூரவன் கதை தமிழ்நாட்டில் மிகவும் பிரசித்தமாய் வழங்கிய தொன்று. 17ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி முதல் தமிழ்நாட்டு அரசின் சீர்குலைவால் ஆங்காங்கு பாளையப்பட்டுக்களின் தலைவர்களாயிருந்த ஜமீன்தாரரைப் புகழ்ந்து செய்யப்பெற்ற நாடகப் பாங்குடைய புதிய சிறு பிரபந்த வகைகள் பல; இவை காதல் பிரபந்தம், விறலிவிடு தூது முதலாயின. இப்புது வகை களுள் நொண்டி நாடகம் என்பதும் ஒன்று. இவ்வகை நூல் களின் பொது இயல்பு காமச்சுவையைப் பெருக்கிக் காட்டுதல். இந்த நாடகத்தில் நொண்டியொருவன் தோன்றித் தன் வரலாற் றைத் தானே கூறி நடிக்கிறான். தனது கூடாவொழுக்கத்தை இவன் விவரித்துச் சொல்வது இலக்கிய உலகில் பிரசித்தி பெற் றது. நொண்டி நடிப்பது, பார்ப்போருக்கு மிக்க நகைச்சுவை விளைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்த நொண்டி நாட கத்துக்குத் தோற்றுவாய் புரூரவன் கதையாயிருக்கலாம். பத்

---

* இந்த 16ஆம் நூற்றாண்டின் வரலாறு முதற்பாகம் பார்க்க.

துக்கு மேற்பட்ட நொண்டி நாடகங்கள் தமிழில் உள்ளன. சில, தெய்வத்தின் புகழைச் சார்த்தியும் செய்யப்பட்டுள்ளன.*

முன்னெழுதி வெளிவந்த எமது நூற்றாண்டு வரலாறுகளுக்கும் இந்த 16ஆம் நூற்றாண்டு வரலாற்றுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. முந்திய நூல்களில் ஓர் ஆசிரியரையும் அவர் செய்த நூல்களையும் ஒரே இடத்தில் ஆராய்ந்திருக்கிறோம். இங்கு அப்படியல்ல. புராணம், சமய தத்துவ நூல், உரை நூல், இலக்கண நூல், தோத்திர நூல் என்ற பல்வேறு துறைகளில் சில புலவர் நூல் செய்திருக்கிறார்கள். இவ்வகை ஆசிரியர்களின் நூல்களை ஒரே இடத்தில் ஆய்வு செய்யாமல் பொருத்தமான அத்தியாயங்களிலேயே, அவ்வக் கருத்துக்களின் வளர்ச்சி புலப்படும் முறையில், ஆராய்ந்திருக்கிறோம். இலக்கிய வளர்ச்சியை எண்ணும்போது இவ்வகை ஆய்வு அவசியமாகின்றது. எடுத்துக்காட்டாகச் சிலரைக் குறிப்பிடலாம். மறைஞானசம்பந்தர், கமலை ஞானப்பிரகாசர் - புராணமும் சமய நூல்களும், வரதுங்கராம பாண்டியர் - புராணம், தோத்திர நூல், பிறவகை இலக்கியம், அதிவீரராமர் - புராணம், தனி இலக்கியம், நீதி நூல். திருக்குருகைப் பெருமாள் கவிராயர் - பல்வகை இலக்கணம், புராணம், பிரபந்தம். எனவே இவ்வாசிரியர் போன்றோர் பற்றிய முழு ஆய்வு, இவர்களுடைய பல திறப்பட்ட நூல்களின் ஆராய்ச்சியையும் இந்நூல் அத்தியாயங்களிலிருந்து தொகுத்துக்கொண்டால் தான் முழுமையடையும். இங்கு சிறப்பாய் எண்ணத்தக்கது இவ்வாசிரியர் அனைவருமே புராணம்செய்தார்கள் என்பது.

### சிறப்புக்கள்

இப்புத்தகத்தில் ஆராயப்பெற்ற வரலாற்றால் அறியும் சிறப்புக்களிற் சில முக்கியமானவை. தனிக் காப்பியங்கள் சில, நீதி நூல்கள் சில, அணியிலக்கண நூல், பாட்டியல் நூல்கள், சைவ இலக்கியங்கள் என்பன குறிப்பிடத்தக்கவை. பாரதத்திலிருந்து மூன்று சக்கரவர்த்திகளின் வரலாறுகள் தனிக் காப்பியங்களாகப் பாடப்பெறுகின்றன. ஒன்றைப் பாடியவர் ஒரு புவிராசர், மற்ற இரண்டையும் பாடியவர் இரு கவிராசர்.

இந்த இரு கவிராசரும் பொற்கொல்லர் மரபினர். இது ஆராய்ச்சிக்கு மிக்க வியப்பளிக்கும் செய்தி. பொற்கொல்லர், மிக உயர்ந்த பொருளாகிய பொன்னை வைத்து அருமையாக

---

* திருக்கச்சூர், திருவிடைமருதூர், தில்லைவிடங்கன் ஐயனார் நொண்டி நாடகம் முதலியன இத்தகையன.

'நகாசு' வேலை செய்யும் தொழிற் பண்புடையவர்கள்; இதை இழைத்து இழைத்துச் செய்தல் என்று பேச்சு வழக்கில் சொல்கிறோம். இதுவே நகாசு; இந்த நகாசு வேலையை இவர்கள் சொல்லால் செய்த அணிகலனாகிய இரு காவியங்களிலும் காணலாம்.

அகப்பொருள், பாட்டியல், நிகண்டு, அலங்காரம் முதலான பல்வகை இலக்கணப் பிரிவுகளிலும் இக்காலத்தில் நூல்கள் எழுகின்றன. இன்றுவரை ஆட்சியிலிருந்த சூடாமணி நிகண்டும், வரலாற்றில் பெருமை பெற்ற அகராதி முறைகொண்ட அகராதி நிகண்டும், இக்காலத்துக்குரியவை. காலந்தோறும் சைனர் சிறப்பான நூல்கள் செய்து வந்திருந்தும், இக்காலப் பகுதியோடு அவர் நூல் செய்யும் நிகழ்ச்சி அனேகமாய் முற்றுப் பெறுகிறது. நெடுங்காலமாய்ப் பௌத்தர் நூலே இல்லை; பௌத்தரும் இல்லையல்லவா?

முதல் முதலாக வீரசைவம் தோன்றுகிறது. வீரசைவர் சமய நூல் செய்கிறார். அது, சைவப் பொதுநோக்குடைய சிவஞான தீபம். சைவத்திலுள்ள ஒரே மணிப்பிரவாள நூல் இக்காலத்தில் எழுகிறது - சிவாக்கிரயோகி செய்த சிவஞான சித்தியார் உரை.

வேதாந்த மரபில் முந்திய நூற்றாண்டுகளில் சிறப்பான நூல்கள் எழுந்திருக்கின்றன. ஸ்ரீ பட்டனார் செய்த பகவத்கீதை மொழிபெயர்ப்பையும் (13 நூற்றாண்டு) தத்துவராயர் செய்த கடல் போன்ற பரப்புடைய நூல்களையும் பிரபந்தங்களையும், தொகுப்புக்களையும் (15ஆம் நூற்றாண்டு) இங்கு குறிப்பிட முடியும். ஆனால் 16ஆம் நூற்றாண்டில் வேதாந்த நூலெதுவும் எழவில்லை. சௌந்தரியலகரி, பெரு வேதாந்தியாகிய சங்கரர் செய்த போதிலும், அம்பிகை புகழ்; சாக்தமதம் என்று வேண்டுமானால் சொல்லலாம், வேதாந்தமன்று.

குறளை அமைத்துச் செய்கின்ற வெண்பா நீதி நூல் - தினகர வெண்பா - புதிதாக எழுந்து பின்னர் இதுபோன்ற பல குறள் வெண்பா நூல்கள் தோன்றுவதற்கு வழி காட்டுகிறது. மேலும், மிகவும் சிறப்பாகக் குறள் வெண்பா யாப்பில் இரண்டாயிரத்துக்குப் மேற்பட்ட பாடல்களைச் சைவசாத்திரத் துறையில் மறைஞான சம்பந்தர் பாடுகிறார்; வேறு யாருமே திருக்குறள் தோன்றிய பிறகு, இவ்வளவு அதிகமான குறட்பாக்களைப் பாடத் துணிந்ததில்லை. இவையாவும், இந்த நூற்றாண்டுக்குரியனவாக, இங்கு ஆராய்ந்த நூல்களில் காணப்படும். சிறப்புக்களிற் சில.

○○○

அத்தியாயம் 1

# இலக்கியம்

**முன்னுரை**

இந்த அத்தியாயத்தில் சிறப்பாகக் காப்பியம் என்று கருதப் பெறும் தன்மை அமைந்த நூல்களைப் பேசுகிறோம். சிலப்பதி காரம் தொடங்கிப் பிரபோதசந்திரோதயம் இறுதியாக, 29 காப்பியங்களை நூற்றாண்டு முறையில் அட்டவணைப்படுத்தி எமது தமிழ் இலக்கிய வரலாறு - பத்தாம் நூற்றாண்டு என்ற நூலில் தந்திருக்கிறோம்.* அங்கு 16ஆம் நூற்றாண்டுக்குரியன வாக மூன்று காப்பியங்கள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றை இவ்வத்தியாயத்துள் ஆராய்கிறோம். ஆராயுமுன், சில பொதுக் கருத்துக்களைத் தெளிவுபடுத்திக் கொள்வது பயனுடையதா யிருக்கும்.

1. இந்திய இதிகாசங்களாகிய இராமாயணமும் பாரதமும் பல வடிவங்களில் காப்பியங்களாக உருவெடுத்திருக்கின்றன. சாசனங்களால் அறியப்படும் பாரதங்கள், பாரத வெண்பா, கம்பராமாயணம், உத்தர ராமாயணம், இன்று இல்லாமற் போன இராமாயண வெண்பா, வில்லி பாரதம் முதலான பலவும் இந்தப் பகுதியில் அடங்கும்.

2. தமிழுக்கே உரிய காப்பியங்களாவன: சிலப்பதிகாரமும் மணிமேகலையும்.

3. சைனர் தங்கள் சமய நூல்களிலிருந்து விரித்துச் செய்தவை - சிந்தாமணி, சூளாமணி, யசோதர காவியம், நாக குமார காவியம் என்பன; நீலகேசி, கிடைக்காத நூல்களான சாந்தி புராணம், நாரதசரிதை போன்றன; குண்டலகேசி - பௌத்த காவியம். வளையாபதி - இதன் இயல்பு திட்டமாய்த் தெரியவில்லை.

---

* அந்த நூலின் முதல் அத்தியாயத்தின் இறுதி.

4. வடமொழியைத் தழுவிச் செய்யப் பெற்றதெனக் கருதப் பெறும் பெருங்கதை.

5. சைவப் புராணங்கள் நிலையிலுள்ள பெரியபுராணம், நம்பி திருவிளையாடல், கந்தபுராணம், திருவாதவூரடிகள் புராணம் என்பன.

6. இத்தனையும் போக, மகாபாரதத்தின் கிளைக்கதைகளிலிருந்து உருக்கொண்ட காப்பியங்கள் சில. இவை நளன் சரிதம், அரிச்சந்திரன் சரிதம், புரூரவன் சரிதம் என்பவை கூறும் காப்பியங்களாகும். நளன் சரிதம் நளவெண்பா என்ற சிறு நூலாகப் புகழேந்திப் புலவரால் 13ஆம் நூற்றாண்டிலும், அதிவீரராம பாண்டியனால் நைடதம் என்ற பெரு நூலாக 16ஆம் நூற்றாண்டிலும் பாடப்பட்டது. அரிச்சந்திரன் சரிதம், விளக்கமில்லா அரிச்சந்திர வெண்பா என்று சம்பு காவியமாகப்* பெயர் தெரியாத ஓர் ஆசிரியரால் 15ஆம் நூற்றாண்டிலும், வீரன் என்ற கவிராசரால், அதிகமும் ஆட்சி பெற்ற காப்பியமாக 16ஆம் நூற்றாண்டிலும் பாடப்பெற்றது. புரூரவன் சரிதை, பெரிதும் விளக்கமில்லாத ஐயம் பெருமாள் என்ற ஒரு கவிராசரால் 16ஆம் நூற்றாண்டில் பாடப்பெற்றது. எனவே, இம்மூன்று சரிதங்களும் - 16ஆம் நூற்றாண்டில் பாடப்பட்டுள்ளன. இந்த மூன்று சிறு காவியங்களிலும் அமைந்துள்ள சில பொது இயல்புகளை இங்கு குறிப்பிடுவோம்.

1. மூன்றும் 16ஆம் நூற்றாண்டில் எழுந்தவை.
2. ஒன்று (நைடதம்) பாடியவர் ஒரு பாண்டிய மன்னர் (அதிவீரராமர்), மற்ற இரண்டும் பாடியவர்கள் இரு கவிராசர்கள் (வீரன் ஆசு கவிராசர், ஐயம் பெருமாள் சிவந்த கவிராசர்).
3. மூன்றும் மகாபாரதத்தின் கிளைக் கதைகள்.
4. மூன்றும் அரசர்களைக் கதாநாயகராகக் கொண்டவை.
5. மூன்று அரசரும் அரசை இழந்து காட்டுக்குச் செல்கிறார்கள்.
6. மூவரும் மனைவியைப் பிரிகிறார்கள். நளன் தமயந்தியைப் பிரிய, அவள் தன் தந்தை நாடு அடைகிறாள். அரிச்சந்திரன் தன் மனைவியை அடிமை வேலை செய்ய ஓர் அந்தணன் வசம் அனுப்பிவிடுகிறான். புரூரவன் தன் மனைவியை ஒரு வணிகனிடம் அடிமை வேலைக்கு அமர்த்துகிறான்.

---

* சம்பு காவியம் - பாட்டும் உரைநடையும் பயின்ற காவியம், இந்நூலுள் 304 வெண்பாக்களே கிடைத்துள்ளன.

7. மூவர் வாழ்விலும் சனி புகுகிறது; அரிச்சந்திரனுக்குத் தானே தேடிய துன்பாகவும், புரூரவனுக்குச் சனியாகவும், நளனுக்குக் கலியாகவும்.

8. மூவரும் தாங்களே அடிமை வேலை செய்கிறார்கள். நளன் ரிது மன்னனிடம் தேர்ப்பாகனாக, அரிச்சந்திரன் வீரவாகுவிடம் பிணம் சுடும் அடிமையாக; புரூரவன் வணிக னிடம் விறகு வெட்டிப் பிழைப்பவனாக.

9. மூவருக்கும் பிள்ளைகள் உளர்; அவர்களைப் பிரிந்து துன்பம் அனுபவிக்கிறார்கள். நளனுடைய பெண்ணும் பிள்ளையும் பாட்டன் வீட்டுக்குப் போகிறார்கள். அரிச் சந்திரன் மகன் லோகதாசன் பாம்பு கடித்து இறக்கிறான். புரூரவன் தன் மக்களை மரத்தோடு பிணிக்க தான் வெள் ளத்தில் அடித்துக் கொண்டு போய்விடவும், பிள்ளைகள் ஆயன் வீட்டில் வளர்கிறார்கள்.

10. மூவருக்கும் பழிகள் வந்து சேருகின்றன. தமயந்திக்கு இரண் டாம் சுயம்வரம் என்ற பழிச்செய்தி; சந்திரமதி காசிராசன் மகனைக் கொன்றாள் என்ற பழி: புரூரவன் அரசியின் அணி கலப் பேழையைத் திருடினான் என்ற பழி யால் கைகால் குறைப்பு.

11. முடிவாக மூவரும், நாட்டையும், இழந்த மனைவி மக்களை யும் பெற்றுச் சுகமே வாழ்கிறார்கள்.

12. மூன்று நூல்களும் விருத்தப்பாவில் இயன்ற நூல்கள்.

13. மூன்றும் நாட்டுப்படலம், நகரப்படலம், சூரிய சந்திர உதய அஸ்தமனம், போர் நிகழ்ச்சி முதலான காப்பிய உறுப்புக்கள் அமையப் பாடப் பெற்றுள்ளன.

இவ்வாறுள்ள தன்மைகளையும் பிறவற்றையும் கூர்ந்து நோக்கும்போது, ஒரு கருத்துத் தோன்றுகிறது. ஐயம் பெருமாள் கவிராசர் வரதுங்க ராமருடைய ஆதரவில் புரூரவ சரிதை அரங்கேற்றினார். வீரன் ஆசு கவிராசரும் இதே காலத்தவராத லால் ஒருகால் இதேசூழ்நிலையில் அதிவீரராம பாண்டியரால் ஆதரிக்கப் பெற்றவராயிருக்கலாம். அதிவீரராம பாண்டியரே மற்றொரு காப்பியமாகிய நளன் சரிதையைப் பாடினார். எனவே, இவ்வாசிரியர் மூவரும் ஒருங்கு வாழ்ந்து, மூன்று சரிதைகளை யும் காப்பியமாகப் பாடுவதென்று திட்டம் வகுத்துப் பாடி னார்களோ என்று கருதத் தோன்றுகிறது. பாடிய காலம் ஒரே காலம் - 16ஆம் நூற்றாண்டு. சக்கரவர்த்திகள் அறுவர் - அரிச்

சந்திரன், நளன், புரூரவன், முசுகுந்தன், புருகுற்சன், கார்த்த வீரியன் என்போர். இவர்கள் பிறருக்குப் பணியாது தரணியாண்டவர். இவர்களுள் முதல் மூவர் பற்றியும் காப்பியங்கள் எழுந்துள்ளன என்று இங்கு பேசப்பட்டது. முசுகுந்தச் சக்கரவர்த்தி பற்றியும் தனி அம்மானைப் பாடல் உள்ளது; இந்திரன் பூசித்து வந்த தியாகராசர் மண்ணுலகில் எழுந்தருளியது சம்பந்தமாக, முசு குந்தச் சக்கரவர்த்தி வரலாறு தமிழில் பிரசித்தமானது. மற்ற இருவர் பற்றியும் இத்தகைய நூல் எதுவும் இல்லை. புருகுற்சன் மாந்தாதாவின் மகன்; கார்த்தவீரியன் ஆயிரங்கைகளுடை யவன், பரசுராமரிடம் சீடனாயிருந்தவன். இவ்விருவர் பற்றியும் தமிழில் வரலாறுகள் அதிகம் வழங்கவில்லை.

இவ்வாறு 16ஆம் நூற்றாண்டில் மூன்று காப்பியங்கள் தோன்றியிருக்கக் காண்கிறோம். இம்மூன்றும் புராணங்களல்ல; ஓர் இதிகாசத்தின் கிளைக்கதைகள்; மூன்று கதைகளும் தமிழ் நாட்டில் நன்கு வழங்கிவந்த கதைகள். நளன் கதையும், அரிச் சந்திரன் கதையும் இக்காலத்துக்கு முன்னரே கூட, வேறு இலக் கியங்களாகப் பாடிச் சிறப்பிக்கப்பட்டிருந்தன என்று கூறி னோம். புரூரவன் கதை, அப்படி சிறப்பிக்கப் பெற்றிராவிட் டாலும், பிற்காலத்தில் அவன் பெயரால் வழங்கிய அம்மானைப் பாடல், வாசகப்பா என்ற கூத்துக்கான பாடல் முதலியவற்றை நோக்கும்போது, முன்னரே இக்கதைக்கு நாட்டில் பெருவழக்கு இருந்ததென்று தெரிகிறது. இந்த நூற்றாண்டில் தமிழில் புராணங்களே மிகவும் அதிகமாக எழுந்திருக்கின்றன. சைவத் திலும் வைணவத்திலும் பல்லாயிரம் பாடல்களும் புராண வரலாறுகளாகப் பாடப்பட்டன. நைடதம் பாடிய அதே ஆசிரியர் பல ஆயிரம் பாடல்கள் புராணங்களாகவே பாடி யிருக்கிறார். இருந்தும், அவ்வாசிரியர் உள்ளத்தில் ஒரு காப் பியம் பாடவேண்டும் என்ற எண்ணமும் ஒரு பக்கத்தில் உதித் தது போலும். காப்பியத்திற்குப் புதுக்கதையைச் சிருட்டித் துக் கொள்வதைவிட, பழங்கதையே மேலானது என்று முடிவு செய்திருக்கிறார்கள். கதை, தெரிந்த கதையாதலால், அக் கதையை எடுத்துக்கொண்டு, அதில் தங்கள் கவிதா சாமர்த்தி யத்தைக் காட்டுவது அவர்களுக்கு எளிதாயிற்று. இதுவே இம் மூன்று காப்பியங்களும் தோன்றுவதற்கு அடிப்படையான சூழல் என்று கருதுகிறோம்.

## அரிச்சந்திர சரித்திரம்

தமிழ் நாட்டில் சென்ற தலைமுறையில், அதாவது 20ஆம் நூற்றாண்டில் முதற் காலப் பகுதி முடிய, மிகவும் பிரசித்தமாய்த் தமிழ் கற்போர் விரும்பிப் படித்து வந்த ஒரு சிறு காவியம் அரிச்சந்திர புராணம் என்பது. இது அரிச்சந்திர சரித்திரம் என்றே சென்ற நூற்றாண்டில் அச்சிடப் பெற்றிருந்தது.* எப்படியோ பின்னர் இதை அரிச்சந்திர புராணம் என்று வழங்கத் தொடங்கி விட்டார்கள்; புராணம் என்பது பிழை.

### ஆசிரியர்

நூல் செய்த ஆசிரியர் நல்லூரினர். இவரது இயற்பெயர் வீரன். ஆசு கவிராசர் என்பது, இவரது பாடல் திறமையால் பெற்ற பட்டம் என்று கொள்ளத்தகும். இதைப் பாயிரத்தின் இறுதியில் உள்ள நூல் வரலாறு கூறும் இரண்டு பாடல்களால் அறியலாம்.

தண்கவிதைக் குரிசில்அரிச் சந்திரன் தன்
சரித மதைத் தாரணியோர் விருப்ப மெய்த
வண்கவிஞர் வகைவகையே வகுத்து ரைத்த
வடமொழியும் தென்மொழியின் வழுவி லாத
வெண்கவியும் கண்டரங்கின் மாத ராடல்
விதங்கேட்டு மழையெனவே வெருண்டு சோலைக்
கண்கவிகள் குதிபாயும் நல்லூர் வீர
கவிராசனே விருத்தக் கவிசெய் தானே.

விதியினர சிழந்த அரிச் சந்தி ரன்தன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த மாக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச காத்தம்
ஆயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமால் முன்னே
சக்கர தீர்த் தக்கரைமேன் மண்ட பத்துள்
கதிதருசீர் நல்லூர் வாழ் வீரன் ஆசு
கவிராசன் கவியரங்க மேற்றி னானே.

---

* ஒவ்வோர் ஏட்டிலும் அரிச்சந்திர சரித்திரம் என்றே நூற்பெயர் காணப்படுகிறது.

முதல் பாடல் ஆசிரியர் நல்லூர் வீரகவிராசர், இவர் விருத்தத் தால் இந்நூல் செய்தார், வட மொழியும், தென் மொழியும் தமிழில் உள்ள வெண்பாக் கவியும் கண்டு இதைச் செய்தார் என்று சொல்லுகிறது. இரண்டாம் பாடல் காலமும் இடமும் சொல்லுகிறது. அரிச்சந்திரனுடைய கதையாகிய வெண்பாப் பாடலை விருத்தமாக்கி நல்லூர் வீரன் ஆசுகவிராசன் என்பவர் திருப்புல்லாணித் திருமால் சந்நிதியில் சக்கரத் தீர்த்தக்கரை மண்டபத்தில் சாகப்தம் 1446இல் அரங்கேற்றினார் என்பது சொல்லப்பட்டது. ஆசிரியரும் ஊரும் பெயரும் இப்பாடல் களால் நன்கு அறியலாம். இந்த நல்லூர்* என்பது பாண்டி நாட்டில் இராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள நல்லூர் என்ற ஊராகும். குலோத்துங்க சோழ நல்லூர் என்றும் இது வழங் கிற்று. இவர் பொற்கொல்லர் மரபைச் சேர்ந்தவர் என்பது வழக்கு. இவர் காளி உபாசனையால் விரைந்து கவிபாடும் ஆற்றல் பெற்று ஆசுகவிராயர் என்று புகழடைந்தார். இவரைக் குறித்த வேறு செய்திகள் விளங்கவில்லை. இவர் பாடியுள்ள நூலினால் இவர் சிறந்த சைவர், பக்தி மிக்கவர், உண்மையான ஆசுகவி பாட வல்லவர் என்பது நன்கு விளங்கும்.

இவ்வாசிரியர் பெயரும் ஊரும் பற்றிச் சிறிது குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. கவிராசர் என்பது இயற்பெயராக இருக்க முடியாது. இந்த நூற்றாண்டில் கவிராசர் என்று பெயர் பெற்றிருந்த புலவர் பலர் இருந்திருக்கிறார்கள். அவர்களுள் இவரும் ஒருவர். இவருடைய இயற்பெயர் வீரன் என்பது. பண்டைக்காலத்தில் பொற்கொல்லர் மரபில் வீரன் என்று பெயர் வைத்துக் கொள்வது மிகவும் சாதாரணம். பொற்கொல்லர் எல்லோருமே சிவ வழிபாடு உடையவர்கள். இவருடைய ஊர் நல்லூர் என்னும் குலோத்துங்க சோழ நல்லூர். இந்தச் செய்தி களையே இதுவரை குறிப்பிட்டோம்.

ஆனால் மு. இராகவ ஐயங்கார் அவர்கள் முன்னமே காட்டிய இரண்டு பாட்டிலும் பாடபேதங்கள் காட்டி வேறு கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார்கள். தண்கவிகை என்ற பாட்டில், நல்லூர் வீரகவிராசன் என்பதை நல்லூர் வீரைக்

* ஊர்ப்பெயர் நல்லூர் என்பது அறியாமல் நெல்லூர் என்றே அச்சிட்டு உரையும் எழுதப் பெற்றுள்ளது. இது பிழை. வீரன் என்பதை வீரை என்று படித்து ஊர் வீரை என்றும் சிலர் சொல்வர். அதுவும் பிழையாகும். 'நல்லூர் வீரன் ஆசுகவிராசன் பாடிய அரிச்சந்திர புராணம்' என்று ஏட்டில் காணப்படுகிறது.

கவிராசன் என்றும், நல்லூர் வாழ் ஆசு கவிராசன் என்பதை நல்லூர் வாழ் வீரை ஆசுகவிராசன் என்றும் பாடங்கொண்டு பின்வருமாறு விளக்கம் எழுதியிருக்கிறார். 'நல்லூர் வீரை - சேது நாட்டுக் குலோத்துங்க சோழநல்லூர் என்ற ஊரையடுத்த விரையாத கண்டன் என்ற ஊர். இது சேதுபதிகளின் பழைய தலைநகரங்களில் ஒன்று; "குலோத்துங்க சோழ நல்லூர்க் கீழ்பால் விரையாத கண்டனிலிருக்கும்" என்பது சேதுபதிகள் சாசனம். இஃது அறியாது இவர் பெயரைப் பிறழக் கூறினர் பிற்காலத்தார்'. இதுவரை அச்சான பதிப்புக்கள் யாவும் 1838 இல் அச்சிட்ட பதிப்பு உள்பட வீரன் - ஆசுகவிராசன் என்றே அச்சிட்டுள்ளன. ஏட்டிலும் வீரன் என்றே காணப்படுகிறது. ஆதலால் ஊர்ப்பெயர் நல்லூர் என்பதும் ஆசிரியர் பெயர் வீரன் என்பதுமே உறுதி. இவர் வேறு எந்த நூலும் செய்ததாக வரலாறு இல்லை.

மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ.

என்ற பாடல் பாடியதற்காகக் கச்சியப்பன் என்ற வல்லை நகர் வள்ளல் வீரன் என்ற புலவனுக்குப் பல்லக்குப் பரிசில் அளித்தான் என்று தொண்டை மண்டல சதகம் (50) கூறும். அப்புலவன் வேறு, மிகவும் பிற்பட்ட காலம். அவன் அரிச்சந்திர சரித்திரம் செய்தவன் அல்லன்.

இங்கு சொல்லப்படும் காப்பியமன்றி (சுமார் 18ஆம் நூற்றாண்டில்) மாந்தைநகர் வேளாள குலம் பெரியான் பிள்ளை என்பவர் செய்த 51 பாடல் கொண்ட மற்றொரு சரித்திரமும் ஏட்டு வடிவில் உள்ளது. சமானிய நடை.

## காலம்

அரங்கேற்றம் கூறிய பாடல் சாலிவாகன சகாப்தம் 1446 என்று கூறுவதால், கி.பி. 1524 (16ஆம் நூற்றாண்டின் முற்பகுதி) என்று அறிகிறோம்.

## பதிப்பு

இந்நூல் புராணம் என்று அச்சிட்டிருந்த போதிலும்கூட, இது புராணம் அன்று, ஒரு காப்பியமேயாகும். 1838இல் இது அரிச்சந்திர சரித்திரம் என்றே தணிகை சரவணப் பெருமாள் ஐயராலும் காஞ்சி குமாரசாமி தேசிகராலும் பதிப்பிக்கப் பெற்றுள்ளது (மூலம் மட்டும்). அச்சிடப்பட்ட நூலில் பதிப்புக்குப் பதிப்பு பாடல்கள் மாறுபடுகின்றன. பாயிரம் மூலப்பதிப்பு

பன்னிரண்டு பாடல்; உரைப்பதிப்பு 15 பாடல் ஏட்டுச் சுவடியில் பெரும்பாலும் இது உரையோடு கூடவே காணப்படுகிறது. அவ்வுரை அச்சானதாகத் தெரியவில்லை. சென்ற நூற்றாண்டில் திரிசிரபுரம் மகாவித்துவான் வி. கோவிந்தப்பிள்ளை இதற்கு உரை எழுதித்தர. ஈக்காடு இரத்தினவேலு முதலியார் அச்சிட்டார் (1913). அப்பதிப்பே பின்னர் பலராலும் பலமுறை எடுத்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இரத்தின நாயகர் பதிப்பு (1932) முதலான குஜிலிப் பதிப்புக்கள் அனேகம்.

### அரிச்சந்திர சரித்திரம் (புராணம்)

அரிச்சந்திர வெண்பா என்ற ஒரு நூல், இப்புராணத்துக்கு மூலமாயிருந்த தமிழ் நூல் போலும். இதன் ஒரு பகுதி மட்டும் கிடைத்து* அச்சிடப்பட்டுள்ளது. இதில் காணப்படும் பகுதி களின் காண்ட அமைப்பு, கவிராசர் புராணத்தின் அமைப்பினும் வேறானது. இப்புராணமானது, பாயிரமும் நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்பு என்ற இரு பகுதிகளும், விவாகம், இந்திர காண்டம், வஞ்சனை, வேட்டஞ்செய் காண்டம், சூழ்வினை, நகர் நீங்கியது, காசி, மயானம், மீட்சி, உத்தர காண்டம் என்ற பத்துக் காண்டங்களும் 1215 பாடல்களும் உடையது. பாயிரப் பகுதியில் ஆசிரியர் விநாயகர் பரமசிவம் உமை முருகன் காளி என்பவரை வணங்குகிறார். விநாயகருக்கு 3 பாடல், பரமசிவத் திற்கு 3 பாடல் உள்ளன. அரிச்சந்திரன் கதையில் காளியை வணங்குகிறான் என்று கதை அமைந்திருப்பதால் ஆசிரியர் இங்கு காளி வணக்கம் சொல்லுகிறார். காளியின் பெயர்கள் இருபத்து மூன்றை அடைமொழி இல்லாமலே இவர் தொகுத்துக் கூறுவது சிறப்பாய் உள்ளது:

> அந்தரியாமளை அமலை ஆல காலி
> அம்பிகைமா தரிகௌரி யாளி யூர்தி
> வந்தரிநான் முகன் வணங்கு மலர்த்தாட் சூரி
> வைரவிதா ரூகவைரி மதங்கி நீல
> கந்தரியோ கினிசூலி நீலி நாக
> கங்கணி சங் கரிவிமலை காளி வால
> சுந்தரி சாமுண்டி திரி சூலி கோலத்
> துணையடி என் முடிமீது சூடி னேனே.

---

* இதன் விளக்கத்தை எமது 15ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் காணலாம். அங்கு வீரை ஆசுகவிராசர் என்று வரும் பெயரை வீரன் ஆசுகவிராசன் என்று படித்துக் கொள்க.

இவருடைய வாக்கில் சந்தப் பாடல்கள் மிகவும் சிறப்பாகப் பொலிவு பெறும் என்பதை விநாயகர் வணக்கமாகிய முதல் பாடலிலேயே அமைத்துக் காட்டுகிறார்:

**பெரும்புகழ் பெறும்படி அருந்துயர் கெடும்படி**
**பிரியம்பல வரும்படி யுளம்**
**விரும்பிய தனம்பெற மிகும்பெறு பதம்பெற**
**விளங்கிய தவஞ்செய நெடும்**
**கரும்பவல் பெரும்பய றருங்கனி ரசங்கொடு**
**கவர்ந்ததெ னுவந்தருள் புரிந்**
**திருங்கரி முகன்சிறு சதங்கையொடு கிண்கிணி**
**இலங்கிய பதம்பெறு வனே.**

ஆசிரியர் தமது நூலை ஒரு சிறந்த காப்பியமாகவே ஆக்கக் கருதி பாடியிருக்கிறார். நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்பு என்று தொடங்கி, கடைசியில் உத்தர காண்டம் வரையில் இந்த இயல்பை நன்கு காணலாம். நாட்டு நகரப் படலங்கள் இரண்டு இவர் பாடியுள்ள முறை பெருங் காப்பியங்களுக்கே அணி செய்ய வல்லன. நாட்டுச் சிறப்பு என்ற பகுதியில், பாடல்கள் 11 - 21 அடிமடக்காக உள்ளன. இப்பகுதி ஆசிரியரின் புலமைச் சிறப்புக்கு ஒரு சான்றாகும். இம் மடக்குப் பகுதிக்குப் பொருள் விளங்குவதன் அருமையை எண்ணித் தணிகை சரவணப் பெருமாள் ஐயர் இப்பகுதிக்கு மட்டும் உரையை எழுதிச் சேர்த்திருக்கிறார். ஆசிரியரின் இயல்புகளில் ஒன்று, மூன்று மூன்றாக அடுக்கிச் சொல்வது. இதை நூலெங்கும் காணலாம். அவையடக்கத்தில் சொல்கிறார். 'நீர் கொள்வார் பாலோடு நேருற்றால், பதர் கொள்வார் நெல்லோடு உற்றால், நார் கொள்வார் பூவுற்றால், வேர் கொள்வார் அதிற் சிறிய நறையுண்டாயின். அடுத்த பாடல் நான் தொடங்கியது எதுபோல - புருடனார்க்கு ஏந்திழையார் பொருளுரைப்பதென, பிறர் பொருளை வவ்வும் திருடனார் மேலவருக்கு அறம் உரைப்பதென, சிறிய தெள்கு கருடனார்க்குப் பறவை கற்பிப்பதென, அனந்தங் கண்ணுள் ளார்க்குக் குருடனார் வழிகாட்டல் என. கோசல நாட்டின் நிலம் விளைத்திடும் நித்திலம், நீல உற்பலம் விளக்கிடும் பைம்புனல், பண்பின் நன்னலம் விளக்கிடும் நல்லவர் வாய்மொழி. நாட்டுச் சிறப்பு என்ற இப்பகுதியின் தொடக்கத்தில் காப்பியக் கலித்துறை என்று வழங்குகின்ற (சிந்தாமணியின் முதற் பாடல் போன்ற) ஒரு யாப்பில் பத்துப் பாடல்கள் பாடியிருக்கிறார். இந்த

*யாப்பானது விருத்தம் செம்மை பெறாத காலத்தில் அதிகம் வழக்கில் இருந்தது. சிந்தாமணி, சூளாமணி, குண்டல கேசி, நீலகேசி போன்றவற்றில் அதிகமாக இதைக் காணலாம். கம்ப ராமாயணம் பெரியபுராணத்திலும் கூட இது ஓரளவு காணப் படுகிறது. பிற்காலத்தில் காப்பியஞ் செய்ய வந்தவர்கள் இந்த யாப்பில் அவசியம் பாடவேண்டும் என்று எண்ணி வழக் கொலிந்த இந்த யாப்பை மீண்டும் பயன்படுத்துகிறார்கள். இப்படிப் பாடினோர் கந்த புராணம் பாடிய கச்சியப்பரும் (14 நூற்றாண்டு) அரிச்சந்திர சரித்திரம் பாடிய இவ்வாசிரியரும் (16 நூற்றாண்டு ஆவர். இந்த யாப்பானது நான்கடிப்பாட்டு, அடிதோறும் ஐந்து சீர். அடியானது மா - மா - கனி - மா - மா என்ற வாய்பாடு உடையது.*

நூற்பொருள்

*பாயிரப் பகுதி முன்னே சொல்லப்பட்டது. அடுத்து நாட் டுச் சிறப்பு நகரச் சிறப்பு என்ற பகுதிகள். தானச் சிறப்பு:*

கள்ளங் கொலைகட் புலைகாமமென் றைந்து மற்றார்க்கு
உள்ளந் தெளிந்தோர் தருமுத்தம தான மென்னப்
பள்ளந் திடாமால் வரைகானகப் பக்க மெங்கும்
வெள்ளம் பெருகிப் பரந்தோடிவி ரைந்த தன்றே.

*ஆறு நீர்ப் பெருக்கெடுத்துக் குகன்கழல் தாழ்ந்து குறிஞ்சி கடந்து, பாலையில் வந்து மான் ஊரும் மாதரிதாள் தொழுது கடந்து, புறவம் (முல்லை) பொருந்தி மறைவணங்கும் அரியை வணங்கி, மருதம் புகுந்தது. மருத நில வருணனை 33 பாடல். சிலபாடல்கள்:*

கரும்புங் காவியுங் கஞ்சமும் ஆம்பலும்
அரும்புட் சேம்பும் அலவனும் அமையும்
சுரும்பும் நந்தும் சுரிமுக மும்செழும்
பரம்பு தோறும் படிந்து நெரிந்தவே.

தொக்க வேதியர்க் குந்துறு வோர்கட்குந்
தக்க தானம் தருபவர் போலவே
பக்க நோக்கிப் பலிப்பறிந் தெங்கணும்
மிக்க செந்நெலும் வெண்ணெலும் வித்தினார்.

சேறு பாய்மலர்த் தேனொடு தீங்கனி
ஊறு பாய்வவும் ஒண்கரும் பட்ட தீஞ்

சாறு பாய்வவும் தத்தமிற் கூடியே
ஆறு பாய்வன அங்கங் கனந்தமே.

*மருதங் கடந்து பின் நெய்தல் இறுதியில் கோசல நாட்டின் தன்மை:*

நிலம்வி ளக்கிடும் நித்திலம், நீலவுற்
பலம் விளக்கிடும் பைம்புனல், பண்பிநன்
நலம் விளக்கிடும் நல்லவர் வாய்மொழி,
குலம் விளக்கிடும் கோசல நாடரோ.

*அடுத்து நகரச் சிறப்பு:*

அறமி ருக்கும் மனத்தில் அனைவர்க்கும்,
திறமி ருக்கும் புயத்திற் செழுஞ்சுடர்,
நிறமி ருக்கும் படையின் கண், நீக்கமில்
மறமி ருக்கும் மடந்தையர் கண்ணினே.

**விவாக காண்டம்**

*அரிச்சந்திரன் சந்திரமதி சுயம்வரத்திற்குச் சென்று அங்கு சுயம்வர மண்டபத்தில் அவளைக் கண்டு அவள் கழுத்தில் உள்ள மங்கல நாணைப் பார்த்து அதைச் சுட்டிக்காட்ட, சந்திரமதியின் தந்தை அவள் பிறந்த போதே மங்கல நாணுடன் பிறந்தாள். அதைக் கண்டவனுக்கே அவன் மனைவியாவாள் என்ற அசரீரி யைச் சொல்ல, அவளை மணம் செய்து கொள்கிறான். பின்னர் இவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்து ஏழு வயது நிரம்புகிறது.*

*இப்பகுதி இப்புராணத்தின் மிக நீண்ட காண்டம். ஆசிரியர் தம்முடைய புலமை முழுமையும் காட்டி இக்காண்டத்தைப் பாடியிருக்கிறார். பெருங்காப்பிய உறுப்புக்கள் முழுமையும் இங்கே பயில்கின்றன. அரிச்சந்திரன் சந்திரமதியின் சுயம்வர நகருக்குச் செல்லும் வழியில் ஒரு பாலைவனம் அங்கு ஒரு காளி கோயில். அந்தப் பாலைநில வருணனையும் காளி வருணனையும் மட்டும் 22 பாடல்கள். வழக்கம் போல் இவை சந்தப் பாடல்கள், இங்குள்ள சொற்கள் தொடர்கள் கருத்துக்கள் யாவும் இப்பகுதி ஒரு பரணிப் பிரபந்தத்திலிருந்து எடுத்து வைக்கப்பட்டதோ என்ற நினைவை ஊட்டும். காளி கோயிலில் சென்று அரிச்சந்திரன் வணங்கவே, அங்கிருந்த கல் தேர் முதலாயின பொன் தேர் முதலியன ஆயின. இது வருண பகவானுடைய செயல் என்று சொல்லிக் காளி தேவி அரிச்சந்திரனுக்கு அவற்றைப் பரிசாகத் தருகிறாள்.*

இக்காண்டத்தின் முகப்பில், அம்மை துதியாக ஓர் அழகிய பாடல் பெய்யப் பெற்றுள்ளது.

**இம்மை யம்மை மறுமை யென்ன இசைத்து மாமறை கூறிய**
**மும்மை யுந்தெளி வுற்று நெஞ்சினின் முக்கு றும்பும் அறுத்திடுஞ்**
**செம்மை யன்பர் மனத்து வைகிய தெய்வ நாயகர் தேவிமற்**
**றெம்மை யாளுடைய யம்மை தாள்கள் இரண்டும் ஏத்தி இறைஞ்சுவாம்**

**இந்திர காண்டம்**

அரிச்சந்திரன் மனுநெறி தவறாத சிறந்த மன்னன் என்ற வசிட்டர் கூற்றை இந்திர சபையில் பொறாமை காரணமாக விசுவாமித்திரர் மறுத்து, சொல்லத்தகாத சொற்களைச் சொல்லு கிறார். ஒரு பாடல் காண்க:

**வெய்யன், பதகன், பரதார விருப்பன், வீணன்,**
**பொய்யன், நிறையும் பொறையுஞ்சிறி தும்மில் புல்லன்,**
**கையன், கபடன், கயவன்தனை நல்ல னென்றிவ்**
**வையன் திருமுன் னுரைத்தாயிதென் னாக? என்றான்.**

பின்னர் அவர் அரிச்சந்திரனைச் சத்தியம் தவறச் செய்கிறேன் என்று சூளுரைத்து வெளிப்படுகிறார். இவ்வளவையும் நிறை வேற்றி வைக்கின்ற நாரதர், 'நான் வெளியே யிருந்தால் அரிச்சந்திரனிடம் சென்று இங்கு நடந்தவற்றை ஒருகால் சொல்லிவிடுவேன். அவ்வாறு சொல்லாத வகை என்னையும் இங்கு அரிச்சந்திரன் விவகாரம் முடிகிற வரைக்கும் தேவர் காவலுக்கு வைத்துவிட்டுச் செல்' என்று விசுவாமித்திரருக்குச் சொல்லி, அவ்வாறே காவலுக்குள் இருக்கிறார் என்பது மிகவும் விசித்திரமானது; இதன் நோக்கம் அரிச்சந்திரனது வாய்மை யைப் பின்னும் பெருக்கிக் காட்டுதல்.

தேவியின் புகழைப் பாடவந்த தேவி பாகவதம் அரிச்சந்திரன் கதையைச் சிறிது மாற்றியும் சொல்லும். வரலாற்றின் தொடக் கத்தில், அரிச்சந்திரன் ஒரு யாகத்தில், தன் பிள்ளையை விளக் கிப் பிறர் பிள்ளையைக் கூரசாது பலிகொடுக்க முற்படுகிறான். இப்பாவச் செயலை எண்ணிப் பின்னர் மனம் திருந்தி சத்திய நெறியில் நிற்கிறான். இவனுடைய பிழையைத் தெரிந்தவர் ஆதலால் விசுவாமித்திரர் இவனைப் பொய்சொல்ல வைக்கிறேன் என்று சூளுரைக்கிறார். ஆனால் அரிச்சந்திரன் சத்தியத்தைக் கைவிடவில்லை: இறுதியில் அவன் மயானத்தில் சதாக்ஷி என்ற

பெயருடைய அம்பிகையைத் துதித்துத் தன் துன்பங்களிலிருந்து நிவாரணம் பெறுகிறான் என்பது தேவிபாகவதக் கதை.

## வஞ்சனைக் காண்டம்

விசுவாமித்திரரை ஆசிரியர் 'கொடிய பாதகக் கௌசிகன்', 'கள்ள நீதிக் கௌசிகன்' என்று கூறுகிறார். அவருடைய கட்டளைப்படி பல முனிவர் அரிச்சந்திரனை யடைந்து பெரும் பொருள் பெற்றுப் பின்வந்து எடுத்துச் செல்வதாக அங்கேயே வைத்துச் செல்கிறார்கள். பின்னர் கௌசிகன் விலங்குகளையும் புட்களையும் அழைத்து அரிச்சந்திரன் நாட்டை அழிக்கச் சொல்ல, அவை அவ்வாறே அழிக்கின்றன.

## வேட்டஞ் செய் காண்டம்

தீமை இழைத்த பிராணிகளை அரிச்சந்திரன் வதைக்கிறான். கௌசிகன் ஒரு வீரப் பன்றியைப் படைத்து அனுப்ப, அது பெருஞ்சேதம் விளைவிக்கிறது. அதை வெருட்டி வந்த அரசன் அங்கு ஒரு சோலையைக் காண்கிறான். இரவு அங்கே தங்கும் போது ஒரு தீய கனாக் கண்டு அதை அமைச்சனிடம் கூறுகிறான்.

## சூழ்வினைக் காண்டம்

அரசன் எய்த பன்றி தான் பெற்ற துன்பத்தைக் கௌசிகனிடம் சொல்கிறது. உடனே முனிவன் காமன் சேனை என எண்ணத்தக்க இரண்டு பெண்களைப் படைத்து, அவர்களை அரிச்சந்திரனிடம் அனுப்புகிறான். அவர்கள் அரசனை அணுகி அவனுடைய கொற்றக் கொடையைக் கேட்கிறார்கள். அவன் கொடுக்க மறுக்கவே தங்களை மணக்கும்படி அவனைக் கேட்கிறார்கள். அவன் அவர்களை வெருட்டி விடுகிறான். அவர்கள் திரும்பிவரக் கண்ட கௌசிகன் மிகவும் சினமடைந்து அரசனிடம் வந்து தான் அனுப்பிய பிராணிகளை அழித்ததற்கும் பெண்களை வெருட்டியதற்கும் பரிகாரமாக அவர்களை மணக்க வேண்டும் என்று வற்புறுத்த, அரசன் செல்வத்தையே கொடுத்தாலும் கொடுப்பேனே அன்றி அவர்களை மணக்கமாட்டேன் என்று உறுதியாகச் சொல்கிறான். அப்படியானால் கொடு என்று கேட்டு அனைத்தையும் பெற்ற பிறகு, அவனை நகரினின்றும் துரத்துகிறான். தன் காவிப் பழந்துணியைக் கிழித்துக் கொடுத்து விட்டு, அவனுடைய உயர்ந்த வஸ்திரங்களைப் பிடுங்கிக் கொள்கிறான். யாகத்திற்காக முன்னமே கொடுத்து வைத்திருந்த பொருளையும் இப்போது கொடுத்துவிட்டான். ஆதலால்,

அதற்காக வேறு நாடுகளில் போய்ப் பொருள் தேடி 48 நாளுக்குள் கொடுத்துவிடும்படி விசுவாமித்திரன் திட்டம் செய்து அனுப்புகிறான். சுக்கிரனை அழைத்து, இடைவிடாது துன்புறுத்தி, கொடுக்கவேண்டிய பொருளையும், தான் உடன் சென்று வந்ததற்காகக் கூலியையும் தவறாது பெற்று வரும்படி திட்டம்செய்து அனுப்புகிறான். இப்பகுதியைப் படிக்கும்போது, கௌசிகனைப் பாவி கௌசிகன் என்றெல்லாம் ஆசிரியர் சொல்லிப் பழிப்பது பொருத்தமென்றே தோன்றும்.

## நகர் நீங்கிய காண்டம்

மக்களும் அமைச்சரும் அழுது புலம்ப அரிச்சந்திரன் தன் மனைவி மகனுடன் நகரை நீங்கிச் செல்கிறான். மந்திரி சத்திய கீர்த்தி என்பவன் மட்டும் உடன் வருகிறான். வழியிலே மிகுந்த துன்பமனுபவித்துக் காசி நாட்டை அடைகிறார்கள். விசுவாமித்திரன் ஏவலின்படி சுக்கிரனும் மிகுந்த துன்பம் விளைத்துக் கொண்டே உடன் செல்லுகிறான்.

நகர் நீங்குதல் என்பது மிகுந்த துன்பத்தை உணர்த்தும் ஒரு படலம். இராமன் காட்டுக்குச் செல்வதையும் நளன் காட்டுக்குச் செல்வதையும் கம்பரும் புகழேந்தியும் பாடியிருக்கிறார்கள். அதே பரம்பரையில் வந்த இவருடைய பாடல்களும் மிக்க உருக்கமானவை. நகர் நீங்குவதிலுள்ள துயரம் சுழன்று சுழன்று பின்னி வருவதை ஒரு பாடல் மூலம் காணலாம்:

> தொடைதுறந்து முடிதுறந்து பணிதுறந்து துடிமுரசந்
>   துறந்து தாமக்
> குடை துறந்து வெண்கவரிக் குழாந்துறந்து கரிபரிதேர்க்
>   குலந்து றந்து
> கடைதுறந்து மறுகணைந்த காவலன்தன் திருமுகத்தைக்
>   கண்டோரெல்லாம்
> அடையமன மழிந்துருகி யவரவரே முகத்திலறைந்
>   தழுவா ரானார்.

## காசிக் காண்டம்

காசி வருணனை 14 பாடல். அரிச்சந்திரன் விசுவநாதரை வணங்கி, சந்திரமதியின் சொற்படி, சுக்கிரனிடம் அனுப்ப வேண்டிய பொருளுக்காக அவளையும் மகனையும் விலை பேசுகிறான். விலைப்பட வேண்டிய பொருளின் தலையில்

புல்லை வைத்துக் கூவுவது வழக்கமென்று அறிகிறோம்.* ஒரு பிராமணன் வந்து விலை கொடுத்து வாங்கிச் செல்கிறான். சுக்கிரன் தனக்குக் கூலி வேண்டுமென்று கேட்க, அரசன் சத்தியகீர்த்தி மூலம் தன் தலையில் புல் வைத்து விற்கச் செய்து, தான் பிணம் சுடும் புலையனுக்கு அடிமையாகிறான். வீரவாகு என்ற அப்புலையனுடன் பிணம் சுடுமிடம் சென்று அங்கு பிணம் வந்த கட்டிலைத் தன் பள்ளியாக்கிக் கொள்கிறான். கால் பணமும் கொள்ளித் துணியும் வீரவாகுவுக்குச் சேரவேண்டியது, வாய்க் கரிசி அரிச்சந்திரன் எடுத்துக் கொள்வது என்பது அவனுடைய திட்டம். கிடைத்த வாய்க்கரிசியைச் சத்தியகீர்த்தி வாங்கி, அதைப் புனிதப்படுத்துவதற்காக, சுரபிக்கு ஈந்து அதன் கோமயத்துடனே வீழ்ந்ததை மட்டும் எடுத்து அலம்பி எடுத்துச் சமைத்து உண்டு வாழ்கிறான்.

**மயான காண்டம்**

சந்திரமதியின் மகனைப் பாம்பு கடித்திறக்க அவள் புலம்பிக் கொண்டு உடலைச் சுட வந்தபோது, அவள் மங்கல நாணால் தன் மனைவி என்று அரசன் அறிந்து, பணமும் வஸ்திரமும் தன் எசமானனுக்குக் கொடுத்தாக வேண்டும் என்று பிராமணனிடம் பெற்று வரும்படி சொல்ல, அவள் திரும்பி வரும் வழியில், காசி அரசன் குழந்தையைக் கள்வர் கொலை செய்து நகையை அபகரித்துப் போட்டுவிட்டுப் போயிருக்க, இவள் கண்டு தன் பிள்ளையின் உடலைப் பேய்கள் கொண்டு வந்து போட்டனவோ என்று ஐயுற்றுப் பார்க்கும் வேளை, அங்கு வந்த அரசன் காவலர் கையில் அகப்பட்டுக் கொலையாளி என்று பெயர் சூட்டப்பெற்று அரசன் முன் கொண்டுபோய் நிறுத்தப்படுகிறாள். அசரன் தன் மகன் கொல்லப்பட்டிருந்தும், அவளைக் குற்றவாளி என்று நம்ப மறுக்கிறான். எனினும் சூழ்நிலையின் பயனாய், அவளைக் கொலைக்களத்துக்கு வீரவாகு வசம் அனுப்புகிறான்.❖ அவன் அவளைக் கொலை செய்யும்படி அரிச்சந்திரனை ஏவுகிறான். மயானத்தில் விசுவாமித்திரன், 'இப்போதேனும் நீ கொடுத்த நாட்டைக் கொடுக்கவில்லை என்று சொல்லிவிடு போதும்' என்று பிறர் காதில் விழா வண்ணம் அரிச்சந்திரன் - சந்திரமதிக்கு மட்டும் கேட்கும்படி, சொல்கிறான். கடமையைச்

---

* புல் வைத்து என்பது தர்ப்பையால் கூர்ச்சம் வைத்தல் போலும்.

❖ சிலப்பதிகாரக் கொலைக்கள வரலாறு இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

*செய்யுமாறு அவள் அரசனைத் தூண்டுகிறாள். இந்திரனும் வசிட்டரும் தேவரனைவரும் சூழ்ந்து நிற்கிறார்கள்.*

பதியிழந்தனம், பாலனை யிழந்தனம், படைத்த
நிதியிழந்தனம், இனிநமக் குளதென நினைக்கும்
கதியிழக்கினும் கட்டுரை யிழக்கிலேம் என்றார் –
மதியிழந்துதன் வாயிழந்து அருந்தவன் மறைந்தான்.

*அரிச்சந்திரன் தன் வாளை ஓச்சி,*

'உலகுயிர்க் கெலாம் பசுபதி ஒரு முதலாயின்,
அலகில் சீருடை அவன் மொழி மறைஎனின், அதன்கண்
இகலறம் பலவற்றினும் வாய்மை ஈடிலதேல்,
விலகுறா மலவ் வாய்மையை விரதமாக் கொளின்யான்;

நெறியின் அன்ன என்றனைவிடா நிறைஇவட் குளதேல்
இறுதியின்மையைப் பெறுக; இல்லெனின் இவள்இறுதி
பெறுக' என்று வாள் வீசினான்; பேதை தன் கழுத்தில்
மறுமணத்திடு மாலையாய் விழ்ந்ததவ் வடிவாள்.

*அரிச்சந்திர சரித்திரத்தில் மயான காண்டமே மிகச் சிறந்த பகுதி என்று அனைவரும் சொல்வார்கள். கல்வியறிவில்லாதோர் கூட, சந்திரமதி புலம்பலில் பல பாடல்களை மனப்பாடமாய்த் தெரிந்திருந்தார்கள்:*

பனியால் நனைந்து வெயிலால் உலர்ந்து
 பசியால் அலைந்தும் உலவா
அனியாய வெங்கண் அரவா லிறந்த
 அதி பாவம் என் கொல் அறியேன்;
தனியே கிடந்து விடநோய் செறிந்து
 தரைமீ துருண்ட மகனே!
இனியாரை நம்பி உயிர்வாழ்வம், என்றன்
 இறையோனும் யானும் அவமே!

*இதுபோன்ற 13 பாடல்கள். அரிச்சந்திரன் தன் எசமானனுக் குரிய பணமும் துணியும் தராவிட்டால், தன் மனைவியாயினும் சரியே, பிணம் சுட முடியாதென்று திருப்பி யனுப்பியது சரித்திரம் காணாத உத்தம வாய்மைக் கதை. காசிராசன், தன் மகனே இறந்து போயிருக்கவும், சந்திரமதி கொன்றாள் என்று நம்ப மறுப்பதும் ஒரு சிறந்த பகுதி.*

மயான காண்டம் என்பது அழுகை. இறந்த மகன் உடலைப் பார்க்கத் தமயந்தி வேதியனை அனுமதி கேட்பதும், அவன் மறுப்பதும், தொடர்ந்து அவள் கெஞ்சிக் கேட்டுப் பெற்று, மகன் உடலைக் கண்டு புலம்புவதும், கல் நெஞ்சையும் உருக்குவன. இதன் உருக்கத்தால், அழுகை என்பதைக் குறிக்க, மயான காண்டம் என்ற சொல்லும் அரிச்சந்திர புராணம்* என்ற சொல்லுமே வழக்கத்துக்கு வந்துவிட்டன. ஒரு காலத்தில், பூண்டி அரங்கநாத முதலியார், மயான காண்டத்தைக் கட்டாயம் கல்லூரிப் பாடப்பகுதியில் சேர்த்துக்கொள்ளும்படி, பாடக் குழுவில் இருந்த ஐயரவர்களுக்குக் கடிதமெழுதினாராம்.

### மீட்சிக் காண்டம்

ஓச்சிய வாள் மலர் மாலையாக விழுந்தவுடனே எல்லோரும் கூடி அரிச்சந்திரனுக்குச் சிறப்புச் செய்கிறார்கள். விசுவாமித்திரன் தன் தவத்தில் பாதியைக் கொடுத்து, பெற்ற அரசையும் அவனிடம் திருப்பிக் கொடுக்கிறான். அரசன் வாங்க மறுக்க, எல்லாத் தெய்வங்களும் கூடி அவனை இசைவிக்கிறார்கள். இறந்த பிள்ளையும் காசிராசன் பிள்ளையும் உயிர் பெற்று வருகிறார்கள். சந்திரமதியை விலைக்குப் பெற்ற பிராமணன் அக்கினி தேவன் என்றும், வீரபாகு யமதேவன் என்றும் அரசன் அறிகிறான். மிக்க சிறப்போடு தன்நகர் அடைகிறான்.

### உத்தர காண்டம்

கதை இதனோடு முடிய வேண்டும். ஆனால், காசிராசன் கேட்க வசிட்ட முனிவர் கூறுகிறார் என்று அவருக்கும் கௌசிக முனிவனுக்கும் ஏற்பட்ட பகையை அவர் விளக்கிக் கூறுவதாய் ஒரு காண்டம் சேர்க்கப் பெற்றுள்ளது. இப்பகைமையே இந்திர சபையில் விசுவாமித்திரருடைய சூளுரைக்குக் காரணம்.

அரிச்சந்திரன் சந்திரமதி சத்தியகீர்த்தி விசுவாமித்திரன் வீரபாகு என்ற பெயர்கள் இன்றும்கூடச் சாதாரணமாய் வீட்டில் பழகும் வழக்குச் சொற்களாகிவிட்டன. அரிச்சந்திர புராணம் ஒரு காலத்தில் தமிழ் நாடெங்கும் விரும்பிப் படித்த நூலாயிருந்தது. வீடு தோறும் இதன் ஏட்டுச் சுவடிகள் இருந்தன. பாமர மக்களுக்கும் இச்சரித்திரத்தில் பல பகுதிகள் மனப் பாடமாயிருந்தன. இப்புராணத்தில் பெரும்பகுதி அழகான

---

* காசிக் கங்கை நதிக் கட்டங்களில் அரிச்சந்திர கட்டம் ஒரு முக்கிய மான நீராடும் தீர்த்த கட்டம்.

*சந்தப் பாடல்கள். இதுவும் மனப்பாடத்துக்கு ஒரு காரணம். ஆனால் அது வாய்மைக்கு மதிப்பிருந்த காலம். அரிச்சந்திரன் கதை, மகாத்மா காந்தியின் வாழ்வை உருவாக்கிய சரித்திரங்களிற் ஒன்றெனஅவரே பல முறை சொல்லியிருக்கிறார். மோகனதாஸ் கரம்சந்திர காந்தி, மகாத்மா காந்தி ஆவதற்கான அடிப்படைச் சம்பவங்கள் சிலவற்றில் அவர் அரிச்சந்திர நாடகம் பார்த்த சம்பவமும் ஒன்று.*

*அச்சில் வராத சில பாடல்கள் ஏட்டுப்பிரதி இறுதியில் காணப்படுகின்றன.*

**ஈசன் வாழ இமையவள் வாழ்ந்திடத்
தேசம் வாழ்ந்திடச் செங்கதிர் வாழ்ந்திட
மாசி லாத அரிச்சந்திரன் கதை
வீசி எங்கும் விளங்கி யிருக்கவே.**

**உத்த மத்துவம் உலகு வாழ்ந்திட
முத்தமிழ் வல்லவர் மழையும் ஓங்கிடச்
சத்தியம் பொயா அரிச் சந்திரன் கதை
எத்திசை தன்னினும் விளங்கி இருக்கவே.**

**ஆதரிக்குந் திண்டோள் அரிச்சந்திரன் கதையைக்
காதலித்துக் கொண்டோரும் கற்றோரும் – போதப்
பெரும்பாவம் தீர்க்கும் பெருநெறிக்கே சேர்க்கும்
தரும் பாவம் தீர்க்கும் சிவன்.**

## *புரூரவ சரிதை*

*சந்திரகுலத்து முதல்வனான புரூரவன் என்ற அரசனுடைய வரலாற்றைக் காப்பியச் சுவைபடக் கூறுவது 'புரூரவ சரிதை' என்ற நூல்; வடமொழியில் இவன் பெயர் புரூரவஸ் என்பது. தமிழில் இப்பெயர் புரூரவன் என வருவதற்குரியது. எனினும், இது புரூரவா எனவே வழங்கப்பெற்றுள்ளது. சம்பந்தர் திரு வீழி மிழலைப் பதிகத்தில் புரூரவன் பணி செய்து வழிபட்டதைக் கூறுகிறார்: 'போது சேர்சென்னிப் புரூரவாப் பணி செய் பூசுரர்' (4084) என்பது காண்க. புரூரவா என்ற சொல் வடிவமே தேவாரத்துள் உள்ளது.* புரூரவன் என்ற சொல்லுக்கு அதிகம்*

* *புரூரவன் என்ற வடிவத்தைக் கொள்ளவில்லை. ஏன் பலர் புரூரவா என்று கொண்டார்கள் என்பது விளங்கவில்லை.*

அழுகின்றவன் என்பது பொருள். இவன் மகன் ஆயுஸ்; புரு துஷ்யந்தன் பரதன் சந்தனு திருதராஷ்டிரன் பாண்டு ஆகியோர் குலமான சந்திர குலத்துக்கு முன்னோன். வைதிக அக்கினி மூன்றையும் இவன் ஏற்படுத்தினான் என்று சொல்வதுண்டு. புரூரவன் வரலாறு தமிழ்நாட்டிலும் மிகவும் பழமையானது என்பதை இதனாலும் அறியலாம். இந்த (16ஆம்) நூற்றாண்டில் தோன்றிய சில சிறப்பான காப்பியங்களில் இத்தமிழ் நூலு மொன்று. தனி நூலாக அச்சிட்டு இது வெளிவராமையால், நூல் எங்கும் பயிலப்பெறவில்லை. நூலின் பொருள், ஆசிரியர், காலம் முதலியன யாவும் திட்டமாய்த் தெரிய வருகின்றன. இவற்றை இனிப் பார்ப்போம்.

புரூரவச் சக்கரவர்த்தி கதை என்பது அரிச்சந்திரன் கதை போலத் தமிழ் நாட்டில் நெடுங்காலமாய் வழங்கிய பழங்கதை. தெருக்கூத்துக்களிலும் நடிக்கப் பெறுவது உண்டு. புரூரவச் சக்கரவர்த்தி அம்மானை, புரூரவச் சக்கரவர்த்தி நாடகம், புரூரவச் சக்கரவர்த்தி வாசகப்பா எனப் பாமரருக்கேற்ற பல வகை நூல்களும் உள்ளன. இவற்றுள் வாசகப்பா சென்ற நூற்றாண்டின் மத்தியில் புதுவை அப்பாசாமிப் பிள்ளை புதல்வர் பெரியசாமிப்பிள்ளை என்பவரால் அக்காலக் கூத்துகளுக்கு ஏற்ற விதமாக நான்கு பிரிவுகளாகச் செய்யப்பட்டிருந்தது. நான்கு பிரிவுகளும் நான்கு இரவுக் கூத்துக்களில் நடிக்கப் பெற்றன போலும். முக்கியமான கதை ஒன்றாயிருந்தாலும், விவரங்கள் யாவும் தெருக்கூத்துக்கு ஏற்ப, பெருக்கப்பட்டும் மாற்றப் பட்டும் உள்ளன. இந்த வாசகப்பாவானது சுமார் 1860இல் அச்சிடப்பட்டது (அச்சிட்ட பிரதியில் ஆண்டு தெரியவில்லை). நான்கு பிரிவுகளும் மொத்தம் 250 பக்கம் (டெம்மி); பாட்டு 1112.

### ஆசிரியர்

புரூரவ சரிதை பாடிய ஆசிரியர் பெயர் ஐயம் பெருமாள் சிவந்த கவிராசர்; இவர் கருங்கொல்லர் மரபு;* வேலாயுதப் புலவர் தம் புதல்வர்; நூலின் இறுதியிலுள்ள பாடல் இதைத் தெரிவிக்கும்.

> மூன்று கண்ணனுக்குச் சூலம்; முளரிக் கண்ணனுக்கு நேமி;
> ஏன்ற ஆயிரங் கண்ணானுக்கு இலகுவச் சிரம்; இம் மூன்றும்

---

* பாண்டிமாராயப் பெருங்கொல்லன் என்ற ஒரு புலவர் இருந்து சாசனம் பாடினார் என்று 9ஆம் நூற்றாண்டு வரலாற்றில் அறிகிறோம்.

தோன்றின தன்னைமுன்னாட் கடைந்தருள் தொழில்வலாளன்
போன்ற வேலாயுதன் சொற்புகழ்ஐயம் பெருமாள் சொற்றான்.*

சூலமும் நேமியும் வச்சிரமும் கடைந்தருள் தொழில் வலாளன் என்றமையால், கொல்லன் என்பது பெறுகிறோம். பாயிரப் பகுதியிலுள்ள சில செய்யுட்கள், இப்புலவர் சிவந்த கவிராசர் என்பவருக்கு மருகர் என்றும், இவர்களுக்கு ஊர் தென்காசி என்றும், கச்சிப் பகுதியிலிருந்து வந்த காசிராமை யன் என்பார் புதல்வர் மூவருள் ஒருவரான அச்சுதன் என்பவர் வேண்டுகோளின்படி இப்புலவர் புரூரவச் சக்கரவர்த்தி கதை யைப் புலவர் புகழும்படியாகத் தமிழில் பாடி, அக்காலத்தில் தென்பாண்டி நாட்டில் ஆட்சி செய்த வரதுங்கராம பாண்டிய ருடைய அவையில் அரங்கேற்றினார் என்றும் கூறும்.

கச்சியம் பதிவரும் காசிரா மையன்
வச்சிர பாணி நேர் மைந்தர் மூவருள்
அச்சுத ........ ......... டாண்டகை
இச் சகந் தனில்தமிழ் நடைசெய் கென்னவே.

வையம் புரக்கும் வரராம வழுதி மகிழத் தமிழ்மாரி
பெய்யும் சிவந்த கவிமேக மருகன் வேலா யுதப்பெருமாள்
ஐயன் பெருமாள் சிவந்தகவி ராசன் காசி நகரமர்ந்தோன்
பொய்யொன்றில் லாமுத்தமிழ்நூல் புலவர் புகழப்புகன்றனனால்.

சிவந்த கவிராசர் என்பது இவர் பரம்பரையில் பலருக்குரிய ஒரு பட்டப்பெயர் போலும். இவர் கவிராசர் என்ற பெயருக் கேற்பத் தமக்கு முன்வந்த தமிழ் நூல்களில் நிரம்பப் பயின்றவர் என்று நூலால் தெரிகிறது. திருக்குறள், கம்பராமாயணம், சிந்தாமணி போன்ற நூல்களில் பயிற்சி மிக்கவர். தம் கவிதைக் குக் கம்பரையே மூலமாகக் கொண்டிருப்பதை நூலெங்கும் காணலாம்.

---

* இக்கருத்துக்கு மூலம்,

ஆழியான் ஆழி, அரன் மழுத் தானென்பார்,
கோழியான் குன்றெறிய வேலென்பான், – ஊழியான்
அங்கைஎழுத் தாணி அருளென்பான்; மாவண்டூர்ச்
சிங்கன் உலைக்களத்தில் சென்று

என்ற பண்டைத் தனிப் பாடலாகலாம்.

**காலம்**

இவர் வரராம வழுதி (வரதுங்கராம பாண்டியன்) மகிழ முத்தமிழ் நூல் புகன்றார் என்றமையால், அம்மன்னன் அவையில் அரங்கேற்றினார் என்பது பெறப்படுகிறது. அம்மன்னன் காலம் 16ஆம் நூற்றாண்டின் இறுதி. அவன் அவையிலும் உடன் காலத்திருந்த அதிவீரராம பாண்டியன் அவையிலும் புலவர் பலர் இருந்திருக்கிறார்கள். அவர்களுள் ஐயம் பெருமாளும் ஒருவர் ஆகிறார். இவர் காலமும் இந்நூற்றாண்டின் இறுதியாகும்.

**நூல்**

அச்சிட்ட பகுதி 'புரூரவர் உற்பத்திப்படலம்' என்று தொடங்குகிறது. பாயிரம் நாட்டுப் படலம், நகரப் படலம் இல்லை; மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஏட்டுச் சுவடியொன்றே இன்று கிடைக்கும் பகுதிக்கு ஆதாரம். இது 1922 ஜனவரி முதல் 1925 செப்டம்பர் வரை பல மாதங்களில் செந்தமிழ் இதழ்களில் படலம் படலமாக உதவிப் பத்திரிகாசிரியர் தி.கி. இராமானுசையங்காரால் செம்மையாக அச்சிடப்பட்டுள்ளது. 'முதலில் நகரப்படல முடிவுரை ஓலைகள் இரு முனையும் ஒடிந்து சிதைந்தும், பின்னுள்ள மற்றைப் படலங்களில் இடையிடையே பூச்சியரித்து வரிவடிவு அழிந்தும் இருக்கிறது. மேலும் ஒடிந்தும் பூச்சியரித்தும் அழிந்தும் போகாதபடி பாதுகாக்கும் பொருட்டு, ஒடிந்து சிதைந்தவை நீங்க மற்றவற்றை ஏட்டிலுள்ளபடியே செந்தமிழில் வெளியிட்டுவர எண்ணி முதலில் புரூரவ உற்பத்திப் படலம் வெளியிடப்பட்டிருக்கிறது' என்பது பதிப்பாளர் குறிப்பு. இவ்வாறு வெளியான படலங்கள் 26; செய்யுட்கள் 845. இறுதிப்படலம் ஒன்று தவிர மற்றவை யாவுமே அளவால் சிறியவை; பாடல் 10, 20 எனச் சுருக்கமாக உள்ளவை. தனி நூலாக இது வெளிவரவில்லை.

செந்தமிழில் அச்சில் வந்த பகுதி 26 பாடலங்களையுடையது. அவற்றிடையில் 16. கும்பப்படலம், 'மைந்தர் அடைந்த தனிமையினை வகுத்தோம், திரைமண்ணுறு நதியில், முந்தை வினையின் பகுதியால் இறங்கி நீந்த முடிந்தான் போல், உந்து பெருநீராடச் சென்றான் தன்மை இனிமேல் உரைசெய்வாம்' என்று முடிகிறது. அடுத்த பகுதி, செந்தமிழில், காந்திமதிப் படலம்; 'பொறுமைக் குலகமெனும் புகழான் இவ்வாறிருக்கப் போற்றாரைத், தெறுமைக் களிற்றான் திண்தோளான், அவன் மனைவி காஞ்சனா மாலை அவர்கள் பெண் காந்திமதி' என்று

கதை தொடர்ந்து போகிறது. அடுத்து வரும் கைலைப்பட லத்தில் காந்திமதி ஒரு பங்குவை மணம் புரிவாள் என்பது விதி என்று கூறவும், திருமால் கருடனை ஏவி, பங்குவான புரூர வனைக் கிரவுஞ்ச மலைக்குக் கொண்டு போகச் செய்கிறார். இடையில் சில படலங்கள் இருந்து, விட்டுப் போயிருக்க வேண்டும். அங்கு, சனியின் சூழ்ச்சியால் திரிகத்தன் மனைவியின் மணிப்பேழையைப் புரூரவன் திருடினான் என்று குற்றம் சாட்டப்பட்டு, அவன் ஒரு கையும் காலும் குறைக்கப்பட்டுப் பங்குவானான் என்ற செய்தி சொல்லப்பட வேண்டும்; இப்பகுதி அச்சில் விடப்பட்டுள்ளதென்று தெரிகிறது. பாடல்களில் இப் போதுள்ளபடி, தொடர்பு இல்லை; நல்ல உடலோடு திரிகர்த்தன் நகரடைந்த புரூரவன் எப்படி பங்குவானான் என்ற விளக்கமும் அங்கு இல்லை. ஏட்டின் சிதைவு என்று தெரிகிறது.

**புரூரவன் கதை**

இது மகா பாரதத்தில் சொல்லப்பட்ட கதை. தமிழில் இப்போது அதிகம் இவ்வரலாறு வழங்காமையால் இதைச் சுருக்கிக் கீழே தருகிறோம். புரூரவன் கதை தமிழ் மச்சபுராணத்தில் 103 அத்தியாயம் 12 பாடலால் சுருங்கச் சொல்லப்பட்டுள்ளது. (சென்ற நூற்றாண்டில் அரிச்சந்திரன் நளன் கதைகள் போலவே புரூரவன் கதையும் நம்மவர்களிடையே அதிகம் வழங்கி வந்தது.) பிரகஸ்பதியின் மனைவியான தாரை என்பவள் சந்திரனைக் கூடிப் புதன் என்பவனைப் பெற்றாள். வைவச்சுவத மனுவின் மகன் இளன் என்பவன் வேட்டையாடி வந்தபோது காட்டில் ஒரு பகுதியை யடைந்தான். அங்கு யார் வந்தாலும் பெண்ணாகக் கடவர் என்பது அம்பிகையின் சாபம். அறியாமல் அங்கே சென்ற இவன், பெண்ணாகி இளை என்ற பெயர் பெற்றான். புதன் இவளை மணந்து புரூரவனைப் பெற்றான். இவன் சந்திரவம்சத்து அரசனாகச் சிறப்போடு ஆட்சி செய்து வந்தான்.

தேவலோகப் பெண்கள் ஒரு சமயம் புனலாடி விளையாடி யிருந்தபோது, கேசி என்ற அசுரர் தலைவன் தோன்றி அப்பெண் களில் அழகிற் சிறந்தவளாகிய உருப்பசியை (ஊர்வசி)ப் பற்றிச் சென்றான். பெண்களுடைய அரற்றொலியைக் கேட்ட புரூரவன், அசுரனோடு பொருது உருப்பசியை மீட்டு, இந்திரனிடம் அளிக்கவும், அவன் மகிழ்ந்து அவளை அவனுக்கே தந்தான். உருப்பசி, 'நான் எப்போது இந்திரலோகத்துக்கு மீள்வது' எனக் கேட்கவும், இந்திரன் 'நீ புரூரவனை எந்த நேரம் ஆடையில்

லாது காண்கிறாயோ அந்த நேரம் திரும்பிவிடலாம்' என்றான். புரூரவன் அவளைப் பெற்றுப் பூவுலகு வந்து இன்பந் துய்த்துக் கொண்டிருந்தான். புரூரவன் அறத்தையே பெரிதும் போற்றி, பொருளையும் இன்பத்தையும் போற்றாது ஒழுகும் நாளில், இவையிரண்டும் அவனுக்குச் சாபம் கொடுத்தன; தருமம் வாழ்த்திற்று. இந்திரன் உருப்பசியைப் பூவுலகிலிருந்து மீட்டுக் கொள்ள வேண்டுமென்று எண்ணி , இரு கந்தர் வரை அனுப்பி, இருளில் புரூரவனும் உருப்பசியும் கலவியிலிருந்த வேளை அவ ளுடைய ஆடையைக் கவர்ந்து வரச் செய்தான். அதை மீட்டு வருவேனென்று புரூரவன் அவ்விருளிலே புறப்பட, அந்நேரம் மேகமின்றியும் தோன்றிய மின்னலொளியில் ஆடையில்லாத நிலையில் புரூரவனை உருப்பசி கண்டாள். இந்திரன் சூழ்சியை யுணர்ந்து, அவனைப் பிரிந்து விண்ணுலகு சென்றாள். புரூரவன் யாகங்கள் செய்து பெரும் பதவி பெறலாமென்பதை மனத் திலுன்னி நூறு அசுவமேதயாகம் செய்து முடித்து இந்திரலோகம் சென்று இந்திரனோடு ஒக்க வீற்றிருந்தான். அவ்விந்திரன் வேண்டுகோளின் படி உருப்பசி அங்கு நடனமாடுகையில், புரூரவன் மீது மனம் சென்றமையால், நடனம் வழுவியது கண்ட பரதாசாரியன் 'நீ ஒரு பூங்கொடியாக' என்று சாபந் தந்தான். அவளும் அவ்வாறே குமாரவனத்தில் ஒரு கொடியாயிருந்தாள், அவளைப் பிரிந்த புரூரவன் எங்கும் அவளைத் தேடிக் காணாது, கண்ணால் காணும் மலர்க்கொடி யாவும் அவளென்றெண்ணிப் புல்லி வந்தபோது, இந்த வனத்தில் வந்து இந்தக் கொடியையும் புல்லவும், உருப்பசி மீண்டும் தன் வடிவடைந்தாள். அவள் வயிற் றிற் பிறந்த ஆயு என்பவன் வழியே சந்திரகுலம் பெருகிற்று.

அந்த ஊழியும் அகன்று உருப்பசியும் அகன்றபின் புரூரவன் கங்கை நாட்டரசன் மகள் புண்டரீக வல்லியைச் சுயம்வரத்தில் மணந்து இன்புறும் நாள், நாரத முனிவர் தோன்றி, 'உனக்குச் சனி வந்து தொடர்கின்ற நாள் நெருங்கிற்று' என்று உணர்த் திச் சென்றான். பின் அரசன் சனியை நோக்கித் தவம் செய்து, அவன் வரவும், அவனுடைய பிடியிலிருந்து தப்புதல் இயலா தென்பதுணர்ந்து, தன் தேவியின் விருப்பப்படி, 'முதுமையில் வாராது இளமையிலேயே வந்து என்னைப் பற்றுக' என்று சனி யை வேண்டினான். இளவேனிற் பருவத்துப் போது கொய்து புனலாடி மகிழும்போது, வித்துமாலை இவனுடைய நகரைக் கைப்பற்றிக் கொண்டான். அறிந்த மன்னன், சனி தொடர்ந் தான் என்பதறிந்து, போரிடத் துணியாது வேறு நாடு சென்று

சில காலம் உறைய எண்ணி, மனைவி மக்களோடு வனம் புகுந்து பின் சந்திரகிரி நாடடைந்தான். அங்கு விச்சுவகுபுத்தன் என்னும் வணிகனிடம் நெல் குற்றும் தொழில் பெற்று அரசி துயருறு கிறாள். மன்னன் விறகு சுமந்து பிழைக்கிறான். வணிகன் அரசி யிடம் தகாத எண்ணங்கொண்டு, மன்னன் இருக்கும் இடத்தில் அவள் இருந்தால் தன் எண்ணம் கை கூடாது என நினைந்து அவளையும் நெல் குற்றும் பிற பெண்களையும் ஓடத்திலேற்றி வேற்றூர் செலுத்துகிறான். துயருற்று அரற்றும் அரசிக்கு அசரீரி 'அஞ்சேல்' என்று உரைக்கிறது. விறகு வெட்டி வந்த மன்னன் தேவியைக் காணாது நிகழ்ந்தது கேட்டறிந்து தானும் மக்க ளோடு வேற்றூர் நோக்கிப் புறப்படுகின்றான். வழியில் ஒரு காட்டாற்று வெள்ளம் அவனை அடித்துச் செல்ல, அவ்வழி வந்த ஆயனொருவன் மக்கள் இருவரையும் கொண்டு போய் வளர்க்கிறான். நீராலடித்துச் செல்லப்பட்ட மன்னன் கரை சேர்ந்து திரிகர்த்தன் என்ற அரசனுடைய நாட்டையடைந்தான். அங்கு அவ்வரசன் மகள் காந்திமதி மணப்பருவமடைந்திருந் தாள். அவளைத் தன் மருமகனுக்கு மணம் புரிவிக்க வேண்டு மென்று திரிகர்த்தன் நினைக்க, அவள் மனைவியோ தன் மரு கனுக்கு மணம் புரிவிக்கத் திட்டமிடுகிறாள்.

இந்த நிலையில், கயிலையில் சிவபெருமான் சந்நிதியில், விதி பெரிதா மதி பெரிதா என்ற வாக்கு வாதம் பிரமனுக்கும் திருமாலுக்கு மிடையில் நிகழ்கிறது. திரிகர்த்தன் மருகன் மணப் பானா, அவள் தேவி மருகன் மணப்பானா என்ற கேள்வி எழ, இருவருமில்லை, செக்கடியிலுள்ள ஒரு நொண்டி மணப்பான் என்பது விதி என்று பிரமன் சொல்லுகிறான். திருமாலுக்குக் கோபம். மறுநாள் நடைபெறப்போகும் காந்திமதியின் திருமணத் தில் இதை முடிவு செய்துவிடலாம் என்று தீர்மானிக்கிறார்கள்.

திரிகர்த்தனுடைய தேவி, தன்மகளை ஒரு பல்லக்கில் வைத்து நிரம்பப் பணிகாரங்கள் ஆபரணங்கள் முதலியவற்றை யும் அதனுள் வைத்து, தன் மருகன் மணம் புரிந்து விடுவான் என்ற எண்ணத்தில் அவனிடம் அனுப்புகிறாள். இதற்கிடை யில் கருடனையழைத்துத் திருமால் அந்த நொண்டியைக் கொண்டு போய்த் தொலைவில் விடச்சொல்ல, கருடனும் அப் படியே அவனைக் கிரவுஞ்சமலையில் கொண்டு போய் விட்ட போது, அவனுடைய பசி மிகுந்த நிலையை எண்ணி இரக்கங் கொண்டு உணவு கொண்டு வரப் போகிறான். திரிகர்த்தன் தேவி

அனுப்பிய பணிகார வகைகள் பல்லக்கில் போவது கண்டு இதுவே நல்ல உணவென்று முடிவு செய்து, பல்லக்கோடு தூக்கி வந்து மன்னன் முன்விட்டான். அவன் அப்பல்லக்கைத் திறந்து பார்த்ததும், காந்திமதி வெளிவந்து அவனுக்கு மாலையிட்டாள். அந்த நேரம் சூளுறவு கூறிய திருமாலும் பிரமனும் சிவபிரானுடன் அங்கு வந்து, நிகழ்ந்ததைக் கண்டனர். மன்னன், மூவரையும் கண்டு பெருமானை வணங்கவே, மூவரும் வரங் கொடுத்தனர். பின் புரூரவன் திரிகத்தனால் வரவேற்கப் பெற்று முறைப்படி காந்திமதியை மணம் புரிந்து தன் நகரமடைந்து வித்துமாலியை வென்று சிம்மாசனத்தில் அமர்ந்தான்.

கும்பன் என்ற ஆயனால் வளர்க்கப்பெற்ற பிள்ளைகள் இருவரும் போர் முறைகளில் வல்லவராகி, அரசனையடைந்து அவனிடம் பணியில் அமர்ந்தனர். தேவியை ஓடத்திலேற்றி வந்த வணிகன் அவளை அதிலேயே தனியே சிறையிருத்தி வைத்தான். புயலில் சிக்கிய அம்மரக்கலம் ஒரு துறையணுகிற்று. ஒற்றர் அரசனிடம் சொல்லினர். அதன் கண் உள்ள பொருள்களனைத் தையும் கைப்பற்ற வந்த அரசன் சேவகர் ஓர் அறை மட்டும் பூட்டியிருத்தல் கண்டு அரசனிடம் சொல்ல, அவன் தன்னிடம் புதிதாய்ப் பணியேற்ற இருவரையும் அனுப்பிப் பார்க்கச் செய் தான். இரவு அங்கு இருவரும் காவல் செய்யும்போது, உறக்கம் வராது காப்பதற்காக, மூத்தவன் தங்கள் வரலாற்றை ஒரு கதையாகத் தம்பிக்குச் சொல்லிவந்த போது, பூட்டியிருந்த அறையினுள் அடைக்கப்பட்டிருந்த தேவி, இக்கதை முழுமை யும் கேட்டுக் கொண்டிருந்து, இப்பிள்ளைகள் தன் பிள்ளை கள் என்பதுணர்ந்து, 'ஏமாங்கதனே கனகாங்கதா' என்று புலம்பினாள். பிள்ளைகளும் தங்கள் தாயென்றுணர்ந்தனர். ஆனால் வணிகன் சென்று அரசனிடம் அவள் தன் அடிமை யென்றும் பிள்ளைகள் சொல்வது பொய்யென்றும் முறை யிட்டான். பிள்ளைகளில் மூத்தவன் அரசனால் அழைக்கப் பெற்றுத் தங்கள் வரலாற்றையும் தாயின் நிலையையும் கூற, அரசன் அவள் தன் தேவி என்றும் இவர்களே தன் பிள்ளைக ளென்றும் அறிகிறான். வணிகன் செய்த பிழையைப் பொறுத்து, அவனைத் துரத்தி விடுகிறான். தேவியை அழைக்கச் சிவிகை யனுப்பவும், அவள் நடந்தே வருகிறாள். அரண்மனையுட் செல் லாமல், தன் கற்பை உலகறியக் காட்டவேண்டித் தீ வளர்க்கச் செய்து அதனுள் மூழ்கி எழுகிறாள். மன்னவன் அவளைக் கைப் பிடித்து மக்களோடு அரண்மனை புகுகிறான்.

### நூலாராய்ச்சி

புரூரவ சரிதை தமிழிலக்கிய உலகில் அதிகம் வழங்காத நூல். இது பற்றி அந்நூலினுள் காணும் பொருள்களைச் சற்று விரிவாகவே இங்கு கூறுகிறோம். வரலாற்றில் கூறியபடி நாட்டுப் படலம் நகர்ப்படலம் அங்கில்லாமையால் அதுபற்றி ஒன்றும் சொல்லவில்லை. கதைத்தொடர்புக்குரிய சில பகுதி களும் இடையே கிடைக்கவில்லை என்பதையும் முன்னே குறிப்பிட்டோம்.

பொதுவாக, நூலானது அளவிற் சிறிதாயிருந்த போதிலும், சொல் நயம் தொடை நயம் பொருள் நயம் சிறந்தது. மொழி இப்புலவருக்கு நன்கு ஏவல் புரிகின்றது. சந்தம், மடக்கு, யாப்பு யாவும் பாட்டின் பொருளுக்கு ஏற்ப அமைந்து பொலிவு செய் கின்றன. பிற்காலத்தில் வழக்கொழிந்த காப்பியக் கலித்துறை யையும் இவர் அபூர்மாய் உபயோகிக்கிறார். ஆசிரியர் இதைப் பெருங்காப்பிய நயமெல்லாம் புலப்படும்படி அழகு பெறச் செய்திருக்கிறார். இளவேனிற் படலம், போதுகொய் படலம், புனல் விளையாடிடும் படலம் என்பனவும், போர்புரி படலம் என்பதிற் காணும் போர்ச் செய்திகளும் இதன் தன்மைகளை நன்கு புலப்படுத்துகின்றன.

சில பகுதிகளை எடுத்தக்காட்டாகக் காணலாம்.

### துதிப் பகுதி

ஆசிரியர் சிறந்த சைவர். கயிலையில் சிவபிரான் சந்நிதியில் திருமால் பிரமன் இருவருடைய வாக்குவாதமும் நிகழுமாறு இவர் கதை அமைத்திருப்பது இதை நன்கு புலப்படுத்தும். நூலகத்துள் பல இடங்களில் அரசர் சிவபிரானை வணங்குவதாக அமைத்திருக்கிறார். புரூரவன் காலையில் எழுந்து கடன்களை முடித்து அரச மண்டபத்துக்கு வருகிறான்:

வைக றைத்துயில் நீங்கியே மன்னவர் மன்னன்
செய்யும் நித்தியக் கருமங்கள் யாவையும் திருத்திப்
பொய்யி லாநெறிப் புண்ணியர் பதமலர் போற்றித்
தையல் பாகனார் பதயுகத் தாமரை தாழ்ந்து

என்பது காணத்தக்கது. துதிப் பாடல்களையும் அழகாக அமைக்கிறார். சனி தொடரப் போகிறான் என்று தெரிந்து, புரூரவன் சனியைத் துதிக்கிறான். சனியும் புள்ளேறி அவன் முன் பிரசன்னமாகவே, புரூரன் காண்கிறான்:

ஒருங்காக நினைந்தவருக் கழியாத ஆயுள்தரும்
உரவோன் தன்னை,
முருங்காகந் தருஞ்சுடரோன் தருஞ்சேயை, காளிந்தி
முன்னோன் தன்னை,
இருங்காக துண்டநறுஞ் செச்சையனை, தென்திசைவாழ்
இமையோர்க் கூட்டும்
கருங்காகப் பரியோனை, சவுரியனை – இரு கண்ணும்
களிப்பக் கண்டான்.

*தன்னைக் கருடன் எடுத்துச் செல்வதுணர்ந்து, புரூரவன் செய லிழந்து, இறைவனிடத்தும் அடைக்கலம் புகுகிறான்:*

மெய்யாய் அழியாத வெளிக்கிடையே
பொய்யாகிய மாயை புணர்த்தியவா,
செய்யா, செயலற்றவர் சிந்தை விடா
ஐயா, எளியேன் உன் அடைக்கலமே.

ஓவா நிலனும் உலவும் புனலும்
தீவா, யுவும் வானொடு கோள்களுமே
மூவா முதலும் முதல் மூவர்களும்
ஆவாய், எளியேன் உன் அடைக்கலமே.

பொல்லா மணியே, புனையா அணியே,
எல்லா வையு மாகி இருந்தவனே,
சொல்லா லிது என்பதோர் சுட்டுருவும்
அல்லாத வனே, உன் அடைக்கலமே.

பொறிவாய் வழி புந்தி புறத்து விடா
நெறிவாய் தவரன் பொடு நின்றவனே,
சிறியாய், பெரியாய், செய லேதுமிலாய்,
அறியாய், அறிவாய், உன் அடைக்கலமே.

நாகா பரணா, நயனாயுத, செம்
பாகார் மொழி பங்குடை, சங்கரனே,
மோகா தியின் மூழ்கி முளைத்திடும் வித்து
ஆகாது, அளியேன் உன் அடைக்கலமே.

*இப்பாடல்களைப் பார்க்கும்போது, அரசன் தன்னைக் காக்க வேண்டித் துதிப்பதாகத் தெரியவில்லை: ஒரு பரம்பொருளின் இலக்கணத்தைத் தொகுத்துச் சொல்வது போலவே தெரிகிறது. கிரவுஞ்ச மலையின் மீது பங்குவாய் வந்த புரூரவனுக்குக் காந்தி*

மதி மாலையிட்டாள் என்ற நிலையைக் காண முத்தேவரும் வருகிறார்கள். அவர்களைக் கவிராசர் வருணிக்கிறார்.

கூன்தரும் பிறைவேணியும் மகரவாய்க் குழையும்
மூன்று கண்களும் மான்மழுக் காடும்ஐம் முகமும்
தேன்க ருங்குழல் உமையொடு மருவிலி செல்வான்
தோன்று மேனியுமாய் நின்ற தொரு பெருஞ் சோதி.

வளையும் ஆழியும் மறைகளும் கருணையும் மலர்ந்த
தளைசெய் தாமரை தாங்கிமைம் முகில் நிறந் தயங்கப்
புளக மாமுலைப் பொறிதிகழ் மருமமும் பொலியத்
துளவ மாலையு மாய்நின்ற தொருபெருஞ் சுடரே.

வேத வாசமும் மென்மலர்ப் பொகுட்டு மெல்லியலும்
சோதி வாண்முகம் நான்கும் எண் புயங்களும் துலங்கச்
சீத நீர்பெருங் குண்டிகை மணிவடந் திகழப்
பீத மேனியுமாய் நின்ற தொருதழற் பிழம்பே.

இவ்வாறு தன் முன் தோன்றிய தேவர்களைப் புரூரவன் கண்டு துதிக்கிறான். தேவர்களை அவன் காணுமிடத்தும் துதிக்குமிடத்தும் ஆசிரியர் கூறும் பாடல்கள் சமய நுட்பம் பொதிந்த பாடல்களாயுள்ளன. 'எளியேனை ஆள எளிவந்து நின்ற செயலே' என்று ஐந்து பாடல்கள் பாடுகிறான். அவற்றுள் ஒன்று:

சுத்தங் கலந்து அகலங் கலந்து
துரியங் கலந்த சொருபத்து
அத்தங் கலந்த முதியோர்கள் தன்மை
அறியேனை அஞ்சல் எனவே,
சத்தங் கலந்த பொருளாய் மறப்பும்
நினைவுந் தவிர்ந்த தலையோர்
சித்தங் கலந்த துருவங் கலந்து
வெளிவந்து நின்ற செயலே.

'மறப்பும் நினைவும் கடந்த நிலை' என்று இவர் இங்கே பாடுவது, மேலான முத்திநிலை, சிவபோகம் என்று சைவ சித்தாந்திகள் கூறுவர்.

### வருணனைப் பகுதி

சில சிறப்பியல்புகளை எடுத்துக் கூறலாம். ஓடத்திலேற்றிச் செல்லுதல் தமிழிலக்கியத்தில் காண்பதற்கரிய ஒரு செய்தி. கம்பராமாயணத்தில் குகன் பாரதனாதியரை ஓடத்திலேற்றிக்

கங்கையைக் கடந்து கொண்டு செல்கிறான். ஆனால் நம் காப்பியத்தில், ஒரு வணிகன் தான் காமுற்ற அரசன் தேவியை வேறிடம் கொண்டு செல்லக் கருதி ஓடத்தில் ஏற்றிச் செல்கிறான். புயல் அடிக்கிறது; ஓடம் வேற்று நாட்டுத் துறையில் வந்து கரை சேர்கிறது. அங்கு அரசனது காவலர் ஓடத்திலுள்ள பொருள் களைச் சோதனை போடுகிறார்கள். இருபதாம் நூற்றாண்டுச் செய்திகள் அங்கு சொல்லப்பட்டுள்ளன.

பல பாடல்களைக் குளகமாகக் கொண்டு முடிக்கிறார். பெரும்பான்மை வருணனையிலேயே இவ்வாறு அமைக்கிறார். பாடல்களை வினையெச்சம் கொண்டு முடித்து இறுதியில் பல பாடல்களுக்கு ஒரு வினைமுற்றாகக் கொண்டு சொல்வது மிகவும் கம்பீரமாகவுள்ளது.

வருணனையில் பெருங்காப்பிய நிலையைப் பார்க்கிறோம். தேவமங்கையருடன் உருப்பசியும் புனலாடல் விரும்பி ஒரு காவை அடைகிறாள்:

ஈரப் பலசம் கொழு விஞ்சிபலா
நாரத் திலகம் துடி நாகம் விளா
வாரத் தினொ டாமலகந் திலகம்
சேரப் பொலிகின்றது தென்றலொடும்.

கொடியோடிய முல்லை கொழுங்குமுதம்
பொடியோடலர் கேதகை புண்டரிகம்
படியோடலர் பன்மலர் எம்மலரும்
கடியோடலர் கின்றதொர் காவகமே.

அரசன் விறகு பொறுக்கிச் சுமக்கிறான் என்று சொல்லு மிடத்து, ஆசிரியர் பாலை நில வெம்மையை வருணிக்கிறார். இளவேனிற் படலத்தில் குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என ஐந்திணை வளத்தையும் ஐந்து பாடல்களால் கூறுகிறார். காந்திமதி அழகை வருணிக்கும் போது கேசாதிபாத வருணனையாகப் பன்னிரண்டு பாடல்கள் மிகவும் சுவைபடக் கூறுகிறார். கேசத்தின் வருணனை:

கூந்தற் கமுகைக் கொலைப் படுத்தி,
    இருளைப் பகலே குடிபோக்கி,
நீந்தப் புனலிற் சைவ லத்தை
    அறலை வீழ்த்தி நெறிநின்று,

சாந்தப் புகையை மணந்துபுயல்
மாலை சூட்டித் தழுவியவே –
காந்தட் செழும் பூந் தொடிநிகர்த்துக்
கன்னித் திருவின் கருங் கூந்தல்.

*காந்திமதியின் மணமென்று கேட்டு நகர மாந்தர் நகரை அணி செய்கிறார்கள்; ஒரு பாடலில் எண்களை ஒன்று முதல் பத்து வரை அமைக்கிறார்:*

ஆறு கரணத் தைந் திணையுள்
ளடக்கி நான்கு மறை வழியே
ஏறு கழல் மூன் றியற்று மிரு
பிறப்போர்க் கொருமை யுடன் ஈவார்
கூறு மிசை ஏழ் பாடி எட்டு
வகை மங் கலங்கள் குயிற்றுவார்
ஊறும் இசைகள் ஒன்பதொடு
நடிப்பார் திசை பத் துவப்பாக.

*மற்றோரிடத்தில் ஐம்பத்தாறு தேசமன்னரும் காந்திமதி மணங் காண வந்தனர் என்று சொல்லும்போது, ஐம்பத்தாறு தேசப் பெயர்களையுமே சொல்லுகிறார். சோழம் தென் கேரளம் என்று சொன்னவர், பாண்டியைச் சொல்லும் போது தாம் பாண்டி நாட்டவராதலால், ஒண்கீரஞ்சேர் தமிழ்ப் பாண்டி என்கிறார். (கீரம் - வடமொழி)*

*உருப்பசியின் ஆடையைக் கவர்ந்தவனைப் பிடித்து ஆடையை மீட்பேன் என்று புரூரவன் விரைதலும், அப்போது வந்த மின்னொளியில் அவள் அவனை நிர்வாணமாகக் கண்டாள் என்பதைச் சொல்ல வந்த ஆசிரியர், அவனைப் 'பொற்ற பூந் துணர் அசோகினான் பதமலர்ப் புறத்துப் பற்றிலாதவர் சீவகா ரம் மெனும் படிவம் கண்டாள் என்கிறார்.*

*அரசன் நகரம் புக்கதை வருணிக்கிறார்:*

ஒற்றை மதிக் குடைநிழற்ற, ஒண்கவரி இருபுறமும்
உயர்ந்து லாவ,
வெற்றி வலம் புரிமுழங்க, மங்கையர் பல் லாண்டிசைப்ப
வியங்கள் விம்ம,

முற்றுமதி யமைச்சர் தொழ, முனிவரரும் முதியோரும்
முறையில் சூழப்
பொற்றகும்பிற் புனல்பூரித் தந்தணர் முந் துறநகரம்
புக்கான் மன்னோ.

*புனல் பூரித் தந்தணர் முந்துறலாவது, அந்தணர் பூரண கும்ப மெடுத்தல்.*

*அரசன் வெற்றி பெற்று நகருக்குள் பிரவேசிக்கிறான். பலரும் அவனை வந்து காண்கின்றனர். அவரவர்க்குத் தக்கபடி அவன் தனது அங்கிகாரத்தைத் தெரிவிக்கிறான். எப்படி?*

பார்த்தான் சிலரை; சிரங் கோடல்
பயின்றான் சிலரை; வம் மின்என
நேர்த்தான் சிலரை; கரந் தொட்டு
நின்றான் சிலரை; நெஞ் சழுந்தச்
சேர்த்தான் சிலரை; எதிர் கொண்டு
சென்றான் சிலரை; வம்மின் என
ஆர்த்தான் சிலரை; சிலரை அடி
தொழுதான், தொழுதற் கரியோனே.

*இவ்வாசிரியருடைய கற்பனைக்குப் பொருந்திய முக்கியமான மற்றோரிடம், சூரிய உதயம் அத்தமனம், சந்திர உதயம் அத்த மனம் என்பன. நீண்ட கதையில் இதற்கான வாய்ப்புக்கள் மிக வும் அதிகமாயுள்ளன. ஒவ்வோரிடத்தும் பாடல்களை அடுக் காகவும் பொருள் நயம் பொருந்தவும் பாடுகிறார். கயிலையில் பிரமனும் திருமாலும் மதி பெரிதாவிதி பெரிதா என்று வாதிட்ட பின்னர், திரிகர்த்தன் நகரில் காந்திமதி திருமணத் தன்று, மாலையில் கதிரவன் மறையவும், குழவி வெண்திங்கள் எழுந்து ஆட்சி செலுத்தி மறைய, மீளவும் கதிரவன் எழுந்தான் என்பதை ஆசிரியர் பதினாறு பாடல்களால் வருணிக்கிறார். இரவில் உடுக்கள் தோன்றிய காட்சி:*

அரவநீள் வடம் பிணித்து மந்தர வரை யதனாற்
கரைசெ யாப்பெருங் களியமு தெழும்படி கடையத்
திரைசெய் வேலையி னமுதவொண் திவலைகள் தெறிக்க
ஒருவன் மேனியிற் பொலிந்தன உடுக்களா லும்பர்.

*பின்னர் சூரியன் உத்திக்கிறான்:*

செறிந்த பேரிருட் கங்குலாங் கரா மிசைச் செல்ல
அறிந்த ஆரணம் காரணக் குறியுணர்ந் தழைப்ப
மறிந்த தெண்டிரைக் கடல்நிறத் திருமறு மார்பன்
எறிந்த செஞ்சுடர் திகிரி போற் கதிரவன் எழுந்தான்.

புள்ளியந் தனி அளி யெனும் ஏழிசைப் புலவோர்க்கு
உள்ளுவந் தினி தூறிய பொருளெலாம் உள்ள
எள்ள லின்றியே முகமலர்ந் தன்பொடும் ஈயும்
வள்ளி யோர்முக மலரென மலர்ந்தது வனசம்.

கதையின் இறுதிப் பகுதியில், மக்கள் இருவரும் ஓடமேறி வணிகனுடைய கப்பலைப் பார்வையிடப் போகிறார்கள். சூரியன் மேல் கடலில் மறைய, கீழ் கடல் முகட்டில் நிலவு தோன்றுகின்றது என்பதை ஆசிரியர் பதினான்கு பாடல்களில் விரிக்கிறார்; அவற் றுள்ளும் மூன்று பாடல்கள், ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்தது எனத்தக்கவாறு, கடன் முகட்டெழுந்தது செழுந்திங்கள்' என்ற மகுடத்தைக் கொண்டுள்ளன. ஒரு பாடல் பின்வருவது:

புலன்கள் யாவையும் புரையற இளநிலப்
  பொழிகதிர் பொலிவெய்த
கலங்கு வாரிதி இரசத முருக்கிய
  இவைமுகத் தெழில் காட்ட,
அலங்கலந் துழாய் அஞ்சனக் கிரியனான்
  அலர்மலர்க் கர மேனின்று
இலங்கு சங்கம் வந் தெழுந்தெனக் கடன்முகட்
  டெழுந்தது செழுந் திங்கள்.

## நீதிப் பகுதி

நூலின் மற்றொரு சிறப்பான அம்சம், இதிற் சொல்லப் படும் உலக நீதிகள். பொருங்காப்பியத்தின் ஒரு சிறப்பியல்பு. நல்லொழுக்கத்தையும் நீதியையும் மக்களுக்குப் புகட்டுவது. இந்த நூலில் இந்தப் பண்பு மிகவும் நன்கு அமைந்துள்ளது. உருப்பசியே அரசனுக்கு நீதிகளைப் புகட்டுகிறார். தன்னை விட்டுப் பிரிந்த அவளை மீண்டும் கண்டு அவன் அரற்றும் போது, அவள் தான் ஒரு பொது மகள் என்பதையும், அரசராவார் பொது மகளிர் வலைப் படலாகாது என்பதையும் பிற நீதிகளை யும் அவனுக்குப் புகட்டுவது மிக்க சிறப்புடையது:

மன்னவனே, என்னனைய
கொம்மை முலைமின்னார் குணங்கூறக் கேட்டியால்:

கள்ளீரம் நீங்காக் கருங்கூந்தற் கன்னியர்க்கு
உள்ளீரம் இன்மை சிறிதும் உணர்ந்திலையோ?

நிவந்த வரை குளிர வீழ்ந்த நெடுநீரும்
உவந்த மலர் தேடி உறவுற்ற வண்டினமும்

குவிந்த முலையார்கள் அன்பும் குணமனைத்தும்
கவர்ந்து கொடுபோங் கருத்தன்றோ, காவலனே.

கல் மூடு நெஞ்சும் கனி மூடிய மொழியும்
குன் மூடு தூண்டிற் குலை விழியும் கொண்டுலவு
மின் மூடும் காரோதி மெல்லியலா ரென்னும் வெறும்
புல் மூடும் பாழ்ங் கிணற்றில் வீழ்வாரோ போர்வேந்தே?

சூதாடல், கள்ளருந்தல், வேட்டை சில சூழ்ந்த,
தீதாம் கொலை புரிதல், செங்கோல் முறை திறம்பல்,
காதார்ந்த கண்ணார்தம் காமத்தே காதலித்தல் –
மீதான வேந்தர் கெடுதற்கு வித்தாமால்.

ஈதல், அறிவூக்கம், இன்சொல், பொறையுடைமை,
பேத மறப் புரத்தல், வாய்மை பிறழாமை,
ஓதல், படைபயிற்றல், ஒன்னார் உரனடங்கக்
காதல் திறை கோடல் – ஈதன்றோ மன்னர் கடன்.

*அரசி தன்னிடத்துத் தகாத மொழி கூறிய வணிகனுக்குக் கூறிய அறவுரைகள் ஏழு பாடல்கள். அவற்றுள் ஒன்று:*

திறந்தெரிந்த கற்பினர்பாற் சிந்தைவைக்குத் தீயோரை
இறந்தவரின் வேறாக எண்ணார் இயல்புடையோர் –
பிறன்கடை நோக்காமை யினுமுண்டோ அறம்பிறபின்
அறன்கடை நின்றாரின் அவரே கடையாவார்.

*அரசன் அறத்தையே போற்றி வழிபட்டமை கண்ட பொருள், சினந்து அவனைப் பழித்துக் கூறுகிறது:*

உரவுநீ ருலகம் காப்போர்க் குறுபொரு ளாதியாகி
அரியமா மகங்க ளாலே அமரருக் குதவி யாங்குப்
பெரியவா னவர்க்கு மேலாம் பெரும்பதம் உதவி இங்ஙன்
பொருளலார் தமையு மாக்கும் பொருளலாற் பொருள் வேறுண்டோ?

*முன் நூல்கள்*

*இவர் முழுமையும் கம்பரையே தமக்கு முன் மாதிரியாகக் கொண்டிருக்கிறார். உருப்பசி இந்திர சபையில் திருமகள் வேடந் தாங்கி நடனமாடுகிறாள்.*

மன்னிட உருப்பசி மலர்ந்த கமலத்தின்
மின்னுருவ வேடமொடு மெல்லென நடந்தாள்.

பஞ்சிகுடி கொண்ட பத பங்கய மிலங்க,
மஞ்சுகுடி கொண்ட குழல் மாலை புடை வீழ,
நெஞ்சுகுடி கொண்ட அறி வோரும் நிலை பேர,
நஞ்சுகுடி கொண்ட வழி நன்குழைகள் தாவ.

கும்பமெனும் விம்பமுலை வம்பொடு குலுங்க,
அம்பர மமைந்த இடை ஆடரவி னாட,
பைம்பொன் மணி மேகலை குலாவ, நறை பாயும்
செம்பவள வாயிதழின் மூரல் சிறி தெய்த.

செங்கை பயில் தண்ணுமை தெழித்திட, நல்யாழும்
அங்குரலு மோரி சையினாய் பிழி பிலிற்ற,
வங்கிய மிசைப்ப, வருகட்டளை வழாது
தங்கிய சதுத் துவனியும் முறை தயங்க.

துன்றிய கருங்குழல் அரம்பையர்கள் கூடி
மென்துகில் வனைந்த வெழிலிக்குள் வரு மின்னோர்
ஒன்று வமையில்லை உவரித் திரையி னூடே
அன்று வருகின்ற அவளே உவமை யாமால்.

இங்குள்ள சந்தமும் கருத்துத் தொடர்களும் இராமாயணத்தில் சீதை வருவதும், சூர்ப்பனகை வருவதும் பற்றிச் சொல்லியுள்ள இடங்களைத் தழுவியிருப்பது காணத்தக்கது.

புரூரவன் தன் தேவி பிரிந்த பின் மக்களை அழைத்துக் கொண்டு காட்டுக்குச் செல்கிறான். வனம்புகு படலம் என்று ஒரு தனிப்படலம் உள்ளது. நகரத்தார் மன்னன் பிரியக் கண்டு அரற்றுவதும், மன்னன் அவர்களைத் தேற்றுவதும், இராமன் காட்டுக்குப் போகுமிடத்தில் கம்பர் பாடியுள்ளதைத் தழுவி அமைத்தவை. பின்னும் கதையமைப்பிலுங் கூட எத்தனையோ இடங்கள் இராமாயணத்தைத் தழுவி வந்தவை.

இராமாயணத்தில், இராவண வதம் முடிந்த பின் சீதையை இராமன் ஏற்கத் தயங்கும் போது சீதை அக்கினியில் மூழ்கி எழுகிறாள். அந்நிகழ்ச்சியைக் கருத்தில் கொண்ட நம் கவிஞர் தாமும் அந்நிகழ்ச்சியைத் தமது காப்பியத்தில் அமைக்கிறார். புரூரவன் புண்டரீக வல்லியைச் சீவிகையில் அழைத்து வரச் சொன்னபோது அவள் மறுத்து நடந்து வருகிறாள். வந்து, தீ

மூட்டச் செய்த அத்தீயில் மூழ்கி எழுந்து தனது களங்கமற்ற நிலையை நிரூபிக்கிறாள். இது போன்ற நிகழ்ச்சிகள் பின்னும் சில.

சிந்தாமணியைத் தழுவி இவர் ஒரு நிகழ்ச்சியைத் திறம்பட அமைத்திருப்பதும் குறிப்பிடத்தக்கது. கனகமாலையார் இலம்பகத்தில், ஒரு மாதவர் பள்ளியில் தங்கியிருக்கும் விசயையை இன்னார் என்று தெரிந்து கொள்ளாமல், சீவகனுடைய தோழர் சென்று கண்டு, தங்கள் வரலாறு கூறுகிறார்கள். கட்டியங்காரனால் சீவகன் துன்புற்ற செய்தியை அவர்கள் சொல்லி வரும்போது, விசயை தன் மகன் மீதுள்ள அன்பு காரணமாய், அத்துன்பச் செய்தி கேட்டதும் மூர்ச்சையுற்று வீழ்ந்து பின் எழுந்து அரற்றுகிறாள். அவள் சீவகனுடைய தாய் என்று தோழர் தெரிந்து கொள்ளுகின்றனர் அதுபோல இங்கும், கப்பலில் சிறைப்பட்டிருக்கும் அரசி அறையின் வாயிலில் சென்று காவல் புரியும் பிள்ளைகள் இருவரில் மூத்தவன் உறக்கம் வராதிருக்கும் பொருட்டு, இளையவனுக்குத் தங்கள் வரலாற்றையே ஒரு கதையாகக் கூறி வருகிறான். தந்தையாகிய புரூரவன் ஆற்றோடு போய் விட்டான் என்று சொல்லும்போது உள்ளிருந்து கேட்டு வந்த தேவி, இவர்கள் தன் பிள்ளைகள் என்பதை வெளிப்படுத்தி அரற்றுகிறாள்.

வழக்கமாய் நாட்டில் இராமாயணம் பாரதக் கதைகளை நாட்டுப் புறங்களில் இரவில் சொல்பவர்களிடையே வழங்கும் கதைகளில் நளன் கதை அரிச்சந்திரன் கதை புரூரவச் சக்கரவர்த்தி கதை என்பவை முக்கியமானவை; நளன் கதை சூதாடலின் தீமையை வற்புறுத்துவது; அரிச்சந்திரன் கதை சத்தியத்தைக் காக்க வேண்டும் என்று பெருநீதியை வற்புறுத்துவது; புரூரவர் கதையும் சனியன் பீடிப்பு எல்லோருக்கும் உண்டு, அதற்குத் தயாராக இருக்க வேண்டும், ஆனால் அதனால் மனம் குன்றி விடக் கூடாது என்ற உலகியலை உணர்த்துவது. வழங்கி வரும் கதைக்கும் இக்காப்பியத்திற்கும் வேறுபாடு உண்டு. புரூரவன் கதையின் சனி அவனது நண்பன்; மறுநாளே பிடிக்கிறான்; அரசன் சூதாடி நாட்டை இழக்கிறான். அயல் நாடு சென்று மனைவி மக்களோடு வேலை செய்கிறான். பெண்கள் அரசனிடம் சென்று கூலி வாங்கும் வழக்கப்படி இவன் மனைவி போக, அவ்வரசனது தகாத எண்ணம் கண்டு அவள் தன் கற்பின் வலிமையால் கல்லாகி விடுகிறாள். அரண்மனையில் திருடிய கள்வர் இவனிடம் சில நகைகளை எறிந்து விட்டுப்

போக, இவன் மீது திருட்டுக் குற்றம் சாட்டிக் கை கால் வாங்கி விடுகின்றனர். சனி நீங்கும் காலம் வந்ததும், மக்கள் இருவரில் மூத்தவன் தன் கதையைச் சொல்ல, கல்லாயிருந்த தாய் வரலாற்றைக் கேட்டுக் கொள்கிறாள். கடவுளருளால் இவன் கை கால்கள் வளர்கின்றன; கல்லை இவன் தொடவும் மனைவியாகிய கல் மாறுகிறது பிள்ளைகளும் வருகின்றனர். இழந்த நாட்டையும் பெறுகிறான்.

வடமொழியில் காளிதாச மகாகவி செய்த விக்கிரமோர்வசீ என்ற நாடகம், சிறந்த கவிச்சுவையுடையதென்று சொல்லப் படுவது; இது புரூரவன் கதையேயாகும். புரூரவனே அங்கு விக்கிரமன். புரூரவ சரிதத்துக்கு வேறு பொருள் சொல்லுவதும் ஒரு மரபு. ஊர்வசி என்றால் உஷற் காலப் பனி. புரூரவன் சூரியன். சூரியன் காணப்பட்டால், பனி மறைந்து விடும். புரூரவன் காணப்படும்போது ஊர்வசி மறைந்து விடுகிறாள். ஊர்வசியின் கதை சதபதப் பிராம்மணத்திலும் காணப்படுகிறது.

## நைடதம்

### நூல் வரலாறு

நிஷத நாட்டு மன்னன் நளன் சரிதம் கூறும் வடமொழி நூல் நைஷதம். நைஷதம் தமிழில் நைடதம் என்று வந்தது. வடமொழியில் நூல் செய்தார் ஹர்ஷர் இவர் பாடியது, தமயந்தி சுயம்வரம் வரையில் 22 சருக்கங்கள் மட்டுமே என்பர். நைஷதம் புலவருக்கு ஔஷதம் என்பது பழமொழி. இது வடமொழி தமிழ்மொழி இரு மொழிகளிலுமுள்ள இந்நூல்களுக்குப் பொருந்தும். வடநூல் வடமொழிப் பஞ்ச காவியங்களுள் ஒன்று. தமிழிலும் இந்த நூல் ஓர் அரசரான அதிவீரராம பாண்டியர் செய்த பெருமையுடையது. இது நளன் கதை நளோபாக்கியானம் என்ற பெயரால் மகாபாரதம் ஆரணிய பருவத்துள் அமைந்த ஒரு கிளைக்கதை. சூதினால் வரும் கேட்டைத் தரும புத்திரனுக்கு வியாச முனிவர் இக்கதை வாயிலாக எடுத்துரைத்ததாக அவ்வரலாறு அமைந்தது.

மிகவும் பழமையான காலம் முதற் கொண்டே தமிழிலக்கிய உலகில் நளன் சரிதம் நன்கறியப்பட்டு வழங்கியது என்பதைச் சிலப்பதிகாரத்தால் அறிகிறோம். வினையின் வலிமையைக்

*கவுந்தியடிகள் கோவலனுக்குக் கூறுமிடத்து, நளன் பட்ட துன்பத்தைப் பின்வரும் வரிகளால் சொல்லிக் காட்டுகிறார் (ஊர் காண் காதை 50 - 56):*

**வல்லா டாயத்து மண்ணர சிழந்து**
**மெல்லியல் தன்னுடன் வெங்கா னடைந்தோன்**
**காதலிற் பிரிந்தோ னல்லன், காதலி**
**தீதொடு படூஉம் சிறுமைய ளல்லள்,**
**அடவிக் கானத்து ஆயிழை தன்னை**
**இடையிருள் யாமத்து இட்டு நீக்கியது**
**வல்வினை யன்றோ?**

*இவ்வரலாறு பின்னர் 13ஆம் நூற்றாண்டில் புகழேந்திப் புலவரால் நளவெண்பா என்ற பெயருடைய சிறு காப்பியமாகப் பாடப்பெற்றது. பின்னர் 16ஆம் நூற்றாண்டில் அதிவீரராம பாண்டியர் இந்நளன் கதையை வடமொழி மூலத்தைத் தழுவிப் பெரிய நூலாக அதே நைடதம் என்ற பெயரால் சுவை நிரம்பியதாகப் பாடினார். நூல் பாயிரப்பகுதியும் 28 படலங்களும் 1173 பாடல்களும் உடையது. இதை இவர் பாடிக் கொண்டிருந்த போதும் பாடி முடித்தபோதும், இவர் தமையனும் தமையன் மனைவியும் தெரிவித்த கருத்துக்கள், வழங்கும் வழக்காற்றை யொட்டி வேறிடத்திற் சொல்லப்பட்டன.*

*நள வெண்பாப் பாடியவர், மிகவும் சுருக்கமாகவே, சுயம்வர காண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்று மூன்றே பகுதிகளில் நூலை முடித்துக் கொண்டார். ஆனால் அதிவீரராமர் நூலை மிகவும் விரிவாகச் சொல்லும் நோக்கமுடன் அகலமான அடிப்படையின் மேல் நூலை ஆரம்பிக்கிறார். பின்னே இதை விளக்குவோம்.*

*அதிவீரராமர் சிவபக்தி மிக்கவர் என்பதற்கேற்ப நைடதத்தில் விநாயகர் காப்புச் சொல்லி நூல் தொடங்குகிறார். விநாயகர் வணக்கப்பாடலில், சிவபிரான் திருமுடியிலிருந்த இளம்பிறையை, ஒடிந்த தமது கொம்புக்கு இணை பார்க்கிறார் விநாயகர் என்று இவர் நகைச்சுவைப்படப் பாடுகிறார்:*

**தழைவிரி கடுக்கை மாலை தனிமுதல் சடையிற் சூடுங்**
**குழவிவெண் திங்க ளிற்ற கோட்டது குறையென் றெண்ணிப்**
**புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற இணைத்து நோக்கும்**
**மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.**

இவ்வகை நகைச்சுவைக் கருத்து, பின்னே சிவப்பிரகாசர் முதலிய பல்லோர் எத்தனையோ வகையாக விரித்துக் கொள்வதற்கு இடங்கொடுத்திருக்கிறது. நூலில் வேறு கடவுள் வாழ்த்துப் பாடல் இல்லை; பல கடவுள் வாழ்த்துப் பாடல்களைப் பெய்து பல புராணங்கள் பாடிய இவர் இவ்வாறு பாடியிருப்பது, இது புராணமன்று காப்பியம் என்று உணர்த்துவதற்கேயாகும். இதன் சிறப்புப் பாயிரம் பின்வருவது;

நிலவு பொழி தனிக் கவிகை நிடதர் கோன் புகழ்ச்சரிதம்
  நெடுநீர் வைப்பில்
புலவர்களின் அமுதொழுகு புதுமொழி கூட்டுணத் தமிழால்
  புனைதல் செய்தான் –
வலனுயர்த்த அண்ணலஞ் சேல்வான்தொடு பொற்கோட்டிமய
  வரையிற் றீட்டி,
அலர்தலைமா நிலம்புரக்கும் அதி வீர ராமன் இகல்
  அரசர் ஏறே.

தமிழில் நைடதம் பாடிய பாண்டியர் இதைப் பெருங் காப்பியங்களுக்கேற்ப மிக்க விரிவாக எல்லாச் சுவையும் பொருந்த, தமிழ்ப் பெருங்காப்பிய இலக்கணங்களும் அகப் பொருள், புறப்பொருள் செய்திகளும் அமையப் பாடத்திட்ட மிட்டிருந்தார். அவற்றைச் சிறிதளவு இங்கே குறிப்பிடுவோம்.

## நூலின் பொருள்

நூல் 'கருவி மாமழை கலைமகள் உருவென விளங்கி' என்று மாமழைச் சிறப்பையும், வெள்ளச் சிறப்பையும் சொல்லித் தொடங்குகிறது. நாட்டுப்படலத்தில் நிடதநாட்டு நிலவளம், மக்களுடைய செல்வம் சொல்லி, அடுத்து நகர வருணனை என்று ஒரு படலத்தில் சொல்லுகிறார். தலைநகர் மாவிந்தம், மாவிந்த நகர வருணனை, முடிவில் நளனுடைய சிறப்பு. பின் வரும் பாடல் குறிப்பிடத்தக்கது.

அருளினது உறையுள்; நல் லறத்தின் வேலி; சொல்
தெருளறு கல்வியந் தெய்வமாக் கடல்;
குரைகடல் புவிபுகழ் குணக்குன்று; அஞ்சுடர்
எரிதவழ் அலங்கல் வேல் அரசர் ஏறனான்.

கனவில் தமயந்தியைக் கண்டு அவள்பால் மோகங்கொண்டு அவளே நினைவாய்த் துயருறும் போது ஓர் அன்னத்தைப் பிடித்து, அது வேண்டியபடி விட்டு விட்டான்; நன்றியறிவோடு

அது வீமன் மகள் தமயந்தியின் சிறப்பை அவனுக்குக் கூறி அவனுடைய தூதாக அவள்பால் சென்று அவன் புகழைக்கூறி அவன்மீது காதல் கொள்ளச் செய்கிறது. மீண்டு வந்து அவனிடம் செய்தியை உரைக்கிறது. அதுவரை அன்னத்தைத் தூதுவிட்ட படலமாய்க் கூறிய ஆசிரியர், அடுத்து கைக்கிளைப் படலம், மாலைப்படலம், நிலாத் தோற்று படலம், சந்திரோபாலம்பனப் படலம், மன்மதோபாலம்பனப் படலம் என்று ஐந்து படலங் களால் தமயந்தியின் விரக தாபத்தை அகப்பொருள் அமைதி தோற்றவும், பெருங்காப்பியப் பண்புகள் பொருந்தவும் பாடி யிருக்கிறார்.

பின்னர் மீண்டும் கதை தொடர்கிறது தமயந்தி சுயம்வரம். நாரதர் உரையால் இந்திரன் அவளையடைய எண்ணி மற்றைத் தேவருடன் பூலோகம் வரும்போது, அச்சுயம்வரத்துக்கு வரும் நளனைக் கண்டு தனக்காக அவன் தூது செல்லச் சம்மதிக்கச் செய்கிறான். சென்ற நளன், அவளழகில் அதிகம் ஈடுபடுகிறான். பின் தன் தூதைச் சொல்லித் தமயந்தி மறுத்த செய்தியை இந்திரன் முதலியோருக்கு உரைக்கிறான். சுயம்வரம் நடக்கிறது. திக்குப் பாலர் எண்மரில் இந்திரன், அக்கினி, யமன், வருணன் ஆகிய நால்வர் வந்தனர், நிருதி வாயு குபேரன் ஈசானன் ஆகிய நால் வரும் வரவில்லை. நளனும் தமயந்தியும் காதல் வயப்பட்டுத் தனித்தனியே துன்பமடைகிறார்கள். காலையில் சுயம்வர மண்ட பத்தில் அனைவரும் திரளுகிறார்கள். நாமகள், தமயந்திக்கு அரசர் குலமுறை கிளத்துகிறாள். சூரியன் முதலான தேவர்களும் எழு தீவின் அரசரும் பிற மண்டலத்துள்ள அரசரும் பூவுலக மன்னரும் வந்திருக்கின்றனர். 25 அரசர் கூறப்படுகின்றனர். தமிழ் மன்னர் மூவரும், குடக நாடாளும் வேந்து கொற்கையம்பதிக்கு வேந்து பொன்னி நாடாளும் வேந்து என்றே சொல்லப்படுகின் றனர். பின்னர் தமயந்தி, நளன் உருவையே கொண்டிருந்த தேவர் நால்வரிலிருந்து நளனை வேறு பிரித்துணர்ந்து அவனுக்கே மாலையிடுகிறாள். நளன் என்று காண்பதற்குரிய வேறு குறி களோடு, அன்பினாலும் ஊழ்வினைத் தொடர்பினாலும் வேறு பிரித்துக் கண்டாள் (சுயம்வரம் 169) என்கிறார். எல்லோரும் மகிழ, இந்திரன் மட்டும் கலகமுண்டாக்குகிறான். நளன் சந்திர குலம் ஆதலால், உலகில் மதி பரிதிக்கு மழுங்குமேயன்றி, பரிதி குல மன்னர் சந்திர குலத்துக்குத் தாழ்ந்து போகலாமோ என்ற அவன் வார்த்தையைக் கேட்ட சந்திர குலத்தவனான பாண்டியன் வெகுண்டெழுகிறான். (அதி வீரராமர் தாம் பாண்டியரானமை

யால் இவ்வாறு கதையை அமைக்கிறார்). பிறர் தேற்றச் சீற்றம் நீங்குகிறான். எல்லா அரசர்களையும் தோல்வியுறச் செய்த நளனது ஆற்றல் கண்ட இந்திரன் முதலியோர் அவனுக்கு வரம் கொடுக்கின்றனர். காப்பியத்துள் போர்ச் செய்திகள் வரவேண்டும் என்பது விதியாதலால் இங்கு போர் அமைக்கப் பெற்றுள்ளது; 78 பாடல் கொண்ட போர்புரி படலம் என்ற தனிப்படலம். நளன் பின் தமயந்தியை முறைப்படி மணந்து கலவியின்பம் அனுப விப்பதை ஆசிரியர் அதிகமான பாடல்களால் வருணிக்கிறார்.

பின் நளன் தன் நகர் அடைந்து இன்புறுங்காலை கலி தோன்றுகிறான். நளன் யாதேனும் பிழை செய்தால் அவனைப் பற்றலாம் என்று சமயம் பார்த்திருக்கிறான். நளன் இன்பம் அனுபவிப்பதை மீண்டும் ஆசிரியர் இங்கு இளவேனிற் படலம், போதுகொய் படலம், புனல் விளையாட்டுப் படலம் ஆகிய வற்றால் சொல்லிய பிறகு, ஒரு நாள் சூரியன் மறையவும், நளன் கால்கழுவாது கடன் கழித்து வருவானைச் சென்று கலி பற்று கிறான்.

இதுவரை ஆசிரியர் சொல்லியுள்ளவை 940 பாடல்கள். இதே விரிவுடன் இவர் தம் நூலைப் பாடி முடித்திருந்தால். பின்னும் குறைந்தது 3000 பாடல் பாடினால் தான் நளசரிதம் நிறைவேறும். ஆனால் அவ்வாறு அவர் பாடவில்லை. பின்னுள்ள பகுதியில் 233 பாடல்களால் கதையை முடித்துவிடுகிறார். நூலைத் தம் தமையனிடம் காட்டியபோது, அவர் அதைக் குறை கூறினார் என்பது வரதுங்கராமர் சரிதையில் சொல்லப்பட்டது.* அவர் குறை கூறியமையால் அதிவீரராமர் எடுத்த கதையைச் சுருக்கி முடித்து விட்டார்; எறிந்து விடவில்லை. 'தாம் வளர்த்ததோர் நச்சுமாமரம் ஆயினும் கொலார்' என்ற மாணிக்கவாசகர் கருத்து இங்கு கருதத்தக்கது. சுருக்கி முடித்த கதையைக் கேட்டே வர துங்கராமர் மனைவியார் பழித்துக் கூறினார் என்பதையும் அவர் வரலாற்றில் பார்த்தோம்.❖ நூலின் அமைப்பைப் பார்க்கும் போது, இரு கதைப் பகுதிகளும் உண்மையாயிருக்குமென்றே தெரிகிறது.

இனி நூற்பொருளைத் தொடர்வோம். நளன் தம்பியான புட்கரனைக் கலி தூண்டி நளனோடு சூதாடி வெற்றி பெறச்

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 16ஆம் நூற்றாண்டு முதல் பாகம் காண்க - பக்கம் 24-25.

❖ மேற்படி 33-34.

செய்து நளனை மனைவி மக்களோடு காட்டுக்குத் துரத்தி விடுகிறான். நளன் மக்கள் இருவரையும் வீமன் நாட்டுக்கு அனுப்பி, தமயந்தியோடு காடு புக்கு, அங்கு தமயந்தி சொற்படி தன் ஆடையால் ஓரன்னத்தைப் பிடிக்க முயல, அன்னம் அவ்வாடையோடு பறந்து சென்று விடுகிறது. வினைவலி இது என்று கூறி நளன்; ஒரு நாளிரவு இருவரும் ஒற்றையாடையுடுத்துத் துயிலும் போது, அருகில் வாளாய்க் கிடந்த கலியினால் துணியை வகிர்ந்து கொண்டு அவளை நீத்துப் போய்விடுகிறான். பல துன்பங்களைக் கடந்து தமயந்தி வீமன் நகரில் ஒரு வணிகன் இல்லில் தங்குகிறாள். பிரிந்த நளன், ஒரு பாம்பைத் தீயினின்றும் காப்பாற்ற, அது அவனைத் தீண்டவும் அவன் வடிவம் வேறுபடுகிறது. அப்பாம்பின் சொற்படி அயோத்தி மன்னன் ஏவலனாய்ப் பணி புரிகிறான். இவன் இவ்வாறிருக்க, ஓர் அந்தணன் தமயந்தியைக் கண்டறிந்து வீமன் அரண்மனையில் சேர்ப்பிக்கிறான். அவள் நளனைத் தேடிக் காணும் கருத்தோடு மீண்டும் சுயம் வரம் என்று ஓலை போக்கலும், ருது பன்னனோடு அவன் பாகனாக நளன் அங்கு அடைகிறான். தன் குழந்தைகளை எடுத்துக் குலவியதைக் கண்ட தமயந்தி அவன் இன்னான் என உணரவும், கலிதொடர் காலம் முடிய, நளன் தன் பழைய உருவம் பெற்று மாவிந்த நகரமடைந்து மீண்டும் சூதாடி, இழந்த நாட்டைப் பெற்று நலமே வாழ்ந்திருந்தான்.

**கவிச்சுவை**

சிறப்புப் பாயிர்மோ நூலோ இதை மொழிபெயர்ப் பென்று சொல்லவில்லை. ஆசிரியர் தமிழ்ச் சுவையில் பெரிதும் ஈடுபட்டவரென்று எடுத்துக்காட்ட வேண்டியதில்லை. அவர் பாடிய வெற்றிவேற்கையை உணர்ந்தோருக்கு இது நன்கு தெரியும். ‘அமிழ்தினை முனிந்து சாரல் அருவிதாழ் மலயம் ஈன்ற - தமிழினும் இனிய தீஞ்சொல். தையல்’ (சுயம்வரப் படலம் 140) என்று கலைமகள் தோழியாக இருந்து தமயந்தியை வருணித்துக் கூறுகிறாள். கல்வியில் ஆசிரியர் மிக்க பற்றுதலுடையவர் என்பதை முன் காட்டிய பாடலில், ‘சொற்றெருளுறு கல்வியந் தெய்வமாக்கடல்’ என்று நளனைக் குறிப்பிடுவதும், கல்வியின் அகன்றிடு கருணை வேந்து, கல்வியின் துறை கைபோய காவலன் என்று நளனைக் குறிப்பிடுவதும் உணர்த்துகின்றன; நளன் மீண்டும் தமயந்தியைப் பெற்றது கண்டு ‘கலைவலோர் நெஞ்சம் களித்தது’ என்று இவர் கூறுவது பெரிதும் பாராட்டத்தக்கது (தேவியைக் கண்ணுற்ற படலம் 27):

மண் களித்தது, மாதிரங் களித்தன, மலர்மேற்
பெண் களித்தனள், பேரறங் களித்தன, கண்டோர்
கண் களித்தன, களித்தன கலைவலோர் நெஞ்சம்,
விண் களித்தன, களித்தது வீமன் மா நகரம்.

*ஆசிரியருடைய பக்தி முதிர்வை நூலகத்துள் எங்கும் காணலாம். நளன் கையிலிருந்து விடுபட்டு வாவி சேர்ந்த அன்னம் சென்றது:*

நறவு கொப்புளிக்கும் தெரியல் சூழ் மார்பன்
நாண்மலர் பொருவுமென் கரத்தில்
துறவு கொண் டெழுந்த பொலஞ் சிறை யன்னம்
தொல்வினைத் தொடர் அறுத் தின்ப
நிறைகடற் றிளைக்கு மவரினின் புற்று
நீடிரை வாவி புக் கதுவே.

*‘வினைத் தொடரை அறுத்துப் பேரின்பக் கடலில் திளைப்பவர் நிலையை யொத்தது’ என்கிறார். அப்படியே மற்றோரிடத்தில், வீமன் நகரில் பிள்ளைகளைக் கண்ட நளன் மக்கள் காதலைக் கடக்க முடியவில்லை; மும்மலத்தையும் விட்டவர்கள் கூடப் பிள்ளைகளிடத்து அன்பைக் கடக்க முடியாது என்கிறார் (தேவியைக் கண்ணுற்றது 15):*

அடைந்த மக்களைக் காண்டலும், அழலிடு மெழுகின்
உடைந்த துள்ளம், நீர் ஊற்றிருந் தொழுகின நெடுங்கண்:
தொடர்ந்த மும்மல முருக்கிவெம் மவக்கடல் தொலையக்
கடந்து ளோர்களும் கடப்பரோ மக்கள் மேற் காதல்?

*வருணனையில் நைடதத்துக்கு இணை மற்றொரு நூல் இல்லையென்பது புலவர் நன்கறிந்தது*. புலவர்க்கு அவுடதம் அல்லவா? தமயந்தியைக் கேசாதி பாதமாகப் பதினேழு பாடல்களால் அன்னம் வருணிப்பது, சம்பிரதாய இலக்கிய வருணனையைச் சுவைத்து மகிழ்வோர்க்குப் பெருவிருந்தாயிருக்கும். ஒரு பாடல் குறிப்பிடலாம். கண்களின் அழகு (அன்னத்தைத் தூது. 13):*

---

* *பிற்காலத்தில் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற பெரும் புலவர்கள் பாடிய வருணனைப் பகுதிகளில் கற்பனைக்கு வழி காட்டியது அதிவீரராமருடைய நைடதமேயாகும்.*

குமிழ்மிசை மறிந்து, குழையெதிர் நடந்து,
    கொலைத் தொழில் மறலியைப் பயிற்றி,
அமிழ்தினின் விளர்த்துஉள் நஞ்சினிற் கருகி,
    ஐயரி சிதறிமை தோய்ந்து,
கமலமென் மலரை வனம்புகுத் தியவேற்
    கண்ணிணை மான்மருள் நோக்கம்,
தமதெனக் கவர்ந்து கொண்டவோ, மடமான்
    தடங்களின் செயல் கவர்ந்தனவோ.

*நைடதம் முழுமையும், முன்வந்த பெருங்காப்பியங்களான சிலப்பதிகாரம் சிந்தாமணி கம்பராமாயணம் ஆகியவற்றின் தொடர்களும் கருத்துக்களும் தொட்ட தொட்ட இடமெல்லாம் அமைந்திருக்கக் காண்கிறோம். வெண் தயிர் கடையு மோதை - கொல்புலி முழக்க மென்ன வயின்தொறும் குளிரும் என்னும் பாடல் (நாட்டு. 15) 'கடைதயிர்க் குரலவேங்கை' என்ற சிந்தா மணியைக் கொண்டது. தமயந்தி நளனுக்கு மாலை சூட்டியது கண்டு இந்திரன் பொறாமையால் சொல்லுகிறான்:*

சூழிருஞ் சடைகள் தாங்கிச் சுடர்முடி துறந்து கான்போய்
வீழ்சரு கருந்தி நீவிர் மெய்த்தவம் புரிதல் வேண்டும்,
தாழிருங் கூந்த லாளை நிடதர்கோன் தழீஇய போதே
ஆழிசூழ் உலக மெல்லாம் அவனடி படுக்கு மன்றே.

*இது, 'முடிதுறந் தளியர் போகி முனி வனம் புகுமின் என்றான்', 'செல்வப் பூ மகளும் நாளை அவனுழைச் செல்லு மென்றான்' என்னும் சிந்தாமணிக் கருத்தையும்,*

ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீ போய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவம்மேற் கொண்டு

*என்ற கம்பர் பாடலில் வரும் சொற்களையும் கொண்டது. மலர்ந்த முகத்தோடு நளன் காடு செல்கிறான் என்பது, இராமன் செல்வதைக் கூறும் இராமாயணப் பாடற் கருத்தைக் கொண்டது. நளன் பிரியும் காலத்து நகரின் நிலை, இராமன் பிரியும் காலத்து அயோத்தியின் நிலையை எடுத்தமைத்தது. கன்று குணிலாக் கனி யுதிர்த்தோன் என்ற தொடர் சிலப்பதிகாரம். இவ்வாறு அமைந்த ஒற்றுமைகள் அனேகம்.*

*வரதுங்கராமருடைய திருக்கருவைப் பதிற்றுப் பத்தந் தாதியில் ஒரு தொடர் (6) கன்னற் பாகிற் கோற்றேனிற் கனியிற் கனிந்த கவி பாட என்பது. இதை அப்படியே நைடதத்தில்*

*காணலாம்; குயிலும் நாண இன்னமிழ்திற் - கன்னற் பாகிற் கோற் றேனிற் கனியிற் கனிந்த மொழி நவிலும் - பொன்னம் பாவை யன்னாள்' (அன்னத்தைத்தூது. 108) தூண்டல் செய்யாமணி விளக்கு அந்தாதி 7 - அன்னம் தூது 132.*

*நேரம் அறிந்து தன் காதலை நளனிடம் சொல்ல வேண்டு மென்று தமயந்தி சொல்வது இலக்கிய மரபு, உலகியலுங்கூட (அன்னம் தூது.105 - 6):*

வேற்றரசர் திறை கொணரும் வேலையினுஞ் சொல்லற்க;
மாற்றரசர் பால்வெகுளும் அமயத்தும் வகுத்துரையேல்;
தேற்றமுடை மதிவல்லோர் தேர்ச்சியிலும் தெரிந்துரையேல்;
சாற்றி னுரைத் தனவெல்லாம் தவறாதல் அறிதியே.

பொறிசெறித்த மாண்பினராய்ப் பொருந்தலர்ச் செற் றிருநிதியஞ்
செறிதருமா றீட்டியரு வினைவாங்கு செயலினரும்
உறுபிழையுட் சிறிதி யற்றின் ஒறுத்திடுவர் வயவேந்தர்,
அறுதிபெற நீ மொழியும் அமய மறிந் துரைத்தியால்.

*சூதாடத் துணிந்த நளனுக்கு அமைச்சர் நல்லறிவு புகட்டு கிறார்கள்;*

சீலநற் றருமமெய் சிதைக்கும், தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்,
மாலுறுத் திடுங்கவ றாடன் மன்னகேள்,
கோலிழுக் கரசர்தங் கொள்கைத் தென்பவே,

கள்ளுண விரும்புதல், கழகஞ் சேர்தல், மால்
உள்ளுறப் பிறர்மனை நயத்தல், ஒன்னலர்க்
கெள்ளரு ஞாட்பினு ளிரியல் செய்திடல்,
வள்ளியோய், அறநெறி வழுக்கு மென்பவே.

ஐயநீ யாடுதற் கமைந்த சூது, மற்று
எய்துநல் குரவினுக் கியைந்த தூது, வெம்
பொய்யினுக் கருந்துணை, புன்மைக் கீன்றதாய்,
மெய்யினுக் குறுபகை என்பர் மேலையோர்.

எள்ளுக சூதினை இகலி வென்றதூஉங்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற வமைத்திடு முணவை யோர்கிலாப்
புள்ளின மருந்தின போலு மென்பவே.

*நளன் நகர் நீங்கியபின், நகரின் நிலையைக் கவிஞர் ஏழு பாடல்களால் வருணிக்கிறார்; மூன்று பாடல்களைக் கீழே தருகிறோம்:*

பறவைகள் குடம்பையுட் பார்ப்ப ருத்தில,
கறவைகள் புனிற்றிளங் கன்றுக் கூட்டில,
நறவுயிர்த் தலர்கில மலர்கள், நாமவேல்
இறைவனே கினன்வனத் தென்ற பின்னரே.

வான்மறந் தனதுளி வழங்கல், இன்னிசைத்
தேன்மறந் தனமட மகளிர் தேங்குழல்,
பான்மறந் தனபசுங் குழவி, பாய்கவுட்
கான்மத மறந்தன களிநல் யானையே.

அறந்தலை மயங்கின, பொய்ம்மை யார்ந்தன,
மறந்தலை யெடுத்தன, தீமை மல்கின,
திறம்பின மனுநெறி, தவங்கள் தீர்ந்தன,
நிறைந்தன வஞ்சனை – நேமி யெங்குமே.

*காட்டில் உறங்கிய தமயந்தியைப் பிரிந்து நளன் அகன்று போகிறான். அவனைக் காணாது தமயந்தி அரற்றுகிறாள்;*

நேரலார் போரேறே, நிடதத்தார் கோமானே,
ஆரவரை மார்பா, அளியே னுயிர்க்குயிரே,
காரிருள்வாய் யான்புலம்பக் கானகத்து விட்டகன்றுஞ்
சாரலையால் இன்னும், இதுவோ நின்தண்ணளியே.

வாவு மிளமான்காள், மயில்காள், மடிப்பிடிகாள்,
கூவுங் கரிய குயில்காள், மென் புள்ளினங்காள்
ஆவி யென மேவி அகலே மென அகன்ற
காவலன்தான் போன வழி எனக்குக் காட்டீரே.

*மற்றொரு பாடல், வால்மீகி ராமாயணத்தில், உறங்குகின்ற இராமனை விசுவாமித்திர முனிவன், காலைச் சந்தி செய்ய எழுப்பும் பாடலையொட்டி அமைந்துள்ளது.*

ஞாலத் திருணடப்ப நாட்கமலம் வாய்நெகிழ
வேலைத் திரைமுகட்டில் வெய்யோன் எழுந்தனனால்.
மாலைக் கதிர்வடிவேன் மன்னர் பெருமானே!
காலைக் கடவ கடன் கழிக்க வாராயே.

*அன்னத்தைத் தூது விட்ட பகுதி, தமிழில் மிகவும் சிறப்பான பகுதி. இந்நூலுக்கு முன் வேறு தனித் தூதுப் பிரபந்தங்கள் தோன்றியிருக்கின்றன. அவை யாவும், காதலி காதல் கொண்ட*

தலைவனாகிய தெய்வத்திடம் சென்று, காதலை உரைத்துத் தலைவன் அருளுக்கு அடையாளமாக அவனுடைய மாலையை வாங்கி வருமாறு சொல்வதோடு முடியும். பாரதத்தில் வரும் கிருட்டினன் தூது. உண்மையான ஒரு தூது நிகழ்ச்சி. ஆனால் இது போர்ச் செய்தி; காவியம் சம்பந்தப்பட்ட வரையில் உண்மை நிகழ்ச்சி. தூது, காவியங்கள் யாவும் கற்பனை நிகழ்ச்சிகளே. நைடதத்தில் வரும் அன்னத்தின்தூது, உண்மையான காதல் தூது; ஆயினும் இது வேறு இயல்புடையது. சிவபெருமான் திருவாரூரில் சுந்தரருக்காகப் பரவை மனைக்குத் தூது சென்றமை போல, இங்கு அன்னம் தமயந்தியிடம் நளனுடைய தூதாகச் சென்று அவள் காதலையுரைத்து, அவனையும் காதல் கொள்ளுமாறு செய்து, மீண்டு வந்து தனது தூதின் வெற்றியையும் அறிவிக் கிறது. அன்னப்புள் கற்பனைப் பறவையாயினும், உண்மைத் தூதரின் இலக்கணம் அனைத்தும் அதனிடத்தும் பொருந்தி யிருக்கக் காண்கிறோம்.

நளன் தேவர் தூதாகத் தமயந்தியிடம் செல்லுமிடத்து அவனுடைய வாய்மையையும் கடமையுணர்ச்சியும் சிறந்து விளங்கக் காண்கிறோம்.

அதிவீரராமர் அகப்பொருளில் மிகத் தோய்ந்தவர். அது பற்றியே நளன் தமயந்தி இருவருக்குமிடையே அன்னம் தூது செல்லுதலையும் அதன்பின் தமயந்தி காதல் வசப்படுதலையும் மிகவும் விரிக்கிறார். கைக்கிளைப் படலம் முழுமையும், பண்டை நூல்களில் சொல்லப்பட்ட பெண்பாற் கைக்கிளைக் கூற்றுக் களைக் கொண்டது. சந்திரோ பாலம்பனம், மன்பதோபாலம் பனம் என்பனவும் இக்கூற்றுக்களைப் பின்னும் விரித்ததாகும். இவற்றையெல்லாம் பார்த்த வரதுங்கராமர் மிகவும் பாராட்டி யிருப்பார் என்பதில் ஐயமில்லை; அவரே கொக்கோக நூல் பாடியவரல்லவா? ஆனால் அவர் அந்த நிலையைக் கடந்து பின்னால் பக்தராகவே நின்று அந்தாதிகள் பாடியிருந்தார். அந்தக் காலத்தில் இந்நூலைப் பார்க்க நேர்ந்தமையால்தான் இதை ஏற்க மறுத்தார். காலத்தால் கொஞ்சம் முன்னமே பார்த் திருந்தால் நிச்சயம் ஏற்றிருப்பார்.

சூதின் கேட்டை வற்புறுத்த வந்ததே இந்நூல்.

## பதிப்பு

சென்ற நூற்றாண்டு தொடர்ந்து நைடதம் எண்ணற்ற பதிப்புக்கள் வெளியாகியுள்ளன. பண்டிதரும் பதிப்பித்தனர்,

பாமரரும் பதிப்பித்தனர். இந்நூற்றாண்டின் முதல் கால் பகுதியில் கிராமங்கள் தோறும் திண்ணைகள் தோறும் எல்லாவகை மக்களும் நைடதம் படித்தார்கள். அதிலுள்ள காமச்சுவைப் பகுதி மக்களைத் தன்பால் ஈர்த்தது. அது பற்றிப் பதிப்புக்கள் ஏராளம். பண்டிதரும் உரை எழுதிப் பதிப்பித்திருக்கிறார்கள். வேங்கடசாமி நாட்டார் முன்னுரையோடு பதிப்பொன்று வெளியாயிற்று.

நா. கதிரைவேற் பிள்ளை திருத்திய உரை 1930இல் வித்தியா ரத்நாகரம் பிரஸில் அச்சிட்டு வெளிவந்தது. அதில் காணப்படும் சில கருத்துக்கள்: (சில பிழையான கருத்துக்களும் இங்கு உள்ளன).

"முன் உள்ளது சரவணப் பெருமாளையர் உரை. ஆறுமுக நாவலர் உரையைச் சுவாமிநாத பண்டிதர் அச்சிட எண்ணியிருந்தார். அதிவீரர் இலிங்கபுராணத்தை மொழிபெயர்த்தார்; பார்த்து வரதுங்கர் முத்துப்போலிருக்கிறதென்றார்; காசி கண்டத்தைப் பார்த்துக் கரும்பு போலிருக்கிறதென்றார்; கூர்ம புராணத்தைப் பார்த்துப் பால்போலிருக்கிறதென்றார்; நைடதத்தைப் பார்த்துத் தம்பியைத் தழுவி 'அச்சோ, பொற்கலத்தில் நிரப்புதற்குரிய திவ்வியாமிர்தத்தை வாளா நிலைக்கடலிற் பெய்தனையே' என்று வருந்தினார்."

"இதனால் ஊக்கம் குறைந்து அதிவீரராமர் நைடதப்பிற் பகுதியைச் சுருக்கிப் பாடிவிட்டார். நைடதம் அரங்கேற்றிய போது அவையடக்கம் பாடவில்லை என்று புலவரொருவர் சுட்டிக்காட்ட, இவர் அரசராகிய தம் சமூகத்தில் அவை அடக்கம் காணும் என்று விடை கூறினார். இவரே கொக்கோகம் செய்தார். கந்தபுராண இந்திரபுரிப் படலத்துக் கூறப்பட்ட மதனாகமவியல்களை மதனக்கோவை என்ற பெயரால் மொழிபெயர்த்தார். சிற்றின்பத்தில் திளைத்துத் தொழுநோயுற்றார். அரசியின் தூண்டுதலால் திருக்கருவை வெண்பா அந்தாதி பாடினார். கருவைப் பெருமான் உணர்த்திய வழி யோகம் பயின்றார். 'யோக பலம் எவ்வாறிருந்தது' என்று கேட்ட அரசியாருக்கு 'அஞ்சல் என்ற கரதலமும்' என்ற பாடலால் விடைபகர்ந்தார். இது சகுண பாவனையாதலால், அத்துவித பாவனையே வேண்டும் என்று அரசியார் 'ஆக்கையெனும் புழுக்குரம்பை' என்ற பாடலால் உணர்த்தினார். அவ்வாறே நிர்க்குண பாவனை செய்து மற்ற இரு அந்தாதிகளும் பாடி, நோய் நீங்கப் பெற்றார்."

❖❖❖

அத்தியாயம் 2

# இலக்கியம் – நீதி நூல்கள்

## முன்னுரை

இலக்கிய முயற்சிகள் பல துறைப்படும். சங்ககாலம் என்று சொல்லுகின்ற பழங்காலத்தில் செய்யப்பெற்ற இலக்கியம் யாவையும் தனிப் பாடல்களாகவே இருந்தன. சங்க காலத்துக்கு முன், தொல்காப்பியருக்கும் முன், இருந்த கடல் போன்ற பெரும் பரப்பினதாகிய இறந்துபோன இலக்கியம் எந்த அமைப்புடையது என்று அறிந்துகொள்ள வழியில்லை. அதனுள் தனிப்பாடல் களும் இருந்தன என்பதைப் பின்னால் இடைச்சங்கப் புலவர் என்று கருதப் பெறுகின்ற முரஞ்சியூர் முடிநாகராயர் பாடிய தென்று கருதப்பெற்றுப் புறநானூற்றின் இரண்டாம் பாடலாய்த் தொகுக்கப் பெற்றுள்ள பாடலால் அறியலாம். சங்ககாலத்தின் இறுதிப் பகுதியில், தனிப்பாடல்களல்லாமல், அமைப்புடைய தொகுப்பாகிய கலித்தொகை போன்றனவும் எழுந்தன. அடுத்து, பெருந்தொகையாகப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் எழுந்தன. உடன்காலத்தில் சிலப்பதிகாரம் மணிமேகலை பெருங்கதை ஆகிய முதற் காப்பியங்கள். தொடர்ந்து பக்தி இலக்கியம் எனப் படும் அருட்பாசுர இலக்கியம். பின்னர் காப்பியங்களின் இரண் டாவது நிலையாக, சிந்தாமணி கம்பராமாயணம் சூளாமணி பெரியபுராணம். அடுத்து, பிரபந்தம் சமய இலக்கியம் போன்ற பலதுறைகளாக இலக்கிய அமைப்பு விரிந்து கொண்டும் வளர்ந்து கொண்டும் போகிறது.

இந்த வளர்ச்சியில், நீதி நூல்கள் பற்றிச் சில சொற்கள் கூறுவது இங்கு பொருத்தமுடையது. திருக்குறளே முதல் நீதி நூல் என்கிறோம். பதினெண் கீழ்க்கணக்கினுள் பதினொரு நூல்கள் நீதிபற்றியன என்று சொல்லப்பெறும். பொதுவாக மக்களுக்கு உறுதிப்பொருள் நான்கில் முதலாவதாகிய அறத்தை

எடுத்து உணர்த்துவதை இலக்கிய ஆசிரியர் ஒரு பெரும்பணி யாகக் கொண்டிருந்தனர். சோழர் காலத்தில் வாழ்ந்த அவ்வையார் தம் நூல்கள் அனைத்தையும், 'அறம் செய விரும்பு' என்று தொடங்கி அற நூல்களாகவே செய்தார். அவருடைய தனிப் பாடல்கள் யாவும் அறம் போதிப்பனவாகவே உள்ளன. அடுத்து அறநெறிச்சாரம் என்ற சைன நீதிநூல் எழுந்தது. இவற்றின்பின், நாம் இப்போது கருதுகின்ற 16ஆம் நூற்றாண்டில் அற நூல்கள் எழுதும் முயற்சி பெருகியிருப்பதைக் காண்கிறோம். இதற்கு ஒரு காரணம், 14ஆம் நூற்றாண்டில் தமிழ் நாடெங்கும் ஏற்பட்ட முகம்மதியர் படையெடுப்பும், சமய அழிப்பும், இவற்றின் பயனாய் மக்கள் மனத்தில் தோன்றிய அராஜக உணர்ச்சியும், அச்சமும், ஒழுக்கக்கேடுகளுமாகும். இந்த நூற்றாண்டில் நான்கு நீதிநூல்கள் தோன்றின என்று இங்கு ஆராய்கிறோம். இவற்றின் தன்மைகள் பொதுவாய் இங்கு குறிப்பிடத்தக்கன.

முதலாவது வெற்றிவேற்கை. இது முன்வந்த ஆத்திசூடி கொன்றைவேந்தன் வழியில் வந்தது; நூற்பா இலக்கிய வகை என்று இதைச் சொல்லலாம். பிற்காலத்தில் நீதிநூல் துறையில் இத்தகைய நூல் எழவில்லை. அடுத்து குறளை வெண்பாவில் அமைத்து, ஒரு தெரிந்த கதையும் குறிப்பிட்டு நீதி போதிக்கும் முயற்சி. இதன் முதல்நூல் தினகர வெண்பா. இதையொட்டி அடுத்த நூற்றாண்டுகளில் அதிகமான நூல்கள் எழலாயின. மூன்றாவது நீதிவெண்பா. நீதிக்கென்று சிறப்பாகப் பண்டை யாசிரியர் வெண்பா யாப்பையே கொண்டிருக்கிறார்கள். பதினெண்கீழ்க்கணக்கும் அறநெறிச் சாரமும் இவ்வியல்பைக் காட்டும். அடுத்த நூற்றாண்டில் நீதிநெறி விளக்கம் நன்னெறி என்ற இரு நூல்கள் வெண்பா யாப்பிலேயே செய்யப்பெற்று, இந்த இயல்பின் வளர்ச்சியைப் புலப்படுத்துகின்றன. உலகநீதி என்பது நான்காவது அமைப்பு; மிகவும் பிற்காலப் போக்குடையது. விருத்த யாப்பு, இதன் வழியில் பிற்காலத்தில் நீதிசாரம் என்ற நூலும் விவேக சிந்தாமணி என்ற தொகுப்பு நூலும், பல கதை களையும் உள்ளடக்கியனவாய்த் தோன்றின. சதகங்கள் பல, வேதநாயகம் பிள்ளையின் நீதிநூல் பிற்காலப் புது முயற்சி. இவ் வாறாக, இந்த நூற்றாண்டு நீதி இலக்கிய வரலாற்றில் ஒரு சிறப் பிடம் பெறுகிறது.

வெற்றிவேற்கை, தினகர வெண்பா, நீதிவெண்பா, உலக நீதி என்ற நான்கு நூல்களும் இங்கு கருதப்பெறும்.

## வெற்றி வேற்கை

ஆத்தி சூடி கொன்றை வேந்தன் போல, சமீபகாலம் வரையில் இளம் பிள்ளைகள் ஆரம்ப நிலையில் பயின்று வந்த சிறப்பான நீதி நூல்; இம் மூன்று சிறு நூல்களுமே பிள்ளைகளின் ஒழுக்கப் பயிற்சிக்கு மூலமான நூல்கள். நூலின் தற்சிறப்புப்பாயிரம் இதை அதிவீரராமர் செய்தார் என்று தெரிவிக்கும்:

**வெற்றி வேற்கை வீர ராமன்,**
**கொற்கை ஆளி, குலசேகரன், புகல்**
**நல்தமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால்**
**குற்றம் களைவோர் குறைவிலா தவரே.**

குலசேகரன் - பிற்காலப் பாண்டியர் பலர் பொதுவாகத் தரித்துக் கொண்ட பட்டப் பெயர். வீரராமன் - அதிவீரராமன். நல்ல செய்திகளாகத் தொகுத்தெடுத்த சில கருத்துக்களைச் சொல்வதால், நூல் நறுந்தொகையெனப் பெயர் பெற்றது. வெற்றி வேற்கை என்ற நூற்பெயர், ஆத்தி சூடி கொன்றை வேந்தன் போல, முதற் குறிப்பாற் பெற்ற பெயர்; வெற்றி வேற்கை வீரராமன் என்றே நூல் (சிறப்புப்பாயிரம்) தொடங்குகிறது. நறுமை - மணம்; மணமாவது, நீதியும் உலகியலும். சில இடங்களில் இது சுந்தர பாண்டியன் தொகுதி என்றும் சொல்லப் பெறுகிறது. சுந்தர பாண்டியன் என்பது பாண்டியர் பலரும் ஏற்றிருந்த ஒரு பொதுப் பெயர்; அதிவீரராமரும் இப்பெயர் தரித்திருந்தார் போலும். இதற்குக் காரணம் பின்வரும் வரிகள் சில ஏடுகளில் நூல் இறுதியில் காணப்படுவது:

**தென்னவன் மணி திகழ் திருமே னியனார்**
**மன்னவன் மேலே வளம் பட நின்றன**
**இந்திரன் மேலே இவைகளை அறிந்தவன்**
**செந்தமிழ்க் காரி சிறப்புகள் உடையோன்**
**சந்திர குலபதி**
**சுந்தர பாண்டியன் தொகுதி முற்றும்.**

நூலானது விநாயகர் வணக்கத்தோடு தொடங்குகிறது:

பிரணவப் பொருளாம் பெருந்தகை ஐங்கரன்
சரணஅற் புதமலர் தலைக்கணி வோமே

என்ற காப்புச் செய்யுள் பிற்காலத்தே செய்யப்பெற்றது என்பது வெளிப்படை, அடுத்துள்ள வெற்றிவேற்கை என்ற தொடரே

நூற்பெயராக அமைந்திருத்தலால். 82 பாக்கள் உடையது. பெரும்பாலானவை ஓரடித் தொடர்களே. 29 பாக்கள் இரண்டடி; 3 பாக்கள் 3 அடி; 4, 5, 6 அடி கொண்டவை ஒவ்வொன்று. சிறப்பான உலக நீதிகளை மிகவும் எளிதாகவும், சில சமயம் உவமைகளோடும், மனத்தில் நன்கு தைக்குமாறும் கூறுகிறது. எல்லோரும் நெடுங்காலமாகப் பயின்ற நூலாதலாலே இடைச் செருகலும் பாடபேதங்களும் அதிகம். வரிதோறும் தவறாது அழகிய மோனையமைப்பு உண்டு; பெரும்பகுதி, இரண்டு வரி மூன்று வரி எதுகையமைப்பும் உண்டு.

'எழுத்தறி வித்தவன் இறைவனாகும்' என்று தொடங்கி அடுத்து 14 அடிகளில் இன்னது அழகு என்று கூறுகிறது. இவர் இவர் அல்லர், இன்னது இன்னது செய்யினும் பயன்படாது என்ற பல அடிகள் தொடர்ந்து வருவன. பின்னர் சிறியோர் இயல்பும் பெரியோர் இயல்பும் கூறி, கல்வியைக் குறித்துப் பல அடிகள் வருகின்றன. பின் இன்னாருக்கு இன்னது இல்லை எனப் பல வரிகள். பிறகு நிலையாமை; ஈகை, பதர் எனப்படுவோர் எழுவர்; நடுவு நிலைமை - என நூல் முடிகிறது. 49 முதல் 56 வரை நிலையாமையை மிகவும் வற்புறுத்திக் கூறுகின்றன; இவற்றின் அமைப்பு, பழங்காலச் சைனர் மொழியைப் போல் உள்ளது. பெண்டிரைப் பழித்த சொல் இதனுள் வரவில்லை. இதன் அடிகள் யாவுமே இன்று பழமொழி போலக் கல்வியறிவு இல்லாத மக்கள் நாவிலும் பயில்கின்றன. எடுத்துக் காட்டாகச் சில பொறுக்கி எடுத்துச் சொல்வது கஷ்டம். இருப்பினும் பின்வருவன காண்க:

உழவர்க் கழகுஇங்கு உழுதூண் விரும்பல்.
உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்.
உற்றோர் எல்லாம் உறவினர் அல்லர்.

ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர் வீழ்க் கும்மே.
அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.

அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.

வித்தும் ஏரும் உளவாய் இருப்ப
எய்த்தங் கிருக்கும் ஏழையும் பதரே.

தன் ஆ யுதமும் தன்கையிற் பொருளும்
பிறன் கையிற் கொடுக்கும் பேதையும்

வழியே ஏகுக வழியே மீளுக.

முகவை - இராமானுச கவிராயர் இதற்குச் சென்ற நூற்றாண்டில் உரை எழுதியுள்ளார். பல பாடங்களை மாற்றியும், பலவற்றை ஒன்றாகத் தொகுத்தும் இவர், நூலை 40 பாக்களாக்கியுள்ளார்.

இதன் கண் உள்ள கருத்துரைகள் மொத்தம் 84. ராஜம் பதிப்பில் இரண்டு விடப்பட்டுள்ளன. (பழைய பதிப்புக்களில் 34, 83). பெண்ணியல்பு பற்றி 5 உரைகள் இங்கு உள்ளன. ஒன்று மட்டும் பெண்டிரைப் பழிப்பதாக உள்ளது; இது இடைச் செருகல் என்று கருதத்தக்கது (80):

எழிலார் முலைவரி விழியார் தந்திரம்
இயலா தனகொடு முயல்வா காதே.

பின்னும், அழகாக ஓட்டமுடைய, வகையுளி இல்லாத இவ் வரி களில், 'அடினும்பால் பெய்துகைப் பறாது பேய்ச் சுரைக்காய்' என்ற ஒரு வரியும் காணப்படுகிறது. படிக்கும் போதே இவ்வரி இந் நூலுக்குரியதன்று, இடைச் செருகல் என்று நன்கு விளங்குகிறது.

பண்டை நூல்களின் கருத்துக்களும் சொற்களும் தொடர் களும் இதனுள் தொட்ட இடமெல்லாம் காண முடியும் - நாலடி. மூதுரை போன்றவை. கவிராயர் தம் உரையுள் திருக்குறள் ஆதாரங்களைத் தவறாது எடுத்துக் காட்டியிருக்கிறார்.

**பதிப்பு:**

எண்ணில்லாத பதிப்புக்கள். கா. நமசிவாய முதலியார் பதிப்பு 1931, சிறந்த ஆராய்ச்சிப் பதிப்பு, கவிராயர் உரையும் உடையது.

எஸ். ராஜம் பதிப்பு 1959, மிகவும் திருத்தமானது.

**முன்னூல்கள்**

அதிவீரராமர் பாடிய வெற்றி வேற்கைக்குக் காலத்தால் மிகவும் முற்பட்டு, இதே முறையில் ஒவ்வொரு வரியிலும் சிறந்த உலகியல் பற்றிய ஒரு நல் ஒழுக்கக் கருத்தைச் சிறப்பாக உரைக்கும் தன்மை பல நூல்களில் காணப்படுகின்றது. நல்லந்துவனார் பாடிய கலித்தொகை நெய்தல் திணையுள் ஒன்பது வரிகள் நீதியை எடுத்து அழகுபடக் கூறுகின்றன. இதற்கு உள்ள குறிப்பு, 'தலைவன் தெருளாதவனைத் தெருட்டி வரைவு கடாயது' என் பது. வரிகளைக் கீழே தருகிறோம் (பாட்டு 133).

ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்,
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை,

பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்,
அன்பெனப் படுவது தன்கிளை செறா அமை,
அறிவெனப் படுவது பேதையார் சொல் நோன்றல்,
செறிவெனப் படுவது கூறியது மறா அமை,
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை,
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல்,
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்.

*இவ்வாறு தனித்தனி வரிகள் பல நூல்களில் அமைந்திருக்கலாம். ஆனால் ஒரு தொடர்பாகப் பல வரிகள் இங்கு காணப்படுவது மிக்க அருமையுடையது.*

*கலித்தொகை போலவே, சீவசம்போதனை என்ற சைன சமய நூலிலும் சிரேணிக மகாராசன் கூறுகின்ற அறிவுரையாக உள்ள ஓர் ஆசிரியப்பாவில் 14 வரிகள் இந்த முறையில் அமைந்துள்ளன (88).*

அறிவெனப் படுவது துன்பந் துடைத்தல்,
செறிவெனப் படுவது மும்மையும் செறிதல்,
ஆண்மை யெனப்படுவது ஐம்புலன் வெல்லல்,
கேண்மை யெனப்படுவது கெட்டிடத் துதவல்,
அருமை யெனப்படுவது அறநெறி வழுவாமை,
பெருமை யெனப்படுவது பிறனில் விழையாமை,
அறமெனப் படுவது ஆருயி ரோம்பல்,
உறவெனப் படுவது உற்றுழி நிற்றல்,
வாய்மை யெனப்படுவது வருந்தா துரைத்தல்,
தூய்மை யெனப்படுவது உள்ளத் தூய்மை,
இன்பமெனப் படுவது ஈறில் இன்பம்,
அன்பெனப் படுவது ஆர்வம் உடைமை,
தவமெனப் படுவது ஐம்புலன் வெறுத்தல்,
வதமெனப் படுவது கொல்லா விரதம்.

*கொன்றை வேந்தனை முன்னமே குறிப்பிட்டோம். இந்நூல்கள் யாவும் காலத்தால் அதிவீர ராமருக்கு முற்பட்டவை. இவற்றின் காலம் முறையே - கலித்தொகை 2ஆம் நூற்றாண்டு; சீவசம்போதனை - 14; கொன்றை வேந்தன் - 12. இவையன்றிப் பின்னே சொல்லும் சில தொடர்புகளும் கருதத்தக்கன. 'சான்றோர் பலர் யான் வாழுமூரே' என்ற புறநானூற்று வரி இங்கு ஒரு தொடருக்கு வித்து:*

சான்றோர் இல்லாத் தொல்பதி இருத்தலின்
தேன்தேர் குறவர் தேயம் நன்றே.
வாய்ப்பறை ஆகவும் நாக்கடிப் பாகவும்
சாற்றுவ தொன்றைப் போற்றிக் கேண்மின்.

என்ற தொடர், கபிலரகவல் வரிகளைக் கொண்டது;

நாக்கடிப் பாக வாய்ப்பறை அறைந்து
சாற்றக் கேண்மின் சாற்றக் கேண்மின்.

அழகு யாது, பதராவார் யார் என்பதைக் கூறுமிடங்களில் அந்தணர் அரசர் வணிகர் வேளாளருக்குள் யார் பதர் என்று முறையே கூறுகிறார். பதர் என்ற பகுதியின் இறுதிப் பகுதியில் காணப்படும்.

ஏந்திழை யாரிய லாததந் திரங்கொடு
வாய்ந்ததென் றதின்முயல் வானுமோர் பதரே.

என்பது இடைச்செருகல் என்பது நன்கு தெரிகிறது.

## தினகர வெண்பா

திருக்குறளைச் சார்ந்து பிற்காலத்தில் பலவகையான நீதி நூல்கள் பாடப்பெற்றன. அந்நூலின் பாடல்களைப் பெரும் பான்மை இறுதியிலும் சிறுபான்மை இடையிலும் வைத்துப் புலவர்கள் தங்கள் புலமை நயம் தோன்றப் பிற விளக்கங்களையும் எடுத்துக்காட்டாகக் கதைகளையும் சொல்லிப் பல நூல் செய் திருக்கிறார்கள். அவற்றுள் பெரும்பான்மையானவை வெண்பா நூல்களே; நேரிசை வெண்பாவில் பின்னிரு வரிகளாகக் குறட் பாவைப் பெய்து கொள்வது எளிது. திருப்புல்லாணி மாலை என்ற ஒரு நூல் மட்டும்தான் குறளை இடையிற் பெய்து கட்டளைக் கலித்துறையாகச் செய்யப்பட்டுள்ளது. ஏனையவை யாவும் வெண்பா நூல்களே. இவை அனைத்தினும் காலத்தால் முற்பட்டது தினகர வெண்பா என்ற வெண்பா நூல்.

**நூல்**

பொதுவாக இந்நூல்கள் குறளில் அதிகாரத்துக் கொரு பாடலாகத் தேர்ந்தெடுத்துச் செய்யுள் செய்தவை; 1330 குறளையும் எடுத்தமைத்த பெருநூல்களும் இருந்தன என்றும் சொல்வர்.*

---

* இருபதாம் நூற்றாண்டில் செகவீர பாண்டியன் இவ்வாறு 1330 வெண்பாவில் திருக்குறட் குமரேச வெண்பா செய்தார்.

தினகர வெண்பாவானது காப்புச் செய்யுளோடு 137 பாடல்கள் உடையது. 7, 24, 79 ஆகிய அதிகாரங்களில் இரு பாடல்களும் ஏனையவற்றில் ஒவ்வொரு பாடல் வீதமும் உள்ளன. நூலானது, கோவை என்ற தொண்டை நாட்டுக் கோவூரில் பெருஞ் செல்வனாய் அரசரிடத்து மந்திரி போன்ற நிலையில் வாழ்ந்த கருணீகர் மரபைச் சேர்ந்த தினகரன் என்ற வள்ளலைப் புகழ்ந்தும் உலக நீதிகளை உரைத்தும் செய்யப் பெற்றுள்ளது.

## ஆசிரியர்

பெயர் தனித்துச் சொல்லப் பெறாவிட்டாலும், 118ஆம் வெண்பாவில் 'நாகராசன் புகழும் நன்னாகரீக வரசீகருணா தினகரா' என்று சொல்லப் பெறுவதால், இந்த நாகராசனே நூலாசிரியராகலாம் எனத் தெரிகிறது. இவர் இவ்வள்ளலால் நன்கு போற்றப் பெற்றவர். சிவபக்தி மிக்கவர். தமிழினிடத்து ஈடுபாடுடையவர், தமிழறிவு மிக்கவர், இராமாயணக் கதையில் மிக்க ஈடுபாடு கொண்டவர்; பாரதத்தைக் குறிப்பிட்ட போதிலும், இராமாயண வரலாறுகளை அனேக முறை குறிப்பிட்டுப் பாடுகிறார். விக்கிரமாதித்தன் பட்டி கதைகளையும் குறிப்பிடுகிறார். தினகர வெண்பாவின் பாவொன்று, ஏடுகளில் காணப்படவில்லை, தனிப்பாடலாக மட்டும் காணப்படுகிறதென்பது பதிப்பாளர் குறிப்பு.

> **கையாற் பரிந்தழைக்கக் கண்டுகுழந் தைச்சோமன்**
> **செய்யசுட்டி ஈந்தான், தினகரா – வையத்துத்**
> **தோன்றிற் புகழொடு தோன்றுக, அஃதிலார்**
> **தோன்றலிற் றோன்றாமை நன்று.**

இப்பாடல் குறிப்பிடும் சோமன் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு பிரசித்தமான வள்ளல். இதுபோலவே. பதிப்பாளர் மற்றொரு பாடலையும் முகவுரையில் தந்துள்ளார்:

> **தங்கமுடி சூடிடினும் தங்குணம்வி டார்கசடர்**
> **திங்கள்முடி சூடும் தினகரா – கொங்கைதனில்**
> **பாலருந்த விட்டவட்டை பச்சைரத்த முண்ணுமல்லால்**
> **பாலருந்த மாட்டாது பார்.**

இப்பாடலினுள் குறள் பாடல் அமையவில்லை; இது ஒரு தனிப் பாடலாகும். இது போன்றதே ஒரேட்டில் 96ஆம் பாடலின் பின்காணும் கீழ்வரும் பாடலும்; இதுவும் திருக்குறளைக் குறிப்பிடவில்லை.

வாரொன்று கும்பமுலை மங்கைமனம் வேறானால்
சேர்வதங் கென்ன தினகரா – பார்தனிலே
உள்ளன்பி லாதாரை ஊடுதல் ஊன்கவர்ந்த
வெள்ளெலும்பை நாய்கவர்ந்தற்று.

*71ஆம் பாடல் 'சும்மாதே ஒன்றைத் துணிந்து செய்ய ஒண்ணாது' என்று தொடங்குகிறது. சும்மாது, என்ற சொல்லே பிற்காலத்தில் சும்மா என்று வழங்குகிறது. அருணகிரிநாதர் தாயுமானவர் போன்றார் இச்சொல்லைச் செயலற்றிருத்தல் என்ற பொருளில் அதிகமாக ஆண்டிருக்கிறார்கள். சும்முதல் - மூச்சுவிடுதல்; சும்மாது - மூச்சுவிடாது; யோக நிலையில் அமர்தல் என்பதே பொருள்.* சும்மாது என்ற சொற்பிரயோகம் மிகவும் அருமையானது; இதன் முதல் ஆட்சி 14ஆம் நூற்றாண்டு. எனினும், சுமார் 4 - 5 நூற்றாண்டில் எழுந்த திருமந்திரத்திலும் சும்மாது என்ற ஆட்சி காணப்படுவது குறிப்பிடத்தகுந்தது.*

காலம்

*இந்நூலின் காலத்தை அறிவதற்கு ஒரு குறிப்பு கிடைக்கிறது. 128ஆம் பாடல் குன்றை அச்சுதேந்திரனைக் குறிப்பிடுகிறது:*

கொங்கேறு தண்களபக் குன்றையச்சு தேந்திரன்தன்
செங்கோல் செலுத்தும் தினகரா – இங்கே
பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

*குன்றை அச்சுதேந்திரன் என்பவர் விசயநகர அரசின் கீழ்த் தஞ்சையில் இருந்து அரசு புரிந்த நாயக்க வம்சத்து அரசருள் ஒருவர். இவருடைய காலம் 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி. திருமழிசையில் பிரதி செய்யப்பட்ட ஒரு கல்வெட்டு❖ அச்சுதப்ப நாயக்கரையன் காரியத்துக்குக் கருத்தரான தினகரப்பிள்ளை என்று சொல்லுகிறது. இக்கல்வெட்டு விசய நகரத்து அரசரான ராமராச வேங்கடபதி மகாராசாவின் காலத்தில் ஜெய வருடத்தில் (மாசி 18) பொறிக்கப்பட்டது. இதன் காலம் கி.பி. 1594. இதுவே தினகருடைய காலம் என்று கருத வேண்டும். இந்த ஆண்டிற்குச்*

---

* *இதுபற்றி சும்மா என்ற தலைப்பில் சித்தாந்தம் 1965 இதழில் யாம் எழுதியுள்ள கட்டுரை காண்க.*

❖ MER 22 - 1911.

சிறிது முன்பாக நூல் செய்யப்பட்டிருக்கலாம். இவரும் தொண்டை நாட்டினர் போலும். 'தொண்டைநாடு சான்றோருடைத்து' என்ற பாடற் பகுதியைக் குறிப்பிடுகிறார். ஆசிரியர் காலம் 1575 - 1600 ஆகலாம்.

**தினகரன்**

இவன் வீரையன் புதல்வன். சைவ சமயத்தினன். தற்பரனை, ஆறு சமயத்தையுங் கடந்த சிற்பரனைப் போற்றுபவன்' (120) தேர்த் திருநாள் சிவ பூசை திருப்பணி முதலியன எல்லாம் கண்டவன் (132). சிவயோகி, தருமசீலன், சிறந்த வள்ளல், சிவன் சீபாதம் போற்றுபவன், உத்தமமான தியாகி, தமிழுக்கு வழங்கு பவன்; கார்காத்த வேளாள வகுப்பில் களப்பாள கோத்திரத்தில் தோன்றிய மாவை - உத்தண்டன் என்பவர் இவனுக்கு நெருங்கிய நண்பர்.

தினகரனைக் குறித்து அக்காலத்தில் புலவர் பலர் பாடல் பாடியிருத்தல் கூடும். பின்வரும் பாடல் தனிப்பாடலாகக் காணப்படுகிறது.

வேடிக்கையான சிவயோகியர் தீபன் வீறு மைந்தன்
நாடிக்கொள் கீர்த்தித் தினகர பூபதி நற்புயத்தில்
கூடிப் பிரிந்தவர் எங்கே எனவென்று கோலமதன்
தேடிப் புறப்பட்ட கைப்பந்தமே இச் செழுந்திங்களே.

பின்வருவது இந்நூல் பாடலுக்கு எடுத்துக்காட்டாகும்:

சுந்தரநின் பேரவையுட் சொன்னாற் கருந்தமிழுஞ்
செந்தமிழாம் கோவைத் தினகரா – முந்தை நூல்
கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

**பதிப்பு**

தினகர வெண்பா, ச. வையாபுரிப்பிள்ளை பதிப்பு 1932.

## நீதி வெண்பா

**நூல்**

இது பிற்கால நீதி நூல்களுள் ஒன்று. அவ்வையார் பாடிய மூதுரை, நல்வழி, பின்வந்த அறநெறிச்சாரம் ஆகிய நூல்களுக்குப் பின், கீழ்க்கணக்கின் யாப்பமைதியாகிய வெண்பா யாப்பிலேயே

தோன்றிய ஒரு நூல்; நீதிகளைச் சாமானிய மொழியில் எளிதில் புரியுமாறு வெண்பா யாப்பில் உணர்த்துவதால் வேறு பெயரில் லாமல் நீதிவெண்பா என்றே பெயர் பெற்றிருக்கிறது. மூதுரையும் நல்வழியும் 30, 40 பாடல்களுடையன. அறநெறிச்சாரம் 226 பாடல்களுடையது. இந்நூலோ சம்பிரதாயமான 100 வெண் பாக்களுடையது.* தனியே விநாயகர் காப்புச் செய்யுளொன்றும் உடையது. படிப்பே இல்லை என்று சொல்லத்தக்க சாமானி யப் படிப்பறிவு உள்ள எல்லா மக்களும், 20ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில், நீதிவெண்பா நன்கு அறிந்திருந்தார்கள். அவர்களுக்கு வாக்குண்டாம் தெரியாது, நல்வழி தெரியாது, ஆனால் நீதிவெண்பா நன்கு தெரியும். படிக்கத் தெரியாதவர்கள் கூட, செவி வழியாக இதைக் கற்றிருந்தார்கள். காரணம், இந்நூல் நீதியோடு கூட உலகியலையும் கூறுகிறது. நடை மிகவும் சாமானிய நடை; பொருளும் உதாரணங்களும் எல்லோருக்கும் தெரிந்தவை, நன்கு மனத்தில் நிற்பவை.

இந்நூலின் பல பொருள்கள் எளிதாயத் தமிழுக்கே உரியன போல் தோற்றினும், வடமொழியிலுள்ள நீதி சாஸ்திரம் என்ற ஒரு பிற்காலத் தொகை நூலைத் தழுவிச் செய்யப்பட்டது என்றும், சில பாடல்கள் மொழிபெயர்ப்பே என்றும் ஆன்றோர் கருதுவர்.

### ஆசிரியர்

இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஆனால் இவர் சைவர், வாழ்க்கையனுபவமும் நிரம்பியவர் என்று சொல்லலாம். சோமசுந்தரக் கடவுளைக் குறிப்பிடுகின்றமையால் இவர் மதுரைக்குரியவரென்று கருதலாம்:

> வில்லம்அறு குக்கொவ்வா மென்மலர்கள். நால்வரெனும்
> நல்லஅன்பர் சொற்கொவ்வா நான்மறைகள்; மெல்லிநல்லாய்,
> ஆமந் திரம்எவையும் ஐந்தெழுத்தை ஒவ்வாவே,
> சோமசுந்த ரற்கென்றே சொல். 97

வில்வம் அறுகு ஆகிய பத்திரங்களையும், நால்வர் பாடல் களையும் ஐந்தெழுத்தையும் உயர்த்திச் சொல்வதால், இவர் சிறந்த சைவரென்பதற்கு வேறு சான்று காட்டவேண்டியதில்லை. சங்கரன் பாதம் பூசித்தலே நிலையானது (51, 52); வெண்ணீற்றுத் திரிபுண்டரம் விடுத்து முத்தி பெறல் இயலாது (95); பாவி தனம்

---

* நீதிநெறி விளக்கம், நீதி சாரம் என்பவையும் நூறு பாடல்கள் உடையன.

சிவன் அன்பர்பால் மேவாது (63); சிவனே சிவனே சிவனே என்பார் (58); புரமெரித்த அண்ணலடியார் பொருள்கள் செந்தீயினும் கொடிய (78) (கவரலாகாது என்பது கருத்து); அரன் அன்பர் தே வரவைப் பார்ப்பர் (96); சிவயோகி (56, 68, 69) என்ற கருத்துக்களும் குறிப்பிடத்தக்கன.

ஒருவேளை இவ்வாசிரியர், பட்டினத்தார் சீடர் பரம்பரையில் வந்தவரோ என்று எண்ணத் தோன்றுகிறது. பல பாடல்களில் பெண்களைப் பழிக்கிறார். பெண் பேசுவதால் உலகம் கெடும் (31), முதல் மூன்று யுகங்களிலும் முறையே ரேணுகை சானகி திரௌபதி கூற்றுவராயிருந்தார்கள், கலியுகத்தில் வீடு தோறும் கூற்றுவன் (32); மானார் விழியார் மனம் காண்பதரிது (55) என்ற கருத்துக்களைக் காண்க.

## காலம்

இந்நூலின் காலம் 16ஆம் நூற்றாண்டு என்று அறியப் பெரிதும் வியப்பாயிருக்கிறது; நடையையும் பொருளமைப்பையும் பார்த்தால் மிகவும் பிற்காலமென்று எண்ணத் தோன்றுகிறது.

திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் தாம் சாந்தலிங்க சுவாமிகளின் ‘கொலை மறுத்தல்’ என்ற நூலுக்குச் செய்த உரையில், இதன் 80ஆம் பாடலை மேற்கோள் காட்டுகிறார். இப்பாடல் நீதிசாரம் என்ற பெயர் சொல்லிக் காட்டப்பட்டுள்ளது; ஆனால் பாடல் நீதிவெண்பாவிலுள்ளது. (நீதிசாரம் விருத்த யாப்பால் ஆன நூல்.) சுவாமிகள் காலமானது கி.பி. 1659. அவர் காலமாவதற்குப் பல ஆண்டுகள் முன்னதாகவே அவ்வுரை எழுதியதாக வரலாறு; உத்தேசம் 1645 இருக்கலாம். மேற்கோள் காட்டும் அளவு இந்நூலுக்கு அன்று பிரசித்தி ஏற்பட்டிருக்க வேண்டுமானால், 50 - 60 ஆண்டு முற்பட்டதென்று கொண்டாலும் கூட, நூலின் காலம் கி.பி. 1590 ஆகிறது.

## நூற் பொருள்

இந்நூல் வடமொழி நீதி சாத்திரக் கருத்துக்களைத் தமிழில் சொல்வதால், பாடல்கள் ஒரு தனி அமைப்பைப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு பாடலும் மூன்று அல்லது நான்கு கருத்துக்களைத் தொகுத்துச் சொல்கிறது. புராணக்கதைகள் சிலவும் குறிப்பிடப்பட்டுள்ளன. சில பஞ்சத் தந்திரக் கதைகள் - வேடன் வேதியனைக் காத்தது, குரங்கு அரசனை வெட்டியது, கீரியைப் பார்ப்பனத்தி கொன்றது, ஏரண்ட முனி காவிரிச் சுழலில்

*வீழ்ந்தது, காக்கைக்கு இடம் கொடுத்து அன்னம் இறந்தது, அகத்தியர் கடலை உண்டது ஆகிய கதைகள் குறிப்பிடத்தக்கன. பல பாடல்கள் மகடூஉ விளியாகச் செய்யப்பெற்றுள்ளன. திகம்பர சைனர் குறிப்பிடப்பட்டுள்ளனர்.*

*திருக்குறள் நாலடி ஆகியவற்றின் பாடற் கருத்துக்களும் தொடர்களும் அப்படியே அமைக்கப் பெற்றிருக்கவும் காணலாம் (49, 46). அவ்வையாரின் 'தாயோ டறுசுவை போம்' என்ற தனிப் பாடல் 'மாதா மரிக்கின் மகன் நாவின் நற்சுவை போம்' (61) என்ற பாடலில் எடுத்துவைக்கப் பெற்றுள்ளது. கற்களாகிய பகைவரிடம் உறவாடியே நா நன்மை பெறுகிறது (5), இரவல னிடம் போகக் காற்றும் அஞ்சும் (8), தீயவரைக் கண்டால் விலகுதல், முதலான கருத்துக்கள் பழமொழி போலக் கல்லார் நாவிலும் வழங்குவதைக் காணலாம். உணவில் அளவு படுத்திக் கொள்ள வேண்டுமென்பதை ஒரு பாடல் ஆணியறைந்தாற் போற் கூறுகிறது:*

ஒருபோது யோகியே, ஒண்தளிர்க்கை மாதே,
இருபோது போகியே என்ப; – திரிபோது
ரோகியே; நான்குபோ துண்பான் உடல்விட்டுப்
போகியே என்று புகல். 9

*ஈவதை விலக்குபவர், பழமரத்திற் கட்டிய முள்ளை யொப்பார் என்று இவர் கூறியிருப்பது, இவர் சிறந்த உழுதூண் வாழ்க்கை யுடையவரென்று காட்டும்.*

தாமும்கொ டார்; கொடுப்போர் தம்மையும்ஈ யாதவகை
சேமம் செய் வாரும் சிலருண்டே; ஏமநிழல்
இட்டுமலர் காய்கனிகள் ஈந்துதவும் நன்மரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண். 59

*பெண்ணைக் குறைவாகப் பேசுகின்ற இவர் பெண்ணின் இலக் கணத்தை மிகவும் அழகாகச் சொல்கிறார்; நன்கறிந்த பாடல்:*

அன்னை தயையும், அடியாள் பணியும் மலர்ப்
பொன்னின் அழகும், புவிப்பொறையும் – வன்னமுலை
வேசி துயிலும், விறல்மந் திரிமதியும் –
பேசில் இவையுடையாள் பெண். 30

*இப்பாடல் 'கார்யோஷு தாசி' என்ற பர்த்திருகரி நீதி சதகத்தின் மொழிபெயர்ப்பென்று சொல்லத்தகும்:*

கார்யேஷுதாஸீ கருணேஷு மந்த்ரீ
ரூபேச லக்ஷ்மீ க்ஷமயா தரித்ரீ
ஸ்நேஹேச மாதா சயனேது வேச்யா
ஷட்தர்ம யுக்தா குலதர்ம பத்னீ.

*உண்மையை யாரும் விரும்பமாட்டார்கள்; பொய்யையே விரும்புவார்கள்: கள் இருந்த இடத்தில் விலைபோக, பால் வீடுதோறும் சென்று விலையாவதுபோல என்று ஒரு பாடலால் நயம்படச் சொல்கிறார்:*

சத்தியம்எக் காலும் சனவிருத்த மாகுமே,
எத்தியபொய் யார்க்கும் இதமாகும் – நந்தியபால்
வீடுதொறும் சென்று விலையாம், மதுவிருந்த
வீடுதனி லேவிலையா மே. 85

*தெய்வம் மெய் என்பவருக்கே மெய்.*

மந்திரமும் தேவும் மருந்தும் குருவருளும்
தந்திரமும் ஞானம் தருமுறையும் – யந்திரமும்
மெய்யென்னில் மெய்யாய் விளங்குமே, மேதினியில்
பொய்யென்னில் பொய்யாகிப் போம். 38

### பதிப்பு

*பல சாமானியப் பதிப்புக்கள். கா. நமசிவாய முதலியார் தமிழ் கடல் வரிசை 1931, திருத்தமானது.*

## உலக நீதி

### ஆசிரியர்

*சென்ற தலைமுறைகளில் ஆரம்பப் பள்ளியில் பயின்ற சிறுவர் சாதாரணமாய் முதல் வகுப்பில் ஒருவர் சொல்ல மற்றவர் பின்பற்றிச் சொல்லி, எழுத்தறிவுபெறும் முன்னமே மனப்பாடம் செய்து வந்த ஒரு சிறு நீதிநூல். நீதிகளை எதிர்மறை முகத்தால் உணர்த்துவது. இதைச் செய்தவர் உலகநாத பண்டிதர் என்றும் உலகநாத கவிராயர் என்றும் சொல்லப்படுவார். இதன் இறுதிப் பாடல் ஆசிரியர் பெயரைக் கூறும்:*

ஆதரித்துப் பலவகையாற் பொருளுந் தேடி,
அருந்தமிழால் அறுமுகனைப் பாட வேண்டி,
ஓதுவித்த வாசகத்தால் உலக நாதன்
உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி

என்பது காண்க. இவ்வுலகநாதர் என்பவர் உலகநாத முனிவர் என்றும் இவர் தந்திவனப் புராணத்தைக் கமலை - ஞானப்பிர காசரைக் கொண்டு பாடுவித்த உலகநாதர் என்றும் ஐயரவர்கள் தம் குறிப்புக்களில் எழுதி வைத்துள்ளனர். அவற்றின் அடிப் படையில்தான் இவர் வரலாறு இந்த நூற்றாண்டு வரலாற்றில் இடம் பெறுகிறது.

கமலை ஞானப்பிரகாசர் என்பவர் மெய்கண்ட மரபில் வந்த ஒரு ஞானியாவார். பல ஞானாசாரியர்களுக்கு ஆசிரியராய் விளங்கியவர். இவர் இரு தல புராணங்கள் பாடியவர். ஒன்று தந்திவனப் புராணம் என்பது; தந்திவனம் - திருவானைக்கா; 'தவமுனி உலகநாதன் தக்க இப் புராணந்தன்னை... தமிழ் நூலாக இசைத்திட வேண்டும் என்ன... தமிழால் யானும் உரைத்தனன்' என்றும், 'பாசம் துறந்திடும் உலகநாதன் தொலைவில் மெய்ப் புகழே வாழி' என்றும் அப்புராணத்தில் பாடுகிறார். தாம் செய்த மற்றொரு புராணமாகிய திருமழுவாடிப் புராணத்தில், 'அறிவினால் தவத்தால் மிக்க வித்தகன் உலகநாதன் தமிழினாலே இத்தலபுராணந் தன்னை இயம்புதல் வேண்டும் என்னா... உரைத்தனன்' என்று கூறுகிறார்.* 'ஆகவே இவ்வுலகநாத முனிவர் கமலை ஞானப்பிரகாசரால் பெரிதும் மதிக்கப்பெற்று அவர் காலத்தில் வாழ்ந்த ஒரு தவமுனிவர் என்று அறிகிறோம். ஞானப்பிரகாசர் மழுவாடிப்புராணம் செய்த காலம் கி.பி. 1564 என்று சொல்லப்பட்டுள்ளமையால், உலகநாத முனிவரின் காலமும் இதுவே, 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்று அறிகிறோம்.

இவர் திருவாரூரினர் என்றும் தெரிகிறது. இவர் திருமழ பாடிக்கும் தந்திவனம் என்னும் திருவானைக்காவுக்கும் புராணம் பாடுவித்த காலத்தில், அங்கங்குத் தங்கியிருந்து கோயில் திருப் பணிகள் செய்துவந்தார்; மழபாடியில் திருப்பணியால் வரும் சிவபுண்ணியத்தை ஞானப்பிரகாசர் மிகவும் போற்றியுரைக் கிறார். திருவானைக்காவில் இவர் பெயரால் உலகநாத முனிவர் மடம் என ஒரு மடம் இருப்பதாகவும் சொல்வர்.

இவ்வுலகநாத முனிவர் உலகநாதப் பண்டாரம் என்றும் சொல்லப்படுகிறார். ஞான ஆசிரியராகவும் இருந்தார் போலும்.

---

* தந்திவனப் புராணம் திருமழுவாடிப் புராணம் ஆகிய இரண்டின் செய்திகளையும் எமது தமிழ் இலக்கிய வரலாறு 16ஆம் நூற் றாண்டு முதற் பாகம் பக்கம் 84, 79இல் விளங்கக் காணலாம்.

இவருடைய மாணாக்கர் பலர் இருந்திருக்கிறார்கள். சிலர் திருமுறைகளைப் பிரதி செய்திருக்கிறார்கள். இவ்வாறு பிரதி செய்த இரண்டு 11ஆம் திருமுறைப் பிரதிகள் திருவான்மியூர் சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ளன. பின்வரும் வாக்கியம் அவற்றினிறுதியில் காணப்படுகிறது. 'திருவாரூர்ச் செப்பேட்டுப் படிக்கு உலகநாதப் பண்டாரத்துத் திருவுளத்தினாலே 11ஆம் திருமுறையார் எழுதி முடிந்தது'. இதனால் நாம் அறியக் கிடப்பது திரு ஆரூரில் திருமுறைகள் எழுதிய செப்பேடு ஒன்று இருந்ததென்பதும், அதைப் பார்த்தே திருமுறைகள் பிரதி செய்யப்பட்டன என்பதும், திருக்கோவையார் திருவுந்தியார் போலத் திருமுறையார் என்று வழங்கப்பட்டதென்பதும் ஆகும். இதே நூற்றாண்டில் திரு எம்பாவையைப் பாவையாரென்று வழங்கும் செய்தியை திருக்குறள் நுண்பொருள் மாலையில் எடுத்துக் காட்டியிருக்கிறோம்.

ஆசிரியர் சிறந்த முருகபக்தர் என்பது பாடல்தோறும் முருகனுக்கு வணக்கம் கூறும் 'வள்ளி பங்கன் மயிலேறும் பெருமாள்' என்ற மகுடத்தாலும், இறுதிப் பாடலில் காணும் 'அருந்தமிழால் அறுமுகனைப் பாட வேண்டி' என்ற கூற்றாலும் நன்கறியலாம். எல்லா நீதிப் பாடலும் அவ்வையார் பாடியது என்றே சொல்லி வந்த காலத்தில் இச்சிறு நூலும் அவ்வையார் பாடியது என்று சொல்லி வந்ததும் உண்டு.

### உலக நீதி

இது 13 எண்சீர் ஆசிரிய விருத்தங்கொண்ட சிறு நூல். பாடல்கள், முதன் மூன்று அடிகளிலும் வேண்டாம் என்று எதிர்மறையாக ஆறு நீதிகளை உரைத்து, நான்காம் அடியில் பெரும்பான்மையும் 'வள்ளி பங்கன் மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே' என்ற முடிபைக் கொண்டு முடிவன - 1 - 5, 8, 9, 12; திருக்கை வேலாயுதனைச் செப்பாய் - 6, குமரவேள் பாதத்தைக் கூறாய் - 7, 10; என்பன பிற முடிவுகள். 11ஆம் பாடல் மட்டும் வேறு அமைப்பு உடையது. இதுகொண்டு இது இந் நூலுக்குரிய பாடல் அன்று என்று கூறுவது* பொருந்தாது. 13ஆம் பாடல் முன்னே காட்டியதுபோல் ஆசிரியர் பெயர் கூறும் தற்சிறப்புப் பாயிரமும் நூற்பயனுமாகும்.

---

* கா. நமசிவாய முதலியார்.

நூலின் முகப்பில் கரிமுகன் வணக்கமாகிய ஒரு காப்புச் செய்யுள் உள்ளது. இது நூலை உலகநீதி புராணம் என்று கூறுகிறது.

உலக நீதி புராணத்தை உரைக்கவே
கலைக ளாய்வருங் கரிமுகன் காப்பு.

நமசிவாய முதலியார் உரைப்பதிப்பில் இதற்குப் பின்வரும் பாடபேதமும் தந்திருக்கிறார்:

நிலவு லாவிய நீர்மலி வேணியன்
குலவு சேயனெ வந்த குணக்கடல்
உலக நீதி புராணம் உரைத்திடக்
கலைகள் ஆய்ந்த கணபதி காப்பதாம்.

இதன் முதல் அடி, பெரிய புராணத் தொடக்கப் பாடலாகிய 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்' என்ற பாடலின் இரண்டாம் அடியாகும்.

இந்நூலிலுள்ள பல வரிகள் பழமொழி போலக் கல்வியறிவில்லாதவர்கள் நாவிலும் வழங்குகிறது. ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம், கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம், தெய்வத்தை ஒருநாளும் இகழவேண்டாம், நெஞ்சாரப் பொய் தன்னைச் சொல்ல வேண்டாம் முதலாயின அத்தகைய வரிகள் மற்றோர் இடத்திலும், வீறான தெய்வத்தை இகழ வேண்டாம் என்று சொல்லுகிறார். பொய்யும் அப்படியே - இறந்தாலும் பொய் தன்னைச் சொல்ல வேண்டாம். தாழ்ந்தவரைப் பொல்லாங்கு சொல்லவேண்டாம் என்பது ஒரு சிறந்த கருத்து. மனையாளைக் குற்றமொன்றும் சொல்ல வேண்டாம், இரு தாரம் ஒரு நாளும் கொள்ளவேண்டாம் என்பன பெண்ணைக் குறித்த சிறந்த கருத்துக்கள். தம் காலத்தில் உலக வாழ்வில் எவ்வெவ் வழிகளில் எச்சரிக்கையாக வாழ வேண்டும் என்பதை நன்கு சிந்தித்துக் குறிப்பிடுகிறார்: பிணைபட்டுத் துணைபோகித் திரிதல், மண் ஓரம் செல்லுதல், வாழாமல் பெண்ணை வைத்துத் திரிதல், மதியாதார் தலைவாசல் மிதித்தல், ஏசவிட்ட உற்றாரை நத்துதல் முதலியன தவிர்க்க வேண்டியவை என்று குறிப்பிடுகிறார். ஐவருக்குரிய கூலியைக் கொடாதிருத்தல் பெரும்பாவம் என்று 11ஆம் பாடல் கூறுகிறது:

அஞ்சுபேர் கூலியைக் கைக் கொள்ள வேண்டாம்;
அதுஏதிங் கென்னில் நீ சொல்லக் கேளாய்;

தஞ்சமுடன் வண்ணான் நாவிதன் கூலி,
சகலகலை ஓதுவித்த வாத்தியார் கூலி,
வஞ்சமற நஞ்சறுத்த மருத்துவச்சி கூலி,
மாநோவு தனைத்தீர்த்த வைத்தியன் கூலி,
இன்சொலுடன் இவர்கூலி கொடாத பேரை
ஏதேது செய்வானோ ஏமன் தானே.

*வாத்தியார் கூலியை வைத்திருக்க வேண்டாம் என்று மற்றொரு பாட்டிலும் கூறுகிறார். இங்ஙனமாக, பல சிறந்த நீதிகளையும் உலகியல் நெறிகளையும் சாதாரண மக்களுக்கும் புரியக்கூடிய மொழியில் இந்நூல் சொல்கின்ற காரணத்தால் எல்லோரும் விரும்பிப் பயில்கின்ற நூலாய் இது தோன்றிய காலந்தொட்டு இருந்து வருகிறது.*

*முன்கூறியபடி இதன் காலம் 16ஆம் நூற்றாண்டு என்று கருதுவதற்கு ஐயரவர்கள் குறிப்பே ஆதாரம். இந்நூலின் நடை பேச்சு வழக்காகவே உள்ள சாமானிய நடை.*

### பதிப்பு

*எண்ணிறந்த பதிப்புக்கள் மூலமாகவும் உரையுடனும் வெளிவந்துள்ளன. மிகவும் சிறந்த பதிப்புக்கள் இரண்டு: ஒன்று கா. நமசிவாய முதலியார் தமிழ்க்கடல் வெளியீடு 1931. மிகவும் விரிவான பதவுரை கருத்துரை முதலியன கொண்டது. இங்கு அவர், பாடல்களையும் தந்து விளக்கிக் கொண்டு போகிறார். பல பாடல்களுக்கு முழுமையும் வேறான பாடலின் பேதத்தைத் தருவதோடு, முழுவதும் மாறுபட்ட பாடல்கள் நான்கையும் இறுதியில் தருகிறார்.*

*மற்றது எஸ். ராஜம் பதிப்பித்த மூலபாடம் 1959, மிகவும் திருத்தமானது.*

அத்தியாயம் 3

# இலக்கிய உரை

## முன்னுரை

தமிழில் முதல் இலக்கியவுரை, மணக்குடவர் திருக்குறளுக்கு எழுதிய உரை; காலம் 10ஆம் நூற்றாண்டு. அதுமுதல் நூற்றாண்டுதோறும் இலக்கிய உரைகள் வளமாக வளர்ந்து வந்திருக்கின்றன. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து தமிழ் நாட்டின் அரசியலில் பெரும் கொந்தளிப்புக்கள் ஏற்பட்டன. மதுரையில் பாண்டியர் ஆட்சி முடிந்து சிலகாலம் முகம்மதியர் ஆட்சி இருந்தது. சோழர் அதற்கு முந்திய நூற்றாண்டிலேயே மறைந்து விட்டனர். பல்லவர் ஆட்சி ஒன்பதாம் நூற்றாண்டின் பின் ஒடுங்கிவிட்டது. விசயநகர அரசர் மதுரையை 14ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் முகம்மதியரிடமிருந்து மீட்டு, தமிழ்நாட்டின் பெரும் பகுதியைத் தங்கள் ஆட்சியில் வைத்திருந்தனர். இருந்தும், 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் முகம்மதியரிடம் தோற்று விசயநகரம் அழிந்ததும், தமிழ்நாட்டில் வாழ்க்கை சீர்குலைந்தது. இதன் விளைவுகளை இலக்கியத் துறையிலும் நன்கு காண முடிகிறது. மக்களுடைய செயல் எல்லாம் தெய்வசேவையிலேயே திரும்பிற்று. அதன் பயனாய்த் தோத்திரங்களும் சாத்திரங்களும் சாத்திர உரைகளும் பெருகின. நூல்வல்லார் தனி இலக்கிய உரையில் மனம் செலுத்தவில்லை என்று தெரிகிறது. தனி இலக்கிய உரைகளாக கிடைப்பன இரண்டே. ஒன்று குலோத்துங்க சோழன் உலாவின் உரை, மற்றது கோயில் புராண உரை. இவ்விரண்டையும் குறித்து இங்கு சில சொற்கள் கூறுகிறோம்.

# குலோத்துங்க சோழனுலா உரை

ஒட்டக்கூத்தர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் சோழ நாட்டில் அரசு புரிந்த விக்கிரம சோழன், அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கசோழன், அவன் மகன் இரண்டாம் இராசராசன் ஆகிய மூன்று முடி மன்னர் மீதும் சிறப்பான மூன்று தனி உலாக்கள் பாடினார். மூன்றும் சரித்திரச் செய்திகள் நிரம்பி உள்ளன. மூன்றில், இரண்டாவது குலோத்துங்க சோழன் உலாவுக்கு மட்டும் பழைய உரை ஒன்று சாமிநாத ஐயர் அவர்களுக்குக் கிடைத்து, அவருக்குப்பின் அவருடைய புதல்வரால் அச்சிடப் பட்டுள்ளது (1946). உரை செய்த ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இவ்வுரையை ஆராய்ந்து சில செய்திகள் இங்கே சொல்லப் படுகின்றன.

இவ்வுரையாசிரியர் உரை எழுதும் இடங்களில் மிகவும் விளக்கமான பொழிப்புரையாக எழுதுகின்றார். சில இடங்களில் எந்த உரையுமே சொல்வதில்லை. அபூர்வமாய்ச் சில இடங்களில் இரண்டொரு சொற்களை மட்டுமே எழுதி நிறுத்தி விடுகிறார். உலாவானது 387 கண்ணிகள் உடையது. இவற்றுள் 122 கண்ணிகள் தொடக்கப்பகுதி. பின் உள்ளவை பேதை முதல் பேரிளம் பெண் ஈறாக எழு பருவ மகளிரின் செயலினைக் கூறுகிறது. பிற்பகுதிக்கு இவர் தவறாமல் விரிவாகவே உரை சொல்லுகிறார்.

இவ்வாசிரியர் தம்மைப் புலப்படுத்தும் ஒரு குறிப்பும் நூலில் தரவில்லை. மற்றைய உலாக்களுக்கும் இவர் உரை எழுதியிருத்தல் கூடும். தொல்காப்பியம், பரிபாடல், பெருங்கதை (கொங்குவேள்) ஆகிய நூல்களைக் குறிப்பிட்டு எழுதுகிறார். பத்துத் துவர் ஐந்து விரை, முப்பத்திருவகை ஓமாலிகை என்ற தொகைகளை விரித்து அடியார்க்கு நல்லார் முதலியோர் காட்டுகின்ற மேற்கோள் பாடல்களை இவரும் காட்டுகின்றார் (கண்ணி 314). பெரும்பாலும் பல வினைகளைத் தொகுத்து வினை முடிவு எழுதிச் செல்கிறார். அழகான தமிழும், சில இடங்களில் வடமொழித் தொடர்களும் எளிதாக இவருக்குக் கைவருகின்றன. 'வீரவிஜய அபிஷேகம் சூட்டிய அந்நாளில் சகஸ்திர தாரையால் செய்த தாரா அபிஷேகம் போலும்' முதலான இடங்கள் காண்க.

சிலசமயம் இவர் அரச பரம்பரையில் குறிப்பிடும் அரசர் பெயர்கள் திருத்தமாக அமையவில்லை. பொறையனை, பொய்

கைக்குப் பண்டு கொடுத்துக் களவழிப்பாக் கொண்டவன் (20) தஞ்சை விசயாலயன் என்கிறார். இது பிழை; பாக் கொண்டான் சோழன் செங்கணான். திருமார்பில் தொண்ணூறும் ஆறும் படுதழும்பின் அகத்தோன் (21) - இராசராசதேவன் என்கிறார்; இவனே விசயாலயன். பின்னும் பல மாறுபாடுகள்.

உவமை இலக்கணத்தில் இவர் மிகுந்த தேர்ச்சி உள்ளவர் போலும். உவமையைக் கண்டால் அதிகமாக விரிக்கிறார். பேதைப் பருவத்தைச் சொல்லும்போது. ஆசிரியர் பசுங்கிள்ளை திங்கட்குழவி கற்பகவல்லி இளம்பேதை என்று சொல்லியுள்ளதை இவர் இலக்கணத்துக்குப் பொருந்த மிக அதிகமாக விளக்கு கிறார். அப்பகுதியை மட்டும் கீழே தருகிறோம்.

ஆடாத தோகை, அலராத புண்டரிகம்,
பாடாத பிள்ளைப் பசுங்கிள்ளை, – சூடத்
தளிராத சூதம் தழையாத வஞ்சி,
குளிராத திங்கட் குழவி, – அளிகள்
இயங்காத தண்கா, இறக்காத தேறல்,
வயங்காத கற்பக வல்லி – தயங்கிணர்க்
கூழைச் சுருண்முடிக்கக் கூடுவதுங் கூடாதாம்
ஏழைப் பருவத் திளம்பேதை. 124 – 7

'இப்பருவத்துக் கைக்கிளை காண்டலாகலின் அது கைக்கிளைத் திணையாயவாறு யாதோவெனின், பவனிகாண்டல் வேட்கை, தலைவிக்கு உளதாய்த் தலைவர்க்குத் தலைவிமேற் காட்சிவிருப் பமின்மையின் ஒருதலைக் காமமானமையானும் பெண்பாற் கைக்கிளைக்கு அமைந்தமையானும் கூறினாரென்பது. இத் தலைவிக்கு அவயவ பரிணாமமும், மனவுணர்ச்சியுமின்மையின் பூவை முதலாகக் கூறியவை உவமப் பொருளாதலின், உவமைக்கு அமையாப் பருவத்துக் கூறிய கருத்து யாதெனின் முத்தினாற் புனையும் சிறு தொடியையுடைய கைப்பூவை. இது கண்டோர் நகைப்ப வண்டலிழைக்கையும் கழங்கு முதலிய ஆடலும் நிகழ் தலின் பூவைக்குப் பிறரை நகுவித்தலே தொழிலாகக் கூறின வினையுமவத்திற்குப் பேதையெனவும், மனக்களிப்புக்குக் காரணமான முகில் முழங்கினும் நேர்நின்று ஆடாத தோகை யெனவே மன அறிவு உவமத்தினால் பேதையெனவும், முகை மலராத புண்டரீக மெனவே தனது நாயகனான இரவியைக் கண்டாலும் முகம் மலராமையின் காட்சியுவமைக்குப் பேதை யெனவும், வார்த்தையினது பாகுபாடு பாடிப் பயிலாத செவ்வி

மொழி கூறும் இளைய கிள்ளையெனவே ஓசை யுவமத்திற்குப் பேதையெனவும், சூடும்படி முறி தளிராத சூதமெனவே வேனிற் காலத்து இளமாங்கன்றும் தளிர்க்கும் தன் காலமறியாததால் பரிசவுவமைக்குப் பேதையெனவும், நிழலில் வஞ்சி பரிணாமம் நீட்டித்தலின் தழைத்தல் கூடாத 'வஞ்சியெனவே இடனறியாத மெய்யுவமத்திற்குப் பேதையெனவும், குளிர்ச்சி கூடாத திங்கட் குழவியெனவே உருவுவமைக்குப் பேதையெனவும், விளைந் திறக்காத தேறலெனவே பயனுவமைக்குப் பேதையெனவும், விளக்கமில்லாத கற்பகக் கொடியெனவே ஓரையிலே ஒளி மழுங்கத் துகளேற அறியாமையின் பண்புவமைக்குப் பேதை யெனவும், ஒரு பொருணுதலிக் கூறினமையின் பேதையென்பது இறுதி விளக்கம்.

கொத்துப் போலசைந்து வளர்ச்சியமையாது தலை சுருண்டு முடிக்குமளவில் சில கூடுவதும் சில கூடாததுமாய், எளிய பருவத்து இளைய பேதையெனக் கூட்டுக. பூவை முதலாகக் கூறிய பத்துப் பெயரும் வினை நிலையுரைத்தல்; வினை நிலை யுரைத்தல் - தன் தொழில் நிகழ்தல். இடமும் காலமும் மெய்யுவ மத்திற்கு ஏற்பத்தின் மேற்று.'

குலோத்துங்கன் தில்லையில் நவநிதி தூவி வழிபட்டான் என்று சொல்லும்போது கற்பகத்தருதானம் சுவேமாப்பிரதானம், விசுவசக்கரதானம், மகாதானம், சுரபிதானம் என ஐந்து தானங் களைக் குறிப்பிடுகின்றார். திருவடியைக் கூறும்போது ஸ்ரீபாதம் என்றே சொல்லுவார்; ஸ்ரீகிருஷ்ணன் என்பதும் இவர் கூற்று. 280ஆம் கண்ணியுரையில் அகத்துறைகளை விரித்துரைக்கிறார்: 'தலைவன் அருள் பெற்ற தலைவிக்கும் இன்பத்தால் ஆராமை மீதூரலின் உட்கோள், மெலிதல், மெலிவோடு வைகல், காண்டல் விரும்பல், பகல் முனிவுரைத்தல், இரவுநீடுபருவரல், கனவின் அரற்றல் என ஆசைக்கு அவதி நிகழ்தல்.'

சோர்ச்சி, இருட்டவாகு, மீளி - பேய்த்தலைப் பெருமங்கல முடையார்; கரைகட்டவாராதான் - ஈழத்துப் பிடாரி என்பன இவருடைய சொல்லாட்சிகளுள் சில.

எந்த உலாவுக்குமே பண்டையுரை எழுந்ததில்லை. இவ் வுலாவுக்கு மட்டும் இவ்வுரை எழுந்திருப்பது நூலாசிரியருக்கும், குலோத்துங்கனுக்கும், உரையாசிரியருக்குமே பெருமை தருவ தாகும். உரையின் காலம் பிறவகையால் தெரியாதவரை உத்தேசம் 16ஆம் நூற்றாண்டு என்று கருதுகிறோம்.

## கோயிற் புராண உரை

14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சிதம்பரத் தலத்துக்கு உமாபதி சிவாசாரியர் கோயிற்புராணம் என்ற பெயரில் ஒரு சிறு புராணம் செய்திருக்கிறார். அது பாயிரமுட்பட ஆறு சருக்கங்களும் 415 பாடல்களும் உடையது. அப்புராணத்துக்குப் பதினாறாம் நூற்றாண்டில் ஒரு பொழிப்புரை செய்யப்பட்டது. சேக்கிழார் செய்த பெரிய புராணத்துக்கோ உமாபதியார் செய்த பிற புராணங்களுக்கோ பண்டைக்காலத்தில் உரை எதுவும் எழுதப் பெறவில்லை. கோயிற் புராணமே (நம்பி திருவிளையாடலொன்றும் நீங்கலாக) முதலில் எழுந்த தலபுராணமாகும். சிதம்பரம் நடராசப்பெருமானிடத்து விளைந்த பக்தி முதிர்வு இப்புராணத்துக்கு உரை எழுதச் செய்தது போலும்.

இந்நூலின் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. இவர் சிவபக்தி மிக்கவர், சிறந்த சைவ சாத்திரப்பயிற்சி உடையவர். வடமொழிப் பயிற்சியும் நிரம்பியவர். சிவாகமப் பயிற்சியும் சிற்ப நூலறிவும் நன்கு பெற்றவர். மூலத்தை ஒட்டி மிகவும் விளக்கமாகப் பொழிப்புரை மட்டும் செய்துள்ளார். அபூர்வமாய் விளக்கங்களும் சில சொல்லுகிறார்: உரையில் இவர் தம்மைப் புலப்படுத்தும் குறிப்பெதுவும் தரவில்லை.

சம்பந்தர் தேவாரம், திருவாசகம், சிவஞான சித்தியார் என்ற திருமுறை சாத்திர நூல்களும் நேமிநாதம் என்ற இலக்கண நூலும் இவரால் மேற்கோளாய்த் தரப்பட்டுள்ளன.

மாட்டி என்றே எம்மை (பாயிரம் 7 உரை), சிதம்பர தீர்த்த வகை கூறுகின்ற பாம்போடை புலிவாவி நந்தன் குட்டம் (திரு விழாச் சருக்கம் 23) என்ற மேற்கோள்கள் இடம் விளங்கவில்லை. ஓரிடத்தில் வேறுபாடும் பல இடங்களில் வேறு உரையும் சொல்கிறார். பல இடங்களில் தொகை விரி தருகிறார். பெரும்பற்றப்புலியூர்ச் சொல்விளக்கம் சுவையுடையது:

> பெரும்பற்றப் புலியூர் என்றது ஆன்மாக்களுடைய உட்பற்றுப் புறப்பற்றாயிருக்கின்ற கரணங்கள் சூனியம் பிறந்தவிடத்திலும் ஞானப்பற்றாய் நிற்றலால் ஞானசபையாகிய புலியூரை அந்தப் பெரும்பற்றப் புலியூர் என்றார். பெரும்பற்று

என நிறுத்தி அ - என்கிற சட்டை இடையிட்டு ஒற்று வருவித்து, புலியூர் என வருமொழி செய்து 'பெரும் பற்றப் புலியூர்' என்றமை கண்டுகொள்க.

சிற்பரமாம் அம்பரமாம் என்பது சிதம்பரம்; இதற்கு ஆகமப்பிரமாணம் உண்டு. 'வையகமின்புற' என்ற பாடலுக்கு உரை சொல்லும் போது நின்ற திருவடி சிருட்டி, அமைத்த திருக்கரம் திதி, திருமுகமண்டலம் சங்காரம், திருமேனிஒளி திரோபாவம், எடுத்த திருவடி அனுக்கிரகம் என்று பொருத்தி விளக்குகிறார். தரிசு - சிலம்புக்குள் போடும் சிறுபரல்; போற்றி - இரட்சி; வியாமோகம் - ஆச்சரியத்தால் மோகித்தல்; கிட்டுதற்கு அரிய இயல்பான நாணம், கொளுத்தக் கொண்டு கொண்டது விடாத மடப்பம், பேதைமையால் அச்சம், பயிலாத பொருளில் அருவருப்பான பயிர்ப்பு; அருளிப்பாடியர் கணநாதர்; திரளுரு அண்ணல் சொக்கப்பனை - என்பன இவருடைய விளக்கங்களுட் சில. எல்லாத்தையும், குமாரத்தியர் என்று சொல்லுவார். புரை நெறி என்ற இடத்தில் லோகாயதன் புத்தன் சமணன் மீமாங்கிசன் மாயாவாதி பாஞ்சராத்திரி என்று அறுசமயத்தைக் குறிப்பிடுகிறார். இரணியவருமச் சருக்கத்தில் சிற்ப விசேடங்களை நன்கு தெரிந்து எழுதுகிறார்.

காண்டலாதி பேதங்கள், பரதநூலும் அந்த நூல் முற்றுணர்ந்தவர்களும் இன்மையின், விவரித்து எழுதாது விடப்பட்டன என்பர். உற்சவங்களுக்குரிய பதினாறு அங்கங்கள், சுவாமி எழுந்தருளும்போது முன்னால் செல்லத்தக்கவர் இன்னார், செல்லும் முறை இன்னது, பரிவாரங்கள் இன்னார் என்று அழகுபட எழுதுகிறார். ஸ்ரீபாதம் ஸ்ரீபாதசேவை என்பதே இவருக்கு விருப்பமான ஆட்சி.

**காலம்**

இவ்வுரை ஆசிரியரின் காலம் இன்னது தான் என்று சொல்லமுடியாததாயினும், சித்தியாரைக் குறிப்பிடுகின்றமையால் 14ஆம் நூற்றாண்டுக்குப்பின் என்பது தெளிவு. சாத்திர உரைகள் மிகுதியாய்த் தோன்றிய காலமே இவருடைய காலமென்று கருதுகிறோம். இந்த 16ஆம் நூற்றாண்டில் இறுதிப் பகுதியே இவருக்குரியது.

## அத்தியாயம் 4

# இலக்கணம்

## முன்னுரை

**நூல் வளர்ச்சி**

இலக்கண நூல்கள் நூற்றாண்டு தோறும் புதிய அமைப்பில் தோன்றிக் கொண்டும் வளர்ந்து கொண்டும் வருகின்ற நெறியில் இந்த நூற்றாண்டும் சிறப்பான இடம் பெறுகிறது. எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று மட்டும் சொல்லுகின்ற தொல் காப்பியத்திற்குப் பின் பல துறைகளில் தமிழ் இலக்கண நெறி விரிவடைந்து வந்திருக்கின்றது. எழுத்து சொல் என்ற இரண்டு பிரிவுகளும், தொல்காப்பியத்தின்பின், வீரசோழியம் (ஐந்து பிரிவுகளுடையது), நேமிநாதம், நன்னூல் ஆகிய சிறப்பான இலக்கண நூல்கள் மூலம் பெரிதும் வளர்ந்தன. அடுத்ததாகிய பொருளதிகாரம் பல துறையாகப் பிரிந்தது. அதில் அமைந்த களவியற் பகுதி மட்டும் 8ஆம் நூற்றாண்டில் இறையனாரால் இறையனார் அகப்பொருள் என்ற பெயரில் செய்யப்பெற்றது. உடன் காலத்திலேயே அதற்கு உரையும் உரைக்கப் பெற்றது. இந்த மூலமும் உரையும் இரண்டு நூற்றாண்டுகள் கழித்து 10ஆம் நூற்றாண்டில் நீலகண்டர் என்பவரால் ஏட்டில் எழுதி வைக்கப் பட்டன. தொல்காப்பியத்தின் புறப்பொருட் பகுதி 8ஆம் நூற் றாண்டில் பன்னிரு புலவரால் பன்னிருபடலம் என்று பெய ரமைத்துத் தனி நூலாக விரித்தும் வேறுபடுத்தியும் உரைக்கப் பட்டது என்று அறிகிறோம். அந்த நூல் இப்போது இல்லை. அடுத்த நூற்றாண்டில் ஐயனாரிதனார் இதன் விளக்கமாகப் புறப்பொருள் வெண்பாமாலை எழுதினார். பின்னர் உரையும் அதற்கு ஏற்பட்டது. 11ஆம் நூற்றாண்டில் தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் செய்யுளியல் என்ற பகுதியில் விரிவாக

அமிதசாகரர் என்ற ஆசிரியர் யாப்பருங்கலம் யாப்பருங்கலக் காரிகை என்ற இரு நூல்களைச் செய்தார்.

8 - 9 நூற்றாண்டுகளில் தமிழ் இலக்கண மரபில் ஒரு பெருங்கிளர்ச்சியும் புதுநூலாக்கமும் இடம் பெற்றிருக்கின்றன. இவற்றின் விளக்கமும் இவை பற்றிய ஒரு தெளிவுரையும் இக் காலங்களுக்குரிய எமது இலக்கிய வரலாற்று நூல்களில் பாட்டியல் என்ற அத்தியாயத்தில் காணலாம். சுருக்கமாக இங்கு சில கூறி மேற்செல்வோம். பொது இலக்கண நெறியில் இக்காலப் பகுதியில் தொல்காப்பிய நெறி, இந்திரகாளிய நெறி, அவிநய நெறி என்ற மூன்று நெறிகள் பிறந்தன. (இம் மூன்றினுள் தொல் காப்பிய நெறி ஒன்று மட்டும் நிலவ, மற்ற இரண்டும் எப்படியோ அடியோடு மறைந்து போயின. காரணம் இன்று சொல்ல முடியவில்லை.) புது இலக்கண முயற்சிகளைப் பின்வரும் தலைப்புக்களில் காட்டலாம்: 1 - 2 எழுத்தும் சொல்லும்; 3: பொருள் - அகமும் புறமும்; 4. யாப்பு; 5. பாட்டியல்; 6. அணியியல். இவற்றுடன் சேர்த்துச் சொல்லத்தக்கது ஏழாவதாகிய நிகண்டு என்பதாகும். இவற்றுள் பாட்டியலை விலக்கி ஏனைய ஐந்தையும் ஐந்திலக்கணம் என்று கொண்டு 11ஆம் நூற்றாண்டில் புத்த மித்திரனார் வீரசோழியம் என்ற பெயரால் புதிய இலக்கணம் செய்தார். பாட்டியல் யாப்பினுள் அடங்கும். பிந்தின காலத் திலும் இவ்விலக்கண நூல்கள் வளர்ந்து வந்தன. அவ்வளர்ச்சி யிலும் நாம் கருதும் 16ஆம் நூற்றாண்டுக்குரிய வளர்ச்சியை மட்டும் இங்குக் கருதுவோம்.

இவ் வளர்ச்சியை மூன்று பிரிவினுள் அடக்கலாம் 1. நிகண்டு நூல்கள், 2. பாட்டியல் நூல்கள், 3. திருக்குருகைப்பெருமாள் கவிராயர் செய்த இலக்கண நூல்கள்.

### 1. நிகண்டு

சொற்பொருளை வரையறை செய்து உணர்த்தும் நூல் நிகண்டு எனப்படும். 9, 10 நூற்றாண்டுகளில் முறையே தோன்றி யவை ஆதி நிகண்டுகளான திவாகரமும், பிங்கலந்தையும். பின்னர் உரிச்சொல் நிகண்டு கயாதர நிகண்டு என்பன எழுந்தன; காலம் முறையே 14, 15 நூற்றாண்டுகள். 16ஆம் நூற்றாண்டில் சூடாமணி நிகண்டும் அகராதி நிகண்டும் தோன்றின. சூடாமணி நிகண் டானது அது தோன்றிய காலத்திலிருந்து பிற நிகண்டுகளை யெல்லாம் ஒதுக்கி, கற்போரிடத்தில் சிறந்த ஆட்சி பெற்று

விட்டது. அகராதி நிகண்டு என்பது அகராதி என்ற தன் பெயரமைப்பினால் இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெறுகிறது.

## 2. பாட்டியல்

தொடர் நிலைச் செய்யுளுக்கு இலக்கணம் கூறும் பகுதி பாட்டியல் என்றும் அது 8ஆம் நூற்றாண்டிலேயே உருப்பெற்றது என்றும் முன்னமே குறிப்பிட்டோம். இறந்துபோன பல பாட்டியல் நூல்களில் கிடைத்த பகுதியெல்லாம் ஒன்று திரட்டிப் பன்னிருபாட்டியல் என்ற ஒரு தொகுப்பு நூல் 10ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டது. அதன் பின்னும் காலந்தோறும் பல பாட்டியல் நூல்கள் எழுந்தன. வச்சணந்தி மாலை, நவநீதப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல் என்பன குறிப்பிடத்தக்கவை. இவற்றின் பின் 16ஆம் நூற்றாண்டில் தோன்றியவை பிரபந்த மரபியல், சிதம்பரப் பாட்டியல் என்ற இரண்டு. இவற்றோடு பாப்பாவினம் என்பதும் இங்கு சேர்த்துச் சொல்லத்தக்கது. இவையன்றி உவமானம் கூறுகின்ற இரத்தினச்சுருக்கம் என்ற நூலையும் உடன் சேர்த்துச் சொல்வது பொருந்தும்.

## 3. திருக்குருகைப் பெருமாள் கவிராயர்

நம்மாழ்வார் அவதாரத்தலமாகிய திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரில் ஒரு பெரும் புலவர் வாழ்ந்து பல இலக்கிய இலக்கண நூல்கள் செய்தார். அவற்றுள் திருக்குருகைமான்மியம் என்ற புராணம் 16ஆம் நூற்றாண்டு வரலாற்று முதல்பாகம் ஐந்தாம் அத்தியாயத்தில் விரிவாக ஆராயப் பெற்றது. அவர் நம்மாழ்வார் பெயராலே எல்லா இலக்கணங்களும் வழங்க வேண்டும் என்ற சிறந்த பக்தியுணர்வோடு பல இலக்கண நூல்கள் செய்தார். அவையாவன: மாறனகப்பொருள், மாறனலங்காரம், பாப்பாவினம். மாறனகப்பொருள் - அகப்பொருள் இலக்கணம்; மாறனலங்காரம் - அணியிலக்கண நூல்; வடமொழித் தண்டி செய்த காவியாதர்சத்தைத் தழுவிச் செய்த வீரசோழிய அணியதிகாரத்துக்கும், தமிழ்த் தண்டியலங்காரத்துக்கும் பின், இவ்விரண்டினும் விரிவாய் செய்யப்பெற்ற பெருநூல் மாறன் அலங்காரம் என்பது. பாப்பாவினம் என்பது ஒரு பாட்டியல் நூல். இவ்வாசிரியர் செய்த நூல்களின் விரிவு கருதி இவற்றை இங்கு தனியே குறிப்பிடுகிறோம்.

இங்கு கூறிய இலக்கண நூல்களை இனி இந்த அத்தியாயத்துள் ஆராய்கிறோம்.

# 1. நிகண்டு

## மண்டல புருடர் - சூடாமணி நிகண்டு

சூடாமணி நிகண்டு என்ற ஒரு நிகண்டு நூல் செய்த ஆசிரியர் மண்டல புருடர். இந் நிகண்டு இந்த 20ஆம் நூற்றாண்டின் தொடக்க காலம் வரையில் அதாவது நிகண்டு கற்கும் பழக்கம் இருந்த காலம் முடிய - எல்லோராலும் இளம் பருவத்தில் விரும்பிக் கற்கப்பெற்ற நூலாகும். இவர் சமயத்தால் சைனர்.

இதுபற்றி ஒரு பொதுவான கருத்தைச் சொல்லி மேற் செல்லலாம். ஏறக்குறைய 15 நூற்றாண்டுகளாக நூற்றாண்டு தோறும் சைனப்புலவர் தமிழில் ஏதேனும் நூல் செய்து வந்திருக் கிறார்கள் - நன்கு தெரிந்த காப்பியமோ, நீதி நூலோ, உரையோ எழுந்திருக்கிறது. உதாரணம் 6ஆம் நூற்றாண்டு - நாலடியார்; 7ஆம் நூற்றாண்டு - பழமொழி; 8ஆம் நூற்றாண்டு - பெருங் கதை; 9ஆம் நூற் றாண்டு - சிந்தாமணி; 10ஆம் நூற்றாண்டு - சூடாமணி, நீலகேசி: 11ஆம் நூற்றாண்டு - யாப்பருங்கலம், இளம்பூரணர் தொல் காப்பிய உரை. 12ஆம் நூற்றாண்டு - நேமிநாதம், வச்சணந்தி மாலை; 13ஆம் நூற்றாண்டு - நன்னூல் நம்பியகப்பொருள், அறநெறிச்சாரம், யசோதர காவியம். 14ஆம் நூற்றாண்டு - திருநூற்றந்தாதி; 15ஆம் நூற்றாண்டு - திருக்கலம்பகம். இந்த நெறியில் 16ஆம் நூற்றாண்டுக்கு உரிய தாகக் குறிப்பிடத்தக்கதாய், சைன ஆசிரியர் செய்துள்ள நூல் சூடாமணி நிகண்டு ஒன்றே. இதன் பிறகு பின்வந்த நூற்றாண்டு களில் குறிப்பிடத்தக்க சைனநூல்கள் அப்பாண்டை நாதர் உலா போன்றன மிகவும் அருமை.

### ஆசிரியர்

சூடாமணி நிகண்டு செய்தவர் பெயர் மண்டல புருடர் என்று வழங்கி வருகிறது. இப்பெயர் முற்காலத்தில் மக்கட்கு இடப்பட்டு வழங்கியதென்பதைச் சாசனங்களால் அறியலாம். எனினும், நிகண்டில் இவர் தம்மைக் குறிப்பிடும் இடங்கள் எல்லாவற்றிலும் தம்மை மண்டலவன் என்றே குறிப்பிடு கிறார்; 13 இடங்கள் இவ்வாறு வருகின்றன; இப்பாடல் களைப் பின்னே காணலாம்; இருந்தாலும் மண்டலபுருடர்

*என்ற பெயரே வழங்குகின்றது. இவர் தொண்டை நாட்டின ரென்றும் தொண்டை மண்டல சதகம்* கூறும்:*

பண்டை நிகண்டு திவாகரம் பிங்கலம் பன்னுரிச்சொல்
எண்டிசையின் சொல் வடமொழிசெய்யுளெல் லாமுணர்ந்தே
தண்டமிழ் கொண்டு நிகண்டுசூ டாமணி தானுரைத்த
மண்டல வன்குடி கொண்டது நீள்தொண்டை மண்டலமே.

*ஊர் வீரபுரம் எனப்படும் வீரை; இப்பெயரைப் பின் வரும் பாடல்கள் பலவற்றிலும் காணலாம். இவ்வீரை வீரபுரம் எனப்படும். பெருமண்டூர் என்பது அச்சதகத்தில் காணும் குறிப்பு. அன்றியும் அதன் பதிப்பாளர் பதிகத்தொடர் என்று பின்வரும் வரிகளை எடுத்துத் தருகிறார்.*

நாலான காதி வினைபோ யடங்க நளினத்து வந்த பெருமான்
மூலா கமங்கள் மொழியும் புராணம் மொழிபுங்கவன் றனியாம்
............... வீரபுரமே.❖

*மண்டலவருடைய ஞானாசாரியர் திருநறுங்குன்றத்தில்✞ சைன சமயத் தலைவராய் விளங்கித் தமிழ்மொழியிலும் சோதிட நூல்களிலும் வல்லவராயிருந்த குணபத்திராசாரியர் என்பவர்; 'சோதிட நீதிவல்லோன்' என்று இவர் அவரைக் குறிப்பிடுவார் (பாயிரம் 4):*

சொல்லொடு பொருளுணர்ந்தோன் சோதிட நீதி வல்லோன்
நல்லறி வாளன் எங்கள் நறுங்குன்றை ஞான மூர்த்தி
பல்லுயிர்க் கொருதா யாகும் பரமன்மா முனிவன் மெய்ந்நூல்
வல்லுநர் வல்லார்க் கெல்லாம் வரையறத் தரையில் வந்து.

---

* *தொண்டை மண்டல சதகம், சி.கு. நாராயணசாமி முதலியார் பதிப்பு 1924, பக்கம் 209 - 10.*

❖ *பெருமான் - அருகன்; புராணம் - திருப்புகழ்ப் புராணம்; பின்னால் வரும் விளக்கம் காண்க. புங்கவன் - மண்டல புருடர். இந்த வரிகள் மட்டும் முதலியாரால் தரப்பட்டுள்ளன.*

✞ *திருநறுங்குன்றம் திருநறுங் கொண்டை எனவும் வழங்கும்: இவ்வூர் பற்றிய தோத்திரப் பாடல்கள் பல ஜினதாசல் பத்தும் பதிகத் தோத்திரத்திரட்டு என்ற 280 பாடல் கொண்ட தொகுப்பில் காணப்படும். இது திருமுனைப்பாடி நாட்டில் உள்ள ஊர். இங்கு நாற்பத்தெண்ணாயிரவர் பள்ளி என ஒரு சைன ஆசாரியர் பீடம் இருந்தது.*

*அன்றியும் அவ்வாசிரியர் முன்னாள் தமிழை வளர்த்த பாண்டியனைப் போலப் புலவர்களால் புகழ்மாலை சூட்டிப் போற்றப்பெற்றவர். அவருடைய ஆணையின்படி இவர் முன்னூல்களை ஆய்ந்து இந்நிகண்டு செய்தார் (பாயிரம் 5 - 6):*

பருதியொன்று உதயம் செய்து பங்கய மனேக கோடி
முருகெழ மலர்வித் தென்ன முகமுட னகம லர்த்தி
மருவு முத்தமிழை முன்னாள் வளர்த்தபாண் டியனே போலக்
கருதிய வெல்லாந் தந்து கவிமணி மாலை சூடி.

செகமெனும் பளிங்கு மாடத் திகிரி வேந்தரையே போலப்
புகழெனும் பஞ்சி சேர்த்திப் பொலிவுறு பேரத் தாணி
மகிழ்குண பத்ர னெங்கள் வழித்தெய்வம் போல்வான் சொல்ல
இகபர மிரண்டும் வேண்டி இயலிசை வல்லோர் கேட்ப.

*மேலும் குணபத்திராசாரியரை மண்டல புருடர் தொகுதி தோறும் இறுதிப் பாடலில் பெரிதும் போற்றியுரைக்கிறார். அப்பன்னிரு பாடற் பகுதிகளையும் கீழே காணலாம்.*

*செய்யுள் நூற்றொன்றி சைத்தான் - புனை குணபத்திரன் தாள் போற்று மண்டலவன் தானே 1; குருநறுங் குன்றை வேந்தன் குணபத்திரன் தந்த நோன்மை - தருநெறி தழைக்கும் வீரை தழைத்த மண்டலவன் தானே 2; வருமுறையுரைத்தான் வீரை மன்னன் மண்டலவன் தானே 3;*

பரப்பு நீர் உலகு தன்னிற் பாவலர் கிளைஞ ருற்ற
நிரப்படுங் குணபத் திரன்தாள் நித்தலும் போற்றி செய்து
விருப்புறு விரத சீலன் வீரைமண் டலவன் செய்தான்
மரப்பெயர்க் கறுபத் தெட்டு மன்னிய கவிதை தானே. 4

*மன்னுசீர்க் குணபத்திரன் தாள் வணங்கு மண்டலவன் தானே 5;*

மகரகே தனனை வென்ற வாமற்கே தொழும்பு செய்வோன்
இகலிலாக் குணபத்தி ரன்தன் இருசர ணிதயம் வைத்தோன்
மிகுபுகழ் புனையா நின்ற வீரைமண் டலவன் செய்தான்
பகர்தரு முப்பத் தைந்து பல்பொருட் பெயர்க்குச் செய்யுள். 6

*குணபத்திரன் தாள் - நித்தலும் வணங்கி நீதி நிறுத்த மண்டலவன் தானே 7; தேங்கிய புகழான் குன்றைக் குணபத்திரன்றிருந்தாள் போற்றி, வீங்குநீர்ப் பழனஞ் சூழ்ந்த வீரை மண்டலவன் செய் தான் 8; மைம்முகிற் குணபத்திரன் தாள் வணங்கு மண்டலவன் தானே 9;*

இறந்தது நிகழ்வு மற்றை யெதிர்வுமாம் புராணஞ் செய்தோன்
அறந்தரு குணப் பதிரன்தாள் அரனெனச் சரணமா னோன்
மறந்தலைப் படாத வீரை மன்னன் மண்டலவன் செய்தான்
சிறந்திடு மொலிபற் றும்பேர்ச் செய்யுளைம் பத்தி ரண்டே. 10

சொன்னவன் குணபத்திரன் தாள் சூடுமண்டலவன் தானே - 11; திருக்கிளர் குணபத்திரன் தாள் சென்னியிற் சூடிக்கொண்டோன், மருக்கிளர் பொழில்சூழ் வீரை மன்னன் மண்டலவன் தானே - 12.

இக்குறிப்புக்கள் ஆசிரியருக்குத் தம் ஞானாசிரியரிடத்தேயுள்ள ஈடுபாட்டின் மிகுதியை உணர்த்துவதோடு, அவருடைய ஊர் நறுங்குன்றை என்பதையும் மண்டலவர் ஊர் வீரை என்பதையும் தெரிவிக்கின்றன.

இவர் நிகண்டு செய்வதற்கு முன்னே அருகனது புகழைக் கூறுகின்ற திருப்புகழ்ப் புராணம் என ஒரு நூல் செய்ததாக நிகண்டின் பாயிரப் பாடல்கள் கூறும். இவர் சூடாமணி நிகண்டு செய்தபின், முன்னிருந்த திவாகரம் பிங்கலந்தை இரண்டும் பயில்வோர் அருகி விட்டனர். மொழியாராய்ச்சி செய்வோருக்கு மட்டுமே அந்நூல்கள் இன்று பயன்படுகின்றன.

சூடாமணி உள்ளமுடையான் என்ற ஒரு சோதிட நூல் மண்டல புருடர் செய்ததாகத் தவறாக அச்சிட்டு வழங்குகிறது. ஆனால் அந்த நூலின் இறுதிப் பாடலே அது திருக்கோட்டியூர் நம்பி என்பவரால் செய்யப்பட்டதென்று சொல்கிறது. (எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு பார்க்க.)

நூல்

இவர் செய்த நூலுக்குச் சூடாமணி நிகண்டு என்று பெயர் வைத்தார். இவர் காலத்துக்கு முன் நிகண்டுப் பொருள் கூறும் நூல்கள் யாவும் உரிச்சொல் என்றே பெயர் பெற்றிருந்தன. திவாகரம், பிங்கலம், உரிச்சொல், கயாதரம் ஆகிய இவருக்கு முன்தோன்றிய நான்கு நூல்களும் உரிச்சொல் என்றே வழங்கி வந்தன. இவரே முதன் முதல் நிகண்டு என்ற சொல்லைத் தமிழில் ஆட்சிக்குக் கொண்டு வந்தார். இவருக்குப் பின்வந்து இப்பொருள் கூறும் எல்லா நூல்களும் நிகண்டு என்றே பெயர் பெற்றுள்ளன.

*இவர் தம் நூலுக்கு நிகண்டு சூடாமணி என்றே பெயரிட்டார் என்று சொல்வர்; இருக்கலாம். இப்படிச் சொன்னாலும் மாற்றிச் சொன்னாலும் ஒன்றுதான். பாயிரத்தின் முதற் பாடல் பின்வருவது:*

பொன்னும்நன் மணியும் முத்தும் புனைந்தமுக் குடைநி ழற்ற
மின்னுபூம் பிண்டி நீழல் வீற்றிருந் தவனை வாழ்த்தி
மன்னிய நிகண்டு சூடா மணியென வொன்று சொல்வன்
இந்நிலந் தன்னின் மிக்கோர் யாவரு மினிது கேண்மின்.

*இங்கு 'மன்னிய நிகண்டு சூடாமணி என ஒன்று' என்று சொன்னமையால் நூற்பெயர் நிகண்டு சூடாமணியாகிவிடாது. மன்னிய நிகண்டாகிய சூடாமணி என்றே பொருளாக்க முடியும். சூடாமணி என்பது முடிமணி; தமிழில் பெரிதும் ஆட்சியிலுள்ள ஒரு தொடர்; சூளாமணி என்ற காப்பியப் பெயரும், கம்பராமாயணத்தில் வரும் சூளாமணிப் படலமும் இங்கு நினைவு வரலாம். சூளாமணியே சூடாமணி. இவர் தம் நூலுக்கு இச் சிறப்பான பெயரைச் சூட்டினார் என்று தெரிகிறது.*

*அசோகின் நீழலடிகள் முதனூல் சொல்ல, கணதரர் வழி நூல் செய்தார்; பிறர் சார்பு நூல் செய்தனர். இவை மூன்றும் மூலம். இவற்றின் பின் பல நூல்கள் பிறந்தன. திவாகரரும் பிங்கலரும் நூற்பாவில் நூல் செய்தனர். இவையிரண்டும் கற்க எளிதல என்று இவ்வாசிரியர் ஆராய்ந்து இந்நிகண்டைச் செய்தார் (பாயிரப் பாடல்கள் 2 - 3):*

பூமலி அசோகி னீழற் பொலிந்த வெம் மடிகள் முன்னாள்
ஏமமா முதனூல் சொல்லக் கணதர ரியன்ற பாவாற்
றாமொரு வழிநூல் சொல்லச் சார்புநூல் பிறருஞ் சொல்லத்
தோமிலா மூன்று நூலுந் துவமென வுதித்த வன்றே.

அங்கது போய பின்றை யலகினூல் பிறந்த மற்றுஞ்
செங்கதிர் வரத்திற் றோன்றுந் திவாகரர் சிறப்பின் மிக்க
பிங்கல ருரைநூற் பாவிற் பேணினர் செய்தார் சேர
இங்கிவை யிரண்டுங் கற்க எளிதல வென்று சூழ்ந்து.

*பின்னர் குணபத்திரசாரியார் ஆணையின்படி தாம் இந்த நிகண்டைப் பாடினார் (பாயிரம் 4 - 8).*

### பாடல் தொகை

நிகண்டுசூ டாமணியின் நின்ற முறையே
அகன்ற விருத்தங்கள் ஆய்ந்து – புகன்ற வெலாம்
ஈரைஞ்நூற் றீரைம்பா னீரைந்தும் மூவைந்தும்
சோர்வின்றி ஆய்ந்த தொகை

என்ற பழம் பாடல் நிகண்டின் பாடல்தொகை 1125 என்று குறிப்பிடும். அச்சிட்டுள்ள நிகண்டுப் பதிப்புக்களில் 1195 பாடல்கள் உள்ளன. 70 பாட்டுக்கள் மிகைப் பாட்டுக்கள். பிற்காலத்தில் இடையே செருகப்பட்டனவாகலாம். 'இம்மிகைப் பாடல்கள் பெரும்பாலும் 11ஆம் நிகண்டில் தான் சேர்க்கப்படலாயின என்பது, சென்னை அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையுள்ள சூடாமணி நிகண்டுப் பிரதிகளைச் சோதித்ததினின்றும் வெளிப்படுகின்றது' என்பது ராகவையங்கார் குறிப்பு. அச்சிட்ட கதிரைவேற்பிள்ளை பதிப்பிற்கிணங்க வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தில் 1935இல் அச்சிட்ட பதிப்பில் 1197 விருத்தங்கள் உள்ளன.

ஒரு காலத்தில் ஏடெழுதிய தாண்டவன் என்பவர் தம் காலத்தில் 1134 பாடல்கள் இருந்தன என்பதை ஒரு பாட்டால் உணர்த்துகிறார்:

உலகிலா யிரத்து நூறு முப்பதின் னாலு மாக
விலகிடாப் பொருளையெல்லாம் வீரைமண்டலவன் செய்தான்
அலகிலாச் சமய பேதம் ஆய்ந்துள தவங்க ளெல்லாம்
தலையில் வைதவமும் தோற்றித் தாண்டவன் எழுதி னானே.

1125 என்று நிகண்டே சொல்லிய தொகை கொஞ்சங் கொஞ்சமாய்க் காலந்தோறும் பெருகிற்று என்பதை இது காட்டும்.

### திருப்புகழ்ப் புராணம்

முன்னமே 'திருந்திய கமலவூர்தி திருப்புகழ்ப் புராணம் செய்தோன்' என்ற பாடல் வரியைக் குறிப்பிட்டோம். இதன் பொருள் மண்டலபுருடர் அருகனுடைய வழியில் வந்த தீர்த்தங்கரர் ஒருவருடைய புகழைப் பாடிய புராணம் என்பதாகும். சைன சம்பிரதாயத்தில் 'திரு' என்பது சைனத்தையே குறிக்கும். இந் நிகண்டுக்கு முன் வந்த திருநூற்றந்தாதி திருக்கலம்பகம் முதலான பெயர்களைக் காண்க. சைன தருமத்தை இவ்வாசிரியர் செயற்கை வடிவப் பகுதியில் சொல்லும்போது "திருவறம் செய்யார் ஏற்கும் தீயமட் கலத்தின் நாமம்" (66) என்று குறிப்

பிடுகிறார். இங்குத் திருவறம் என்பது காண்க. பத்தாம் துதி இறுதியில் வருகின்ற 'இறந்ததும் நிகழ்வும் மற்றை எதிர்வுமாம் புராணம் செய்தோன்' என்ற பாடலை முன்னர்க் குறிப்பிட்டோம். இது நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் குறிக்கின்ற புராணத்தை இவர் செய்தார் என்பதைக் குறிப்பிடுகின்றது. இந்த நூல் இன்று இல்லை. ஸ்ரீபுராணம் இவர் செய்திருக்கக் கூடும் என்று ஐயங்காார் அவர்கள் குறிப்பிட்டிருக்கின்றார். அது பொருந்தும் என்று தோன்றவில்லை. ஸ்ரீ புராணம் மணிப் பிரவாளத்தில் உரை நடையில் அமைந்த நூல். தமிழில் மிகவும் வல்லவரான மண்டல புருடர் ஸ்ரீ புராணம் செய்தார் என்றார் அதைச் செய்யுளாகவே செய்திருப்பார். இவர் போய் மணிப்பிர வாளத்தில் எழுதப் போவதில்லை. மேலும் இவருக்கு வடமொழி அறிவு குறைவு. இதை நிகண்டில் காணலாம். வடமொழியில் சரகம் என்பது ஆடு. சரகம் என்பதை இவர் சாகம் என்று பாடி அதை எதுகையிலும் வைத்தார்; ஆகவே தமிழில் சாகம் என்பதே இவர் கருத்து என்பது தெளிவு. ககர எதுகையில் "சாகஞ் சாகினி வெள்ளாடு" என்ற நான்காம் பாடலைக் காண்க. வட மொழிப் புலமை மிக்க ஸ்ரீ புராணக்காரரும் தமிழில் மட்டுமே புலமை உடைய மண்டல புருடரும் ஒருவராக முடியாது. ஆதலின் திருப்புகழ்ப் புராணம் வேறு நூல் என்றே கருத வேண்டும்.

**காலம்**

தமிழ் இலக்கியத்தில் பல நூல்களில் நூல் செய்த காலம் குறிப்பிடப்படாவிட்டாலும் கூட, நூலகத்தே வரும் குறிப்புக் களால் காலம் ஐயத்துக்கிடமின்றி வரையறுக்க முடிகிறது. மண்டலபுருடர் காலமும் அவ்வாறே தெரியவருகிறது. தம் ஞானாசிரியரையும் மூல நூல்களையும் இவர் குறிப்பிட்ட போதிலும், காலத்தைக் குறிப்பிடவில்லை. எனினும், இடையில் இவர் கிருஷ்ணதேவராயரைக் குறிப்பிடுவதால் காலம் திட்ட மாய்த் தெரிகிறது. வரையாது கொடுத்தலைக் கொடை மடம் என்று கூறுவது ஓர் இலக்கிய மரபு. கொடை மடத்துக்கு ஓர் எடுத்துக்காட்டைக் கூறி இவர் விளக்குமுகமாக, தமக்கு ஆதரவு தந்த வள்ளலின் கொடைத் திறத்தைப் புகழ்கிறார்: (9. செயல் பற்றிய பெயர்த் தொகுதி: விருத்தம் 10):

படைமயக் குற்ற போதும் படைமட மொன்றி லாதான்
மடைசெறி கடகத் தோளான் மதிக்குடை மன்னர் மன்னன்
கெடிமன்னர் வணங்குந் தாளான் கிருட்டின ராயன்கைபோல்
கொடைமடம் என்று சொல்ப வரையாது கொடுத்த லாமே.

இங்கு குறிப்பிடப்பட்ட கிருட்டினராயன், விசயநகரத்தில் மிகவும் பிரசித்தமாய் ஆட்சிபுரிந்த கிருஷ்ணதேவராயர்; காலம் 1509 - 1530. இவ்வரசர் தெலுங்கராய் இருந்த போதிலுங்கூட, தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் ஆதரித்திருக்கிறார்.* தமிழ்நாடு முழுமையும் இவர் ஆட்சி பரவியிருந்தது. சோழ பாண்டியர் ஒடுங்கி விட்டனர். சோழர் எங்குமே இல்லை. பாண்டியர் தென்காசிப் பகுதியில் ஒளிந்திருந்தனர். ராயருடைய பிரதிநிதிகள் மதுரையிலும் இருந்து நிர்வாகம் நடத்தி வந்தனர் என்பது வரலாறு. இவரே தெலுங்கில் ஆமுக்த மால்யதா என்ற காவியம் புனைந்திருக்கிறார். 'கெடி மன்னர் வணங்கும் தாளான்' என்று இவரை மண்டல புருடர் குறிப்பிடுகிறார்.❖ கெடி மன்னர் என்பதன் பொருள் அதிகாரம், வலிமை என்பதாகும். கெடிமன்னரு என்ற இதன் தெலுங்கு வடிவத்தை ராயரே தம் நூலில் பலமுறை ஆண்டுள்ளாராம். எனவே, மண்டல புருடர் காலம் இதே காலம். ஆகவே, 16ஆம் நூற்றாண்டின் தொடக்க காலம் என்பது தெளிவு.

இந்த ராயர் ஆட்சிக் காலத்தில் குணபத்திராசாரியர் என்ற பெயரையுடைய சைன அர்ச்சகரொருவர் இருந்தார் என்று தெரிகிறது. 'யதிதர்மம் சிராவகதர்மம்' என்ற சைன வசனநூல் இதைத் தெரிவிக்கிறது.✞ அந்நூலில் 'பண்டிதர் வயணம்' என்ற தலைப்பில், 'ராயர் சந்ததிகளில் விஷ்ணுதேவராயர் அதிகாரத்தில் குணபத்திராசாரியர் நாளையில்' எனவரும் தொடரும், இக் குணபத்திரர் சித்தாமூரினரென்ற செய்தியும், அக்காலத்தில் நிகழ்ந்த சில மாறுபாடுகளை நீக்கி மதத்தைக் காப்பதற்காகச் சில பண்டிதர்களையும் நியமித்தார் என்ற செய்தியும் காணப் படுகின்றனவாம். இதனால் குணபத்திரர் சித்தாமூர் மடத்தின் தலைவராக விளங்கினார் என்று தெரியலாம். விஷ்ணு தேவராயர் என்று இவர் குறிப்பிடுவது கிருஷ்ணதேவராயரையே ஆகும்.

---

* இந்நூலில் பின்வரும் பிறவகை இலக்கியம் என்ற அத்தியாயம் பார்க்க.

❖ இதுவும் பின்வரும் செய்திகளுட் பலவும் மு. இராகவையங்கார் 1913இல் எழுதிய குறிப்புக்கள். சங்க காலத்தில் தமிழ் ஆராய்ச்சி பெருகாமையாலும் வரலாறுகள் தெளிவு பெறாமையாலும் பல பொருள்களை அவர் முயன்று நிறுவ வேண்டிய நிலைமை இருந்தது. அச்செய்திகள் சுவையுடைய செய்திகள் ஆதலால், அவற்றைச் சுருக்கி முன்னரும் பின்னரும் தருகிறோம்.

✞ இந்நூல் அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்தில் உள்ளது; தக்க புலவரால் செய்யப் பெற்றதன்று என்பது அவர் குறிப்பு.

ஓர் ஆசிரியர் குணபத்திரசாரியர், வடமொழியில் உத்தர மகாபுராணத்தை எழுதியவரும் இரட்ட அரசரான மூன்றாம் கன்னர தேவரின் காலத்தவருமான குண பத்திராசாரியரே என்றும், அவர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு ஆதலால் மண்டல புருடரின் காலமும் அதுவே என்றும் எழுதினார். இது பிழை என்பது கிருஷ்ணதேவராயரைப் பற்றிய குறிப்பே நன்குணர்த்தும். மேலும் இந்தக் கருத்தை எடுத்து ஆராய்ந்து சூடாமணி நிகண்டு மிகவும் பழைய காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டுக்கு உரிய தன்று என்று மு. இராகவையங்கார் நூலினகத்தே காணப்படும் குறிப்புக்களைக் கொண்டு ஆராய்ந்து நன்கு நிறுவியிருக்கிறார். மண்டல புருடர் காலத்தில் சைனப் பூசல் இல்லை. ஆகவே இவர் வைதிக சமயங்களை நன்கு மதித்து நடுநிலையாக நின்றே குறிப்பிடுகிறார். இவருக்குச் சாளுக்கியரைப் பற்றிய நினைவே இல்லை. காரணம் இவர் காலத்தில் சாளுக்கியர் ஆட்சி வீழ்ந்து பல நூற்றாண்டுகள் ஆயின. ஆதலால் இவர், திவாகரத்தில் சாளுக்கியர் கொடியைப் பற்றி உள்ள குறிப்பைத் தவறாகப் படித்துப் பிழையாக எழுதிவிட்டார். 'கேழல் வேள்புல அரசர் கொடியே' என்பது திவாகரச் சூத்திரம். சாளுக்கியர் பன்றிக் கொடியை உடையவர்கள். இதை மண்டல புருடர் 'கேழல் வேழம் புலவர் கொடியே' என்று தவறாகப் படித்தார் போலும். அதன் பயனாக, 'கேழல் வேழப் பதாகையும் புலவருக்கே' என்று பாடிவிட்டார். இது மிகவும் பிழைபட்ட கூற்று. பன்றியும் யானையும் புலவருக்குக் கொடிகள் என்று ஒரு காலத்திலும் சொல்லப்பட்டதில்லை. அப்படியே சாளுக்கர் வேந்தன் என்று பிங்கல முனிவர் கூறுகின்ற இடத்தில் இவர் அப்பெயரை மட்டும் விட்டுப் பிற பொருள்களைக் கூறுகிறார்.

காரிகை என்ற சொல்லுக்கு அழகு, பெண், கட்டளைக் கலித்துறை என்ற மூன்று பொருள்களைத் திவாகரரும், பிங்கலரும் கூற, இவர் தம் காலத்துக்கு முன்னே எழுந்திருந்த யாப்பருங்கலக் காரிகை என்ற நூலை மனத்தில் இருத்தி, ஒரு நூலும் என்று சேர்த்துச் சொல்கிறார் (காரிகையின் காலம் 11ஆம் நூற்றாண்டு.)

சோமன் என்ற சொல்லுக்குச் சந்திரன், அஷ்ட வசுக்களில் ஒருவன் என்று முந்தையோர் பொருள் கூறினர். இவர் ஒரு வள்ளல் என்று சேர்த்துச் சொன்னார். இந்தச் சோமன் என்பவன் பன்னிரண்டாம் நூற்றாண்டில் திருபுவனம் என்ற ஊரில் வாழ்ந்த ஒரு பெரும் தலைவன். தமிழ் நாவலர் சரிதை இவனது வரலாற்றை

விளங்கக் கூறுகின்றது. இவன் வரலாற்றைக் ஒட்டக்கூத்தர் சரிதத்தால் நன்கு அறியலாம்.* எனவே, இதை உணர்ந்தே மண்டல புருடர் சோமன் ஒரு வள்ளல் என்று குறிப்பிடுகிறார்.

இவர் நூலில் பின்னும் சில பொருள்கள் சொல்ல முடியும். மாயாவாதம் என்று வாதவூரடிகள் கூறிய போதிலும்கூட, அதை முந்தைய நிகண்டுகள் சொல்லவில்லை. சிவஞான சித்தியாரே இதை அறுவகைச் சமயங்களுள் ஒன்றாகச் சொல்லுகிறது. ஆனால் சூடாமணி நிகண்டும் சித்தியாரை ஒட்டி இதை அறுவகைச் சமயங்களுள் ஒன்றாகச் சொல்லுகிறது. பின்வரும் பொருள்களும் முதன்முதல் இந்த நிகண்டில் தான் காணப்படுகிறது. சாயல் - மேம்பாடு, அரக்கு - கள், அருந்தல் - அருமை, தராசு - துலாக்கோல் என்பன சில. இவை தெலுங்கு இந்தி முதலான மொழிகளுக்குரியன. இதனால் மண்டல புருடர் காலத்தால் மிகவும் பிற்பட்டவர் என்பது தெளிவு.

16ஆம் நூற்றாண்டுக்கு முன்னமே விருத்த யாப்பு அதிகமும் வழக்குக்கு வந்துவிட்டது. இலக்கண நூல்களை 'அகவலின் வெள்ளையின் அறைக' என்பது விதி. விதியாது நீக்கப்பட்டவை, கட்டளைக் கலித்துறை ஆசிரிய விருத்தம் என்னும் பாவினங்கள். இவையும் கற்றோரால் கொள்ளப்பட்டன; உதாரணம் யாப்பருங்கலக் காரிகை, கயாதரம் (கட்டளைக் கலித்துறை), நிகண்டு சூடாமணி (விருத்தம்) என்பது மாறனலங்கார உரைக் கருத்து. மண்டல புருடர் மனப்பாடம் செய்யத்தக்க நிகண்டு நூல் இசையோடு இருக்குமாயின் மனப்பாடத்துக்கு உதவியாயிருக்கும் என்று நன்கு ஆய்ந்து, தம் காலத்தில் பெரு வழக்காயிருந்த விருத்தப்பாவில் நூலைச் செய்திருக்கிறார். அதிகச் சொற்களும் விருத்தப்பாடலில் அடங்கும் என்பதும் ஒரு காரணம்.

## பதிப்பு

இந்த நூல் எவ்வளவோ காலமாக உரையோடு பலரால் அச்சிடப்பட்டுள்ளது. ஆறுமுக நாவலர் பதிப்புக்கள் 20க்கு மேல் அச்சாகி உள்ளன. ஆனால் 11ஆவது பகுதியாகிய 11ஆவது நிகண்டு என்பது, நூலினும் அதிக ஆட்சியுடையது. இதையே எல்லோரும் சிறப்பாக மனப்பாடம் செய்து வந்தார்கள். இதற்குப் பலர் உரை எழுதியிருக்கிறார்கள். அச்சிட்ட பண்டைய நிகண்டுப் பதிப்புக்களில் பார்த்தால், முதல் பத்துத் தொகுதிகளுக்கு ஒரு

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு.

பக்க எண் கொடுத்துப் பின்னர் 11, 12 தொகுதிகளுக்குத் தனித் தனிப் பக்க எண்ணும் முகப்பு ஏடும் அமைத்திருக்கக் காணலாம். இது 11ஆம் தொகுதிக்கு உரிய தனிச் சிறப்பைக் காட்டும்.

## நூற் பொருள்

நூலானது பன்னிரு பகுதிகளாக உள்ளது. இவை முறையே தேவர், மக்கள், விலங்கு, மரம், இடம், பல்பொருள், செயற்கை வடிவு, பண்பு, செயல், ஒலி என்ற பத்துப் பொருள்களைப் பற்றிய பத்துத் தொகுதிகளும், பின்னர் ஒரு சொற் பல் பொருள் பகுதியும், பல் பெயர்க் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி என்ற தொகையகராதியும் ஆக 12 பிரிவுகளைக் கொண்டது, இந்த அமைப்பும் முறையும் திவாகரத்தைப் பின்பற்றியன. நூற்பாயிரப் பாடல்களே இந்த அமைப்பைக் குறிப்பிடுகின்றன (பாயிரம் 7 - 8):

விரவிய தேவர் மக்கள் விலங்கொடு மரம்இ டம்பல்
பொருள்செயும் வடிவு பண்பு போற்றிய செல்ஒ லிப்பேர்
ஒருசொற்பல் பொருளி னோடும் உரைத்தபல் பெயர்க்கூட்டந்தான்
வருமுறை திவாக ரம்போல் வைத்துப்பிங் கலந்தை தன்னில்.

ஒருங்குள பொருளும் ஓர்ந்திட்டு உரைத்தனன் விருத்தம் தன்னில்
இருந்தவை நல்லோர் குற்றம் இயம்பிடார் என்ப தெண்ணி.

இப் பன்னிரு தொகுதிகளிலும், பதினோராந் தொகுதியாகிய ஒரு சொற் பல்பொருட் பெயர்த் தொகுதியே மிகவும் சிறப்பாக வழங்கிய பகுதி. திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்த மாணாக்கர் அனைவரும், இந்த நூற்றாண்டின் தொடக்க காலம் வரையிலும், வாய்பாடு மனப்பாடம் செய்ததுபோல, இதை நெட்டுருச் செய்து வந்தார்கள்.* இது முன் சொன்னபடி தனியே அச்சிடப் பட்டு, பதினோராவது நிகண்டு என்ற பெயரில் அக்காலத்து வழங்கியும் வந்தது. ஆசிரியரே கூறியபடி, இந்த அமைப்பு அப்படியே திவாகரத்தில் உள்ளது: பிங்கலந்தையில் இந்த அமைப்பு மாற்றப்பட்டிருக்கிறது.

பன்னிரு தொகுதிகளிலும், தொடக்கத்தில் அருகன் வணக்கம் உள்ளது; இறுதியில் அத்தொகுதியிலுள்ள விருத்தம் எத்தனை என்று குறிப்பிட்டு, 'குணபத்திரன் தாள் போற்றும் மண்டலவன் சொன்னான்' என்று ஆசிரியர் பாடி முடிக்கிறார்.

---

* எழுத்தறிவு பெறும் முன்னமே 5 - 6 வயதில் இதை யாம் திண்ணைப் பள்ளியில் மனப்பாடம் செய்தமை இன்றும் நினைவில் வருகிறது.

*இவற்றைச் சுருக்கிக் குறிப்பிடுவோம். முதல் தொகுதிக்குத் தொடக்கமாகப் பாயிரமே அமைந்திருப்பதால், அதற்குத் தனியான அருகன் வணக்கம் இல்லை. நான்முகக் கடவுள் பாதம் நாவினால் நவிற்றி ஏத்தி, மானவர்க்கியன்ற பேரை - 2; அரியணைக்கீழ் அமர்ந்த நான்முகக் கடவுட்போற்றி, விலங்கின் பேர்த் தொகுதி தன்னை மேதினி வியப்பச் சொல்வாம் - 3; எண்ணெழுத்திரண்டும், பரப்பிய ஆதிமூர்த்தி பங்கய பாதம் போற்றி, மரப்பெயர்த் தொகுதி தன்னை - 4; கமலவூர் திவந்த வாமனையே போற்றி, அடைவுள திணை தேம் ஊர் வான் அகம் புறம் ஆதியாய, இடனுடைத்தாக வைத்த இடப்பெயர்த் தொகுதி சொல்வாம் - 5; யாளி எழிலணை யிருந்தோன் பாதம் பலமுறை வணங்கி ஏத்திப், பல்பொருட் பெயரும் - 6;*

முழுமதி முக்குடைக் கீழ் மூர்த்திதாள் போற்றல் செய்தே
எழுவகை யுலோகந் தன்னி லேற்றமண் மரங்கள் தம்மிற்
பழுதறு தோலின் நூலிற் பற்பல விதங்க ளாக
வழுவுறாதிடுஞ்செ யற்கை வடிவப்பேர்த் தொகுதி சொல்வாம். 7

கடிமலர்ப் பிண்டி நிழற் காவலன் சரணம் போற்றி
வடிவினி லளவு தன்னில் வண்ணத்திற் காட்சியாகும்
நெடியதோர் பொருளின் மற்று நீளுணர் வாலே காணப்
படுபொருளின் குணப்பேர்ப் பண்பதாந் தொகுதி சொல்வாம். 8

*பிண்டி யிறைதாள் போற்றிச் செயல்பற்றும் பெயர்க் கூட்டத்தை - 9; வாமன் மரைபுரை பாதம் போற்றி ஒலிபற்றும். பெயர்க் கூட்டத்தை - 10;*

முடிவிலின்பத்து மூவா முதல்வனைப் போற்றி செய்தே
அடிதொறு மிரண்டு மொன்றும் ஆதியிற் பொருள டக்கி
நடைபெறு ககர மாதி னகரவீ றெதுகை யாகப்
படியிலோர் சொற்பொ ருட்பல் விதத்தொகை பகர லுற்றாம்.

*வீடருள்வோன் தாள்போற்றிப் பல்வகைக் கூட்டத்தின் ஒரு பெயர் பகரலுற்றாம் - 12.*

*செயற்கைப் பொருள்களையும் பண்பு பற்றிய பெயர்களை யும் ஆசிரியர் எவ்வாறு விரிக்கிறார் என்பதை இத்தொடக்கப் பாடல்கள் காட்டும். அவைபோலவே மற்றவையும்.*

*பதினோராந் தொகுதியைப் பொறுத்த வரையில், பெயர்கள் எதுகை முறையில் அமைக்கப் பெற்றுள்ளன. அக்காலத்தில்*

காரிகை கற்றுக் கவி பாடியவர்களுக்குச் சொற்கள் நினைவு வருவதற்காக இந்த எதுகை முறை மேற்கொள்ளப்பட்டதென்று தெரிகிறது. அகரந் தொடங்கி னகரம் இறுதியாக எல்லா மெய் எழுத்துக்களுக்கும் தொகையமைப்புக்குரிய வரிசை அமைக்கப் பட்டுள்ளது. இதில் பகர வரிசைக்கே பாடல் மிகவும் குறைவு - மூன்றே பாடல்; நகரத்துக்குக்கூட ஐந்து பாடல்கள் உள்ளன. அகரம் ஒரே தொகையாக உள்ளதேயன்றி, அதனுள்ளும் அகராதி முறையில்லை. மேலும், எதுகை பாட்டின் தொடக்கத்தில்தான் காணப்படுகிறதேயன்றி, பாட்டின் ஒரு வரியில், எதுகைக்குரிய சொல்லின் பெயர்கள் முழுவரிக்கும் இல்லாமல், வேறு சொல்லை அதே அடியில் குறிப்பிடும்போது, அது எதுகையில் அமைய வில்லை. எடுத்துக்காட்டாக, முதல் பாட்டையே பார்க்கலாம்:

பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்;
பகலேநா ளொருமு கூர்த்தம்; பகலவன் நடுவே தேசு;
மகரமே சுறாப்பூந் தாதாம்; வசிகூர்மை வசியம் வாளே;
அகம்மனம் மனையே பாலம்; அகலிடம் உள்ளூ மாமே.

இது அகரவெதுகை. மூன்றாவது அடியில் சுறா, பூந்தாது என்று சொல்லியபின், வசி என்று ஒரு சொல்லுக்குப் பொருள் கூறுகிறார். இது சகரவெதுகை, ககர எதுகையன்று. இப்படியே ணகர எதுகையில் ஒரு பாடல் (5):

திணைநிலம் குலமொ ழுக்கம்; செவிஎன்ப காது வேள்வி;
பிணைஆசை விலங்கின் பெண்பேர்; பிலவங்கம் குரங்கு தேரை;
கணைஅம்பு திரட்சி யும்பேர்; கட்சியே காடும் கூடும்;
பணைவயல் பரியின் பந்தி பருத்தல் வேய் அரசு பிடாம்.

இங்கு முதல் மூன்று அடிகளிலும் இருசொற்கள் வீதம் சொல்லப்பட்டுள்ளன. இவை ணகர எதுகையில் அமையவில்லை; செவி, பிலவங்கம், கட்சி என்பன.

திவாகரத்திலும் பார்க்க இதிற் சொற்கள் அதிகம்; அதனுள் 9500 சொற்கள். இதில் 11,000. (பிங்கலத்தில் 14,700).

**சொற்கள்:**

அருகன் பெயர்களுள் முனைவன் என்கிறார்; இது தொல் காப்பியச் சொல். வீதசோகன் - இது பகவத் கீதையில் வரும் வடமொழித் தொடர்; துயரத்தின் நீங்கியவன் என்ற பொரு ளுடையது. தருமனையும் துரியோதனையும் கூறும்போது

முறையே குவளைத்தாரான், நந்தியாவர்த்தத்தாமன் என்கிறார். கன்னன், மணத்துக்கு முன் பிறந்தவனாதலால் கானீனன் என்கிறார்; இது பிங்கலந்தையிலும் உள்ளது. வருணப் பாகு பாட்டை யொட்டி, இங்கு வேளாளரும் காராளரும் சூத்திர ராகவே உள்ளனர். அநாரியர் - மிலேச்சர். கூத்தர் - அவிநயர்; அபிநயம் செய்வோர், பல்லவர் - கீழோர், பிங்கலந்தையைத் தழுவி. சூளை - வேசை என்கிறார், திவாகரத்தையும் சிந்தாமணி யையும் தழுவி; அப்பர் சுவாமிகள் வாயில் காவலர் என்ற பொரு ளில் இச்சொல்லை ஆளுகிறார். கொசுகைப் பற்றிப் பிங்கலந் தையில் நான்கு நூற்பாக்கள் உள்ளன. அங்கில்லாத அசவல் என்ற சொல்லை இவர் சொல்கிறார்; இது அங்குள்ள சில சொற் களின் கூட்டென்று தெரிகிறது; நிலம்பி நிலத்தியாகிறது.

இவர் வேதம் என்று சொல்வதெல்லாம் வைதிக சமய வேதங்களான இருக்கு முதலியவற்றையே அன்றி, தம் சமயத்துக் குரியனவற்றை அல்ல; நூல் என்ற இடத்தில்தான் பிடகம் என்று சொல்கிறார்.

பன்னிரண்டாவது தொகுதியில் ஆடவர் குணம் நான்கு என்பது, திவாகரம் முதலியவற்றைத் தழுவி. ஆசுமதுரம் சித்திரம் வித்தாரம் என்ற நால்வகைக் கவிகளையும் விரித்துக் கூறுகிறார். வில்வீரர் நிற்கும் நிலை - போர்ச் செய்தி; தானப்பொருத்தம் - பாட்டியற் செய்தி; பஞ்சபட்சி - சோதிடச் செய்தி. புலனுகர்வால் உயிர் இழப்பன, பண்டை நிகண்டுமரபை யொட்டி. நகர்படு திர வியம் ஐந்து என்று சொல்லும்போது பித்தனையும் மன்னனை யும், திரவியமாகப் பிங்கலம் போலவே இவரும் சொல்கிறார். வேத ஆறங்கத்தில் சொல்லப்படும் கற்பத்தை நீக்கித் திவாகரர் நிகண்டைச் சொன்னார்; இவர் நிகண்டை நீக்கிக் கற்பத்தையே சொல்கிறார். அறுவகை அகச் சமயம் அறுவகை புறச்சமயம் என்று இவர் கூறுவன வைதிக மரபுகள். இவற்றைக் கூர்ந்து நோக்கும்போது இவர் காலத்தில் சைனம் வேற்றுமையை மறந்து வைதிகத்தைச் சார்ந்து வந்துவிட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது. புராணங்களின் பெயர் கூறுவதும் காண்க.

மாதங்களைக் கணக்கிடும் போது, ஆவணி முதலாகக் கணக்கிடுகிறார் (1: 87). ஊர்ப் பெயர்கள் முன்நூல்கள் போல; சோழ நாட்டூர்களே மிகுதி கருவூர், உறையூர், மதுரை, காஞ்சி, புகார், தில்லை, ஆரூர். கருவூர் - வஞ்சி என்று சொல்கிறார். ஒருவந்தம் - வேறிடம் என்கிறார்: குறளில் இச்சொல்லுக்கு

வேறுபொருள். இடையே ஒரு சொல்பல்பொருட் பெய ரொன்றும் கூறுகிறார்: 'நெல்லின் மணிபல கறையினோடு மகிழ்வதை அலகென்றாகும்' (6: 34). கும்மி என்ற பிற்கால வழக்கு இவர்காலத்தில் இல்லை; கொம்மை என்றே சொல்வார் (9: 53). கைவல்லிய நிலையைக் குறிப்பிடும்போது, 'பொலிவுற்ற கேவலப்பெண் புணர்ந்து வீற்றிருந்த போதன்' என்கிறார் (10: 1). இவ்வாறு சொல்வது சைன மரபு போலும்; சூளாமணியில் பாயிரப்பகுதி இறுதியில் 'முத்திப் பெண்ணை மணந்தான்' என்று ஆசிரியர் பாடுவதும் காணத்தக்கது.

மண்டல புருடர், தாம் சைனராயினும் கால நிலைமை யுணர்ந்து நடுநிலையாகவே நூல் செய்கிறார். எங்குமே பிற தெய்வங்களை உரிய அளவு போற்றுதலுடனே கூறுகிறார். பதினோராந் தொகுதி முதற்பாட்டில், முதற் சொல் பகவன் என்று எடுத்தபோது, அருகன் என்ற பொருளை முதலில் வைக் காமல், ஈசன் என்ற சிவபிரான் பெயரையே வைக்கிறார்: 'பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்'. பதினொரு தொகுதிகளும் தனித்தனிச் சொல்லின் பொருள் கூறுதலால் சிறப்பு வர்க்கம் என்றும், பன்னிரண்டாம் தொகுதியில் பெயர்க் கூட்டங்களை எண்முறையாக வைத்துச் சொல்லுதலால் பொது வர்க்கம் என்றும் சொல்லுகிறார் (12: 1). 'கூறியது கூறினாலும் குற்றம் கொள்வதில்லை அருத்தம் வேறுளதாயின் என்று விதித் தலின்' என்று பன்னிரண்டாம் தொகுதியைத் தொடங்குகிறார். (இக் கருத்து திவாகரத்திலிருந்து எடுத்தது). எண் குணம் கூறு மிடத்து இரண்டு பாடல்களால் அருகனுக்கும் சிவனுக்கும் தனியே கூறுகிறார். குறள் உரையில் பரிமேலழகர் இவ்வாறு இரண்டும் கூறுவது காணத்தக்கது. மண்டல புருடர் பரிமேலழகர் கருத்தை யுணர்ந்து நூல் செய்திருத்தல் பொருந்தக் கூடியதே. பிங்கலத்தில் சொல்லியவாறு, இவரும், வள்ளல் புலவனை எப்படிப் போற்ற வேண்டும், பரிசில் கொடாதவனைப் புலவன் எப்படிப் பழிதீர்க்கலாம் என்பதையும் கூறுகிறார்.

முதல் இடை கடை வள்ளல்களின் வள்ளல் தன்மையின் இலக்கணம் இவர் கூறுவது நன்றாயுள்ளது. வரையின்றி யாவர்க்கும் கொடுப்பவன் முதல்வள்ளல்; இரப்போர்க்குக் கொடுப்பவன் இடைவள்ளல். புகழ்கோரிக் கொடுப்பவன் கடைவள்ளல். இக்கருத்தையொட்டியே மூவகைத் தானத்தையும் விளக்குகிறார். உத்தம தானந்தான் பெறுமுறை ஓம்பிவைத்துப் பேணிய பொருளைத் தானே குறுகியே பெறுகவென்று குறை

யிரந்து அடங்கி நோற்கும் உறுதவர்க்கு உவந்து தாழ்ந்தே உபகாரம் செய்தல்; சீருறுப் பில்லார் மாதர் சிதடர் ஆதுலர்க்கு நல்கல் மத்திம தானம் என்ப; ஆர்வமே புகழ் கண்ணோட்டம் அச்சம் கைம்மாறு மற்றைக் காரணம் இன்னவெல்லாம் கடைப்படு தானம் என்பார்.

மகடூஉ முன்னிலையாகவும் செய்யுள் செய்கிறார் (12: 12) பல இடங்களில், சொற்களை எண்ணி, இத்தனைப் பெயர்கள் என்று சொல்கிறார். நாய்தான் - ஐம்முப்பேர் (3: 25) மூவாறும் மேவினர் நாமமாமே (2: 52) மயில் பன்முப்பேர் (3: 50). மருத நிலத்தூர் ஈரைந்திரட்டியாம் (5: 40) வனமலர் மிலைதல் வேய்தல் மிலைதல் சூடுதல் இம்முப்பேர் (9: 5) என்பன சில எடுத்துக் காட்டுக்கள்.

## ரேவண சித்தர் - அகராதி நிகண்டு

ரேவண சித்தருடைய பெயர் தமிழ் இலக்கிய வரலாற்றில் என்றும் மறக்கமுடியாத ஒரு பெயர். அகராதி (அகரத்தை முதலாகவுடைய சொல் வரிசை) என்று பொருள்தர, இவரே முதன்முதல் இச்சொல்லை எடுத்தாண்டனர். அகராதி என்ற சொல் இன்று ஆங்கிலத்தில் டிக்ஷனரி என்று சொல்வதன் கருத்தைக் குறிப்பிடும். நிகண்டுகளின் வரலாற்றை எமது 9ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் திவாகர ஆய்வுரையாகிய மூன்றாம் அத்தியாயத்தில் விரிவாகக் காணலாம். தொடக்க காலத்தில் சொற்பொருளை விளக்கும் நூலாகிய நிகண்டு என்பதை உரிச்சொல் என்றே வழங்கினார்கள். திவாகரம், பிங்கலம், உரிச்சொல் (நிகண்டு), கயாதரம் ஆகிய ஆதி நிகண்டு நூல்கள் நான்கும் உரிச்சொல் என்றே வழங்கப்பட்டன. நாம் இங்கு ஆராய்கின்ற 16ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்த மண்டலபுருடரே முதன்முதல் தமது நூலை 'நிகண்டு சூடாமணி யென ஒன்று சொல்வன்' என்று சொல்லுகின்றார். அகராதி என்ற கருத்து அதாவது படிப்பவருக்கு எளிதாக இருக்கும்படி அகர வரிசை முறையில் நூலைச் சொல்ல வேண்டும் என்ற கருத்து முதன்முதல் ரேவண சித்தருக்கே உதித்தது. இவர் நூலில் முதல் எழுத்து ஒன்று மட்டுமே அகரமுறையில் அமைந்திருக்கும். இரண்டாம் எழுத்து மூன்றாம் எழுத்து இவ்வாறு அமைந்திரா. இருந்தபோதிலும், அகர முறையில் ஒழுங்குபடுத்தி அகராதி என்ற சொல்லை முதன்முதல் அமைத்துப் பெயரிட்ட பெருமை

*இவருக்கே உரியதாகும். நூலானது இரேவணத்திரியர் சூத்திரம் என்றும் ஏடுகளில் காணப்படுகிறது.*

*தமிழ் லெக்ஸிகன் முகவுரையில், வையாபுரிப்பிள்ளை யவர்கள், ஆங்கில அகராதி முறைக்கு டிக்ஷனரி என்ற சொல் வந்த வரலாற்றைச் சுவைபட எழுதியிருப்பது படித்தறியத்தக்கது.*

**ஆசிரியர்**

*அகராதி நிகண்டு செய்தவர் ரேவண சித்தர். இது, நிகண்டில் சிதம்பர ரேவண சித்தன் என்று சொல்லப்பட்டிருக்கும். இது கொண்டு இவர் சிதம்பரத்தில் வாழ்ந்தவர் என்று எழுதினோரும் உளர். அது பிழை. சிதம்பரம் பிள்ளை புதல்வர் ரேவணசித்தர். நிகண்டின் சிறப்புப் பாயிரப் பாடல் இவரைப்பற்றிய செய்தி களை நன்கு குறிப்பிடுகின்றது. 31 அடியுள்ள அப்பாடல் நெடிய தாயினும், பயன்கருதி பாடல் முழுமையும் இங்கு தருகிறோம்.*

உலகினர் பவமற மலைமகள் தவஞ்செயும்
தேசுகொள் பட்டீச் சுரன்பதம் பணிந்து
ஒலியெழு கடல்சூழ் உலகினில் தெரிக்கும்
இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்று

உரைதருஞ் சொற்கள் ஒருநான்கு; அதனில்
திரிசொலின் பேதம் இருவகை; அதுதான்,
ஒருசொற் றானே பலபொருள் ஆகியும்
பலசொற் றானே ஒருபொருள் நிலவியும்

வரும்; இதில் ஒருசொற் பலபொரு ளதனைத்
தெரிதரு பிங்கலம் திவாகர முதலாய்ப்
பரவிய நிகண்டு பலவெடுத் தாராய்ந்து,
அதிற்சில திரட்டி, அகர முதலாய்

மதித்தெழ வகார வர்க்க மீறாய்
மொழிமுத லெழுத்துநூற் றொருநா லடைவே
மொழிதரு சூத்திர முதற்பதந் தோறும்
வருபெய ராதிப் பொருளா யெடுத்தே,

ஒருபெயர் முதல்நாற் பத்தா றீறாய்
நிகழ்தர உரைக்குந் தொகைதனக் கிப்பெயர்
அடைவினில் அங்கங் கமர்ந்துள பேரும்
இடையிடை யடைவிலங் கில்லாப் பேரும்

மன்னுசூத் திரமூ வாயிரத் துடனே
முந்நூற் றறுபத் தெட்டேனுந் தொகையாய்
வந்திடுந் தொகுதியீ ரைந்தென வகுத்தே
அரியச காத்தம் ஆயிரத் தைஞ்னூ ற்று

ஒருபத் தாறென உரைத்திடும் ஆண்டினில்,
ஐந்ததி காரம் அறுபத்து நாற்கலை
உந்திய அறிவால் ஒருங்குட னுணர்ந்த
நாற்கவி வாணர் நகைதர யானும்

நூற்பா அதனால் நுண்ணிய அறிவினில்
ஆதர வால்அக ராதி நிகண்டென
ஓதினன் யாவரும் உணர்ந்திட நினைந்தே.

இப்பாயிரம் நமக்குத் தெரிவிக்கும் செய்திகள் பின்வருவன. அகராதி நிகண்டின் ஆசிரியர் நூற்பாவினால் இந்நிகண்டு செய்கிறார். காலம் சகாப்தம் 1516. இவர் தமிழ் ஐந்ததிகாரமும் 64 கலைகளும் உணர்ந்தவர். பட்டீச்சுரன் பாதம் பணிந்து நூல் செய்கிறார். பிங்கலம், திவாகரம் முதலாக உள்ள நிகண்டுகள் அனைத்தையும் எடுத்து ஆராய்ந்து அகரம் முதலாக வகரம் ஈறாக மூவாயிரத்து முன்னூற்று அறுபத்தெட்டுத் சூத்திரங் களால் பத்துத் தொகையால் நூல் செய்கிறார். இங்கு நிகண்டு என்ற பழைய சொல்லோடு அகராதி என்ற புதுச்சொல்லைச் சேர்த்து அகராதி நிகண்டு என்று நயமாகப் பெயர் அமைத் திருப்பது பாராட்டற்பாலது. ஆசிரியரைக் குறித்துப் பின்னும் சில விவரங்கள், ஒவ்வொரு பகுதியின் தொடக்கத்திலும் இறுதி யிலும் இவர் அமைத்துள்ள தனிநூற்பாக்களால் அறியக்கூடும். பயன்கருதி இவை பத்தையும் இங்கு ஒருசேரத் தொகுத்துத் தரு கிறோம். இந்நூற்பாக்களே இவர் வரலாறு அறிவதற்கு ஆதார மாய் உள்ளவை. (அ - தொடக்கம்; ஆ - இறுதி.)

1. அ. தற்சிறப்புப் பாயிரம்: முன் காட்டிய உலகினர் பவமற என்ற பாடல்.

ஆ. புலியூர்ச் சிதம்பர ரேவண சித்தன்
சொல்லுமக ராதி நிகண்டினிற் றொடுத்த
வழுவிலக ராதிப் பெயர்முதற் றொகுதி
எழுநூற் றெழுபத் தாறுசூத் திரமே.

2. அ. பட்டிகை யன்பாற் பணிந்தருச் சனைசெய்
பட்டீச் சுரன்தன் பதமலர் வாழ்த்திக்
ககரா திப்பெயர்த் தொகுதிகட் டுரைப்பாம்.

ஆ. திருப்பட் டீச்சுரச் செழுந்தமிழ்ப் புராணந்
தெரிந்தநற் சிதம்பர ரேவண சித்தன்
ஓதிய தமிழக ராதி நிகண்டினிற்
ககரா திப்பே ரிரண்டாந் தொகுதி
பகர்ந்த வைஞ்ஞூற்று முப்பத் தேழே.

3. அ. ஞான தீர்த்தம் நலம்பெறப் படைத்த
தேனு நாயகன் திருவடி வழுத்திச்
சகரா திப்பெயர்த் தொகுதி சாற்றுவாம்.

ஆ. தொண்டை நன்னாடு துலங்கிய புலியூர்
எண்டருஞ் சிதம்பர ரேவண னுரைத்த
மூன்றாஞ் சகரா திப்பேர்த் தொகுதி
ஏன்ற சூத்திரமைப் பதிற்றே ழுஞ்சே.

4. அ. மார்க்கண் டயரருச் சனைமகிழ்ந்த தருடரு
நாற்புயத் தேனு நாயகற் பணிந்து
ஞகராதிப் பெயர்த் தொகுதியை நவில்வாம்.

ஆ. இதந்தரு புலியூர்ச் சிதம்பர ரேவணன்
இதந்தரப் புகலக ராதி நிகண்டினிற்
பகரு ஞகரா திப்பேர் நாலாந்
தொகுதியிற் சூத்திர மிருபத் தாறே.

5. அ. தன்ம சன்மனைச் சார்குணக் குருவினை
இம்மையர்ச் சித்துப்பட் டீசரை யிறைஞ்சித்
தகராதிப் பெயர்த் தொகுதியைத் தருவாம்.

ஆ. வரமிகு வலஞ்சுழி வாணர் தம்புராணம்
உரைதருஞ் சிதம்பர ரேவண னியம்பிய
வாய்த்த தகராதித் தொகுதியைந் தாவதிற்
சூத்திர முந்நூற் றெண்ணைந் தொன்றே.

6. அ. மிடியகற்றி மிக்கசீர் நல்குபட் டீசரைத்
தொழுது நகரா திப்பெயர்த் தொகுதியைப் புகல்வாம்.

ஆ. பகர்தரும் புலியூர்க் கங்கை குலாதிபன்
அருள்பெறு சிதம்பர ரேவணன் அறைதரு
நகரா திப்பெயர்த் தொகுதியாறாவதிற்
சூத்திர முப்பதிற் றேழொன் றாமே.

7. அ. சித்திர சேனன் தனக்கொரு நாலு
புத்தி ரர்தரும் புனிதனைப் போற்றிப்
பகரா திப்பெயர்த் தொகுதியைப் பகர்வாம்.

ஆ. திருமேற் றளிக்குச் செழுந்தமிழ்ப் புராணம்
தெரிதரு சிதம்பர ரேவணன் பகர்ந்த
ஏழெனும் பகரா திப்பெயர்த் தொகுதி
தாழ்வற நானூற் றெண்பத் தைந்தே.

8. அ. விசுவமித் திரன்தனை வேதிய னாக்குந்
திசைபுகழ் பட்டீச் சுரனருள் வணங்கி
மகரா திப்பெர்த் தொகுதியை வகுப்பாம்.

ஆ. கலையா வையுமுணர் காவியத் தொடையான்
புலியூர்ச் சிதம்பர ரேவண சித்தன்
பரவிய மகராதித் தொகுதியெட் டாவதில்
இருநூற் றெழுபத் தெண்சூத் திரமே.

9. அ. மதவலி கீத மிதமுடன் மகிழ்ந்த
தேனு தாண்டவன் திருவடி யேத்தி
யகரா திப்பெயர்த் தொகுதி யிசைப்பாம்.

ஆ. பவமறத் தெளிந்த சிவதெரி சனத்தோன்
புவிமகிழ் சிதம்பர ரேவண சித்தன்
ஏத்திய யகராதித் தொகுதியொன் பானிற்
சூத்திர முப்பத் தொன்றெனச் சொல்லுமே.

10. அ. சதுத்ததிமி ளன்தனைச் சார்பிரம கத்தி
இதத்துடன் அகற்றுபட் டீசரைப் பரவியே
வகராதிப் பெயர்த் தொகுதியை வகுப்பாம்.

ஆ. மேழித் துவசன் விளங்கிய புலியூர்
வாழ்நற் சிதம்பர ரேவண சித்தன்
நிதியிற் றரும்அக ராதி நிகண்டினிற்
பத்தாம் வகரா திப்பெயர்த் தொகுதி
ஏத்து சூத்திரமுந் நூற்றெழு நான்கே.

*ரேவண சித்தர் சிதம்பரம் என்பவரின் புதல்வர்; இவர் தொண்டை நாட்டில் உள்ள புலியூர் என்ற ஊரில் பிறந்தவர்; கங்கை குலாதிபர் (வேளாளர்); இவர் கங்கை குலம் (வேளாள குலம்) என்பன இவருடைய வரலாறுகள். வேளாளர் மேழித்துவசம்*

உடையவர் என்றும் சொல்லுகிறார் (10 ஆ).* மேலும் இவர் சித்திரசேனர் என்பவருடைய புதல்வர் நால்வருள் (7 அ) ஒரு வரான தன்மசன்மர் என்ற குணக் குருவினிடத்துக் (5 அ) கல்வி பயின்றார். இவர் செய்த மற்றொரு நூலாகிய சிவஞான தீபத் தின் குருவணக்கப் பாடலில், ஆலநீழல் அறமுரைத்த பெரு மான் அருளால் இருநிலத்தில் தம் குருவாய்த் தோன்றினர் என்று கூறுகிறார். 'குருபரனை வாதை நீக்கும் குணக்கடலை' என்று கூறுகிறார். நிகண்டில் குணக்குரு என்றும் தீபத்தில் குணக்கடலை என்றும் கூறியுள்ளமையால், 'குண' என்பது குருவின் பெயருள் ஒரு பகுதி என்று நினைக்கச் செய்கிறது. குணக்கடல் - குணசாகரர் என்றிருக்கலாம்; குண சாகர தரும சர்மா என்பது இவர் முழுப்பெயராயிருத்தலும் கூடும். திருபட்டீச் சுரத்துக்குச் செழுந்தமிழ்ப் புராணமும் (2 ஆ) திருவலஞ்சுழி வாணர் புராணமும் (5 ஆ) திருமேற்றளிக்குச் செழுந்தமிழ்ப் புராணமும் (7 ஆ) பாடியவர். சிவ தரிசனம் தவறாது செய்பவர். பத்துப் பகுதிகளிலும் பட்டீச்சுரத்துத் தேனுநாயகரைப் பெரி தும் போற்றுகிறார். ஆதலால் இவர் பட்டீச்சுரத்தில் தங்கித் தவறாது சிவ வழிபாடு செய்தவர் என்று தெரிகிறது.

பேரளம் இரேவணத்திரியர் என்று சொல்லியதற்கு நூல் களில் ஆதாரமே இல்லை. இவர் தம்மைச் சித்தர் என்று சொல்லிக் கொள்வதால் இவரை ஆராத்திரியர் என்றும் வீரசைவர் என்றும் சிலர் கருதினர். குலத்தால் வேளாளர் ஆதலால் வீரசைவர் என்று சொல்வது பொருந்தாது.❖ ஆராத்தியர் என்பது வீர சைவப் பிராமணப் பெயர் என்பர். வீரசைவ மரபில் தங்களை ஐயர் என்று கூறிக்கொள்வது சாதாரணம்.✞ ரேவணரை வீர சைவர் என்று கருதினோர், இவரை ஐயராக்கி ஆராத்தியர் என்றும் பெயர் வைத்தனர் எனத் தெரிகிறது. இவர் வாழ்ந்த புலியூர் என்பது தொண்டை நாட்டுக் கோட்டங்களில் ஒன்று; இன்று சென்னையின் பகுதியான கோடம்பாக்கத்தில் ஒரு பகுதி இந்தப் புலியூர். இங்கே பாரத்துவாசேசுவரர் கோயில் என்ற ஒரு பழமையான கற்கோயில் உள்ளது. புலியூர் - சிதம்பரம்

---

* சர்வ கலாசாலையின் தமிழ்ப் பேரகராதியில் இரேவண சித்தர் பிராமணர் என்று எழுதியிருப்பது பிழை.

❖ பொதுவாக அக்காலத்திலும் பின்னும் வேளாளர் வீரசைவரான தில்லை.

✞ கந்தப்பையர் விசாகப் பெருமாளையர் மகாலிங்கையர் என்ற பெயர்கள் உதாரணங்களாம்.

என்று கொண்டாரது கருத்துப் பிழை என்பது தெளிவு. இவர் வீரசைவர் என்ற கூற்றை ஏற்றுக் கொண்டு அது காரணமாக இவர் அக்காலத்தில் திருக்குடந்தையிலுள்ள வீர சைவர்கட்குப் பெரிதும் பற்றுக்கோடாய் இருந்த வீரசிங்காதன மடத்தின் சார்பில் கும்பகோணத்தில் தங்கியிருத்தல் கூடுமென்றும் அதனாற்போலும் கும்பகோணத்தையடுத்துள்ள பட்டீச்சுரம், திருவலஞ்சுழி, திருமேற்றளி ஆகிய தலங்களுக்குப் புராணம் பாட நேர்ந்தது என்றும் இவர் வரலாறு எழுதிய சோமசுந்தர தேசிகர் குறிப்பிட்டிருக்கிறார். சிவஞான தீபம் பதிப்பித்த த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை 'தேவார வைப்புத் தலமாகிய முழை யூரில் வீரசைவரான குடந்தைச் சிவப்பிரகாசர் சிவபரிபூரணம் பெற்றார் என்றும், முழையூரை அடுத்தே புராணத்தலங்கள் மூன்றும் உள்ளன. ஆதலால் இரேவண சித்தருக்குக் குடந்தை வீரசிங்காதன மடத் தொடர்பு சாலப் பொருத்தமே' என்றும் குறிப்பிட்டிருக்கிறார். இக்கருத்துக்கள் பொருந்துவன அல்ல. இவர் அம்மடத்தின் ஆதரவில் வாழ்ந்தாரானால் அம்மடத் தையோ அதன் தலைவரையோ அதன் கோயிலையோ குறிப் பிடுதல் எதிர்பார்க்கக் கூடியது. அன்றியும் குடந்தைச் சிவப்பிர காசர் காலம் 18ஆம் நூற்றாண்டு. இவர் நிகண்டு செய்த காலம் சகம் 1516 (கி.பி. 1594) என்று முன்னமே குறிப்பிட்டோம். தவிர இவர் பட்டீச்சுவரத்தில் இருந்து வழிபாடு செய்தார் என்பதை முன் எடுத்துக் காட்டிய எல்லா நூற்பாக்களும் சொல்லுகின் றன. ஆதலால் இவர் குடந்தையில் வாழ்ந்தவரல்லர், பட்டீச் சுரத்தில் வாழ்ந்தவர் என்பதே பொருத்தம்.

அக்காலத்தில், அதாவது 16ஆம் நூற்றாண்டின் பிற்பாதி யில், தஞ்சையில் சேவப்ப நாயக்கனை ஆட்சியில் இருத்தி நாட்டைப் பெரிதும் முன்னேற்றமடையச் செய்தவர் கோவிந்த தீட்சிதர் என்பவர். இவர் நெடுங்காலம் பட்டீச்சுரப் பெருமானை வழிபட்டு அங்கேயே தங்கி இருந்தவர். அங்குள்ள சிவாலயத்தில் இவருக்கும் இவர் மனைவிக்கும் பெரிய கற்சிலைகள் உள்ளன. தீட்சிதர் இரேவண சித்தருடைய பெருஞ்சிறப்பையுணர்ந்து இவரை பட்டீச்சுரத்துக்கு அழைத்தார் என்றும், அங்கேயே தங்கிப் பட்டீச்சுரத்துக்குப் புராணம் பாடும்படி செய்தார் என் றும் நாம் கருதுதல் பொருந்தக்கூடியது. அங்கிருந்து கொண்டு அருகில் உள்ள தலங்களுக்கும் இவர் புராணம் பாடினார். இவ்வாறு நாம் கூறியதற்குத் திட்டமான ஆதாரம் இல்லாது போயினும், பட்டீச்சுரத் தொடர்பையும் காலத்தையும் நோக்கும்

போது இதுவே உண்மையாயிருக்குமென்று கருதலாம். மிகைபடச் சொல்லார் இரேவண சித்தர் என்று இவரை ஆத்திசூடிப் புராணகாரர் குறிப்பிடுகிறார். சங்கர மடவரலாற்றில் ஒரு ரேவண சித்தர் வழிபடு மூர்த்தி கொண்டு தந்ததாகச் சொல்லப்படுகிறார் (சங்கரருக்கு). இது காலம் கிபி 800ஆக இருக்குமானால், நாம் கருதும் ரேவண சித்தர் அதே பெயர் தரித்த பிற்காலத்தவர்.

ரேவண சித்தர் என்ற பெயரை யாரும் இதுவரை விளக்கிய தில்லை. ரேவணம் என்பது மாடுகளின் கத்தல். இவர் ஒருகால் மாடுகளின் கத்தலைக் கேட்டு இரங்கினாரோ அல்லது இவருடைய குரல் மாடு கத்துவது போல் இருந்ததோ தெரிய வில்லை. இது காரணமாக இவருக்கு இப்பெயர் வந்திருக்கலாம்.

**காலம்**

மிகவும் தெளிவு. முன்காட்டிய 'உலகினர் பவமற' என்ற சிறப்புப் பாயிரப் பாடல் காண்க (பக்கம் 91) - வரிகள் 24 - 25, அரிய சகாத்தம் ஆயிரத்தைஞ் நூற்றொருபத்தாறு என்று கூறும்; அகராதி நிகண்டு பாடிய காலம் சகம் 1516 அதாவது கி.பி. 1594. எனவே இக்காலத்துக்குச் சற்று முன்பின்னாக இவர் வாழ்ந்து நூல் செய்தார் என்று கருதலாம். முதலில் புராணங்கள் செய்தார் என்றும், பிறகு நிகண்டு செய்தார் என்றும், இறுதியில் சிவஞான தீபம் செய்தார் என்றும் கருதலாம்.

**சமயம்**

இரேவண சித்தர் இரேவணாத்திரியர் என்றும் சொல்லப் படுவார் என்று பாவலர் சரித்திர தீபகமுடையார் எழுதியிருக் கிறார். இரேவணாத்திரியர் என்ற பெயர் வீரசைவப் பெயர் என்பதில் தடையில்லை. ஆனால் இவர் பெயர் இவ்வாறு காணப் படவில்லை. எங்கும் ரேவண சித்தர் என்றே காணப்படுகிறது. இவர் வீரசைவர் என்று சொன்னவர்களுக்கு ஓர் ஆதாரம் சிவஞான தீபத்தின் இறுதியில் மூன்று பாடல்கள் வீரசைவ மரபைக் குறிப்பிட்டுப் பாடியிருப்பதாகும். இது கொண்டு இவர் வீர சைவர் என்பது பொருந்துவதாகத் தோன்றவில்லை. இது பின்னும் ஆராயத் தகுந்தது. நூலின் அகத்தில் வேதாந்தி கூற்றையும் சொல்லுகின்றார்; பஞ்சீகரணம் சொல்லுகின்றார். இதுகொண்டே இவர் வேதாந்தி ஆகார். இதுபோலவே வீர சைவக் கருத்தும் என்றே கொள்ள வேண்டும். நூலினிடையில், 'இங்ஙனம் வேதாந்த நிலையுடைய "மொழி வருமாறு தூய

சீவாகமம சைவ சித்தாந்த நிலையோர் சொல்லார். இப்பொருள தனைக் கொள்ளார் என்று உணரே' (100) என்று பாடுவது காண்க. எம் கருத்தின்படி இவர் சிறந்த சைவசித்தாந்தியாவார்.

## நூல்கள்

இவர் செய்ததாக இப்போது கூறப்பெறும் நூல்கள் ஐந்து.

1. அகராதி நிகண்டு: இங்கு ஆராய்கிறோம்;
2. சிவஞானதீபம் என்ற சைவ சமய சாத்திர நூல்: சைவசாத்திரம் என்ற அத்தியாயத்தில் ஆராய்கிறோம்.

3 - 5. திருப்பட்டீச்சுரப் புராணம், திருவலஞ்சுழிப் புராணம், திருமேற்றளிப் புராணம் - இவை மூன்றும் கிடைக்கவில்லை.

## அகராதி நிகண்டு

இந்த நூல் சூத்திர அகராதி என்றும் ரேவணத்திரியர் சூத்திரம் என்றும் அகராதி நிகண்டு என்றும் பெயர் பெறுகிறது. நூற்பாவால் அமைந்தது. நூலானது தமிழில் மொழிக்கு முதலாக வரும் உயிர்வருக்கம் (அ), க, ச, ஞ, த, ந, ப, ம, ய, வ ஆகிய பத்து வர்க்கங்களாலும் பத்துத் தொகுதிகளாக அமைக்கப் பெற்றுள்ளது. இவர் தம் நூலை அகராதி நிகண்டு என்று பெயர் சூட்டியதன் சிறப்பைத் தொடக்கத்தில் விரித்துரைத்தோம். இதனுள் ஒரு பெயரையெடுத்து அதற்கு ஒரு பொருள் முதல் 46 பொருள் வரையுள்ள பொருள்களை அம்முதல் ஒரு பெயர் அம்முதல் இருபெயர் அம்முதல் முப்பெயர் அம்முதல் பதி னொரு பெயர் அம்முதல் நாற்பத்தாறு பெயர் என்று முறையா கச் சொற்களைச் சொல்வதோடு, பொருளை எண்ணிட்டும் சொல்லப்படுகிறது. இந்த நிகண்டு நூலில் ஒரு சொல்லின் பல பொருள் குறிப்பிடப்படுமேயன்றி, சூடாமணி நிகண்டில் இன்று 11ஆம் பகுதி பிரசித்தமாக வழங்குகின்ற எதுகை முறையில், சொற்கள் அமைக்கப்பெறா. மேலும் அகராதிக் கிரமம் இங்கு முதல் எழுத்தை மட்டும் பொறுத்ததேயன்றி இரண்டாவது மூன்றாவது எழுத்துக்களுக்கு அமைக்கப் பெறவில்லை. இருப் பினும், இவர் அகர வரிசையில் அமைத்தது அக்காலத்துக்கு மிகப்பெரிய சாதனை.

நூல் 3368 சூத்திரங்கள் உடையது; இது ஒவ்வொரு பகுதியில் இறுதியில் உள்ள நூற்பாக்களில் சொல்லிய சூத்திர எண்ணின் தொகையாகும். ஆனால் மதுரைத் தமிழ்ச் சங்கத்து அகராதி நிகண்டு நூலில் உள்ள சூத்திரங்கள் 3334 தான். அச்சிட்ட

திருநாராயண ஐயங்கார் அவர்கள் தொகையில் குறைந்தமைக்குப் பின் வருமாறு விளக்கம் தருகிறார். 'இந்த நூலில் ஒரு பொருணுதலுமிடத்துக் கூறிய சொற்களிற் சில பல பொருணுதலிடத்தும் படிக்கப்பட்டமையால் அவ்வொரு பொருணுதலிய சூத்திரங்களொழிக்கப் பட்டமையாலும், 'பௌடிகந்தானே நிகழ்காலப் பெயர்' என்பது போலும் பிழைப் பொருளுரைத்த சூத்திரங்கள் விலக்கப்பட்டமையாலும், பிரதி பேதங்களில் அதிகப் பாடங்கள் காணப்பட்டமையாலும், சூத்திரத் தொகை ஏற்றத்தாழ்வுடையவாயின.' இவர் முந்திய நிகண்டுகளிலுள்ள சொற்களையெடுத்து ஆராய்ந்து அதில் சில திரட்டியதாகச் சொல்லுகிறார். இதனோடு கூட, வழக்கு வீழ்ந்த பல சொற்களையும் புதுப்பிரயோகங்களையும் ஆராய்ந்து சேர்த்திருக்கிறார் என்பதும் விளங்குகிறது. அன்றியும் 'சொற்களுக்குப் பொருளுரைக்கு முறையிலும் சில பொருள் வேண்டாதனவும், சில பொருள் விடப்பட்டனவும் உள. இவற்றையெல்லாம் தமிழ்ப் புலமைமிக்க சான்றோர் ஆராய்ந்து செப்பம் செய்து இன்னும் சேர்க்குமவற்றைச் சேர்த்து நூலைப் பூர்த்திசெய்து கொள்ளற்கிந்நூலாசிரியர் இடம் கொடுத்தாரென்றெண்ணும்படி இரண்டாமெழுத்து முதலியவற்றையும் அகராதி முறையாகச் சேராதிருப்பது பாராட்டத் தக்கது' என்பது திரு. நாராயண ஐயங்கார் குறிப்பு; இக்கூற்றை ஏற்கவேண்டியதில்லை, முதலெழுத்தை அகர வரிசைப்படுத்தியதே அக்காலத்தில் பெரும் புதுமை; இரண்டாம் எழுத்து வரையில் இவ்வாறு அமைக்கும் எண்ணம் செல்லவில்லை.

### பதிப்பு

அகராதி நிகண்டு முதலில் ஒருபிழையுடைய பதிப்பு வெளிவந்துள்ளது என்பது வையாபுரிப் பிள்ளை குறிப்பு. திரு. நாராயண ஐயங்கார் பரிசோதித்துப் பதிப்பித்த மதுரை தமிழ்ச் சங்கப் பதிப்பு 1921இல் வெளிவந்தது.

## 2. பாட்டியல்

### பிரபந்த மரபியல்

நூற்பாவினாலான இச்சிறு பாட்டியல் இலக்கணநூல் பிரபந்த இலக்கணம் சொல்வதற்கென்றே வந்தது. மிகவும் பொடிந்துபோன ஓர் ஏட்டிலிருந்தே பின் வரும் குறிப்புக்கள் ஆய்ந்து எழுதப் பெறுகின்றன.

நூல்

இது 35 நூற்பாக்களே உடையது. இவை இரண்டடிச் சிறுமையும் 15 அடிப்பெருமையும் உடையன. கிடைத்த பகுதியில் கடவுள் வாழ்த்துக் காணப்பெறவில்லை. இல்லை போலும். முதல் நூற்பா, 'பிள்ளைக்கவி முதல் புராண மீறாகத் தொண்ணூற்றொறெனும் தொகையதான பிரபந்தங்களைக் கூறும் பிரபந்த மரபியல்' என்று நூற்பெயர் சொல்லுகிறது. நூலின் இறுதியில் 'பிரபந்த மரபியல்பு முற்றும். ஆக இயல்பு ஐந்துக்கும் பாயிரம் செய்யுளியல்பு* மூலபாடம் முற்றும். முருகனே தெய்வம்' என்று எழுதப் பெற்றுள்ளது. இதுகொண்டு இது ஒரு விரிந்த ஒரு பெருநூல் என்றும் இதன்கண் பாயிரம் செய்யுளியல், பொருத்தவியல், மரபியல், பிரபந்தவியல் என்ற ஐந்து இயல்கள் இருந்தனவென்றும், முன் குறிப்பிட்ட பகுதி ஐந்தாவது இயல் மட்டுமே என்றும் கருதலாம். இக்கருத்தின்படி கடவுள் வாழ்த்து முதலியன முழு நூல் தொடக்கத்தில் பாயிர வியலில் இருந்திருக்கக்கூடும். பொதுவியல் என்பது, வச்சணந்தி மாலையிலுள்ள பொதுவியல் போல, செய்யுள் பொருத்தம் பிரபந்தம் என்ற பகுதிகளில் சொல்லப்பெறாத எல்லாப் பொருள்களையும் கொண்டிருந்தது என்றும் நாம் துணியலாம். இதனுள் முதல் 21 நூற்பாக்களே பிள்ளைக்கவி முதல் புராணம் ஈறாய் உள்ள பிரபந்தங்களைக் கூறும் பகுதி. மற்ற 14 நூற்பாக்களும் எஞ்சிய பொருள்களைக் கூறுவன.

இப்பொருள்களைப் பின்வருமாறு நிரல்படக் காட்டலாம்.

நூற்பா

| | |
|---|---|
| 1 | நூற்பெயர். |
| 2 - 21 | பிள்ளைக்கவி முதல் புராணம் ஈறாகவுள்ள 96 பிரபந்த இலக்கணம். |
| 22 | நூல் பெயர் பெறும் முறை. |
| 23 | கையறத்துக்கு ஆகாத பா, வாழ்த்துக்கு ஆகும் பா. |
| 24 | நாற்சாதிக்கும் உரிய பா. |
| 25 - 27 | நூற்பாவுக்கும் உரியநிலம், நிறம், நாள், இராசி, கோள். |
| 28 - 29 | கவிஞன் இலக்கணம். |
| 30 | நால்வகைக் கவிஞர். |
| 31 | அரங்கேற்றும் முறை. |

* புள்ளி வைத்த இடம் ஒரு பொடிவு.

32 தமிழ்க்குலப் பெண்.

33 அவளுடைய சுற்றத்தார்.

34 பரிசில் வழங்காதான் அழிவு.

35 குற்றம் இல்லாத பாட்டும், குற்றம் உடைய பாட்டும், அவற்றின் பயனும்.

### சில சிறப்புக்கள்

கவிதையைத் தமிழ்க்குலப் பெண்ணாக உருவகப்படுத்தி (நூற்பா 32) அவள் சுற்றத்தார் யார் என்பதை ஆசிரியர் நயமுறப் பொருத்திக் காட்டுகிறார் (33).

தந்தை புலவன்; தாய்அவள் தரித்திரம்;
அக்கவிப் பொருளை அணியாய் விரித்து
வசனிக்கக் கேட்டோர் மாதுலர் ஆகும்;
சந்தப் பொலிவுடன் சாற்றிய பொருளைச்
சதிரிற் படிப்போன் தமையன் ஆகும்;
இன்பமுற் றதனை இயலுறக் கேட்டுப்
பரிசு கொடுப்போன் பர்த்தா வாமே.

புலவனுக்கு வறுமையே தாய் என்று எவ்வளவு சுவையாகச் சொல்லுகிறார்!

இத்தகைய செய்திகள், அக்காலத்தில் நூல் அரங்கேற்றம் என்பது எவ்வளவு சிறப்பாய்க் கருதப்பெற்றது என்பதை நன்கு உணர்த்துவனவாகும். பாடிய கவிஞன் சிறப்புப் பெறாது இதயம் நொந்தால், பாடப்பெற்றவன் அழிவான் என்று அகத்தியர் நூல் கூறிற்று என்று இவர் கூறுகிறார் (34).

இங்ஙனம் இயற்றாது இதயம் நொந்துகொண்டு
இருக்கினும் கிளையொடும் இறுதியாவ னென்று
ஓதினது அகத்தியர் உண்மை நூல் நெறியே.

உளம் நொந்தாற் சுற்றத்தொடும் தொலைவன்
இஃதுண்மை அகத்தியன் தன் சொல்லே. (46)

என்று சிதம்பரப் பாட்டியலும் இப்படியே சொல்லுகிறது. அகத்தியர் நூல்* என்பது, 8ஆம் நூற்றாண்டில் தோன்றியது

* வெளிவந்துள்ள எமது தமிழ் இலக்கிய வரலாறு, 9ஆம் நூற்றாண்டு முதல் பாகம் என்ற நூலிலும், இனி வெளிவரும் 8ஆம் நூற்றாண்டு என்ற நூலிலும் இது விளக்கியுரைக்கப்படும்.

என்று கருதப்படும் அகத்தியர் பாட்டியலாகும். இந்நூலும் சிதம்பரப் பாட்டியலும் அகத்தியர் பாட்டியலின் வழிவந்தவை என்பது தெரிகிறது.

அக்காலத்தில் நூல் அரங்கேற்றம் மிகவும் சிறப்பாய்க் கருதப் பெற்றது. நல்ல முகூர்த்தத்தில் நாமகளை வழிபட்டு நூலைக் கேட்பிக்க வேண்டும் என்று மட்டும் வெண்பாப் பாட்டியல் கூறுகிறது. ஆனால் நூலின் அரங்கேற்றம் பிரபந்த மரபியலில் மிகவும் விரிவாய்ச் சொல்லியிருப்பதை 31ஆம் நூற்பாவில் காணலாம். சிதம்பரப் பாட்டியலும் இதை அடியொற்றியே பாடுகிறது. அரங்கேற்றக் கருத்துக்களை மரபியலாசிரியர் பிங்கல நிகண்டிலிருந்து எடுத்தார் என்று தெரிகிறது. நிகண்டின் பொருளமைதிக்கு அதிகம் சம்பந்தமில்லாவிட்டாலும், பிங்கல நிகண்டு அரங்கேற்றத்தை மிகவும் விரித்துரைக்கிறது.

பாடுங் கவிதை நாடுறக் கொள்ளின்
தோரணம் நாட்டித் துகிற்கொடி எடுத்து
வார்முர சியம்ப மறையோர் வாழ்த்த
விழுத்தகு கோலத்து விரித்த பூங் கலிங்கத்துப்
பழிப்பல் பாலிகை பல்லுணா முளையின்
விளக்கு நிறைகுடத்து விதானப் பந்தரில்
துளக்கமில் பல்வகை தூணிரைப் பொதியில்
பல்கிளை நெருக்கிற் பாவையர்பல் லாண்டின்
மல்குவனப் பமைந்த வளமனை நாப்பண்
வெண்துகி லுடுத்து வெண்பூச் சூடித்
தன்தவி சிருத்தித் தான்அய லிருந்து
மங்கலச் செய்யுள் மகிழ்ந்து கேட்டு,
பொன்னும் ஆடையும் பூவும் கடகமும்
இன்னவை பிறவும் கொடுத்து, ஏழ்அடி நிலம்
பாவலன் பின்சென் றொழிகென நிற்றல்,
பூவலர் நறுந்தார்ப் புரவலன் கடனே.

### மரபு என்ற நூற்பெயர்

நூலுக்கே மரபு என்ற பெயர் நீண்ட காலமாக வழக்கிலுண்டு. அடியார்க்கு நல்லார் தாம் சிலப்பதிகாரத்துக்கு உரை எழுத ஆதாரமாய்க் கொண்ட ஐந்து நூல்களில் ஒன்று, அறிவனார் செய்த பஞ்ச மரபு என்பது, பாட்டியல் மரபு, பாட்டியல் மரபுடையார் என்று யாப்பருங்கல விருத்தியுடையார் குறிப்பிடு

கிறார். பன்னிரு பாட்டியல் தொகுத்த ஆசிரியர், தாம் எடுத்துக் கொண்ட பொருள்களைக் கூறும்போது,

– முன்னோர் பொருள் நெறி
கூட்டி யுரைப்பன் பாட்டியல் மரபே.

என்று கூறுகிறார். 'விருந்தே தானும்' என்ற தொல்காப்பியச் செய்யுளியல் பாடலுரையில், 'அவை முத்தொள்ளாயிரமும் பின்னுள்ளார் பாட்டியன் மரபிற் கூறிய கலம்பகச் செய்யுள் முதலியவற்றைப் பாடுதலுமாயிற்று' என்று நச்சினார்க்கினியர் எழுதுவதால், பாட்டியலாகிய இலக்கணத்துக்கே பாட்டியல் மரபு என்ற பெயர் வழங்கியமை தெளிவு. அப்படியே பின்வந்த வெண்பாப் பாட்டியலுரைகாரர். 'இஃது எடுத்துக் கொண்ட பொருள் யாதோ எனின், பாட்டியன் மரபு'; பரந்த பாட்டியன் மரபுகளிற் கரந்து கிடந்த பொருளையெல்லாம் ஒரு கோவைப் படுத்துதல் காரணமென்று உணர்க' என்று இரு முறை கூறுவது காணத்தக்கது; பாட்டியல் நூல்களையே பாட்டியல் மரபுகள் என்று இவர் கூறுகிறார். மேலும் தொல்காப்பிய இயல்கள் பல, மரபு என்ற பெயரையே உடையன: எழுத்ததிகாரத்தில் நூன் மரபு, மொழிமரபு; சொல்லதிகாரத்தில் விளி மரபு; பொருளதி காரத்தில் - மரபியல்; இவைபோலவே நம் நூலும் பிரபந்த மரபியல் என்று பெயர் பெற்றிருத்தல் கூடியதே.

## பிரபந்தம் 96 என்ற வரையறை

96 என்ற வரையறை இலக்கண பூர்வமாக எந்த நூலிலும் சொல்லப்படவில்லை என்பதை முன்பு குறிப்பிட்டோம். பின்னால் (கி.பி. 1732இல்) சதுரகராதி சொல்கிறது. அந்த அளவுக்கு அது பயனுடையதென்றாலும், அதை ஆதார நூலாகக் கொள் வதற்கில்லை. 96ஐக் கணக்கிடும் முயற்சியை இதுவரை யாரும் மேற்கொள்ளவில்லை, வையாபுரிப்பிள்ளையே இந்த முயற்சி யைத் தமது நவநீதப் பாட்டியல் பதிப்பில் மேற்கொண்டிருப்ப தோடு, பல பாட்டியல் நூல்களும் கூறும் பிரபந்த அட்டவணை, சதுரகராதியின் 96க்கு ஓர் அகராதிக் கிரமமான அட்டவணை, பல பாட்டியல் நூல்களிலும் காட்டப்பட்ட பிற மிகைப் பிரபந்தங்களுக்கு அட்டவணை எனப் பல அட்டவணைகள் தந்திருக்கிறார். ஒவ்வொரு பாட்டியலும் எத்தனை பிரபந்தங் களைக் கூறுகிறது என்ற அட்டவணையும் அங்குள்ளது. அதன் படி நவநீதப் பாட்டியல் பிரபந்தங்கள் 44; மிகைப் பாடல் களில் சொல்லப்பட்டவையும் சேர்த்து, பிரபந்தங்கள் 106. அவ்

வட்டவணையைப் பார்க்கும்போது, சதுரகராதியுடையார் தமது 96 என்னும் பட்டியலுக்கு நவநீதப் பாட்டியலையே (மிகைப் பாடல்கள் உட்பட) மூலமாகக் கொண்டிருக்கிறார் என்று தெரிகிறது. அவ்வட்டவணையில் பிள்ளையவர்கள், பிரபந்த மரபியல் பிரதியை ஆராய்ந்து இதிற் சொல்லிய பிரபந்தங்களையும் கணக்கிட்டு, இவை 66 என்று கணக்கிட்டிருக்கிறார். அப்படியானால், இம்மரபியலுடையார் தாம் 96 என்று கூறிய பிரபந்தங்களைத் தாமே சொல்லவில்லை என்றாகிறது. இவர் 96ஐயும் சொன்னார் என்று கருதி இவர் நூலை ஆராய்ந்தபோது, 96ஐக் கணக்கிடும் வழியும் புலப்பட்டது. அதை மேலே விளக்கி உரைப்போம்.

குடை செங்கோல் நாடு ஊர் சிலை வாள் வேல் குதிரை யானை - விருத்தம் என்று சொன்னவிடத்து இவை ஒவ்வொன்றையும் ஒரு தனிப் பிரபந்தமாகக் கணக்கிட வேண்டும். குடை விருத்தம் செங்கோல் விருத்தம் நாட்டு விருத்தம் ஊர் விருத்தம் வில் விருத்தம் வாள் விருத்தம் குதிரை விருத்தம் யானை விருத்தம் என; ஆக இவை ஒன்பது ஆகின்றன.

ஆற்றுப்படையை நான்காகக் கணக்கிட வேண்டும். புலவராற்றுப்படை பாணராற்றுப்படை பொருநராற்றுப்படை புலவராற்றுப்படை என, பன்னிரு பாட்டியல் விறலியாற்றுப்படையைக் கூறுகிறது. வேறெந்தப் பாட்டியலும் கூறவில்லை என்று முன் குறிப்பிட்டோம்.

மாலை பத்துக் கூறுகின்ற நூற்பாவில், வெட்சிமாலை கரந்தைமாலை வஞ்சிமாலை காஞ்சிமாலை நொச்சிமாலை உழிஞைமாலை தும்பைமாலை வாகைமாலை தானைமாலை தாரகைமாலை எனத் தனித்தனிப் பத்துக் கணக்கிட வேண்டும்.

இனி, இவை போலவே 16ஆம் நூற்பாவையும் விரித்துப் பொருள் செய்ய வேண்டும். நூற்பா பின்வருவது:

> கருது பொருள் இடம் காலம் தொழிலான்
> முப்பான் நாற்பான் எழுபான் தொண்ணூறு
> நூறான் வெண்பாக் கலித்துறையி னாதல்
> மன்னுமவ் வெண்ணான் மாலை மஞ்சரி
> காஞ்சி மாலை முல்லைக்கலி சதகமென்று
> இயலும் செய்யுட் கேற்ற பெயரே.

இதிலடங்கிய பிரபந்தங்களைக் கணக்கிடும்போது, வையாபுரிப் பிள்ளையவர்கள் நால்வகை மாலை, எண்ணாலும் பெயர் பெறும் என்று குறிப்பிட்டு, பொருள்மாலை, இடமாலை, கால மாலை, தொழில் மாலை என்று நான்கு பிரபந்தங்களாக மட்டும் கணக்கிட்டார். இது பொருந்தாது; பொருள் இடம் காலம் தொழில் என்ற நான்கும் முப்பது முதல் நூறு வரை எண்ணால் பெயர் பெற்றாலும், பெயர் முடிவு, மாலை, மஞ்சரி, காஞ்சி மாலை, முல்லை, கலி, சதகம் என்று அமையும்; அதாவது திருச் சதகம் நூறு, திருத்தொண்டர் சதகம் நூறு: ஈங்கோய் மலை (மாலை) எழுபது, கார் நாற்பது (மாலை) - என்பனபோல் அமையும். இன்னும் விரித்தால், பொருள் முதலிய நான்காலும் வரும் மாலை நான்கு, மஞ்சரி நான்கு, காஞ்சி மாலை நான்கு, முல்லை நான்கு, கலி நான்கு, சதகம் நான்கு - ஆக இருபத்து நான்கு பிரபந்த வகைகள், இவ்வாறு கொள்ளவே, முற்கூறிய விரிவுகளையும் கூட்டிப் பார்க்கும்போது பிரபந்தங்கள் 96 என்று அமையக் காணலாம். இதை எண்ணிட்டுத் தனியே அட்ட வணையில் காட்டியிருக்கிறோம். ஆகவே மரபியலாசிரியர் பிர பந்தம் 96 என்று தொகை சொன்னதோடு, 96ஐயும் விளக்கி யுரைத்திருக்கிறார் என்றே நாம் கருதவேண்டும்.

இனி 96 பிரபந்தங்களோடு வரையறை முடிந்துவிட்டது என்று கருதலாகாது. பின்னும் பிரபந்தங்கள் எண்ணற்றன தோன்றியுள்ளன. இனியும் தோன்றிக் கொண்டேயிருக்கும். இது இயல்பு.

### பிரபந்த மரபியலும் சிதம்பரப் பாட்டியலும்

பிரபந்த மரபியலை ஆராயும்போது, இதற்கும் 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய விருத்தப்பாவாலான சிதம்பரம் பாட் டியலுக்கும் முழு ஒற்றுமை இருப்பது தெரிகிறது. இரண்டிலும் சொல்லப்பட்ட பிரபந்தங்களையும் பொருளையும் அவற்றின் ஒற்றுமையையும் ஓர் அட்டவணையாகக் காட்டியிருக்கிறோம். இது குறித்துச் சில செய்திகள் இங்கு சொல்லத்தகும்.

பெரும்பான்மையான பிரபந்த இலக்கண நூல்கள் அமைந் துள்ளமைபோல, இவ்விரண்டும் பிள்ளைத்தமிழை வைத்தே தொடங்குகின்றன. பிரபந்தங்களின் வரிசையமைப்பு மற்றவற்றில் எப்படி இருந்தபோதிலும், இவ்விரண்டிலும் முழுமையும் ஒன்றா கவே இருக்கின்றன. இரண்டும் பரணி பெருங்காப்பியம் புராணம் என்றே இவ்வரிசையை முடிக்கின்றன. புராணத்தைச் சொல்லும்

*பாட்டியல் நூல்கள் இவ்விரண்டும் வெண்பாப் பாட்டியலுமே; மூன்றும் புராணத்தை இறுதிப் பிரபந்தமாகக் கூறி முடிக்கின்றன.*

*பிரபந்தங்களின் தொகை பிரபந்தமரபியலிலும், சிதம்பரப் பாட்டியலிலும் ஒன்றாகவே உள்ளன. வருக்கக் கோவை என்ப தொன்று மட்டும் முந்தியதில் சொல்லப்படுகிறது. பிந்தியதில் இல்லை. பொருள் இடம் காலம் தொழில் என்னும் நான்கினுள் ஒன்று பற்றி 30, 40, 70, 90, 100 வெண்பா அல்லது தனித் துறை யால் பாடுவது அவ்வெண்ணால் மாலை, மஞ்சரி, காஞ்சி மாலை, முல்லை, கலி சதகம் என்று பெயர் பெறும் என்று பிரபந்த மரபியல் கூறுகிறது. அப்பேரால் மாலையும், எண்ணாலும் மருவும் பேராம் என்று மட்டும் சிதம்பரப் பாட்டியல் கூறுகிறது. மாலை மஞ்சரி முதலான பெயர்களைச் சொல்லவில்லை; இரண்டுக்கும் வேறுபாடு இவ்வளவே. பிரபந்தங்களைச் சொல்லு மிடத்து இரண்டில் வரும் சொற்களும் தொடர்களும் முழுமை யும் ஒன்றாயிருக்கக் காண்கிறோம். எடுத்துக்காட்டாகப் பரணி பிரபந்தத்தைக் குறிப்பிடுவோம். மரபியல் 19ஆம் பா பின்வருவது:*

படைபுக்கு ஆயிரம் பகடற ஒன்னார்
போரில் எதிர்ந்து பொரும் அர சனுக்குக்
கடவுள் வாழ்த்துக் கடைதிறப்புப் பாலை
நிலம் காளிகோட்டம் நிலைஇய கழுது
காளிக்குப் பேய்சொலல், அப்பேய்க்குக் காளிசொலல்
அதனால் தலைவன் கீர்த்தி அருளுதல்
அவன் செலல் புறப்பொருள் தோன்ற ஆர்ப் பரித்துப்
போராடல் பொருகளம் விரும்பல் – இவற்றை
நாற்சீ ராதியின் நண்ணும்ஈ ரடியின்
ஏறாது பரணி இயம்பல் நெறியே.

*சிதம்பரப் பாட்டியலின் 41ஆம் விருத்தம் பரணி இலக்கணம் கூறுகின்றது:*

படைபுக் காயிரம் வேழம் எதிரார் போரிற்
படப்போர்செய் தானுக்குக் கடவுள் வாழ்த்துக்
கடைதிறப்புப் பாலை நிலம் காளி கோட்டம்
கழுதுநிலை காளிக்குப் பேய்ச்சொல் பேய்க்குத்
தொடர்காளி சொல்லதனால் தலைவன் கீர்த்தி
சொல்லலவன் சேறல்புறப் பொருள்தோன் றப்போர்

அருதல்களம் விரும்பல்இவை நாற்சீ ராதி
அடிஇரண்டி லேறாமல் பரணி பாடே.

இரண்டையும் ஒப்புநோக்குமிடத்து, சொல் தொடர் கருத்து ஒற்றுமை எத்துணை அதிகமாயுள்ளது என்பது நன்கு விளங்கும். இது மட்டுமல்ல; பரணியின் இறுதிப் பகுதியில் கூறப்படும் உறுப்புக்களாகிய கூழடுதல் கூழ் வார்த்தல், தலைவனை வாழ்த்துதல் என்ற பகுதிகள் இரண்டிலுமே சொல்லப் பெற வில்லை. இங்கு காட்டிய ஒற்றுமைகளால் ஒரு கருத்துத் தெளி வாகும். அதாவது நூற்பாவாலான பிரபந்த மரபியல் முதலில் தோன்றியது, அதைப்பார்த்து, அதை முழுமையும் தழுவி, பரஞ் சோதியார் தமது சிதம்பரப் பாட்டியலைச் செய்தார் என்பது. தொடர்ந்து மேலும் இக்கருத்துக்களைக் கூறிமுடிப்போம்.

பிரபந்தங்களைக் கூறி முடித்தபின் பிரந்த மரபியலானது, நூலுக்குப் பெயர் அமையும் முறை, கையறம், வாழ்த்து, கவிஞன் இலக்கணம், கவியைக் கேட்டற்சிறப்பு, பரிசில் வழங்காதவன் அழிவு, குற்றம் உடைய பாட்டு, குற்றம் இல்லாத என்ற பொருள் களைப் பேசுகிறது. இவற்றைச் சிதம்பரப் பாட்டியலும் அப்படியே பேசுகிறது. நாற்சாதிக்குரிய பா, நாற்பாலுக்குமுரிய நிலம் நிறம் நாள் இராசி கோள், நால் வகைக் கவிஞர், தமிழ்க் குலப்பெண், அவள் சுற்றத்தார் என்று அந்நூல் கூறும் பொருள்களைச் சிதம்பரப் பாட்டியலின் மரபியல் கூறவில்லை. வேறுபாடு இவ் வளவே. கவிஞன் பரிசில் பெறாது இதயம் நொந்தால் பாடல் பெற்றவன் அழிவான் என்று அகத்தியர் நூல் கூறுகிறது என்று இந்நூல் கூறுகிறது (34):

இங்ஙனம் இயற்றாது இதயம் நொந்துகொண்டு
இருக்கினும் கிளையொடும் இறுதி யாவனென்று
ஓதினது அகத்தியர் உண்மை நூல் நெறியே.

சிதம்பரப் பாட்டியலும் இப்படியே சொல்கிறது (49):

ஈராறு திங்கள் தனில் இறுதியாவன்
தொடர்ந்து செயா துளம்நொந்தால், சுற்றத்தோடும்
தொலைவன், இஃதுண்மை அகத்தியன் தன் சொல்லே.

இரண்டு நூல்களும் இக் கருத்து அகத்தியர் தம் நூல் என்கின்றன. அகத்தியர் நூல் என்பது 8ஆம் நூற்றாண்டில் இருந்த அகத்தியர் செய்த பாட்டியலாகும். எனவே இவ்விரு நூல்களும் அகத்தியர் நூல் வழி வந்தன என்பதும் தெரிகிறது.

காலமும் ஆசிரியரும்

சொல் தொடர் கருத்து ஒற்றுமையாலும் பொருள் வைப்பு முறையாலும் பிரபந்த மரபியலைத் தழுவியே சிதம்பரப் பாட்டியல் செய்யப் பெற்றது என்று முன்னமே காட்டினோம். இப்பாட்டியல் செய்த பரஞ்சோதியாரின் தந்தையான திருமலை நாதர் சிதம்பரப் புராணத்தைச் சகம் 1430இல் (கி.பி. 1508) செய்தார் என்று அந்நூற்பாயிரம் கூறுகிறது. இதுகொண்டு பரஞ்சோதி காலம் 1525 - 1550 என்று நாம் கருதுவது பொருந்தக் கூடும். இதன்படி பார்க்கும்போது, பிரபந்த மரபியல் இதற்கு முற்பட்டது என்று மட்டும் சொல்லலாம்.

மற்றுமொரு குறிப்பு. வெண்பாப் பாட்டியல் (43) 'குலவரவு காரிகை யாப்பிற் புராணமே யாம்' என்று கூறுகிறது. 'குலவரவு முதலாயினவற்றைக் காட்டுவது புராண கதையாம்' என்பது அதன் உரை. குலவரவு காரிகை யாப்பிற் சொல்லிய தனியான பழைய நூல் இல்லை; கம்பராமாயணத்தில் தான் 'குலமுறை கிளத்து படலம்' என்ற ஒரு பகுதி உண்டு; அது விருத்தப்பா, ஒரு பெரு நூலின் பகுதி; காலம் 9ஆம் நூற்றாண்டு. ஒருகால் இதைக் கருத்தில் இருத்தி வெண்பாப் பாட்டியலுடையார் (12 நூ.) குல வரவு காரிகை யாப்பில் பாடினால் புராணமாகும் என்று சொன்னார் போலும். முன்னுள்ள பாட்டியல்களான பன்னிரு பாட்டியலும் நவநீதப் பாட்டியலும் புராணத்தைச் சொல்ல வில்லை. பெருங்காப்பியத்தைத் தொடர்நிலைப்பாட்டு என்று பன்னிரு பாட்டியல் கூறுகிறது; வெண்பாப்பாட்டியலும் நவநீதப் பாட்டியலும் விரிவாகக் கூறுகின்றன. ஆனால் பெருங்காப்பியத் தன்மை குறைந்தால் அக் காப்பியம், புராணமாய்க் கருதப்படும் என்று பிரபந்த மரபியலும் சிதம்பரப் பாட்டியலும் கூறுகின்றன; காலம் 16ஆம் நூற்றாண்டு. இந்த நிலைமையைச் சிறிது ஆராய்தல் பொருந்தும்.

பன்னிரு பாட்டியலின் காலத்தில் புராணம் இல்லை. வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியல் செய்த காலத்தில் குலமுறை கிளத்துபடலம் ஏற்பட்டிருந்தமையால் அதன் ஆசிரியர் காரிகை யாப்பில் வந்தால் அதைப் புராண மாகக் கொள்ளலாம் என்றார். நவநீதப் பாட்டியலுடையார் புராணத்தைச் சொல்லவில்லை. ஆனால் அடுத்து வந்த பிரபந்த மரபியலுடையாரும், சிதம்பரப்பாட்டியலுடையாரும் புராணத் தைச் சொல்கிறார்கள். இடைப்பட்ட காலத்தில் சிறந்த சைவ

புராணங்களான கந்தபுராணமும், திருவாதவூரடிகள் புராணமும் தோன்றியிருந்தன. சைவரான இவ்விரு பாட்டியலுடையாரும், இந்த நிலைமையையும் கருத்தில் கொண்டு புராணத்தையும், பிரபந்த வகையுள் கூட்டிக் கொள்வதற்கு இவ்வாறு ஓர் அமைதி கண்டார்கள் என்று தோன்றுகிறது.

சிதம்பரப் பாட்டியலுடையார் புராணத்தைக் குறிப்பிடு கிறார். அவருடைய தந்தை புராணத் திருமலை நாதர் பெரிய தாகிய சைவ மகாபுராணம் பாடினார். ஒருகால் அவரே புரா ணத்தையும் இலக்கண மரபுக்குள் அமைக்க வேண்டுமென்று கருதி, பிரபந்த மரபியல் செய்து அதனுள் புராணத்தைக் கூறி னாரோ என்ற கருத்து நமக்கு எழுகின்றது. இதற்கு ஆதாரம் இதை முழுமையும் அடியொற்றிப் பரஞ்சோதி தம் சிதம்பரப் பாட்டியல் செய்திருப்பதாகும். பிறர் நூலை இவ்வாறு அடி யொற்றிச் செய்வதைவிடத் தம் தந்தை நூலைத் தழுவிச் செய்வது இயல்பு. இது மேலும் சிந்திக்கத்தக்க பொருள்; முடிவான கருத் தன்று. அல்லது பரஞ்சோதி பிரபந்த மரபியல் செய்தவருடைய நேர்மாணாக்கராய் இருக்கலாம். எப்படியும், பிரபந்த மரபியலை உடன் அடுத்துத் தோன்றிய நூலென்று சிதம்பரப் பாட்டியல் கொள்ளத்தக்கது ஆதலாலும், இதன் காலம் கி.பி. 1525 - 50ஆதல் கூடும் ஆதலாலும், பிரபந்த மரபியல் செய்யப் பெற்றகாலம் 1500 - 25ஆதல் பொருந்தும்.

## பரஞ்சோதி - சிதம்பரப் பாட்டியல்

### ஆசிரியர்

தமிழில் சமய இலக்கிய மரபில் பரஞ்சோதி என்ற பெயர் பலமுறை பயில்கின்ற பெயர்களுள் ஒன்று. அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவராய்ச் சிறுத்தொண்டர் என்று பிரசித்த மாகப் பெயர் வழங்கிய நாயனார், திருச்செங்காட்டங்குடி 'பலர் புகழும் திருநாமம் பரஞ்சோதியார்' என்பார். காலம் 7ஆம் நூற்றாண்டு. கயிலாயத்திலிருந்து திருவெண்காட்டு எல்லையில் ஆகாய வீதிவழியே சென்று கீழே விளையாடிய அச்சுதகளப் பாளரின் குழந்தையைக் கண்டு அதற்கு ஞானோபதேசம் செய்து மெய்கண்டார் என்ற திருநாமமும் சூட்டிச் சென்ற யோகியர் பரஞ்சோதி என்ற பெயருடைய முனிவர் (காலம் 13ஆம் நூற் றாண்டு என்றே இப்போது கொள்ளத்தக்கது), பின்னால் மதுரைச் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல்களைப் புராணமாகப்

பாடியவர் ஒரு பரஞ்சோதி முனிவர் (காலம் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கம்). நாம் இங்கு கருதும் பரஞ்சோதியார், இவர்களினும் வேறாய் இலக்கணம் செய்த ஒரு சிறந்த புலவர், காலம் 16ஆம் நூற்றாண்டு.

சிதம்பர புராணம் பாடிய புராணத் திருமலைநாதர் தில்லையம்பதியில் வாழ்ந்து வந்த காலத்தில் அவருடைய புதல்வராய்ப் பிறந்து இலக்கிய இலக்கணப் புலமை வாய்ந்திருந்தவர் பரஞ்சோதியார் என்பவர். திருமலைநாதர் கச்சிஞானப்பிரகாசரது மாணாக்கர். ஞானப்பிரகாசர் துறவியாயினும், இல்லறத்தார் பலர் அவருடைய சீடராயிருந்தார்கள். அவர்களில் திருமலைநாதரின் பரம்பரையும் ஒன்று. மடத்தில் ஞானபீடத்தில் தலைமை பூண்டவர்கள் இயற்பெயர் யாதாயிருப்பினும், அபிடேகப் பெயர் ஒன்றாயும், ஆசாரியப் பெயர் ஞானப்பிரகாசர் என்பதாகவுமே இருந்தன. தம் தந்தையாருக்கு ஆசாரியராய் இருந்த ஞானப்பிரகாசருடைய மாணாக்கராய் அடுத்த பதவிக்கு வந்த தத்துவ ஞானப் பிரகாசர் என்ற ஆசாரியரிடம் இவர் மாணாக்கராய் வாழ்ந்தார். அவருடைய கட்டளையின்படியே இவர் சிதம்பரப் பாட்டியல் செய்தார். இதை 'மெய் கண்டான் கச்சிப் புகழ்புனை தத்துவப் பிரகாசமாய் வந்து பரமன்ன உரை என்ன அவனருளால் அவன்தன்பதம் பரவிச் சிதம்பரப் பாட்டியலெனப் பேர் வகுத்தான்' என்ற சிதம்பரப் பாட்டியல்* பாயிரத்தால் அறியலாம். இக்குறிப்புக்களையன்றி, இவரைக் குறித்த பிற வரலாறுகள் விளங்கவில்லை. வேறு இவர் செய்த நூல் எதுவும் தெரியவில்லை.

### நூல்

சிதம்பரப் பாட்டியல் என்பது, இவ்வாசிரியர், சிதம்பரத்தில் தங்கி, இவரது தந்தையார் சிதம்பர புராணம் பாடிய காலத்து இளமையில் உடன் இருந்து, சிதம்பரம் நடராசப் பெருமானை வழிபட்ட நினைவால் பெயர் அமைக்கப்பட்டது போலும்,

> பூமேவு திசைமுகனும் செங்கணெடு மாலும்
> புத்தேளிர் கணங்களுமா தவத்தோரும் போற்றத்
> தேமேவு குழலுமையாள் கண்டுவப்ப மன்றில்
> திருநடம்செய் பேரொளியைச் சிந்தைதனில் வைத்து

---

* சிறப்புப் பாயிரப் பாடல்கள் 'பூமன்னுபொழில்', 'சிதம்பரப் பாட்டியலைச் செய்தான்' என்ற தொடக்கமுடைய இருபாடல்கள். இவற்றைப் புராணத் திருமலை நாதர் என்ற தலைப்பில் காண்க.

காமேவு கனியென்னக் கொழுஞ் செழுந்தே னென்னக்
கடலமுத மென்னமிளிர் கனித்துவர் வாய்மாதே
பாமேவு தமிழ்ப்பொதியக் குறுமுனிவன் கூறும்
பாட்டியலைச் சுருக்கமதாய்ப் பகர்ந்திடுவன் யானே.

என்று உறுப்பியல் முதல் பாடலில் கூறுவது காண்க. பாட்டியல் என்பது, தொல்காப்பியத்தின் பின்வந்த ஒரு புது இலக்கண நெறியாகும்.* தனிநிலைச் செய்யுள் செய்வதற்கான இலக்கணத்தைக் கூறுவது செய்யுளியல்; தொல்காப்பியச் செய்யுளியல் முதலிய பகுதிகள் இந்த நெறியில் எழுந்த இலக்கணங்களாகும். யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை முதலியன இது பற்றிய முழு இலக்கண நூல்கள். சங்க காலத்தையடுத்தும், 8 - 9ஆம் நூற்றாண்டின் பின்னும் தொடர்நிலைச் செய்யுட்கள் பலவாக வளர்ந்தன. இவற்றுக்கு இலக்கணம் வரையறுக்கும் முறையில் பாட்டியல் நூல்கள் தோன்றின. இவை இன்று வழக்கிலுள்ளனவும் வழக்கு இறந்து போயினவும் ஆகப்பல. முதலில் தோன்றியவை நூற்பாவிலும், பின்னர் முறையே வெண்பா கட்டளைக் கலித்துறை விருத்தம் என்ற யாப்புக்களிலும் இவை செய்யப் பெற்றிருந்தன என்று அறிகிறோம்.

இன்று கிடைக்கும் பாட்டியல் நூல்களுள் காலத்தால் பழமையானது பன்னிருபாட்டியல் (10ஆம் நூற்றாண்டு) என்று தெரிகிறது. அடுத்து வெண்பாவில் வச்சணந்தி மாலையும் (12ஆம் நூற்றாண்டு) கட்டளைக் கலித்துறையில் நவநீதப் பாட்டியலும் (14ஆம் நூற்றாண்டு), விருத்தப்பாவில் சிதம்பரப் பாட்டியலும் (16ஆம் நூற்றாண்டு) தோன்றின. பாட்டியல் நூல் அகத்தியர் செய்தார் என்ற கருத்து ஆசிரியர்களால் சொல்லப்பெறும். அந்த முறையில் பரஞ்சோதியாரும் 'பாமேவு தமிழ்ப் பொதியக் குறுமுனிவன் கூறும் பாட்டியலைச் சுருக்கமதாய்ப் பகர்ந் திடுவன் யானே' என்று கூறுவர். 'இஃதுண்மை அகத்தியன் தன் சொல்லே', என்றும், 'அகத்தியன் சொல் எழுத்து முதற் குற்றம்' என்று பின்னரும் சொல்வார் (46, 47).

சிதம்பரப் பாட்டியலானது, தனிநிலையும் தொடர்நிலையுமான செய்யுட்களின் இலக்கணத்தைக் காலத்துக்கேற்ப விரித்துச் சொல்வது. நூல் பாயிரப் பகுதியில் 4 வெண்பாக்களும் ஒரு வெண்சீர் விருத்தமும், பிற பகுதிகளில் 47 எண்சீர்க் கழிநெடிலடி

* இது பற்றிய விளக்கங்களை எமது தமிழ் இலக்கிய வரலாறு 8, 9,13, 14 நூற்றாண்டு வரலாறுகளில் காணலாம்.

யாசிரிய விருத்தமும் கொண்டது, நூல் முழுமையும் அந்தாதித் தொடை; கற்போர் எளிதில் நினைவில் வைத்திருக்கும் பொருட்டு இவ்வாறு செய்யப் பெற்றுள்ளது. உறுப்பியல், செய்யுளில், மொழியியல், பொருத்தவியல், மரபியல் என்று ஐந்து இயல் களைக் கொண்டது. முதல் மூன்று இயல்களும் தனிநிலைச் செய்யுள் இலக்கணமும், பின் இரு இயல்களும் தொடர்நிலைச் செய்யுள் இலக்கணமும் கூறும். உறுப்பியல் - 6 செய்யுள் எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பாஇனம் இவை கூறுவது. செய்யுளியல் 5 செய்யுள்; பாக்களின் வகையும் பாவினங்களும் கூறும். ஒழிபியல் - 5 செய்யுள்; சிறப்பு விதிகள் கூறுவது. பொருத்த இயல் - 11 செய்யுள்; முதல் மொழிப் பொருத்தம் முதலான சம் பிரதாயமான பொருள்களைக் கூறும். மரபியல் - 20 செய்யுள்; பிரபந்தவகைகளும் இலக்கணங்களும் கூறும். பிரபந்தம் என்ற பெயர் இங்கு சொல்லப்படவில்லை. பிரபந்தங்கள் 96 என்பது பொதுவாய் மிகவும் பிற்கால வழக்கு. சிதம்பரப் பாட்டியல் கூறுவது 57 பிரபந்தங்களே.

இலக்கண ஆசிரியர் மகடூஉ முன்னிலையாகச் செய்யுள் செய்வது ஒரு மரபு. யாப்பருங்கலக் காரிகையிலும் வீரசோழி யத்திலும் இதை மிகுதியாகக் காணலாம். பரஞ்சோதியாரும் சில பாடல்களை இவ்விதம் அமைத்திருக்கிறார். பாடுபவன் குற்றம் வரப் பாடினால் வரும் கேடுகளை இவர் 44 - 47 செய்யுட்களிற் கூறுகிறார்; இவை பிங்கல நிகண்டிலும் சொல்லப்பட்டுள்ளன.

இந்நூலின் முதற்பகுதிக்கு, அதாவது தனி நிலைச்செய்யு ளிலக்கணம் கூறும் மூன்று இயல்களுக்கும், சிறப்பான உரை யொன்று உண்டு; பிந்திய இரு இயல்களுக்கும் உரை இல்லை. நூலாசிரியரே இவ்வுரை செய்தார் என்று கருத இடமுண்டு. (அல்லது அவருடைய மாணாக்கர் செய்திருக்க வேண்டும்.' உரையுள் தொல்காப்பியம் நன்னூல் என்று இக்காலம் உள்ள நூல்களை இவர் குறிப்பிட்டாரேனும், இறந்து போன நூலாசிரியர் களான அகத்தியனார், அவிநயனார், மாபுராணமுடையார், நற் றத்தனார் போன்றாரையும் இவர் குறிப்பிடுகிறார். இவர்கள் செய்த நூல்கள் 12 நூற்றாண்டுக்குப் முன்னதாகவே மறைந்து போயின. பரஞ்சோதியாருக்குப் பின்னர் நூலைத் தெரிந்து குறிப் பிடுபவர் யாரும் இலர். ஆதலால் இவர்களைக் குறிப்பிடும் உரை பிற்கால உரையன்று; பரஞ்சோதியாரே செய்திருக்க வேண்டு மென்பது உறுதி.

ஆசிரியர் சிறந்த சைவர் என்பதைத் தம் உரையுள் திருவிருக்குக்குறள், ஈரடி முக்கால் என்ற சம்பந்தர் செய்யுள் விகற்பங்களையும் திருவெம்பாவை என்ற மாணிக்கவாசகர் பாடலையும் குறிப்பிடுவதால் நன்குணரலாம். கலையாற்பெயர் பெற்றது வெண்பாவிலுள்ள ஈரடிமுக்கால் முதலாயினவும் சாரம் முதலாயினவும் என்று இவர் கூறுமிடத்து, அச்சுச்கலை சாரம் என்ற நூல்கள் யாவை என்பது விளங்கவில்லை.

செய்யுளைக் குறித்த சூத்திரங்களின் உரையில் பெரும்பான்மை முன்வந்த யாப்பருங்கலம் போன்ற நூல் பகுதிகளையும் அவை காட்டும் மேற்கோள் பாடல்களையும் மட்டுமே எடுத்துத் தருகிறார்.

நூலில் மகடூஉ முன்னிலைச் செய்யுளும் உண்டு; முன் காட்டிய பூமேவு திசை முகனும் என்ற பாடல் பார்க்க.

**காலம்**

இவர் தந்தையாகிய புராணத் திருமலைநாதர் 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் நூல்கள் செய்தார் என்று நிறுவப் பெற்றுள்ளது. ஆதலால் இவர் காலம் அதே நூற்றாண்டின் இடைப்பகுதி என்று சொல்வது பொருந்தும்.

**பதிப்பு**

சிதம்பரப் பாட்டியல், மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு, மு. ராகவையங்கார் பதிப்பு 1932.

## இரத்தினச் சுருக்கம்

உவமான சங்கிரகம்* என்பது தமிழில் கவிதை புனையும் புலவர்களுக்கு உதவும்படியாகப் பெண்களினுடைய அங்க வருணனைக்கு ஏற்றவாறு அவர்களுடைய உடல் உறுப்புக்களுக்கு ஏற்ற உவமைகளைத் தொகுத்துச் சொல்லும் நூலாகும். சுருக்கிச் சொல்வதால் சங்கிரகம் என்று பெயர். இவ்வாறு செய்யப்பட்ட நூல்கள் நான்கு கிடைக்கின்றன. அந்நான்கையும் கால முறைப்படி பின்னே ஒரு அட்டவணையாகத் தந்துள்ளோம்.

தொல்காப்பியம் கூறும் தமிழ் இலக்கணத்துள் மூன்றாம் பகுதியான பொருளதிகார இயல்கள் பிற்காலத்தில் தனிப் பிரிவு

---

* உவமான சங்கிரகம் பற்றிய ஒரு குறிப்பு எமது தமிழிலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு.

களாக வளர்ந்தன. செய்யுளியலின் ஒரு பகுதி பாட்டியலாக விரிந்தது. அங்ஙனமே, இதனோடு நெருங்கிய தொடர்புடைய உவமவியற் கருத்துக்களின் ஒரு பகுதி 'உவமான சங்கிரகம்' என்ற நூலாக வளர்ந்தது. உவமம் நான்கு வகையாகத் தொல்காப்பியம் கூறும். ஆனால் உவமான சங்கிரகம் இவற்றைக் கருதாது, பெண்களின் அங்க வருணனைக்கான உவமைகளை மட்டும் தொகுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

இவ்வாறு தோன்றிய நூல்களில் நாம் இங்கு காணுகின்ற இரத்தினச் சுருக்கம் என்பது இரண்டாவது நூலாகும். இதனுள் கட்டளைக் கலித்துறை, வெண்பா, விருத்தம் ஆகிய மூவகைப் பாடல்களும் உள்ளன. இதை 1874ஆம் ஆண்டு விவேக விளக்க அச்சுக்கூடப்பதிப்பு முதல் கடைசியாக வெளிவந்த ஆறுமுக நாவலர் அச்சுக்கூடப் பதிப்புக்கள் வரையில் எல்லாப் பதிப்புக் களும் புகழேந்திப் புலவர் செய்ததாகவே அச்சிட்டு உள்ளன. புகழேந்திப் புலவர் நளவெண்பா செய்தவர். அவர் இந்த உவமானம் கூறும் நூலைச் செய்தார் என்று கொள்ள இடமில்லை. அவருக்குப் பிறகு மூன்று நூற்றாண்டுகள் கழித்து ஒரு புலவர் வாழ்ந்து இச்சிறு நூல் செய்திருக்கலாம். அல்லி அரசாணிமாலை முதலிய அம்மானை பாடல்கள் புகழேந்திப் புலவர் தலையில் சுமத்தப்படுவது போலவே இந்த நூலும் அவர் செய்தார் என்று சொல்லப்பட்டுள்ளது. இதன்காலம் மிகவும் பிற்பட்டதாகும். ஒருகால், இது செய்த ஆசிரியருக்கும் அதே பெயர் அமைந் திருப்பதில் தவறில்லை; இவர் மற்றொரு புகழேந்தி என்று கொள்வதே முறை.

1874ஆம் ஆண்டுப் பதிப்பில் 28 பாடல்களே உள்ளன பின்னர் அச்சிட்ட காலரத்நாகரப் பதிப்பில் (ஐந்தாம் பதிப்பு 1908) 71 பாடல்கள் உள்ளன. இந்த 71ஐயும் பின்னால் நாவலர் அச்சுக்கூடப் பதிப்புக்கள் அப்படியே வெளியிட்டு வருகின்றன. ஆனால் கலாரத்நாகரப் பதிப்பில் 'பழைய பிரதிகளுக்குள்ளே சிலவற்றுள் 28 பாடல்களும், சிலவற்றுள் 71 பாடல்களும் இருக்கிறபடியால், அவ்வேறுபாடு தோன்ற நடுவே கீற்று வைக்கப் பட்டிருக்கிறது என்ற ஒரு குறிப்பு'* உள்ளது. இக்குறிப்பு பிற பதிப்புக்களில் நீக்கப்பட்டுள்ளது.

---

* இக்குறிப்பு, நூல்களை அச்சிடுவதில் கலாரத்நாகர அச்சுக்கூடம் புஷ்பரதச் செட்டியார் எவ்வளவு சிரத்தை காட்டினார் என்பதை நன்கு புலப்படுத்துகிறது.

இரத்தினச் சுருக்கம் உவமை கூறுவதுடன் கூடவேறு பொருளையும் கூறுகிறது என்பதே அதற்குரிய தனிச்சிறப்பு. நூலின் 71 பாடல்களும் அந்தாதியாய் வருகின்றன; மண்டலிக்க வில்லை. முதல் இரு பாடல்கள் தலைவனைப் பிரிந்த தலைவியின் பிரிவாற்றாமைக்கான குறிகள். அடுத்தது அவளுக்குப் பகையாய் விட்ட பத்துப் பொருள்கள். அடுத்த பாடல்கள் அவள் நீக்கும் செயல்கள், அவள் துயரத்தை மிகைப்படுத்தும் பொருள்கள், தூது விடுவதற்கான பொருள்கள். கடைசிப் பொருள் பற்றிய பாடல் நன்கறிந்த பாடல்:

**இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை**
**பயம்பெறுமே கம்பூவை பாங்கி – நயந்தகுயில்**
**பேதைநெஞ்சம் தென்றல் பிரமரமீ ரைந்துமே**
**தூதுரைத்து வாங்குந் தொடை.**

இவற்றின்பின் மன்மதனுக்குரிய மாலையும் பிற கருவிகளும் கணைகளும். கணைகளின் செயல் நன்கறிந்த பாடல்:

**நினைக்கும் அரவிந்தம்; நீள்பசலை மாம்பூ;**
**அனைத்துணவு நீக்கும் அசோகு; – வனத்திலும்**
**முல்லை கிடைகாட்டும்; மாதேம் முழுநீலம்**
**கொல்லும், மத னம்பின் குணம்.**

இவற்றின் பின்னரே உவமானம் தொடங்குகிறது. இப்பகுதி மட்டும் 17 வெண்பாக்கள். இவற்றின் பின் பல செய்திகள் சொல்லப்படுகின்றன. மகளிர் விளையாட்டுக்குரியவை, அவர் முன் இசைக்கும் வண்டு முதலியன, தூதுக்குரியன, பாணர் பெறுவன. இதுவரையில் அகப்பொருளைக் கொண்டவை.

இனி பல்பொருட் செய்திகள் - நவரசம், பஞ்சவாசம், பஞ்ச சயனம்; மணம் எட்டு, முத்துப் பிறப்பிடம் இருபது, திருமகள் இருப்பிடம், பின் மன்மதன் கணை எய்யும் இடங்கள், அவனுடைய நகர்; பெண்களின் கைத்தொழில். இது 'எண்ணல், எழுதல், இலை கிள்ளல், பூத்தொடுத்தல்' என்ற பழம் பாடலைத் தழுவியது. பெண்களின் பருவம் - இவை ஏழும் முறையே 7, 9, 11, 15, 18, 21, 32 என்ற ஆண்டுகள் எனச் சொல்ல வந்த ஆசிரியர், இவ்வெண்களுக்குரிய தொகைப் பெயராக அமைத்திருப்பது சுவையுடையது:

வாரிமணி வெய்யோன் மதிபா ரதம்வள்ளல்
சீரின் அறம் வளர்க்கும் செய்கைதான் – நாரிகேள்
பேதை முதலாகப் பேரிளம்பெண் ணீறாக
ஈதெழுவர் தம்பருவம் எண்.

(வாரி - கடல் 7; மணி - நவமணி 9; வெய்யோன் - ஆதித்தர் பதினொருவர்; மதி - சந்திரன் நாள் 15; பாரதம் - 18 நாள் போர்; வள்ளல் - மூவெழுவர் 21; அறம் - 32.) பின் மகளிர் செயலால் மலர்கின்ற மரங்கள், ஐந்திணை, அட்டபோகம், சிற்றின்பம், பேரின்பம், ஐசுவரியம், உபசாரம், பேறு, அறம், தசாங்கம், அட்ட மங்கலம் என்ற பொருள்கள். இவற்றின் பின் ஆடவர் மடவாருக்குச் சிறப்புவமைகள் இரண்டு பாடலில் சொல்லப் படுகின்றன.

இவற்றின் பின் தெய்வங்களின் பெருமை, சிவபெருமான் ஆறு கட்டளைக் கலித்துறை, விநாயகர் இரண்டு வெண்பா, முருகன் இரண்டு வெண்பா, திருமால் நெடில் விருத்தம் முடுருகு விருத்தம் வெண்பா 4, பிரமன் 1 வெண்பா. பின் இறுதிப் பாடலால் இவற்றை நன்குணர்ந்து தொடுக்க வல்லார் சிறப்புப் பெறுவர் என்று முடிக்கிறார். இது கவிபாடும் புலவர்களுக்குப் பயன்படத்தக்கதாகச் செய்யப்பட்டது என்பது தெளிவு. 13ஆம் நூற்றாண்டின் பின் பிரபந்தங்கள் பெருகலாயின. உலா தூது மடல் போன்ற பிரபந்தங்கள் விரிந்தன. உலா ஏழு பருவ மகளிரை வருணிப்பது, தூது, தலைவி தூது அனுப்புவதாக அமைந்தது, மடல் தலைவியின் பொருட்டுத் தலைவன் மடல் ஏறுவதாகக் கூறுவது. இவை அனைத்திலும் பெண்களின் அங்க வருணனை முக்கிய பகுதி, பெரிய பகுதி. எனவே, இவ்வகைக் கவிதைகளை இயற்றுவோருக்கு உதவியாக உவமைகளை நினைவில் வைத்துச் செய்யுள் இயற்ற உதவும் பொருட்டு இவ் இரத்தினச் சுருக்கம் அந்தாதியாக அமைக்கப்பட்டிருக்கிறது என்பது தெரிகிறது.

| உவமான சங்கிரக நூல்கள் | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| எண் | நூற் பெயர் நூல் | காலம் எண் | பாடல் | யாப்பு முறை | பொருள் | பிற |
| 1 | உவமான சங்கிரகம் | 15 | 31 117 வரி | நூற்பா | பாதாதி கேசம் | |
| 2 | இரத்தினச் சுருக்கம் | 16 | 71 | கட்டளைக் கலித்துறை, வெண்பா, விருத்தம் | கேசாதி பாதம் | புகழேந்தி என்று வழங்கும். பல பொருள் களும் உள்ளன. |
| 3 | உவமான சங்கிரகம்* | 17 | 16 | வெண்பா அந்தாதி | கேசாதி பாதம் | |
| 4 | உவமான சங்கிரகம் | 18 | 37 | விருத்தம் | பாதாதி கேசம் | 27 பாடல் உவமானம் மற்றவை பிற பொருள். |

## திருக்குருகைப் பெருமாள் கவிராயர்

இந்நூற்றாண்டு வரலாற்றின் முதற்பாகத்தாலும் இவ் விரண்டாம் பாகத்தின் பிற அத்தியாயங்களாலும், இந்நூற் றாண்டில் பெரும்புலவர் பலர் வாழ்ந்தனர் என்று அறியலாம். அப்பெரும் புலவர் வரிசையில் இவரும் ஒரு பெரும் புலவ ராவார். இவர் நம்மாழ்வாரின் சிறந்த பக்தராய், அவருடைய ஊராகிய திருக்குருகூருக்குப் புராணம் பாடியதோடு, அவர் புகழாக அகப்பொருள், பா இலக்கணம், அலங்காரம் ஆகிய மூன்று இலக்கண நூல்களும் பாடியிருக்கிறார்; இவருடைய வரலாற்றை இங்கு கூறுவோம்.

### வரலாறு

திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பது இவருடைய பெயர். திருக்குருகைப் பெருமாள் என்பது, ஆழ்வார் திருநகரி

---

* இதில் காப்பு குருகூர் மாறன் துதி. ஸ்ரீவில்லிபுத்தூர்த் திருவேங் கடையர் செய்தது என்று குறிப்பிட்டிருப்பது பிழை ஆசிரியர் குருகை திருமேனி இரத்தின கவிராயர்.

என்று நம்மாழ்வார் பிறப்பினால் சிறப்புப் பெற்ற (திருக்குருகை) திருக்குருகூருக்குத் தலைவரான நம்மாழ்வார் என்று பொருள் படும். இங்கு கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள பெருமான் பொலிந்து நின்ற பிரான் என்றும் ஆதிபிரான் என்றும் பெயர் பெறுவார். நம்மாழ்வார் தமது திருவாய்மொழியின் சிறப்பினால் இந்நகருக்குத் தலைவராகி, திருக்குருகைப் பெருமாளும் ஆகி நார். அவ்வாழ்வாருடைய சந்நிதியில் நம் புலவர் கவிராயரா யிருந்தமையால் இவருக்குத் திருக்குருகைப் பெருமாள் கவி ராயர் என்று பெயர் வழங்கலாயிற்று.

இவருடைய இயற்பெயர் சடையன் என்பது; வேளாள குலம்; இவற்றை மாறனலங்காரப் பாயிரம் குறிப்பிடும். மருக்கமழ் சீரகத்தார் வணிகன் புகழ்த் - திருக்குருகைப் பெருமாள் கவிரா யன் - அருட் குணத்தான் வளர் சடையன் என்பது காண்க. இவர் பாடிய திருக்குருகை மான்மியத்தின் பதிகமும் இவர் பெயரைச் சடையன் - திருக்குருகைப் பெருமாள் என்று குறிப்பிடும்.

> இருக்கு முதற் பனுவலினால் இயற்றமிழ்தேர் நாவீறன்
> என்னும் மேன்மை
> அருட்புயலைப் புகழ்புலமைத் திருக்குருகைப் பெருமாள்பே
> ரன்பு கூறும்
> தருக்குலவும் பொழிற்குருகா புரிவணிகன் சடையனிதைத்
> தமிழாற் சாற்றித்
> திருக்குருகைப் பெருமாள்வண் கவிராசன் எனப் புனைபேர்
> சிறந்த தன்றே.

(வணிகன் - வைசியன்; வைசியர் வகை - பூவைசியர் கோவைசியர் தனவைசியர் என; இவருள் பூவைசியரே வேளாளர் என்பது ஒரு மரபு.) அன்றியும், இவரே பாடிய மாறனகப் பொருளின் சிறப்புப் பாயிரமிரண்டும் இவர் இயற்பெயர் சடையன் என்றே தெரிவிக்கின்றன. ஆசிரியப் பாவிலுள்ள முதற் பாடல், இறுதி யில், மாறனலங்காரச் சிறப்புப் பாயிரத்தின் இறுதி நான்கு அடி களை அப்படியே பெய்து கொள்கிறது. இரண்டாம் பாடற் கூற்றுப் பின்வருவது: மாறனகப் பொருளை வகுத்து உரைத் தான் ஆய்ந்து - சடையனெனும் இயற்பெயரோன் தமிழ் நாவீறன் சார்குருகைப் பெருமாள்சீர் வணிகன் தானே. மேலும், மாறன லங்காரவுரையுள், இயல்தோறும் இறுதியில் உள்ள பாடல், 'கவிராயராயன் சடையன் அன்பாற் புனையலங்காரம்' என்று சொல்வதும், இவர் இயற்பெயரையே எடுத்துரைக்கிறது.

சடையன் என்ற பெயர் சடகோபன் என்பதன் குறுக்கம் என்று மாறனலங்காரப் பதிப்பில் எழுதியிருக்கிறார்கள். இது அத்துணைப் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. வேளாள குடும்பங்களில் சடையன் என்ற பெயர் மிகவும் அதிகமாக வழங்குவது*, அந்த முறையிலே இவர் பெயரும் அமைந்துள்ளது; அவ்வளவே. பிற்காலத்தில் சடையன் என்பது பாட்டில் மிக்க அருமையோடு நம் சடைக்குட்டி என்று வரவும் காண்கிறோம். பின்வருவது கவிராயரைப் புகழ்ந்து, அவர் நூல்கள் பல செய்து புகழ் பெற்ற காலத்தில் எழுந்த ஒரு தனிப்பாடல்:

நேற்றுப் பிறந்து வரும்பாவி யான நிலாநெருப்புக்கு
ஆற்றும் படிதொங்கல் தந்தில னேஅருட் கூடற்சங்கம்
தோற்றும் படிசொன்ன சொல்நாற்பத் தொன்பதை ஐம்பதென்று
சாற்றும் திருக்குரு கைப்பெரு மாள்நம் சடைக்குட்டியே.

இவர் தந்தை பெயரும் திருக்குருகைப் பெருமாள் கவிராயரே: இவர்கள் வழிவழி ஆழ்வார் சந்நிதியில் கவிராயராயிருந்த வேளாள குலத்தார்; நம்மாழ்வாரே வேளாளரல்லவா?

நம் கவிராயரையன்றி மற்றொரு வேளாள வகுப்பினரும் திருக்குருகூரில் திருப்பணிமாலை படிக்கும் சுதந்திரங்களைப் பெற்று திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்ற பெயரையே உடையவர்களாய் அங்கு இன்றும் இருந்து வருகிறார்களென்று மாறனலங்காரப் பதிப்பு கூறும்; அவர்கள் நம்மாசிரியரினின்றும் வேறானவர்.

இவர் சமயத்தால் வைணவரென்பது சொல்ல வேண்டுவ தில்லை. தொட்ட இடமெல்லாம் திருமாலையே பரம் பொரு ளாகப் பாடுகிறார்; நம்மாழ்வார் புகழ்பாடுவதே பிறவி எடுத்ததன் பயன் என்கிறார். பின் வந்த இராமானுசரையும் மணவாள மாமுனிகளையும் வணங்கியிருப்பதால் இவன் தென்கலை வைணவரென்பது திட்டமாகத் தெரிகிறது.

இவர் செய்த நூல்களின் தன்மையை நோக்கும்போது இவர் இளமையில் சிறந்த இலக்கிய இலக்கணப் பயிற்சி பெற்றார் என்பது புலப்படும். இவர் தந்தையாரும் ஒரு கவிராயர். பின்னர்

---

* வேளாளர் அனைவரும் சைவராயிருந்தவர். மிகவும் பிற்காலத்தில் இவர் வைணவரானபோது பண்டைப் பெயரை வைக்கும் வழக்கமும் இருந்தது; அவ்வழக்கத்தைக் கைவிடவில்லை. சடையன் - சிவபிரான்.

அக்கால முறைப்படி இவர் ஒரு ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியரிடம் முறைப்படி பஞ்ச சம்ஸ்காரம் என்னும் தீட்சை பெற்று, சமய ரகசிய சாத்திரங்களும் திருமந்திரம் முதலியனவும் பகவத் விஷயமும் உபதேசிக்கப் பெற்றார். நம்மாழ்வார், ஆழ்வாருள் கடைசி; ஆனால் இவர் வேளாளர்; இவர் அவயவி என்றும், பிற ஆழ்வார்கள் அவயவங்கள் என்றும் சொல்வது வைணவ சம்பிரதாயம். இவர் ஆசாரியருள் முதலும் ஆவார். இவருக்குப் பின் பெருந்தகுதியுடையவர்களாய் ஸ்ரீவைணவர்களல்லாத ஆசாரியர் சிலரும் இருந்திருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக மாறனேர் நம்பி, திருக்கச்சி நம்பிகள், விளாஞ்சோலைப் பிள்ளை முதலியோரைக் குறிப்பிடலாம். இவர்களெல்லாம் ஆசாரியத் தகுதி பெற்றிருந்தவர்களேயன்றி, ஆசாரியர்களல்லர். வைணவ ஆசாரிய பரம்பரையில் பிராமணருக்கு மட்டுமே இடமுண்டு. மணவாளமாமுனிகளுக்குப் பின், பிராமணரல்லாதார், முன் கூறியவர்கள் போலப் பெருந்தகுதி பெற்றதில்லை. இம்மா முனிகளுக்கு அடுத்த நூற்றாண்டில் வாழ்ந்த நம் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் சம்பிரதாயப்படி ஒரு ஸ்ரீ வைஷ்ணவ குருவினிடம் சமய உபதேசம் பெறவேண்டியிருந்தது.

இவருக்கு ஆசாரியராய் அமைந்த ஞானாசிரியர், சீநிவாச ஜீயர் என்பவர். இவர் திருப்பதி மடத்திலிருந்து வந்தவர். ஆழ்வார் திருநகரில், மணவாள மாமுனிகளின் ஆசிரியரான திருமலை யாழ்வாரென்னும் திருவாய் மொழிப் பிள்ளையால் ஸ்தாபிக்கப் பெற்ற உடையவர் சந்நிதி எம் பெருமானார் ஜீயர் மடாதீன பரம்பரையில் இக்காலத்தில் அதிபராய் விளங்கியவர். இவர் திருமலையிலிருந்து சீநிவாசன் படத்தைக் கொண்டு வந்து இம் மடத்தில் வைத்தாரென்றும், அப்படத்துக்கு இன்றும் இங்கு பூசை முதலியன நடந்து வருகின்றனவென்றும் சொல்வர். இந்த ஜீயர் தமது மடத்தில் உடையவர் சந்நிதிக்குத் திருப்பணிகள் செய்தாரென்று ஆழ்வார் திருநகரித் திருப்பணி மாலை கூறும்:

> இவர்ந்த பூதூர் எதிராசன் கோயிலை
> உவந்தனைத் தழகுங்கண் டுலுகின் ஒங்கினான்;
> சிவந்தபங் கயமுகன் சீனி வாசமா
> தவன்திரி கோற்கோள் மாதவர் கீரிடமே.

என்ற பாடல் காண்க. இவர் உபயவேதாந்தப் பிரவர்த்தகராய்ச் சிறந்த சொல்வன்மை பெற்றிருந்தார். இவ்வாசாரியரைக் கவிராயர் பல இடங்களில் துதிக்கிறார். சில குறிப்பிடுவோம்.

*மாறனலங்காரத்தில் ஆசிரியரே பாடிய பாடல்கள் இரண்டுள் ளன.* ஒன்று காபாலி காந்தியகுளகம், பாடாண்திணை, குர வன் வாழ்த்துத்துறை (மேற்கோட்பாடல் 35):*

முத்திக் கவனே முதற்கா ரணனென்றும்
பத்தி விடாதே பயிலென்றும் – சத்தியமாய்ச்
செல்வத் திருப்பதிவாழ் சீநிவா சன்பகர்ந்த
சொல்வித் தகமே துணிந்து.

*மற்றது வாகைத்திணை, தாபத வாகைத்துறை (பாடல் 121):*

முப்புரிநூல் மார்பினான், முக்கோல்கைக் கொண்டுள்ளான்,
பொய்ப்புலனை வென்ற பொறையுடையான் – மெய்ப்பொருளைச்
சேவிக்கும் நுண்ணுணர்வான், சீநிவா சன், தமியேன்
ஆவிக் கருள்புரிந்தாள் வான்.

*அடுத்து, மாறனலங்காரச் சிறப்புப் பாயிரமும் மாறனகப் பொருட் சிறப்புப்பாயிரமும் சீநிவாச ஜீயர் புகழைப் பேசுகின்றன:*

சிற்குணச் சீநி வாசனின் னருளான்
நற்பொருள் மூன்றையும் நலனுற உணர்வோன்.

*(அலங்காரச் சிறப்புப் பாயிரம் அடி 19 - 20) பின்வருவது மாற னகப்பொருள் சிறப்புப் பாயிரக் கூற்றுக்கள்;*

சிற்குணத் திருமலைச் சிநி வாசன்
பொற்புடைத் திருவடி போற்றிய புனிதன்;

*'உடையவர் ஏழ் சந்நிதியில் உரிமை கேள்வியுறு, செம்மலாம் சீநிவாசன் முன்பு..., உரைத்தனன்' என்ற இடங்கள் காண்க.*

*கவிராயர், இவ்வாசாரியரிடம் உபதேசம் பெற்றபின், நம்மாழ்வார் புகழையே பாடும் நோக்கத்துடன் பல இலக்கண நூல்களும் பெருங்காப்பியங்களும் சிறு காப்பியங்களும் செய்து கொண்டு 'வீரவைணவராய்' வாழ்ந்திருந்தார். பழைய நூல்களைத் தேடித்தொகுத்து ஒரு கல்விக் களஞ்சியம் (நூல் நிலையம்) அமைத் தார் என்றும் சொல்வர். இது கொள்ளத்தக்க கருத்தே.*

காலம்

*ஆசிரியர் காலம் இவர் செய்த இரு நூல்களுக்கு எழுந்த சிறப்புப் பாயிரங்களால் திட்டமாய்த் தெரிகிறது. முதலாவது குருகைமான்மியம் அரங்கேற்றிய காலம்:*

---

* *மாறலைங்காரம் - வரலாற்றுப் பகுதி பக்கம் 19.*

அறந்திகழாண் டவை எழுநூற் றிருபான் மூன்றில்
அணிகிளர் கார்த் திகைமாத மெட்டில் வாழ்வு
சிறந்திருதிங் களின்நாள்உத் தரத்தில் ஏகா
தெசியின் மகா முகூர்த்தந் திருந்த முற்றத்
துறந்தலரெண் மகிழ்மாறர் திருமுன் னாதிச்
சுருதியுடன் மிருதியும் சொற் றமிழின் வாய்மை
பிறந்த பெரும் காப்பியமும் தெரிந்தோர் கேட்கும்
பெற்றியுடன் அரங்கேற்றப் பெற்ற தன்றே.

*இப்பாடல் குறிப்பிடும் ஆண்டு கொல்லம் 723, கி.பி. 1548, கார்த்திகை மாதம் எட்டாம் நாள். இதுபோலவே, மாறனகப் பொருள் செய்த காலமும் அதன் சிறப்புப் பாயிரத்தால் தெளி வாய்த் தெரிகிறது:*

அடைவாகும் எழுநூறோ டிருபத் தேழாம்
ஆண்டுமதி சித்திரையேழ் சித்ரை யோரை
உடையவரேழ் சந்நிதியில் உரிமை கேள்வி
உறுசெம்ம லாஞ்சீநி வாசன் முன்பு
மடைதிறந்த வெள்ளமென மாண்போர் கொள்ள
மாறனகப் பொருள் வகுத் துரைத்தான் ஆய்ந்து
சடையன்எனும் இயற்பெயரோன் தமிழ்நா வீறன்
சார் குருகைப் பெருமாள் சீர் வணிகன் தானே.

*இக்காலம் கொல்லம் 727 - கி.பி. 1552. எனவே, இவ்விரண்டி னாலும் ஆசிரியர் காலம் 1540 - 65 எனத் தெளிவாய்த் தெரிகிறது.*

**நூல்கள்**

*இவர் செய்த நூல்கள் பின்வருவன; இலக்கண நூல்கள்: அகப்பொருள் - மாறனப்பொருள்; செய்யுளியல், மாறன் பாப் பாவினம்; அணியிலக்கணம் - மாறன் அலங்காரம்; பெருங் காப்பியம் - திருக்குருகை மான்மியம் என்ற தலபுராணம். சிறு காப்பியம் - மாறனகப் பொருளுக்கு உதாரணமான (நூற்றெட்டுத்) திருப்பதிக்கோவை, நம்பெருமாள் மும்மணிக்கோவை, மாறன் கிளவி மணிமாலை முதலாயின. இவற்றுள் பின்னிரண்டும் கிடைக்கவில்லை. ஏனைய மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடு களாக அழகாக அச்சில் வெளிவந்துள்ளன.*

## மாறன் அகப்பொருள்

மாறன் என்ற நம்மாழ்வார் திருநாமத்தைப் பொருத்திப் புதிதாகச் செய்யப்பட்ட அகப்பொருள் இலக்கண நூல். தொல் காப்பியம் தொடங்கி வந்த பண்டைய அகப்பொருள் இலக்கண நூல்கள் பல. அவற்றுள் பல்வேறியல்களில் வலிந்து பரந்து கிடந்த அகப்பொருள் இலக்கணங்களையெல்லாம் முறைப்படத் தொகுத்தும் வகுத்தும் புதியவையாக வேண்டுவன கூட்டியும் விரித்தும் கவிராயர் இந்நூல் செய்தார். இது அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என்றும் ஐந்தியல் களாகச் செய்யப்பட்டது:

மன்னும் அகத்திணையே, மாண்பார் களவியலே,
துன்னு வரைவியலே, தூத்தொடியே – பின்னமறக்
கூறல் தகுகற்பே, கோதீர் ஒழிபியலே
மாறனகப் பொருளின் வைப்பு.

இவ்வியல்களின் மொத்த நூற்பாத்தொகை 363:

ஐந்திணைசேர் மாறனகப் பொருளிற் சேருமியல்
ஐந்தா நூற் பாவெண்ணடைவாகப் – பைந்தொடியே,
முந்நூற் றறுபத்து மூன்றா, முதலிறுதி
உந்துவட வோர்கடனே ஓர்.

என்ற பாடல் இதை உணர்த்தும். ஆனால் இப்போது கிடைத்து அச்சிடப்பட்டுள்ள மாறனகப் பொருளில் அகத்திணையியலும் ஒழிபியலும் இல்லை, ஏனைய மூன்றுமே உள்ளன. அவற்றிலுள்ள நூற்பாத் தொகை முறையே 62, 34, 10 ஆக 106 நூற்பாக்கள். எனவே, இயல்களும் குறைவு, நூற்பாக்களும் குறைவு. மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் தங்களுக்குக் கிடைத்த பிரதியைக் கொண்டு கிடைத்த அளவு அச்சிட்டிருக்கிறார்கள்; முழுமையும் கிடைக்க வில்லை.

கவிராயர் நூல்கள் பலவற்றுக்கு இரண்டாவது ஏடு கிடைக்கவில்லை. குருகாமான்மியமும் முழுமையாய்க் கிடைக்க வில்லை. மிகவும் சமீபகாலத்தில் இவர் தோன்றி நூல்கள் செய் திருந்தும், பல பகுதிகள் பேணுவோர் இன்றி இறந்து போயின என்றே கருதவேண்டியிருக்கிறது.

காலந்தோறும் பல்வேறு வகையான அகப்பொருள் நூல்கள் தோன்றி வந்திருக்கின்றன. எட்டாம் நூற்றாண்டிலெழுந்த இறையனார் களவியலும் அதன் உரையும், ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய தமிழ் நெறி விளக்கமும், பதின்மூன்றாம் நூற்றாண்டிலெழுந்த நம்பி அகப்பொருள் விளக்கமும் 14ஆம் நூற்றாண்டுக்குரிய களவியற் காரிகையும் இவ்வாறு தொல் காப்பியத்தின் அகப்பொருள் மட்டும் கூறுகின்ற பண்டை இலக்கண நூல்கள். இந்நூல்கள் அனைத்துக்கும் சிறப்பான உரைகளும் மேற்கோள் நூல்களும் எழுந்துள்ளன. இறையனார் களவியலுக்கு மேற்கோள் நூலாக அமைந்தது பாண்டிக்கோவை என்னும் முதற்கோவை. தமிழ் நெறி விளக்கத்துக்கு அதன் ஆசிரியரே ஆசிரியப் பாடலால் பொருளியல் என்ற பெயரில் ஒரு மேற்கோள் நூல் செய்து அமைத்திருக்கிறார். நம்பியகப் பொருளுக்கு மேற்கோள் நூலாக அமைந்தது தஞ்சை வாணன் கோவை என்ற சிறப்புடைய கோவை நூலாகும். களவியற் காரிகை உரை மேற்கோளாக வேறு வழியில் அறியப்படாத சில நூல்கள் உள்ளன. இதே நெறியில் நம் கவிராயர் தாம் செய்த அகப்பொருள் நூலுக்குத் தாமே திருப்பதிக்கோவை என்ற புதிய கோவை மேற் கோள் நூல் செய்தமைத்திருப்பது சிறப்புடைய செய்தியாகும்.

கவிராயர் வைணவ பரமாகவும் நம்மாழ்வார் புகழாகவும் எல்லா இலக்கண நூல்களும் எழ வேண்டுமென்ற நோக்கத்தோடு நூல்கள் செய்துள்ளார். முன்வந்த நூல் சைனச் சார்பான நம்பியகப் பொருளாகும். இவர் தம் அகப்பொருள் நூலை நம்பி நூலை அடியொற்றியே ஐந்து இயல்களாகப் பாகுபடுத்தியிருக்கிறார். தொல்காப்பியத்தில் அகத்திணை, களவு, கற்பு என மூன்று இயல்களே உள்ளன; இறையனார் நூல் களவு என்ற ஒன்றே. தமிழ் நெறி விளக்கம் பொருளியல் என்ற ஒன்றே. நம்பி நூல் தான் ஐந்து பிரிவாயுள்ளது. அதிலுள்ள நூற்பாக்கள் 252 இவர் செய்தவை 363. நம்பி கூறியவற்றை இவர் சிறிதே விரித்தார். நம்பி நூலில் களவு வரைவு கற்பு என்ற மூன்றியல்களின் நூற் பாக்கள் முறையே 55, 29, 9, இவர் நூலில் 62, 34, 10. எனினும் நம்பிநூலொன்றே தமிழகத்தில் பெரும் ஆட்சி பெற்றிருக்கிறது. இவர் நூலுக்கு ஆட்சி இல்லை, எனினும் பிற்கால ஆசிரியர், செய்யுள் வழக்காக மட்டும் இருந்த அகப்பொருளை எவ்வாறு உலகியல் வழக்கோடு பொருத்த முற்பட்டார்கள் என்று காணு வதற்கு இந்நூலும் துணை செய்யும். இதன் நூற்பாக்கள் ஓரடிச் சிறுமையும் 25 அடிப் பெருமையுமுடையன.

இனி, இவ்வகப் பொருளுக்கு ஆசிரியப்பாவாலும் விருத்தப் பாவாலும் இரு சிறப்புப் பாயிரங்கள் உள்ளன. நூலின் காலமும் ஆசிரியர் பற்றிய செய்திகள் பலவும் இவற்றால் தெரியவரு கின்றன. முதற் பாடல் முழுமையும் கீழே தருகிறோம்.

வடதிசை வேங்கடம் தென்திசைக் குமரி
குடதிசைக் குலகிரி குணதிசைக் கடலெனும்
ஒருநான் கெல்லையின் இருநா னிலம்பகர்
ஐவகைத் தமிழினுள் அகப்பொருள் இலக்கணம்
செய்யுள் வழக்கெனச் சேரிரண் டிடத்தால்
திணைமுத லாகச் செப்பமுந் நான்கினோடு
அணைவழு வமைதியின் ஐவகை யியலாய்
மொழிமுதல் வழிசார்பு எனுநூல் மூன்றனுள்
வழிநூ லாமென மதிநலன் அமைந்து
திருமகிழ்ப் பரம தேசிகன் பெயரால்
அருமறை யோர்பயில்அவன தவைக்களத்து
இருவகைத் தாம்புது மொழிஇயைத் தவற்றுள்
உள்ளுறை உவமம் ஏனை உவமம்
ஒள்ளிய இறைச்சியோடு ஒன்ற உரைத்தனன்
சிற்குணத் திருமலைச் சீநி வாசன்
பொற்புடைத் திருவடி போற்றிய புனிதன்
குருகையம் பதித்திருக் குருகைப் பெருமாள்
பொருவில்பே ரன்புடன் புரந்தருள் புதல்வன்
மருக்கமழ் சீரகத் தார்வணி கேசன்
திருக்குரு கைப்பெரு மாள்கவி ராசன்
அருட்குணத் தவர்புகழ் சடையன்
பொருட்டொடர் நவம்புணர் புலமை யோனே.

இரண்டாம் பாடலாகிய 'அடைவாகும்' என்ற பாடல் முன்னமே காலம் என்ற தலைப்பில் தரப்பட்டுள்ளது. (பக்கம் 122) கவிராயர் வரலாற்றை அறிவதற்கு இப்பாடல்களே ஆதாரம்.

இதன் நூற்பாக்களையும், இவற்றுக்கு மேற்கோளாக அமைந்த திருப்பதிக் கோவையுள் கொளுப் போல இந்நூற் பாக்களிலிருந்து எடுத்தமைக்கப் பெற்ற தலைப்புக்களையும் ஆராயும்போது, ஒரு கருத்து எழுகிறது. அதாவது, ஆசிரியர் கோவை பாடியபோது, அகப்பொருளின் நூற்பாக்களைப் பின்னும் விரிவாக்க எண்ணியிருக்கலாம், அவ்வாறு விரிவாக்கு

முன் காலஞ் சென்று விட்டார் என்று எண்ணத் தோன்றுகிறது. இதற்குச் சான்றாக ஒன்று காட்டலாம். 104ஆம் நூற்பாவின் இறுதியில்,

மதுப்பொழி தாரோன் மணமனை வாயிற்
பொதுத்தலத் திருந்துழிப் புரைதீர் மனைவியர்
நினைவழி கண்புதை நிகழ்த்தலும் பிறவும்
உணர்வதோ டுணரா ஊடல்கள் உட்கொளும்.

என்று முடிக்கிறார். இதற்கு மேற்கோளான 'சிந்தாமணி தமதாகப் பெற்றார்' (504) என்ற திருப்பதிக் கோவைச் செய்யுளுக்கு, கண்புதை நிகழ்தல் என்பது வரை இந்நூற்பா அடிகளையே தலைப்பான கொளுப்போல அமைத்து, அடுத்த பாடலுக்கு, பிறவுமென்றதனால், பரத்தையைத் தேரேற்றி நீராட்டி வந்து வாயில் வேண்டிய தலைமகற்கு வாயில் மறுத்தற்கும்;

கற்புடைய மனைவியைக் காமக் கிழத்தி
நற்குண மிலளென நகைத்துரை யாடற்கும்.

செய்யுள் என்று தலைப்பில் அமைக்கிறார்; பின்னும் ஒரு துறையும் நூலில் உள்ளது. இதைப் பார்க்கும்போது நகைத் துரையாடல் கொளுப்போலச் செய்யுளோசை பெற்றிருத்தலால், இதையும் ஆசிரியர் பின்னர் 104ஆம் நூற்பாவிலேயே சேர்த்துக் கொள்ள எண்ணியிருக்கலாம் என்று தெரிகிறது. ஆசிரியர் இவ்வாறு செய்த நூலை மீண்டும் பார்த்துத் திருத்தல் வழக்கம் என்பதைத் திவாகரத்தைக் குறித்து யாம் எழுதியவற்றால் அறியலாம்.*

## பாப்பாவினம்

### முன்னுரை

காலப் போக்கில் வெவ்வேறு இலக்கண நூல் பிரிவுகள் வெவ்வேறு காலத்தில் தோன்றின என்பதைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் அறிகிறோம். தமிழ் இலக்கணம் ஐந்து - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என. யாப்பதிகாரமாவது தமிழில் புனையப்படும் பாக்களின் இலக்கணமும் பாவினங்களின் இலக்கணமும் கூறுவது. யாப்பு யாக்கப்படுவது. யாப்பதிகாரம் என்ற ஒரு பகுதி ஆட்சியில் இருந்ததென்பதை இறையனார்

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 9ஆம் நூற்றாண்டு முதல் பாகம்

களவியல் உரையால் அறிகிறோம். எனினும், மயேச்சுரர் யாப்பு முதலான பல யாப்பிலக்கண நூல்கள் இருந்து மறைந்து போயின என்பதை உரைகளால் அறிகிறோம். செய்யுளியல் பாட்டியல் என்பன எவ்வளவு விரிவு பெற்றிருந்தன என்பதை எமது 8, 9 நூற்றாண்டு வரலாறுகளில் அவ்வத் தலைப்புக்களால் அறியலாம். கிடைக்கின்ற தொல்காப்பியத்தில் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று அதிகாரங்களே உள்ளன. இவற்றுள் மூன்றாவதாகிய பொருளதிகாரத்தில் செய்யுளியல் என்ற எட்டாவது இயலில் 235 நூற்பாக்களால் பாக்களுக்குரிய இலக்கணம் மிகவும் விரிவாகச் சொல்லப்படுகிறது. இங்கு நாம் இன்று அறிகின்ற யாப்பு இலக்கணத்தோடு கூட, கைகோள், கூற்று முதலான அகப் பொருள் பகுதிகளும் சொல்லப்படு கின்றன. இச்செய்யுளியல் பகுதிக்கு இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவர் உரைகளும் கிடைத்துள்ளன.

பதினோராம் நூற்றாண்டில் அமிதசாகரர் என்ற பெரும் புலவர் நூற்பாவால் யாப்பருங்கலம் என்ற ஒரு நூலும் கட்டளைக் கலித்துறையால் யாப்பருங்கலக் காரிகை என்ற ஒரு நூலும் யாப்பிலக்கணம் குறித்து எழுதினார். அவருடைய மாணாக்கர் இருவர் இரண்டுக்கும் உரை எழுதினர். இவ்விரண்டினுள் யாப் பருங்கலமானது பழமை தழுவி யாப்பிலக்கணம் கூறுவது. அதன் உரையும் மிகச் சிறப்பாக, கடல் எனப் பரந்துள்ளது. எனினும், இவை அதிகமாக ஆட்சியில் வரவில்லை. காரிகை, சிறு நூல்; அதன் உரையும் சுருக்கமானது. இவை இரண்டும் தோன்றிய காலம் முதல் இன்று வரை கல்வி கற்போரால் பெரிதும் விரும்பிப் பயிலப் பெறுவன. அடுத்த நூற்றாண்டில் வடமொழியைத் தழுவி ஐந்திலக்கணம் கூற வந்த புத்தமித்திரனார் தமது வீரசோழியத் தில் யாப்புப் படலத்தில் 73 செய்யுட்களால் யாப்பிலக்கணம் கூறுகிறார். இவற்றின் பின்னர் யாப்பிலக்கணம் கூறும் நூல்கள் ஐந்து நூற்றாண்டுகள் வரையில் எழவில்லை.

இவற்றின் பின்னர் 16ஆம் நூற்றாண்டில்தான் தனியான யாப்பிலக்கண நூல் எழுந்திருக்கிறது. இதுவே பாப்பாவினம் என்ற இந்த நூல்.

**நூல்**

இந்த நூல் நம்மாழ்வார் பெயரைச் சார்த்தி மாறன் பாப்பா வினம் என்றும் வழங்கும். இது பாவும் பாவினமும் ஆக இயற்றப் பட்ட ஒரு நூல் விசேடம். இது பாவின் உறுப்புக்களான எழுத்து,

அசை, சீர், தளை, தொடை, மோனை, எதுகை, ஓசை முதலிய வற்றைக் குறித்து எதுவும் சொல்லவில்லை. பாவின் வகை களையும் பாவினங்களின் வகைகளையும் மட்டுமே சொல்கிறது. வெண்பா தொடங்கிப் பரிபாடல் வரை பத்துப் பிரிவுகளைக் கொண்டது. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, அவற்றின் இனங்கள் நான்கு, மருட்பா, பரிபாடல் என்பவை இந்தப் பத்துப் பிரிவுகள். நூல் முழுமையும் பாக்களின் இலக்கணம் கூறாமல், பா விகற்பங்களை மட்டும் அமைத்து ஒவ்வொரு பாடலின் கீழும் அதன் யாப்பும், அலங்காரமும், திணையும் துறையும் உரைத்துச் செல்கிறது. ஒன்பது பகுதிகளின் பாடல் தொகை 135. பத்தாவது பகுதியாகப் பரிபாடல் என்று சொல்லப் பட்டுள்ளது. இங்குள்ள பாடல்கள் ஐந்து.

ஒவ்வொரு பாடலின் அடிக்குறிப்பானது அணியும் திணையும் துறையும் அமைந்து செய்யுட்கு வேண்டும் நலன் எல்லாம் ஒருங்கு கொண்டது. தொல்காப்பியச் செய்யுளியலிற் கூறிய இலக்கணத்தை ஒவ்வொரு பாடலும் கொண்டுள்ளது. யாப்பருங்கலவிருத்தி காரிகை ஆகிய பிறநூலாசிரியர் கொள் கைகளையும் அக்குறிப்புரை விளக்குகிறது.

நூலின் தொடக்கத்தில் தற்சிறப்புப் பாயிரமாக இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன.

என்றும் திருமாற்கே ஆளாவேன், எம்பெருமான்
என்றும் எனக்கே பிரானாவான், – என்றும்
பிறவாத பேராளன் பேரா யிர்மும்
மறவாது வாழ்த்துக வாய்.*

தேவர் திருவள் ளுவர் புலமைச் செல்வத்தால்
யாவரிணை யென்பார் இசைத்தகுறட் – பாவினையும்
பாடினேன் பாப்பா வினம்பாடப் புல்லறிவால்
நாடினேன் என்பதனால் நான்.

நூல் மாறன் பாப்பாவினம் என்று வழங்குவதற்கேற்ப, ஆசிரியர் இதனுள் பல பாடல்களில் குருகூரையும் நம்மாழ் வாராகிய மாறனையும் அவருடைய திருவாய்மொழியையும் சொல்லித் துதிக்கிறார். சில பாடல்களில் இக்குறிப்பு இல்லை. பல பாடல்களில் திருவரங்கம், வடவேங்கடம், மோகூர்,

---

* இப்பாடல் ஒரு பழம் பாடலாகப் பிற நூல் ஏட்டுச் சுவடிகளிலும் காணப்படுவது. இந்நூலாசிரியர் பாடியதன்று.

அனந்தை, எவ்வுள் முதலான சில தலக் குறிப்புக்களும் உள்ளன. ஒருபாடல், அற்றது பற்றெனில் உற்றது வீடு* என்ற ஆழ்வார் பாடலை அப்படியே எடுத்துப் பெய்திருக்கிறது. இரு பாடல்கள் மதுரகவி யாழ்வாரைப் போற்றுகின்றன (48, 95).

குறிப்பினுள் காட்டப்பட்ட நூல்கள் பின்வருவன: தொல்காப்பியமும், யாப்பருங்கல விருத்தி, யாப்பருங்கலக் காரிகை, மூதுரை, சங்கப் பரிபாடல், கலித்தொகை, காக்கை பாடினியம் என்பன.

ஆசிரியர் செய்த பல நூல்களில் இது கடைசியானது போலும். இதைச் செய்து முடித்துத் திருத்திச் செப்பம் செய்யு முன் அவர் காலமாகி விட்டார் என்று ஒரு குறிப்பால் தெரிகிறது. ஆசிரியப்பா முடிந்த இடத்தில் 'இனி கோயிற் கலம்பகத்துள் கரைபொருதொழுகும் காவிரியாறே என்னும் அகவல் போல இடையிடையே தனிச்சொற் பெற்று முதலே அடி 5 அந்தாதிப் பதாக ஓரகவல் பாடவேணும்; இரண்டாவது இவ்விரண்டடி யாய் ஏழும் எட்டுத்தானமாகி 9ஆம் தானம் நேரிசையாசிரியப் பாவாய்ப்பாட வேணும்' என்று எழுதியுள்ளார்; ஆனால் அவ்வாறு பாடியாகுமுன் அவர் காலமாகிவிட்டார் என்று தெரிகிறது.

இதன் பாடல் தொகை பின்வருமாறு: வெண்பா 28, வெண்பாவினம் 13, ஆசிரியப்பா 34, ஆசிரியப்பாவினம் 16, வஞ்சிப்பா 3, வஞ்சிப்பாவினம் 5, மருட்பா 4, பரிபாடல் 5. பரிபாடல் பகுதி ஏட்டில் தனியே எண்ணிடப் பட்டிருந்ததால், இங்கும் தனியே எண்ணிடப்பட்டுள்ளது; இருப்பினும், அதுவும் இதே ஆசிரியர் செய்தது, ஒரே நூலின் பகுதியே. பரிபாடல் தொல்காப்பியத்துள் சொல்லப்பட்டுள்ளது. அதன்பின் எந்த நூலும் பரிபாடல் இலக்கணம் சொல்லவில்லை. இந்த ஒரு நூலே பரிபாடல் ஐந்து அமைத்துக் காட்டுகிறது. இவ்வாறு பரிபாடல் பாடும் திறமும் எண்ணமும் பிறர் எவருக்கும் வந்ததில்லை.

வெண்பா இங்கு பல்வகைக் குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, பஃறொடை வெண்பா, சவலைவெண்பாட்டு; வெண்பாவினம் - வெண் செந்துறை, குறட்டாழிசை, தாழிசைக்குறள், வெளிவிருத்தம், வெண்டாழிசை, வெண்டுறை, வெள்ளொத்தாழிசை. ஆசிரியப்பா -

---

* *இந்நூற்பாடல் 63.*

நேரிசையாசிரியப்பா, இணைக்குறள், நிலை மண்டிலம், அடி மறிமண்டிலம். ஆசிரியப்பாவினம் - ஆசிரியத் தாழிசை, ஆசிரியத் துறை, ஆசிரிய விருத்தம், கலிப்பா - ஒத்தாழிசை, வண்ணக ஒத்தாழிசை, கொச்சக ஒருபோக்கு, தரவிணைக் கொச்சகம், வெண்கலிப்பா, கலிவெண்பா. கலிப்பாவினம் - கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம். வஞ்சிப்பா - சிந்தடி வஞ்சிப்பா, குற ளடி வஞ்சிப்பா. வஞ்சிப்பாவினம் - வஞ்சித் தாழிசை, வஞ்சித் துறை, வஞ்சிவிருத்தம். மருட்பா 4 வகை - கைக்கிளை, புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, பரி பாடல் - 5 என இவ்வகைப் பாக்களும் பாவினங்களும் இங்கு விரித்துரைக்கப்படுகின்றன.

இவ்விடங்களில் தொகை வகைகள் பலவற்றையும் மிக வும் விரிவாக உணர்த்துகிறார். வெண்பா வகையுள் காட்டிய 'காவலன் போற் காவலர் போல்' என்ற 12ஆம் பாடல், தனது 15 சீர்களிலும் அகர மோனையே கொண்டியன்றது. ஆசிரியப்பா வகையுள் காணும் 'கருவே கயலென' என்ற 60ஆம் பாடல் 16 அடி கொண்டது. முதல் 13 அடிகள், ககர வருக்கம், க முதல் கௌ வரை; வரிதோறும் முற்று மோனைத் தொடை.

பரிபாடலானது நெடுங்காலமாகவே வழக்கற்றுவிட்டது; ஆசிரியர் காலத்திலுமே வழக்கற்று விட்டது. எனினும் அவர், பொருளின் முழுமையைக் கருதி இப்பகுதி செய்தார் என்று தெரிகிறது. இங்குள்ள பரிபாடல் ஐந்தும் பரிபாடற்குதாரணமாக, 'அகத்தியர் கூறிய ஐந்துறுப்புடன்' சங்கத்தார் பரிபாடலின் நடையமைய இயற்றப்பட்டுள்ளன. 'ஐந்துறுப்பாவன',

தரவே எருத்தே அராகம் கொச்சகம்
மடக்கியல் வாரமொ டைந்துறுப் புடைத்தே

என்பது இவர் காட்டும் ஒரு மேற்கோள் பாட்டு. தம் பரிபாடலுள் ஒவ்வொன்றையும், இதைத் தழுவி வந்தது என்று காட்டுகிறார். 1 - ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலை என்னும் பரிபாடல் (1); 2. கடுவன் இளவெயினனார் பாட்டாய், முதலே மூன்றா வதாய்ப் பெட்டனாகனாரிசை பண்ணுப்பாலை யாழாய், 'மாஅயோயே மாஅயோயே' என்னும் பரிபாடல். 3. கார்மலி கதழ்பெயல் தலைஇ என்னும் 14ஆம் பாட்டு. 4. தொன்முறை இயற்கையின் என்னும் 2ஆம் பாட்டு. 5. சொல்லவில்லை;

சமய உணர்ச்சி மிக்கமையால் ஆசிரியர் இந்நூல் செய்தார். இவர் பலவகை இலக்கண நூல்கள் செய்தவர். குருகை மான்மியம் முதலியன இவருடைய சமயப்பற்றை நன்கு விளக்கும். இப் பற்றினால், தம் சமய மரபாகப் பாக்களும் பாவினங்களும் அமைதல் வேண்டும் என்று வைணவர் கூறி வேண்ட இந்நூல் செய்தார். இப்பற்று உண்மையே. அடுத்த நூற்றாண்டில் தில்லை யிலிருந்த சைவர் குமரகுருபர சுவாமிகளை அணுகி, சைவமர பாக இப்படி ஒரு நூலை செய்து தரல் வேண்டுமென்று கேட் டுப் பெற்றார்கள் என்பது வரலாறு. அது இதனினும் சிறியது. அதனுள் பரிபாடல் சொல்லப் பெறவில்லை, குமரகுருபரரும், பாப்பாவினம் செய்த திருக்குருகை பெருமாள் கவிராயரின் ஊராகிய திருக்குருகூரின் அயலதாகிய சீவைகுண்டத்தில் பிறந் தவர் என்பதும் இங்கு நினைவு கூரத்தக்கது. ஆசிரியர் இந்நூல் செய்வதற்கு முன் வழங்கிய பாடல்கள் பெரும்பான்மையும் புறச்சமயத்தார் பாடல்களே.

## பதிப்பு

மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு 1932, தமிழ் நாட்டில் உள்ளது. இவ்வாசிரியர் தம் கையால் எழுதிய ஒரே ஏடு தான் போலும். பாடல்களுக்கு இலக்கியக் குறிப்புரை இல்லாது போயினும், நூல் இலக்கணக் குறிப்புக்களுடனும் பொருளகராதி யுடனும் மிகவும் செம்மையாக தி. கி. இராமனுசையங்காரால் பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது.

## ஆசிரியர் – விசேடக் குறிப்பு

இந்நூல் பாடியவர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பது பதிப்பாசிரியர் கருத்து. நூலில் ஆசிரியர் பெயர் எழுதப் படாமையால், மாறனலங்கார உரையாசிரியராகிய பேறை காரி ரத்தினக் கவிராயரால் இயற்றப்பட்டதென்று ஆ.மா. சடகோப ராமானுசாசாரியர் மானறலங்கார வரலாற்றில் எழுதி யிருப்பதற்கு ஆதாரமில்லை என்பது அவர் குறிப்பு; இது பற்றி அவர் பின்னும் குறிப்பிட்டுள்ள கருத்துக்கள் முழுமையும் கொள்ளத்தக்கன. 'இந்நூற் செய்யுட்களின் நடை முதலியவை மாறனலங்கார உதாரணச் செய்யுட்களின் நடை முதலியவற்றை ஒத்தனவாயிருத்தலாலும், மாறனலங்காரத்துள் உதாரணமாக எடுத்தாளப்பட்டனவும் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றியனவுமான குருகாமான்மியச் செய்யுட்களிற் சிலவும்,

நம் பெருமாள் மும்மணிக்கோவைச் செய்யுட்களும், வேறு பல செய்யுட்களும் இந்நூலகத்துக் காணப்படுதலாலும், இது மாற னலங்கார ஆசிரியராகிய திருக்குருகைப் பெருமாள் கவிராயரால் தொகுத்தியற்றப்பட்டிருக்கலாமென்று தோன்றுகிறது. மேலும், எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் தமிழ் இலக்கணம் ஐந்தினுள், செய்யுளைப் பற்றி வருவன பொருளும் அணியுமாம். அவற்றுள், பொருளிலக்கணத்துள் பிற்காலத்துப் பயிற்சி குன்றிய புறப்பொருட் பகுதி ஒழித்து, அகப்பொருள் பற்றி மாறனகப் பொருளும், அணியினுட் பொருளணி சொல்லணி யாகிய வெல்லாமடங்க மாறனலங்காரமும், தம் ஈடுபாடு தோன்றப் பகவத் பாகவத விஷயமான உதாரணச் செய்யுட் களுடன் வேண்டுவன கூட்டி விரித்து இயற்றிய திருக்குருகைப் பெருமாள் கவிராயர், அவ்வாறே பொருளும் அணியுமாகிய அவற்றுக்கிடனாய் விளங்கும் யாப்பிலக்கணங்களமைய இதனை இயற்றினரென்று யூகித்தலும் பொருந்துவதாம்: அன்றியும் இது, பின்னும் வேண்டுவன கூட்டித் திருத்தி விரித்துச் செம்மை செய்து கொள்ளுமாறு முற்பட வரைந்த வரைவேயாய்ப் பின் அவ்வாறு செம்மை செய்யப்படாத நிலையில் உள்ளதென்பது இதன் கீழ்க்குறிப்பு முதலியவற்றால் விளங்குதலால் திருக்குரு கைப் பெருமாள் கவிராயரே, குருகாமான்மியம், மாறனலங் காரம், மாறனகப் பொருள், நம் பெருமாள் மும்மணிக் கோவை முதலிய நூல்களைச் செய்து பின்னர்தம் அந்திமதிசை யில் இந்நூலை இயற்றி இதனைச் செப்பஞ் செய்து முடிக்கு முன் காலகதி அடைந்து விட்டனரோ என்று சங்கித்தற்கு மிடனாகிறது.' (தி. கி. இராமானுசையங்கார் பதிப்புரை). இதற்கு அதிகமாகச் சொல்வதற்கில்லை. பல துறைகளிலும் பெரும் புலவராகிய திருக்குருகைப் பெருமாள் கவிராயரே இதையும் செய்தார் என்பதுதான் உண்மை.

## *மாறனலங்காரம்*

### முன்னுரை

மாறன், வகுளாபரணன், சடகோபன், நாவீறன் என்றெல் லாம் பெயர் பெற்றிருந்த நம்மாழ்வார் பெயரை வைத்துத் திருக் குருகைப் பெருமாள் கவிராயர் பாடிய மூன்று இலக்கண நூல் களுள் ஒன்று; மிகவும் விரிவானது. முன் இருந்த அனைத்திலும்

அளவில் பெரியது. தமிழில் அணியிலக்கணத்தைச் சொல்லும் முதல் நூல் என்று கருதத்தக்கது தண்டியலங்காரம் (12 நூற்றாண்டு). இது அதன் வழி நூலென்று கருதத்தக்கது. இப்பெயருடனேயே (சடவைரி வைபவ திவாகரம்) வடமொழியில் ஓர் அலங்கார சாஸ்திரம் உள்ளதென்றும் சொல்வர்.*

தமிழில் ஆதியிலேயே அகத்தியரால் செய்யப்பட்ட அணியிலக்கண நூல் இருந்தது; 'பிறபாஷைகளிலில்லாத எண்ணிறந்த பல வேறு வகையான பாடல்களையும் பிரபந்தங்களையுமுடையதாய்ச் செய்யுள் நடையிற் சிறந்து விளங்கும் தமிழ் மொழிக் கண்ணே செய்யுளுக்கு இன்றியமையாத பொருள் யாப்பிலக்கணங்கள் பிறிதொரு பாஷையிலிருந்து கொள்ளப் பெறாது தமிழுக்குரியவாய்த் தனியே இருக்கும் பொழுது அவற்றினோடொத்த அணியிலக்கணப் பகுதி மட்டும் அன்னிய பாஷையிலிருந்து வந்ததாகச் சொல்லுவது அநாதரிக்கத்தக்கதே என்பது பதிப்பாசிரியரான திருநாராயணையங்காரவர்கள் கூற்று. இவருக்குச் சிவப்பிரகாச சுவாமிகளுடைய கற்பனைத்திறனில் மிக்க ஈடுபாடு. ஆகவே அவர் திருவெங்கையுலாவில் கூறியுள்ள ஒரு கருத்தை எடுத்து மிகவும் விரிவாக தம்முடைய கற்பனையும் கலந்து விளக்கியிருக்கிறார். அதிலுள்ள பயன் கருதி அதை இங்கு தருகிறோம். 'திருவெங்கையுலாவில்',

மல்லலுறச்
சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழ்அற் புதஅணித்தா – முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயில்.

என்றதனால், மனமகிழ்ந்து அதிசயிக்க வல்ல சிறந்த அலங்காரங்களைப் பழமையான பாசுரங்களே உடையன என்றும், அப்பாசுரங்கள் தெய்வ சாந்நித்தியம் பெறுவதற்கு அலங்காரங்கள் உறுப்பாய் அமைந்துள்ளன என்றும், ஆதலால் அவை தேவாலயத்துக்கு உவமிக்கத் தக்கன என்றும், நூல் முறையே செவ்வித்திற் செய்யப்பட்ட கோயில் போல் விளங்குவதற் பாசுரங்கள் செய்யுளெனப்படுமென்றும், ஆலங்காரிக சார்வ பௌமரான சிவப்பிரகாச முனிவரும் அபிப்பிராயந் தந்து போந்தனர்.

---

* இங்கு குறிப்பிட்ட கருத்துக்கள் மாறனலங்காரம் இரண்டாம் பதிப்பின் முன்னுரைகளிலிருந்தும் நூலை ஆராய்ந்து எடுத்தும் எழுதப் பெற்றவை.

'இதனால், கோயிலுள் நூன்முறையான் அமைக்கும் குணாலங்காரம் (வடிவழகு) போலச் செய்யுளுள்ளும் நூன் முறையான் அமைக்கும் குணாலங்காரங்கள் உண்டென்றும், கோயிலுள் தெய்வ பிம்பம் தீப ஜாலம் உற்சவ பரிகரம் முதலிய வற்றான் அமைக்கும் பொருளழகு போலச் செய்யுளுள்ளும் உவமை உருவகம் முதலிய பொருள் வகையான் அமைக்கும் அர்த்தாலங்காரங்கள் உண்டென்றும், கோயிலுள் வர்ண விசேஷங்களால் அமைக்கும் சித்திர கலாபங்கள் போலச் செய்யு ளுள்ளும் வர்ண (அக்ஷர) விசேஷங்களால் அமைக்கும் சப்தாலங் காரங்கள் உண்டென்றும் கோயிலுள் ஒரோவழி நிகழ்ந்தபடி வரையும் விகிருத ரூபங்கள் போலச் செய்யுளுள்ளும் ஒரோவழி நிகழ்ந்தபடி வரையும் தோஷாலங்காரங்கள் உண்டென்றும், குறிக்கப்படுகின்றன. இவையெல்லாம் முந்தையோர் செய்யுளிற் பல இடங்களிற் காணப்படுதலால் அவற்றிற்கு இலக்கணமில்லா திருந்ததென்று கொள்வது பொருந்துவதன்று. ஆதலால் ஆதி யிற் செய்யுளிலக்கணமாக அகத்தியராற் செய்யப்பட்டதொரு செய்யுளியல் தனியாயிருந்தது போல, அலங்கார லக்ஷணமான அணியியல் என்னும் நூலொன்று தனியாய் இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.'

இவர் கூறுகின்றபடி அகத்தியம் அணியிலக்கணம் சொல் லிற்றா என்று அறிய வழியில்லை. தண்டியலங்காரத்தின் வேறாய், அடியார்க்கு நல்லார் முதலியோர் குறிப்பிடும் அணியியல் என்ற நூல் எட்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகும்; அந்நூற்றாண்டில் வாழ்ந்த ஓர் அகத்தியர் பாட்டியலும் இவ் அணியியலும் (பிற இயல்களும்) செய்திருக்கக்கூடும்.* எனினும் ஒன்றை நினைவில் கொள்ளலாம். வழிநூல் எதுவாயினும், முதனூலைத் தொகுத்து, விரித்து அல்லது சுருக்கி, வேறுபடுத்தி, புதியது சேர்த்து, பழையது நீக்கி உரைத்தல் இயல்பு. ஆகவே, அவ்வணியியல் என்ன சொல் லிற்று என்பது அறிய இயலாததொன்று. நன்னூலிலும் அணி யிலக்கணம் என்ற அதிகாரம் இருந்தது என்னும் மயிலைநாதர் கூற்றுக் கொள்ளத்தக்கதாகத் தோன்றவில்லை; நன்னூலாருக்கு உடன்காலத்தவரான தொல்காப்பிய உரைகாரர் பேராசிரியர் அணியிலக்கணம் என்று புதிது படைப்பதை மறுத்தும் எழுது

* இதன் விளக்கத்தை இனி வெளிவர இருக்கும் எமது எட்டாம் நூற்றாண்டுத் தமிழிலக்கிய வரலாற்றில் காணலாம்.

கிறார்.* எனினும் ஒன்று சொல்லலாம். தொல்காப்பியர் தமக்கு முன்னிருந்த (இன்று மறைந்துபோன) பல்வேறு செய்யுட்களி லிருந்து (அல்லது காவியங்களிலிருந்து) எடுத்து, உவமவியலால் உவமவகையும் மெய்ப்பாட்டியலால் சுவையணி வகையும் வெளிப்படையாகவே விரித்துரைத்தார் என்று கொள்ளலாம். இவையன்றியும் உத்தி வகையிலும் பொருள்கோள் வகையிலும் வண்ண வகையிலும் குறிப்பு வகையிலும் பல சொல் முடிபிலக் கணங்களிலும் பின்னும் சிலவற்றை அவர் அடக்கியுரைத்தார் என்று கருத இடமுண்டு. ஆயினும் உவமை தவிர ஏனையவற்றை விதந்தோதவில்லை.

இடைக்காலத்தில் வடமொழிக்குத் தமிழில் அதிக ஆதிக்கம் ஏற்பட்டதன் விளைவாய், அலங்காரங்களை வடமொழியிற் பயிலவே, தமிழ் அணியியல் ஆட்சி குன்றியது; எட்டாம் நூற் றாண்டில் தமிழ் அணியியல் தோன்றியது கூட, ஏழாம் நூற் றாண்டில் பல்லவர் ஆதரவில் காஞ்சிபுரத்தில் தண்டி செய்த வடமொழிக் காவியதர்சத்துக்கு ஏற்பட்ட அதிகமான ஆட்சி யின் எதிரொலியாக இருத்தலும் கூடும்.

தண்டியலங்காரத்தில் இல்லாதவனவற்றைச் சேர்த்து நம் கவிராயர் புது அலங்காரம் செய்திருக்கிறார். பழைய உதாரணங் களைக் கொள்ளாமல் பெரும் பகுதி தம் தெய்வத்தை ஏத்தும் பாடல்களாகவே புதிய பாடல்களைப் பெய்து இவர் நூல் செய்துள்ளார். உதாரணச் செய்யுட்கள் யாவும் இவரே செய்தும் வகுத்தும் தந்தவை.

**நூல்**

மாறனலங்காரம் நூற்பா யாப்பினால் 327 நூற்பாக்கள் கொண்டது. நூலுக்கு முன் தற்சிறப்புப் பாயிரமாக 4 வெண் பாக்கள் உள்ளன. முதல் வெண்பா சோலைமலை நாரணனே காப்பு என்பது. இரண்டாவது நூற்பெயர் மாறனலங்காரம் என்னும்:

ஆக்கமுறக் காக்கபுகழ் மாறன் அலங் காரத்தைப்
பூக்கமலத் தான்மெய் புளகமெழ – நோக்கும்
குழகனெழிற் சோலைமலைக் கொற்றவனாம் சங்கத்
தழகனருள் மாலலங்கா ரன்.

அடுத்த இரண்டும் அவையடக்கம்:

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

அழுக்கா றிலராய் அழுக்கறுக்கும் கல்வி
ஒழுக்கால் உலகத் துளராம் – இழுக்கிலா
முற்பனுவல் கண்டுரைத்தேன் மொய்யிழாய், புன்மொழியும்
நற்பனுவ லாமெனவே நான்.

வாய்ந்த திருப்பதி நூற் றெட்டினையும் வாழ்த்தியே
ஆய்ந்த தமிழ்மாறன் அணியெனப்பேர் – தோய்ந்துளதால்
காண்தகுசீர் மற்றோர் அணியும் கவின்புணர்த்த
வேண்டுமே ஈங்கிதற்கு மேல்.

*அடுத்து, 26 அடி கொண்ட சிறப்புப் பாயிரம், அதன் கண்ணுள்ள பொருளின் பயன் கருதி முழுப்பாட்டையும் இங்கு தருகிறோம்:*

உலகம் யாவையும் உறுபயன் விளைப்பான்
அலகில் சோதி அணிகிளர் திருவுரு
உணர்வுயிர் எனக் கலந் துத்தமர் நித்தர்
கணமக லாதபொற் கவின்பதி நின்றும்
உரவுநீர் வளைத்த ஒன்பானுள் தென்புலப்
பரதகண் டத்துள் பழம்பதி எனப்புகும்
விண்தொட நிவந்த பொழில்வட வேங்கடம்
தெண்டிரை கறங்கு தென்குமரி என் றாயிடை
அமிழ்தினும் வான்சுவைத் தாகிய மும்மைத்
தமிழ் தெரி புலமைச் சான்றோர் மதிக்கும்
முதுமொழித் தெண்டி முதனூல் அணியொடும்
புதுமொழிப் புலவர் புணர்த்திய அணியையும்
தனாதுநுண் ணுணர்வால் தருபல அணியையும்
மனாதுறத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்
பொதுவியல் பொருள்சொல் லணி எச்ச வியலெனச்
சதுர்பெற இரண்டிடந் தழீஇய சார் பெனலாய்க்
காரிதந் தருள்கலைக் கடலியற் பெயர்புனைந்து
ஆரியர் துவன்ற அவைக்களத் துரைத்தனன் –
சிற்குணச் சீநி வாசனனின் னருளால்
நற்பொருள் மூன்றையும் நலனுற உணர்வோன்
பெருநிலம் புகழ்திருக் குருகைப் பெருமாள்
அருள்குரு கூர்வரும் அனகன் செழுந்தேன்
மருக்கமழ் சீரகத் தார்வணி கன்புகழ்த்
திருக்குரு கைப்பெரு மாள்கவி ராயன்

அருட்குணத் துடன்வளர் சடையன்
பொருட்டொடர் நலம்புணர் புலமை யோனே.

இப்பாயிரம் ஆசிரியரைக் குறித்த செய்திகளைத் தருவதோடு அவர் தண்டியலங்காரத்தில் கூறப்பட்ட அணிகளையும் பிற் கால நூல்களில் கண்ட அணிகளையும் தாம் நுண்ணுணர்வால் உணர்ந்த பல அணிகளையும் சேர்த்துத் தருவதாய்ச் சொல்கிறது.

**பாயிரம்**

சிறப்புப் பாயிரத்தை யடுத்து, பாயிரவியலில் பொது சிறப்பு என்ற இரு பாயிர வகையையும், நன்னூலார் கூறியுள்ளவாறு போல 64 நூற்பாக்களால் விரிவாக உரைக்கிறார்; பொதுப் பாயிரம் 59, சிறப்பு 5; இறுதிப் பாடல் மட்டும் வெண்பா. மேற் காட்டிய சிறப்புப் பாயிரம் செய்தார் ஆசிரியருடைய மாணாக் கரான திருமேனி இரத்ன கவிராயர் என்று உரையில் சொல்லப் பட்டது. பாயிரம் 20ஆம் நூற்பாவில், 'மிகத் தெளிவுடைய அகத்தியம்' என்கிறார். 29ஆம் நூற்பா, புரப்போன் மரபினைப் புகலுங் காலை என்று தொடங்குகிறது. ஆனால் உரையில், 'நுவல்வோன் - நூனுவல்வோன்; எனவே ஆசிரியரும் நூல் நுவல் வோன் இலக்கணத்தைக் கூறுமிடத்துக் குலமுதல் தூய்மை ஈறாக' - இவ்வாறு உள்ளது. 'புது மொழி புணர்க்கும் புலமை யோன்' என்று முடிவதால், இது நுவல்வோன் இலக்கணம் கூறுவது; புரப்போன் மரபினை என்ற முதல் அடியில் இருப்பது பிழையாகும். 39ஆம் நூற்பா புரத்தலின் இயல்பு புகலும் காலை என்று தொடங்கி, புரப்போன் இயல்பைக் கூறுகிறது. எனவே முந்தியது பிழை என்பது உறுதி. 29 - நுவல்வோன் 34 - கற்கப் படாதோன், 39 - புரப்போன், 46 - கற்பிக்கப்படாதோர் - முதலி யோருக்குக் கூறிய உவமைகளைப் பல நூற்பாக்கள் விளக்கிக் காட்டுகின்றன. கற்ற கல்வியை இழவாததற்கு உபாயம் (55, 56) சத்தம் சாதித்தற்குக் காரணம் (57) முதலியனவும் சொல்லப்படு கின்றன. இவற்றுட் பல செய்திகள் முந்து நூல்களிற் சொல்லப் படாத புதுமையுடையன. களங் கடியப்படுவர், என்ற 83ஆம் சூத்திரமும் வெண்பா.

அடுத்து முறையாக நான்கு இயல்கள் சொல்லப்படுகின்றன; பொதுவியல் 21 நூற்பா, பொருளணியியல் 166, சொல்லணியியல் 49, எச்சவியல் 28 நூற்பா.

## பொதுவியல்

மாறனலங்காரம் நூற்பாவில் இயன்றது என்ற பொதுவாய்ச் சொல்லிய போதிலுங்கூட, இந்த இயலில் வரும் 21 சூத்திரங் களும் நேரிசை வெண்பாக்களே. முதல் பாடல் திருப்பாவை வில்லிபுத்தூர்ச் செல்வியாகிய ஆண்டாளைப் புகழ்வது. ஏனைய பாடல்கள், செய்யுள் வகை, முத்தகம் குளகம் பெருங்காப்பியம், காப்பியம், வைதருப்பம் கௌடம் பாஞ்சாலம் என்ற மூவகை நெறிகள், குணவலங்காரம் என்ற பொருள்களைப் பேசுகின்றன. இப்பகுதியில் ஆசிரியர் தாமே படைத்துத் தந்த பாடல்கள் 1152ஆம் திருவாய் மொழிப் பாடல் இரண்டும் உள்ளன. பாடல் களில் ஆசிரியம் வெண்பா விருத்தம் ஆகியவை உள்ளன. எழுத்து அசை சீர் அடி என்னும் நாலந்தாதியைக் கூறுமிடத்து வெண்பா கட்டளைக் கலித்துறை ஆசிரியம் என்ற பாடல்களில் ஐந்தை அந்தாதியாகக் காட்டுவதோடு, நூலே என்று தொடங்கி நூலே என்று முடிகிற 10 அடி கொண்ட ஒரே ஆசிரியப்பாவில் இந் நான்கு வகை அந்தாதியும் அமைத்துக் காட்டுகிறார் (மேற்கோள் 65); இப்பாடல் பாப்பாவினத்தில் 58ஆம் பாடல். அகர வருக்க மோனையாக அடிகள் வருமாறு 15 அடி கொண்ட ஓர் ஆசிரி யப்பா அமைத்துக் காட்டுகிறார் (80); இது அகர வருக்க முற்று மோனை, பாப்பாவினத்திலும் உள்ளது (60) மற்றுமொரு பாடலில் (91) தசாங்கம் அமைக்கிறார்.

> மறைமுரசம், தாமம் மகிழ், வழுதி நாடர்
> துறைபொருநை வெற்புஊர் துடரி – உறைகுருகை,
> அஞ்சம் பராங்குசம்வெள் ளானைகொடி ஆணைமா,
> பஞ்சகலி யாணன் பரி.

வழுதி நாடர்துறை - பொருநை; வெற்பும் ஊரும் துடரியும் ஊறையுளாங் குருகா புரியும்; பரி - பஞ்ச கலியாணன்; மா - வெள்ளானை; ஆணை - சீபராங்குசம்; கொடி - அன்னம்; தாமம் - மகிழ்; முரசு - வேதம்; வழுதி நாடர் என்பது மத்திமதீபம்; அதுவே நாடும் திருநாமமுமாம் என்று உரைகாரர் காட்டுகிறார். இங்கு பதினோர் அங்கங்கள் உள்ளன. இதற்குத் துறை - தசாங்க வாழ்த்து என்று உரைகாரர் புதிதாகப் படைத்துச் சொல்கிறார். ஒரு பாடலில் நாம் பிரமம் ஒன்றே நவில்வார்... நாவீறுடைய பிரான் ஆரணப்பாக் கற்றுணராதார் (104) என்கிறார்.

பெருங்காப்பிய நிலையை ஐந்து வெண்பாவால் சொல்லு கிறார்; இது முன் வந்த மரபை யொட்டியது. எடுத்துக்காட்டாக,

காப்பிய உறுப்புக்களுள் நிரை கோடலும் சொல்லப்பட்டுள்ளது. சிந்தாமணியில் இதைக் காணலாமேயன்றி, சிலப்பதிகாரம் மணிமேகலை கம்பராமாயணத்துள் காண்பதற்கில்லை. அடுத்து, செய்யுட் கூறுபாடு வைதருப்பம் கௌடம் பாஞ்சாலம் என மூன்று நெறியாகும் என்கிறார். மூன்றும் மூன்று வடநாடுகள், தண்டி சொல்வன முதல் இரண்டே. வைதருப்ப பாகம் மென்மையுடையது; கௌடபாகம் கடினமுடையது, சொல்லாலும் பொருளாலும் இடைநிலைப்பட்டொழுகுவது பாஞ்சாலம் என்கிறார். (வெண்பா 77 - 79). இம்மூன்றுக்கும் விளக்கமாகக் குருமகான்மியப் பாடல்கள் ஒன்பது காட்டப்பட்டுள்ளன. ஸ்வதருப்பத்துக்குக் காட்டியவை எளிய கலிவிருத்தம், கௌடத்துக்குக் காட்டியவை கடினமான வல்லினச் சந்தமுடைய எழுசீர் விருத்தங்கள், பாஞ்சாலத்துக்குக் காட்டியவை சந்தமில்லாத அறு சீர்விருத்தங்கள், அடுத்து குண அலங்காரம் ஒவ்வொரு பாகத்துக்கும் இன்பம் தெளிவு செறிவு சமனிலை இன்னிசை உதாரம் வரி சாந்தம் உய்த்தலில் பொருண்மை சமாதி என்ற பத்து என்று கூறி இவற்றை முறையே விளக்குகிறார். பாஞ்சாலச் செறிவு என்று காட்டுமிடத்து முழுமையும் இடையினச் சந்தமாயுள்ள பாடலைத் தருகிறார். இப்பகுதிகள் அலங்காரம் பயில்வாருக்கு மிகச் சிறந்த விருந்தாகும்.

### பொருளணியியல்

அணி இரண்டு - பொருள், சொல்; பொருளணி அழகு, சொல்லணி பூண். பொருளணி தன்மை முதல் பாவிகம் ஈறாக 64, மகடூஉப் பொருட்டன்மைக்குப் பாடல் காட்டுமுகமாக, திருவின் துதியொன்று பாடுகிறார்;

> பூங்கமலக் கோயிலாள் புத்தமிர்தி னுடன்பிறந்தாள்,
> வீங்கு துணைமுலையாள் வெண்ணகையாள் – ஓங்குபுனற்
> பொன்னி நடுவுட் பொருண்மார் பகத்தாள், என்
> சென்னி பிரியாத் திரு. 120

ஏகதேச உவமைக்கு எடுத்துக்காட்டுத் தரும்போது, காப்பியம் பாடும் புலவர் கண்போல் மெல்லியலார் விழியும் உறங்காது என்கிறார்:

> முற்ற வுணர்த்து முதுகாப்பியம் புணர்ப்பான்
> உற்றவர் தங்கண்போன் றுறங்காவாம் – இற்பிரிந்தால்
> நல்லியலார் வந்தனைசெய் நாவீறன் மால்வரைமேல்
> மெல்லியலார் இன்ப விழி. 191

வெளிப்படையாகவும் குறிப்பாகவும் வரத்தக்க உவமஉருபுகள் நாற்பத்தெட்டை ஒரு நூற்பாவில் காட்டுகிறார் (113); அனுமன் ஐந்திர வியாகரணம் உணர்ந்தவன் என்கிறார் (258); திட்டாந்த அலங்கார மேற்கோள் பாடலில் இராமானுசருக்குத் தேசிகர் ஐவர், குருபரம்பரையுரைக் குறிப்பு, திருமலை யாழ்வார், மணவாள முனிகள் - குறிப்பிடுகிறார் (311). வகை முதலடுக்கலங்காரம் என்ற பகுதியில், அடைசினை புணராது எண்ணும்மைப்பட 25 மரப்பெயர்களை அடுக்கிப் பாடுகிறார் (407):

மரவமும் கடம்பும் பனசமும் மருதும்
வடமுமா தவியுமா துளமும்
குரவமும் இலவும் திலகமும் விளவும்
கொன்றையும் செருந்திலும் குமிழும்
அரசுநா வலுந்தான் றியும்அரீ தகியும்
ஆமல கமும்ந ரந்தமுமாம்
பிரமுமே லமும்சண் பகமும்வே ழமும்சம்
பீரமும் தழைந்துள ஒருசார்.

அடுத்த பாடல், பண் இராகமெனப் பொதுப்பட்ட வகை முதற் பொருள்களை கடைசினை கூடாது அடுக்கின வகை முதலடுக்கு; 51 பெயர்கள் (408):

இந்தளமுகாரி குச்சரிபௌளி மலைமைசீராகம் வயிரவி தனாசா
கிரிவசந்தன் பழம்பஞ் சுரங்கொல்லி மருளிந்தளஞ் சாதாரிசா
மந்தமல்லாரி பந்துமுகாரி யாரியவராடி கொல்லவராடிநை
வளமிராமக்கிரி குறிஞ்சி காம்போதி பூவாளி சௌராட்ட நாட்டை
செந்துருதியருமவதி தக்கேசி கௌடிகௌசிகமேகராகக் குறிஞ்சி
செவ்வழிப்பாலை விளரிப்பாலை செம்பாலை சீகாமரஞ் சிகண்டி
யந்தாளிமலகரி நளுத்தை காந்தாரமுரலளி செறியும் வகுளமார்ப
ணமலன்வருகனக தண்டிகை வாழ்வினைக் காண வாயிரங்
கண் வேண்டுமே.

சுவைகள் எட்டுடன் சாந்தத்தையும் கூட்டி ஒன்பதென்றே சொல்லுகிறார்.

பொருளணிகள் 64 என்று குறிப்பிட்ட போதிலும்கூட, இவை ஒவ்வொன்றிலும் பிரிவுகளாகப் பின்னும் பல அணிகளை ஆசிரியர் எடுத்துக் காட்டியிருக்கிறார். அவையாவன:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தன்மை | 12 | உவமை | 46 | உருவகம் | 26 |
| உள்ளுறை | 5 | ஒட்டு | 6 | உல்லேகம் | 4 |
| ஒப்புமை | 2 | வேற்றுமை | 5 | திட்டாந்தம் | 1 |
| தற்குணம் | 1 | பிரத்தியனீகம் | 1 | சந்தயம் | 3 |
| அற்புதம் | 2 | விதர்சனம் | 2 | தற்குறிப்பேற்றம் | 2 |
| அதிசயம் | 8 | சிலேடை | 18 | பின்வரும்நிலை | 3 |
| தீபகம் | 18 | நிரனிறை | 13 | விற்பூட்டு | 1 |
| பொருள்மொழி | 1 | அதிகம் | 1 | வகைமுதலடுக்கு | 1 |
| இணையெதுகை | 2 | விரோதம் | 7 | உபாயம் | 1 |
| விசேடம் | 6 | சமாயுதம் | 1 | ஏது | 24 |
| சுவை | 18 | பரியாயம் | 1 | இலேசம் | 1 |
| தற்பவம் | 1 | அசங்கதி | 2 | தடுமாருத்தி | 1 |
| புணர்நிலை | 2 | விபாவனை | 4 | ஆர்வமொழி | 1 |
| நெடுமொழி | 1 | பரிவர்த்தனை | 1 | காரணமாலை | 1 |
| காரியமாலை | 1 | ஏகாவளி | 1 | பிரதீபம் | 1 |
| பிறவணி | 1 | முன்னவிலக்கு | 21 | அபநுதி | 4 |
| நிந்தாத்துதி | 1 | பரிசங்கை | 2 | காவியலிங்கம் | 1 |
| பரிகரம் | 4 | உறுசுவை | 1 | விநோத்தி | 1 |
| சமுச்சயம் | 2 | உதாத்தம் | 9 | ஆசி | 2 |
| சங்கரம் | 1 | சங்கீரணம் | 1 | பாவிகம் | 1 |
| வேற்றுப்பொருள் வைப்பு | 8 | இறைச்சிப்பொருள் | 1 | | |
| புகழ்வதின் இகழ்தல் | 1 | மாறுபடுபுகழ்நிலை | 1 | | |

ஆக 323.

## சொல்லணியியல்

இங்கு மடக்கு என்ற சொல்லணி மிகவும் விரிவாய் விளக்கப் பட்டுள்ளது. மேற்கோள் செய்யுள் 624 முதல் 766 வரை 143 செய்யுட்கள் மடக்கை விளக்குகின்றன. ஞானசம்பந்தர் தேவா ரத்துள் 'பிரமபுரத்துறை பெம்மானெம்மான்' என்று ஏகபாத மடக்காகப் பாடியுள்ளது போல, இங்கும் ஒரு பாடல் ஏகபாத மடக்காகப் பாடியிருக்கிறார் (746). அரியார் என்ற ஒரு சொல்லே ஒரு குறளடி வஞ்சித்துறை முழுமையும் வருமாறு பாடியிருக் கிறார் (752). இவர் தம் காலத்துக்குமுன், அம்மானை யாடும் பெண்கள் அம்மனை கைக்கொண்டு ஒரு தலைவன் நிந்தாத்துதி யாகவும் போற்றும் பாடலாகிய அம்மானை மடக்கென்று ஒரு

*மடக்கு ஆட்சியிலுள்ளது என்று குறிப்பிட்டுச் சூத்திரம் செய்து, இலக்கியமும் செய்திருக்கிறார். இவ்வகை அம்மானைப் பாடல் சிலப்பதிகாரத்திலும் உள்ளது. பின்னர் கலம்பகங்களில் தவறாமல் ஓர் உறுப்பாகவே வருகிறது, இவர் துதியாகப் படைத்துக் காட்டிய அம்மானைப் பாடல் பின் வருவது:*

வண்டமிழோர் கொண்டாடும் மன்குருகூர் வாசமகிழ்க்
கொண்டலெழில் மேவுதமிழ்க் குன்றில்காண் அம்மானை,
கொண்டலெழில் மேவுதமிழ்க் குன்றமதா னாலதன்கண்
எண்டிசையும் சந்தனக்கா இல்லையோ அம்மானை,
இல்லாமற் சாந்தமணம் எய்துமோ அம்மானை. 754

*அகரக் குற்றுயிராலேயே ஒரு பாடலும் ஆகார நெட்டுயிராலேயே ஒரு பாடலும் (760, 761) உள்ளன. அகரமெய் வருக்கம், தகரமெய் வருக்கம் என இரு பாடல்கள் (762, 763).*

*பிறகு சித்திரக்கவி தொடக்கம். வல்லினப் பாட்டு, மெல்லினப் பாட்டு, இடையினப் பாட்டு; பின்னர் நிரோட்டியம் - இதழ் குவியாத எழுத்துக்கள் வருவது; இதழ் குவிந்து வரும் ஓட்டியம்; இயைந்து வரும் ஓட்டியம்; சுக்கரச் சுதகம் சுக்கர வருத்தனை; வச்சிரவுத்தி, வினாவுத்தரம். பிறகு சக்கரபந்தம் - நாலாரை, ஆறாரை, எட்டாரை; பதுமபெந்தம் முரசபெந்தம் நாகபந்தம் இரதபந்தம்; மாலைமாற்று ஒரு பாடல், கரந்துறை செய்யுள், காதைகரப்பு, பிரிந்தெதிர் செய்யுள், பிறிதுபடுபாட்டு, சருப்பதோபத்திரம், கூட சதுர்த்தம், கோமூத்திரி, சுழிகுளம், திரிபங்கி என்பன உள்ளன. பின்னர் எழு கூற்றிருக்கை. முன்னமே எழு கூற்றிருக்கை பாடினோர் சம்பந்தர் திருமங்கை மன்னன் நக்கீரர் அருணகிரி நாதர்; யாப்பருங்கல விருத்தியிலும் அருகபரமாக ஓர் எழு கூற்றிருக்கை உள்ளது: இவ்வாறாகச் சொல்லணி முடிகிறது. சக்கரபந்தம் முதலியவற்றுக்காக, பாடல்களைச் சித்திரங்களுள் அடக்கிக் காட்டும் படங்கள் 17 எழுதிப் பாடல்களை அடக்கிக் காட்டவும் பட்டுள்ளன.*

**எச்சவியல்**

*பெரும்பகுதி வழுவமைதி கூறுகின்றது. பல மலைவுகளுள், கலை மலைவு கூறுமுகமாக, 'ஐயாண்டில் தண்டியம் பிடித்து ஏழாண்டியற்றிப் பன்னீராண்டினில் அவையரங்கேறினாள்' என்று பண்டை நாடகச் செய்தியைக் கூறுகிறார். இச்செய்திகள் ஆசிரியர்*

காலத்தே முழுமையும் மறைந்து போயின. இவர் சொல்வது செய்யுள் வழக்கை மட்டும் உணர்ந்து சொல்வதாகும். உலக மலைவுப் பொருள் வந்தும் அலங்கார வழுவின்று என்று சம்பிரதம் என்ற கலம்பக உறுப்புக்குரிய பாடலொன்றைத் தருகிறார்:

மேலைமலை யிற்புகுதும் மாதவனை நிற்றியென
  மீளவரு வித்துல கின்வாய்
மாலைமதி யத்துடன் ஒடநிய மிப்பன்உரு
  மாறிவரு விப்பன் இமையோர்
ஆலையம் நிலத்திடுவன் வேலைவல யத்தை யவ
  ணாகவும் அமைப்பன் அழகார்
சோலைமலை யிற்குடிகொள் ஆதியை நிகர்த்ததொரு
  சோதியை விதிப்பன் எளிதே.

இப்பாடல் இவரே செய்ததென்று கருதத்தக்க திருப்பதிக் கலம்பகத்துக்கு உரியதாயிருக்கலாம்.

எச்சவியல் இறுதியில் புறனடையாக ஒரு சூத்திரம் செய் திருக்கிறார். இது இந்நூற் பொருள் முழுமையும் சுருக்கமாய்த் தொகுத்துச் சொல்வதால், சூத்திரத்தையும் அதன் உரையையும் அப்படியே இங்கு தருவது பயனுடையது.

ஆறெனத் தொகைவகை யினில்விரித் தவற்றைத்
தேறமெய் பெறுநான் கெனத்தெரி செய்யுளும்,
பாகமோர் மூன்றும், பயில்குணம் பத்தும்,
ஆகஎண் ணான்கிரட் டியபொரு ளணியும்,
அடிமொழி எழுத்தின் அடுக்கின வாக
முடிவுற வகுத்த மூவகை மடக்கும்
மூவினப் பாடல் முதலா முறைமையின்
மேவின இருபா னாறன்மே லாறென
விழுமிய மிறைக்கவி விரித்தபின் எஞ்சிய
வழுவழு வமைதியும் இவைஎன வகுத்து,
மொழிந்தஐம் மூன்றுடன் முற்றாது
ஒழிந்தவுங் கோடல் ஒள்ளியோர் கடனே. 327

உரை

'செய்யுளெனத் தொகையான் ஒன்றாயதனை வெண்பா ஆசிரியம் எனப் பகுத்த இருவகையினின்றும் கலி வஞ்சி மருட்பா பரிபாடலென்னும் நான்கினொடும் ஆறென விரித்து அவற்றைத்

தெளியும்படிக்குப் பொருள்படும் நான்கென்று பகுத்த முத்த கம் குளகம் தொகை தொடர்நிலை என்னும் செய்யுள் மரபும், வைதருப்பம் கௌடம் பாஞ்சாலம் என்னும் மூன்று பாகமும், அவற்றொடும் பயில்வதான இன்பம் தெளிவு செறிவு சமனிலை இன்னிசை உதாரம் வலி சாந்தம் உய்த்தலில் பொருண்மை சமாதி எனக் கூறப்பட்ட பத்து வகைக் குணமும் தன்மை முதற் பாவிகம் ஈறாக அறுபத்து நாலென்னும் எண்ணையுடைய பொருளலங் காரமும் அடியினாலும் சொல்லினாலும் எழுத்தினாலும் அடுக்கப்பட்டனவாகி முற்றுப் பெற வகுத்த மூன்று வகை மடக் கலங்காரமும், வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் மூவினப் பாடல் முதலாக முறையினோடும் பொருந்திய இருபத் தாறின் மேலும் ஆறுகாட்டி முப்பத்திரண்டின வீழுமிதாகிய சித்திரக் கவிகளும் விரித்த பின்னர்க் குறையாய் நின்று வைய வழுவும் வழுவமைதியும் இவையிவையென இரண்டு கூறாக்கிக் கூறிய பதினைந்தினொடும் அணியிலக்கணம் நிரம்பாமல் ஒழிந் தனவாய் வருவன உளவெனினும் அவற்றையும் இவற்றினகத் தகப்படத் தழீஇக் கோடல் கற்றறிந்த உத்தமர் கடனாம் என்றவாறு.'

## அணியிலக்கண அட்டவணை

இன்றுவரை தமிழில் தோன்றிய அணியிலக்கணங்களின் அட்டவணை கீழே உள்ளது. இதில் 2. அணியியல் எட்டாம் நூற்றாண்டு அகத்தியர் செய்திருக்கலாம். 3, 4, 5, 6, 7 - பழைய உரைகள் உள்ளன. 8, 10, 11 - உரைநடை. 10 தண்டியலங் காரத்துள் பொருளணியியல் குற்றவியல் என்ற இரு இயல்கள் உள்ளன.

## அணியிலக்கண அட்டவணை

| எண் | நூல் | ஆசிரியர் | காலம் | யாப்பு | பாடல் | நூற்பிரிவு | இயல்பு | மூல நூல் | சிறப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | தொல்காப்பியம் | தொல்காப்பியர் | கி.மு. 5-3நூ | நூற்பா | | | மூலம் | | |
| 2 | அணி இயல் | அகத்தியர்? | கி.பி. 8 | நூற்பா | - | | மூலம் | | நூல் இல்லை |
| 3 | வீரசோழியம் | புத்தமித்திரனார் | கி.பி. 11 | க. கலித் துறை | 39 | | தழுவல் | வட தண்டி | முழு நூலுள் 5ம் அதி. |
| 4 | தண்டியலங்காரம் | தமிழ்த்தண்டி | 12 | நூற்பா | 125 | பொதுவியல் பொருளணி சொல்லணி | தழுவல் | வட தண்டி | முழுத் தனிநூல் |
| 5 | மாறனலங்காரம் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 16 | நூற்பா | 327 | பாயிரம், பொது, பொருள், சொல், எச்சம் | | | முழுத் தனிநூல் |
| 6 | இலக்கண விளக்கம் | வைத்தியநாததேசிகர் | 17 | நூற்பா | | | | | முழுநூலுள் 5ம் அதி |
| 7 | குவலயானந்தம் | மாணிக்கவாசகர் | 19 | | | | மொழிபெயர்ப்பு தொகுப்பு | சுப்பைய தீட்சிதர் உரை | |
| 8 | அணியிலக்கண வினா - விடை | விசாகப்பெருமாள் ஐயர் | 19 | வசனம் | | | | | |
| 9 | சந்திராலோகம் | முத்துசாமி ஐயங்கார் | 19 | நூற்பா | 126 | | மொழிபெயர்ப்பு தொகுப்பு | சந்திரா லோகம் | |
| 10 | தண்டியலங்கார சாரம் | சீனிவாசராகவாசாரி | 19 | வசனம் | - | பொருளணியியல் மட்டும் | | தண்டி வடமொழி நூல் | |
| 11 | தொனிவிளக்கு | சுப்பரணியசாஸ்திரி | 20 | வசனம் | - | | | தண்டி நூல் | |

அத்தியாயம் 5

# இலக்கண உரை

**முன்னுரை**

தமிழிலக்கிய வளர்ச்சியில் ஒரு சிறப்பான பகுதி இலக்கண நூல்களுக்கும் உண்டு. தொல்காப்பியம் தொடங்கி எழுந்த இலக்கண மரபில் 8ஆம் நூற்றாண்டு வரை இலக்கண வளர்ச்சி என்று திட்டமாகத் தெரியவில்லை. ஆனால் அந்நூற்றாண்டு தொடங்கி 16ஆம் நூற்றாண்டு வரையிலும் கூட இலக்கண நூற் பெருக்கம் ஏற்பட்டிருப்பது நன்கு புலப்படுகிறது. எழுத்து, சொல், பொருள் - புறப்பொருள் அகப்பொருள் என்ற பண்டைப் பிரிவுகள்; யாப்பியல், அணியியல், பாட்டியல், பிரபந்த இயல் என்ற புதிய பிரிவுகள் என்று காலந்தோறும் இவ்விலக்கண வளர்ச்சியை அளந்து காண முடிகிறது. அகராதி என்று நாம் இன்று கருதுகின்ற நிகண்டு என்ற ஒரு பிரிவும் உவமானம் மட்டும் கூறும் ஒரு பிரிவும் கூடத் தோன்றி வளர்ந்து வந்திருக் கின்றன. இவற்றுள் இந்த நூற்றாண்டுக்குரிய பல்வேறு இலக்கணப் பிரிவுகளின் வளர்ச்சியைச் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம்.

ஆனால், அந்த அளவுக்கு இந்நூற்றாண்டில் இலக்கண உரைகள் விரிவாய் எழவில்லை. எழுந்தன சிலவே. சிதம்பரப் பாட்டியல் செய்த பரஞ்சோதியின் மாணாக்கர் அப்பாட்டியலின் ஒரு பகுதிக்கு மட்டும் ஒரு சிற்றுரை எழுதினார். வைணவ மரபில் வந்த சிறந்த புலவராகிய காரிரத்தினக்கவிராயர் ஆராய்ச்சி வல்ல அறிஞராயிருந்திருக்கிறார்; திருக்குருகைப் பெருமாள் கவிராயர் செய்த மாறனலங்காரத்துக்கு ஓர் அரிய விரிவுரை செய்தார். தண்டியலங்காரத்துக்கு இன்று அச்சிடப்பட்டு வருகின்ற உரையும் இந்த நூற்றாண்டில் எழுந்தது என்றே நினைக்கும்படியுள்ளது. இம்மூன்றுரைகளையும் இவ்வத்தியாயத்துள் ஆராய்வோம்.

## சிதம்பரப் பாட்டியல் உரை

சிதம்பரப் பாட்டியல் முன் ஆராயப்பட்டது. (பக்கம் 109-113). அங்குக் கூறியபடி இந்நூலுக்குப் பழைய உரை ஒன்று உண்டு. அது முதல் மூன்று இயல்களுக்கு மட்டும் (16 செய்யுட்கள்) மிகவும் விரிவாகச் செய்யப்பட்டது. பின் இரு இயல்களுக்கும் இல்லை. உரை செய்தார் ஆசிரியரின் நேர் மாணாக்கரே* என்று கருதலாம். கிடைக்கும் பகுதி மிகவும் விரிவானது இவ்வுரைகாரர் தம்முரைக்கு யாப்பருங்கல விருத்தியுரையை மூலமாகக் கொண்டு அவ்வுரை காட்டும் மேற்கோள்களையே எடுத்துத் தந்திருக்கிறார். பிற்கால மேற்கோள் எதுவும் இதனுள் இல்லை; பிற்காலத்தில், இலக்கண விளக்கச் செய்யுளியலுரை இதைத் தழுவி எழுந்ததாகும். யாப்பருங்கலவிருத்தியைத் தழுவி இது வந்தமையால், அதுகாட்டும் சைன சமயப் பாடல்கள் பலவும் இதனுள் காணப்பெறுதல் இயல்பு. சூளாமணிப் பாடல்கள், தனிப் பாடல்கள் பல; செம்பூட் சேய், அச்சுத நந்தி முதலியோரைப் புகழ்ந்த பாடல்களும் வரும். மாபுராணமுடையார், அவிநயனார், நற்றத்தார் என்றும் குறிப்பிடுகிறார்; இவர்கள் பெயரும் நூலும் மறைந்துபோய் நெடுங்காலமாகிவிட்டது. தொல்காப்பியம், நன்னூல், யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கல விருத்தி என்ற இலக்கண நூல்களையும் பெயர் குறிப்பிடுகிறார்.

ஒழிபியல் கடைசி விருத்த உரையில், செய்யுட் பெயர் பல வகை என்ற மூலத்துக்கு உரை எழுதும்போது, பின்வருமாறு எழுதுகிறார்; "அடியாற் பெயர் பெற்றது - கழிநெடில், திரு விருக்குக் குறள் முதலாயின; இவற்றிற் கழிநெடிலாவது ஆசிரிய விருத்தம். திருவிருக்குக் குறளாவது வஞ்சித் துறை. இசையாற் பெயர் பெற்றது - சந்தத் தாழிசை முதலாயின. இதில் சந்தத் தாழிசை - ஆசிரிய விருத்தம். கலையாற் பெயர்பெற்றது அச்சுக் கலை முதலாயின. இதில் அச்சுக்கலை இரண்டடியால் வந்தாற் சீரையெண்ணி அறுசீர் முதலானவையெல்லாம் ஆசிரிய விருத்தம் எனவறிக. எழுத்தெண்ணாற் பெயர் பெற்றது கட்டளைக் கலித் துறையாம். வகுத்த வகுப்பாற் பெயர் பெற்றது - புயவகுப்பு; புயவகுப்பு முதலாயின ஆசிரிய விருத்தத்துள்ளும், ஆசிரியப் பாவினுள்ளும் அடங்கும். காரணத்தாற் பெயர் பெற்றது - திருவெம்பாவை முதலாயின; அம்மானை, தரவு கொச்சகக்

---

* ஆசிரியரே உரையும் செய்து வைத்தாரா என்பது தெரியவில்லை.

கலிப்பா வென்பாருமுளர். வெண்டளையே வருதலாற் பஃறொடை வெண்பா வென்பதுவுமிது. கால வழக்காற் பெயர் பெற்றது, வெண்பாவினுளீரடி முக்கால் முதலாயினவையும் சார முதலாயினவையும். 'பலவாஞ் செய்யுட் பெயர்' என்பதற்குப் பொருள் விரிக்கிற் பெருகும்."

பாக்களைத் தொகுத்துச் சொல்லுமிடத்து வெண்பாவும் அகவலும் என இரண்டாம்; கலி வெண்பாவினுள்ளும், வஞ்சி ஆசிரியத்தினுள்ளும் அடங்கும் என்று கூறி, தொல்காப்பிய மேற்கோள் காட்டுகிறார்.

இவற்றுள், பிற்காலத்தில் கழிநெடில் என்ற பெயரால் பாடல்களும் நூல்களும் உள்ளன. திருவிருக்குக் குறள் என்பது தெரியவில்லை; சம்பந்தர் தேவாரத்துள் திருவிருக்குக் குறள் உள்ளது. அச்சுக்கலை என்பது விளங்கவில்லை; கலையாற் பெயர் பெற்றது எவ்வாறு என்பதும் தெரியவில்லை; ஒருகால் பிற்கால வண்ணப் பாடல்களின் பகுதிக்கு வழங்கத் தொடங்கிய கலை என்ற சொல்லா என்பது விளங்கவில்லை. அப்படியே சாரம் முதலாயினவையும் என்று இவர் சொல்வது. சாரம் என்பது ஓர் அலங்காரம் என்று பாப்பாவினம் பாடல் 72 உரையில் சொல்லப்பட்டுள்ளது. அச்சுக்கலை சாரம் என்ற பெயருடைய நூல்களும் அவற்றில் யாப்பு விகற்பங்களும் இருந்தன போலும்.

## தண்டியலங்காரவுரை

ஐந்திலக்கணம் என்று சொல்லுகின்ற புதுமரபில் ஐந்தாவதாகிய அணியிலக்கணம் பற்றிய பழைய நூல் தமிழ்த் தண்டி செய்த தண்டியலங்காரம்.* அலங்காரம் - அணி; இது வடமொழி மரபில் ஒரு சாஸ்திரம். பிற்காலத்து வேறு சில அணியிலக்கண நூல்கள் எழுந்திருந்துங்கூட, தோன்றிய நாள்தொடங்கி இன்று வரை பெரிதும் ஆட்சி பெற்றிருப்பது இந்நூலே. இது இரண்டாம் குலோத்துங்கன் அவையிலிருந்த புலவராகிய தண்டி என்பவரால் வடமொழி நூலைத் தழுவிச் செய்யப்பட்டது.

இந்நூலுக்குப் பழைய உரையொன்று உண்டு. உரையாசிரியர் உதாரணச் செய்யுட்கள் செய்யவோ சேர்க்கவோ இல்லை. தண்டியாசிரியரே மூலமும் உதாரணச் செய்யுட்களும் செய்தார்,

---

* தண்டியலங்காரம் பற்றிய விரிவான ஆராய்ச்சி எமது தமிழ் இலக்கிய வரலாறு 12 நூற்றாண்டில் விளங்கக் காணலாம்.

பழைய உதாரணச் செய்யுட்களையும் சேர்த்தார்; இதைப் பிர யோகவிவேகம் செய்த சுப்பிரமணிய தீக்கிதர் சொல்கிறார். இவ்வுரையாசிரியர் நூற்சூத்திரங்களுக்கு உரையும் உதாரணச் செய்யுட்கள் பலவற்றுக்கு உரையும் செய்தார்; சிலவற்றுக்குச் செய்யவில்லை. இவ்வுரையாசிரியர் பெயர் காலம் முதலிய வரலாறுகள் எவையும் புலப்படவில்லை.

இவர் பெயர் சுப்பிரமணிய தேசிகர் என்று முதல் பதிப்பில் எழுதப் பெற்றுள்ளது. பின் வந்தோர் பழைய உரை என்று குறிப்பிட்டனர். ஆசிரியருக்குச் சிறிது காலம் பிற்பட்டுத் தோன்றியதென்றே இவ்வுரை கருதத்தக்கது. அங்ஙனமாயின் 16ஆம் நூற்றாண்டின் தொடக்கம் இவ்வுரையின் காலமாகலாம். அக்காலத்து தேசிகர் என்ற சொல் வழக்கத்துக்கு வரவில்லை. சென்ற நூற்றாண்டில், ஒரு புத்தகத்தை அச்சிட விரும்பிய அச்சுக் கூடத்தார், 'ஆறுமுக சுவாமிகள் பார்வையிட்டது' அல்லது 'கருணாநந்த சுவாமிகள் அருளிச் செய்த உரை' என்று அச்சிட்டு வைப்பது ஒரு வழக்கம்; அவ்விதமே இச் சுப்பிரமணிய தேசிகர் என்ற பெயரும் அச்சிட்டோரால் தெரிந்தோ தெரியாமலோ அமைத்துக் கொள்ளப்பட்டது போலும். திருவாவடுதுறை யாதீனத்துச் சுப்பிரமணிய தேசிகர் என்று குறிப்பிடுவதும் பிழை; உரை தோன்றிய காலத்தில் எந்த ஆதீனமும் தோன்றியதில்லை. எனவே இவ்வுரை, ஆசிரியர் பெயர் தெரியாத பழைய உரை என்று மட்டுமே கூறத்தக்கது.

இவ்வுரையை ஆசிரியர் எங்கும் ஒரே நெறியாக எழுத வில்லை. சுருக்கவுரையாகவும், சில இடத்து இலக்கணக் குறிப் பாகவும், அணிகளுக்கும் பாடலுக்கும் உள்ள பொருத்தத்தை மட்டும் காட்டுவதாகவும் அணிகளுக்கிடையேயுள்ள வேற் றுமையை மட்டும் காட்டுவதாகவும் உரை அமைந்துள்ளது. பல இடங்களில் நயமாகவும் உள்ளது. தமக்கு முன்னரும் உரைகள் இருந்தன என்பதை இவர், 'என உரைப்பாரு முளர்', 'என்று உரைப்பாரு முளர்', ஒரு சார் தொல்லாசிரியர் (65), ஒரு சார் ஆசிரியர் வேறுபடுத்திக் கூறினார், ஒரு சார் ஆசிரியர் இதன்பாற் பகுத்துக் கூறினார் (83) என்று குறிப்பிடுபவற்றால் அறிகிறோம்.

இவர் தரும் சில செய்திகளை மட்டும் இங்கு குறிப்பிடு வோம். பெருங்காப்பியம் என்பதன் விளக்கத்தில் (7) நாடக சாதி பத்துவகை என்கிறார். தமிழ் முத்தரையர் கோவையும் குறிப்பிடுகிறார். இக்கோவை 7ஆம் நூற்றாண்டு (அல்லது 8) நூலாயிருக்கலாம். 11ஆம் நூற்பாவுரையில், உரைவிரவியும்

பிறபாடை விரவியும் என்று கூறி, விரவியும் என்ற உம்மையால், விரவாது செய்யுளணி வருவதே சிறப்புடைத்தெனக் கொள்க என்கிறார். அதாவது உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் சிறந்த காப்பியமாகாது என்பது இவர் கருத்து. இதன் முதனூல் செய்த ஆசிரியர் உலகத்துச் சொல்லையெல்லாம் சமஸ்கிருதம், பிராகிருதம், அவப்பிரபஞ்சம் என மூன்று வகைப்படுத்து, அவற்றுள் சமஸ்கிருதம் புத்தேளிர் மொழி எனவும், அவப்பிர பஞ்சம் இதர சாதிகளாகிய இழிசனர் மொழி எனவுங் கூறினார். அதனால், பிராகிருதம் எல்லா நாட்டு மேலோர் மொழி எனப் படும், அல்லதூஉம், பிரகிருதி என்பது இயல்பாகலான், பிரா கிருதம் இயல்பு மொழி.

'மாங்கனியும், தீம்பாலும், வருக்கைச் சுளையும் சருக்கரை யும் தம்முள் வேறுபட்ட சுவையவெனினும் கூறுவது மதுர மொன்றன்றே? அதுபோல, எழுத்துச் செறிவும், சொற்செறி வும், பொருட்செறிவும் செறிவென்றே சொல்லுவதல்லது, பிறி தொரு வகை பேசிற்பெருகிய அகல முடைத்தாமாகலின் அவை யெல்லாம் உய்த்துணர்ந்து கொள்க' - என்பது போன்ற சுவை யுடைய விளக்கங்கள் பல.

இவ்வுரை ஒருகால் முழுமையும் எழுதி முடிக்கப் பெறாத உரையோ என்று கருதும்படி உள்ளது. எனினும், உள்ளவரையில் இது நூற்பாக்களின் கருத்தையும் மேற்கோள் பாடல்களின் பொருளையும் நன்குணர்வதற்குப் பெருந்துணையாகவுள்ளது என்பதில் ஐயமில்லை.

## காரி இரத்தினக் கவிராயர்

ஆழ்வார் திருநகரிக்கு அருகே மூன்று மைல் தொலை விலுள்ள தென் திருப்பேரையில் இவர் பிறந்தார். திருக்குருகைப் பெருமாள் கவிராயரின் பெரும் புலமையைக் கேள்வியுற்று அவரிடம் வந்து தமிழ் பயின்று தாமும் பெரும் புலவரானார். இவர் இயற்பெயர் இரத்தின கவிராயராகவும், தந்தையார் பெயர் காரியாகவும் காரியார் புதல்வராதலால் காரிரத்னக் கவிராயர் என்பது இவர் பெயராகவும் அமைந்திருக்கலாம். இவருக்குக் கோயிலில் வாகனமாலை படிப்பதற்காக அக்காலத்தில் மானி யம் விடப்பட்டிருந்தது. இவர் வமிசத்தார் அம்மானியத்தை இன்னமும் அனுபவித்து வருகிறார்கள். அனைவரும் திருமால் வழிபாடுடையவர்கள், மிக்க தமிழ்ப் பயிற்சியுடையவர்களாய்

ஏடுகளைத் தொகுத்து வைத்திருந்தார்கள். டாக்டர் சாமிநாத ஐயரவர்களுக்கு இவர்கள் ஏடுகள் கொடுத்து உதவியிருக் கிறார்கள். இவர் பரம்பரையில் வந்த சிறிய காரிரத்னக் கவிராய ரென்பவர் அடுத்த நூற்றாண்டில் வட மலையப்பரால் ஆதரிக்கப் பெற்று வாழ்ந்தார்.

இவர் செய்த மாறனலங்காரவுரையில், இயல் தோறும் இவரைப் புகழும் ஒரே சிறப்புப் பாயிரப் பாடல் எழுதப் பெற் றுள்ளது:

**தருகாள மேகம் கவிராய ராயன் சடையனன்பாற்**
**குருகாபுரேசர் புனையலங் காரம் குவலயத்தே**
**கருகாத செஞ்சொல் உரைவிரித் தான்கற்ப காடவிபோல்**
**வருகாரி ரத்ன கவிராயன் பேரை வரோதயனே.**

பொருளணியியலுரையின் இறுதியில் மட்டும், 'கவிராச கேசரி யான பேரைக் காரிரத்தின கவிராயர் உரை எழுதின தென்றறிக' என்ற குறிப்புக் காணப்படுகிறது.

பேரை என்பதன் பிரதிபேதமாக, பெரிய என்ற சொல் காணப்படுகிறது. சிறிய இரத்தினகவிராயர் பிற்காலத்தில் இருந் தமையால் இவர் பெரிய என்று கருதப்பட்டார் போலும்; சிறிய இரத்தினக் கவிராயர் என்பவர், இவருடைய புதல்வர் திருமேனிக் கவிராயர் எனப்படுவார்; இவர் திருப்பேரைத் திருப்பணிமாலை செய்தார்.

இருப்பினும் இங்கு ஒரு கருத்துச் சொல்லுதல் பொருத்த மாகிறது. சிறப்புப் பாயிரத்துக்கு உரை எழுதத் தொடங்கு மிடத்து, "கூறுதற்கரிய சிறப்புப் பாயிரம் கூறுதற்குரியோர் இந்நால்வருள் (ஆசிரியன், ஒரு புடைகற்ற உயர் மாணாக்கன், தன்னொடு கற்ற தலைமாணாக்கன், உரை காரணன்) ஒருவரா மென்பது. அந்நால்வருள்ளும் இப்பாயிரம் செய்தார் இந்நூற் குரை செய்த திருமேனி இரத்தின கவிராயன் என்றுணர்க, நூலாசிரியர்க்கு மாணாக்கனென்பதனாலுமாம்" என்ற குறிப் புக் காணப்படுகிறது. இதனால் மாறனலங்கார உரையாசிரியர் திருமேனி இரத்தின கவிராயர் என்றும், இவர் பெயரே காரி இரத்தின கவிராயரென்றும் தெரிகிறது.

## நூல்கள்

மாறனலங்கார உரைச்சிறப்பால் இவர் பெயர் நின்று நிலவுகிறது. அதனுள் இவர் தாம் திருக்குருகைப் பெருமாள்

கவிராயர் செய்த நம்பெருமாள் மும்மணிக் கோவைக்கு விரித்துரை (விருத்தியுரை) எழுதியிருப்பதாகக் கூறியிருக்கிறார். ஆனால் மும்மணிக்கோவை கிடைத்து வெளிவந்ததாகத் தெரியவில்லை. மாறன் பாப்பாவினம் இவர் செய்ததாகச் சொல்வர்; அது பொருந்தாது என்று முன் குறிப்பிட்டோம். பரிமேலழகர் உரை நுண் பொருள் மாலை என்று குறிப்புக்கள் எழுதி வைத்திருந்தார்; இது தனி நூலாக வெளிவராவிடினும், செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளி வந்துள்ளது; பரிமேலழக ருரையின் நுட்பங்கள் பலவற்றை இது நன்கு விளக்குவது. தொல்காப்பிய நுண்பொருள் மாலையும் செய்தார் இவர் என்று சொல்வர்; இது கிடைக்கவில்லை.

## காலம்

திருக்குருகைப் பெருமாள் கவிராயர் காலம் 1540 - 65 என்று முன்னமே சொல்லப்பட்டது. அவருடைய மாணாக்கரான இவர் காலமும் அதையொட்டியதே; 1550-75 ஆக இருத்தல் பொருந்தும்.

## மாறனலங்கார உரை

இவ்வுரை மிகச் சிறந்த இலக்கணவுரை. இவ்வுரை இல்லா விட்டால் நூற் பொருளும் பெருமையும் வெளிப்பட உணர வியலாது. சங்க நூல்கள் பிற சான்றோர் நூல்களிலிருந்து மேற் கோள் காட்டி விளக்குகிறார். பல இடங்களில் உதாரணச் செய்யுட்களுக்கு உரையும், ஏனையுவமம் உள்ளுறை யுவமம் இறைச்சிப் பொருள் என்பவற்றுக்கு விளக்கமும் தருகிறார். உதாரணச் செய்யுட்களை அழகாகப் பொருத்திக் காட்டுகிறார். அபூர்வமாகச் சில இடங்களில் வடமொழித் தண்டியையும் அதிகமான இடங்களில் தமிழ்த் தண்டியையும் எடுத்துக் காட்டு கிறார். தெண்டி என்றே எங்கும் சொல்வார். பாயிரம் முழுமைக்கும் உரை எழுதிய பின் தொடக்கத்திலுள்ள சிறப்புப் பாயிரத்தை இறுதியில் எழுதி உரை வகுக்கிறார்.

இலக்கணங்களுள் இவர் காட்டுவன, தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கல விருத்தி, யாப் பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், நன்னூல்; 16ஆம் நூற் றாண்டு நூலாகிய சூடாமணி நிகண்டையும் இவர் காட்டுகிறார். நேமிநாதர் பவணந்தி என்று குறிப்பிடுகிறார். இளம்பூரணர் நச்சினார்க்கினியர் என்ற தொல்காப்பிய உரையாசிரியர்களையும் குறிப்பிடுகிறார். தொல்காப்பியரை ஒல்காப் பெருமைத் தொல் காப்பியர் என்பதே இவர் மரபு. நச்சினார்க்கினியரைத் 'தொல்

காப்பியத்துக்குக் காண்டிகை யெழுதின நச்சினார்க்கினியர் நோக்கம்' என்பார்; யாப்பருங்கலக் காரிகையார் நோக்கம் என்பதும் காண்க.

சங்க நூல்களுள் இங்கு வருவன முருகாறு பொருநாறு சிறுபாண் பெரும்பாண்; அகநானூறு புறநானூறு குறுந்தொகை கலித்தொகை பரிபாடல்; காப்பியங்களுள் சிலப்பதிகாரம் சிந் தாமணி; திருக்குறள் நாலடி திருக்கோவையார்; நம்மாழ்வாரின் திருவாய்மொழி; முந்தையோர் நூல்களில் மூதுரை; தம் ஆசிரியர் நூல்களில் திருக்குருகா மான்மியம்; கிழவி மணிமாலை, நம் பெருமாள் மும்மணிக்கோவை, திருப்பதிக் கலம்பகம் (?) என்பன. இளங்கோவடிகள் பாடிய அந்திமாலை சிறப்புச் செய் காதை, இளங்கோவடிகள் மனையறம் படுத்தகாதை... விரித்துரை எழுதிய அடியார்க்கு நல்லாராகிய ஆசிரியர், திருத்தக்க மாமுனிவர் கூறிய சிந்தாமணி என்பன இவர் கூறும் சில தொடர்கள்.

69ஆம் வெண்பாவுரையில் தொகைநிலைச் செய்யுள் பெயர் பெறுமாற்றைக் கூறும்போது, முந்தையோர் கூற்றை யொட்டி உரையில் நயனப்பத்து பயோதரப்பத்து என்று சினை யாற்றொகுத்த பெயருக்கு உதாரணம் சொல்லப்பட்டுள்ளன. இந்நூல்கள் முன்னுமில்லை பின்னுமில்லை.

## திருக்குறள் நுண்பொருள் மாலை

இவ்வாசிரியர் திருக்குறள் பரிமேலழகர் உரைக்கிற சில நுண்பொருள்களுக்கு விளக்கமாக, பரிமேலழகருரை நுண்பொருள் மாலை என ஒரு விளக்கக் குறிப்பு எழுதி வைத்தார்; தம்மிடம் பயின்றாருக்கும் பயன்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு எழுதினார் போலும். இப்பகுதி தனி நூலாக வெளிவரவில்லை. மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரது செந்தமிழ்ப் பத்திரிகை இதழ் களில் மட்டும் பகுதிபகுதியாக வெளிவந்தது. இப்பகுதிகளைத் திரு. தண்டபாணி தேசிகர் தமது திருக்குறள் உரைவளம் என்ற நூலில் (தருமபுரம் பதிப்பு) எடுத்து அமைத்திருக்கிறார். இவர் எழுதியுள்ள குறிப்புக்கள் சில பாடல்களுக்கு மிக விரிவாகவும் சிலவற்றுக்கு மிகச் சுருக்கமாயும் சிலவற்றுக்குக் குறிப்பே இல்லாமலும் உள்ளன. விரிவுக்கு, குறட்பா 15, 25, 113, 380 பார்க்க. கூர்ந்து ஆயும்போது, அறத்துப்பால் உரையிறுதியில் மட்டும், 'அறத்துப்பால் பரிமேலழகரையன் உரையுள் இரத்தின கவிராயன் எடுத்துச் சேர்த்த நுண்பொருள் மாலை முற்றிற்று' என்ற குறிப்புக்

காணப்படுகிறது. இங்கு மிக அதிகமாக இலக்கணக் குறிப்புக் களையும் ஒப்புமைப் பகுதிகளையும் காட்டுகிறார். வடமொழி இலக்கணத்தையும் மரபுகளையும் தவறாது சொல்லிச் செல்கிறார்.

மேற்கோளாக இவர் குறளையே அதிகம் காட்டுகிறார். அடுத்துத் திருக்கோவையார். தொடக்கத் தொடரைத் தந்து இடையிலுள்ள தொடரைக் காட்டுகிறார்; பேராசிரியர் கோவை யுரையையும் பல முறை தருகிறார். திருவெம்பாவைத் தொடரை எடுத்துக்காட்டி 'என்றார் பாவையாருள்' என்கிறார்; பாவையார் என்பது அபூர்வமான சொல்லாட்சி. கவிராயர் மரபினர் வைணவப்பற்று அதிகம் உடையவராயினும், இவர் திருவாச கத்தையும் திருக்கோவையாருரையையும் நன்கு பயின்றிருப் பது இவருடைய மேலான தமிழ்ப்பற்றைப் புலப்படுத்துகிறது. தொல்காப்பியம் நன்னூல் தண்டியலங்கார உரை மேற்கோட் பாடல்கள் பலவும் குறிப்பிடுகிறார். தொல்காப்பியத்தை எங்கும் சொல்கிறார்; இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உரைகள், சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரை, வீரசோழியம்; முருகாறு சிறுபாண் பெரும்பாண், பட்டினப்பாலை; புறநானூறு, நற்றிணை, பரிபாடல், கலித்தொகை; மணிமேகலை, சிந்தாமணி; நாலடி, நான்மணி, ஆசாரக்கோவை; புறப்பொருள் வெண்பா மாலை ஆகியன இவர் குறிப்பிடும் வேறு நூல்கள். 'ஒருபொருட் பன்மொழி' என்ற தொடரைத் தந்து இது அவிநயமாதல் அகத்திய மாதல் வேண்டும் என்கிறார். 'கட்டியங்காரன் கதையைப் பிரமாணமாக எழுதினமையால், சிந்தாமணி கட்டுக்கதை அன் றென்க', 'உழையிருந்தான் எனப் பெயர் கொடுத்தார். அமாத் தியன் என்னும் வடமொழிப் பெயரும் அப்பொருண்மைய தாதலின்' (638).

அறத்துப்பாலில் இவருடைய குறிப்புக்கள் மிகுதி; காமத்துப் பாலில் குறைவு. சில பாடல்களுக்கு மிகவும் விரிவாக குறிப் பெழுதியுள்ளார் - 15, 25, 113, 380. இங்கு விளக்கியுள்ள பொருள் கள் அவாய்நிலை, புணர்ச்சி விகாரம், எச்சம், அன்மொழித் தொகை என்பன. சில இடங்களில் 'இவ்வுரை எம்மனோர்க்கு அறிதல் அரிது' என்பார் (233, 551, 380). இவ்வுரையாசிரியர் பழைய பாட்டினையே வாசகமாக்குவார் என்பார் (64). 'நாண் என்னும் நல்லாள் பெண்பாலாக்கியது வடமொழி பற்றி என்றார் பரிமேலழகர்.' அவர் கூற்றை இவர் நன்கு விளக்கியுரைக்கிறார் (924) தோணி கரைதட்டுதலைச் சில்லந் தட்டிற்று என்பார்.

## அத்தியாயம் 6

# சைவ இலக்கியம்

### முன்னுரை

14 - 16 ஆகிய நூற்றாண்டுகளின் காலமானது சைவ சமயத்தின் பொற்காலங்களில் ஒன்று என்றால் மிகையல்ல. 7 - 9 நூற்றாண்டுகளில் தேவார திருவாசகங்கள் தோன்றின. 12ஆம் நூற்றாண்டில் திருத்தொண்டர் புராணம் எழுந்தது. 13 - 14ஆம் நூற்றாண்டுகளில் சைவ சமய முதல் சாத்திரங்கள் எழுந்தன. 15ஆம் நூற்றாண்டில் பெருங் கவிஞராகிய அருணகிரிநாதர் வாழ்ந்து திருப்புகழ் பாடினார். இந்நூலாராய்ச்சி நெறியில் 16ஆம் நூற்றாண்டு பெருஞ்சிறப்புடையதென்று காணத்தகும். இந்நூற்றாண்டு வரலாற்றின் முதற்பாகத்தில் ஐந்து அத்தியாயங் களில் புராண இலக்கியம் சொல்லப்பட்டது. அவற்றுள் நான்கு அத்தியாயங்கள் சைவ புராணங்களாகும்; செய்த ஆசிரியர் தென்காசிப் பாண்டியர் மூவர் தொடங்கி, ரேவண சித்தர் ஈறாகப் பதினைவராவர்; பாடிய புராண நூல்கள் நாற்பது ஆகும். இவற்றின் பாடல் தொகை ஐம்பதாயிரம். இது சைவத்தின் மிகப் பெருஞ் சாதனை என்பது மறுக்க முடியாதது. இவை யாவும் சைவ நூல்களில் ஒரு பகுதியாகும்.

இனி, இப்புராணங்களன்றித் தோன்றிய பிற சைவ நூல் களைச் சில வகைகளாகப் பிரிக்கலாம். 1. சமய தத்துவ இலக் கியங்கள்; 2. சமய இலக்கிய உரைகள்; 3. தோத்திர இலக்கியங்கள். இவற்றுள் முதல் வகையை இந்த அத்தியாயத்திலும் ஏனைய வற்றைப் பின்னுள்ள அத்தியாயங்களிலும் பார்ப்போம்.

மெய்கண்டார் சிவஞான போதம் பாடியது தொடங்கியும், அதற்கு முன்பிருந்தும், சைவ சமய இலக்கியங்கள் அளவின்றிப் பெருகியிருக்கின்றன. மெய்கண்டார் வழியாக வந்த சைவ சந்தான பரம்பரை பல பெரும் பிரிவுகளாக உமாபதி சிவாசாரியருக்குப் பின் பிரிந்தது. அவருடைய மாணாக்கர் மச்சுச் செட்டியா ரென்னும் அருள் நமசிவாயர். இவருடைய மாணாக்கர் சித்தர்

சிவப்பிரகாசர் என்பவர்; இவர் நீண்டநாள் வாழ்ந்து இருந்தார் என்று சொல்வர். இவருடைய மாணாக்கர் மூவலூர் நமசிவாய தேசிகர். இவரே திருவாவடுதுறை ஆதினத்தை நிறுவிய குரு முதல்வர். அருள் நமச்சிவாயரின் மற்றொரு சீடர் கங்கை மெய்கண்டார். இவருடைய சீடர் சீகாழி - சிற்றம்பல நாடிகள். இவருக்குப் பின் முறையே பழுதைகட்டி சம்பந்த முனிவர், சிவ புரம் ஞானப்பிரகாசர், சிவபுரம் தத்துவப் பிரகாசர், செட்டித் தெரு பழுதைகட்டி ஞானப்பிரகாசர், கமலை ஞானப்பிரகாசர் என்போர் முறையே ஒருவர் பின் ஒருவராக ஆசாரியராயிருக்க, கடைசியில் சொன்ன ஞானப்பிரகாசர் மாணாக்கரான குரு ஞானசம்பந்தர் தருமபுர ஆதீனத்தை நிறுவினார். இனி, மேற் சொன்ன பழுதைகட்டி சம்பந்த முனிவரின் மாணாக்கர் சத்திய ஞான பண்டாரம், அவர் மாணாக்கர் களந்தை ஞானப்பிரகாசர் அவர் மாணாக்கர் கண்கட்டி மறை ஞானசம்பந்தர்; இவருக்கு மறைஞான தேசிகர் என்ற மாணாக்கர் இருந்தார். இவர்கள் அனைவரும் மெய்கண்டார் மரபில் வந்தவர்கள்.

இவர்களுள் நாம் இங்கு கருதத்தக்கோர் மறைஞான சம்பந்தர், மறை ஞானதேசிகர், கமலை ஞானப்பிரகாசர், குரு ஞான சம்பந்தர் என்னும் நால்வர். இவர்கள் இந்த 16ஆம் நூற் றாண்டின் தொடக்கத்திலும் பின்னரும் வாழ்ந்து சைவ இலக்கியம் செய்தார்கள். இவர்களுள் மறை ஞானசம்பந்தர் பாடிய இரு புராணங்களும், கமலை ஞானப்பிரகாசர் பாடிய இரு புராணங் களும், இந்த நூற்றாண்டு வரலாறு முதல் பாகத்தில் விரிவாக ஆராயப்பட்டன. இங்கு இவர்களுடைய வரலாறுகளும் ஏனைய நூல்களும் ஆராயப்பெறும். இந்நால்வரில் மறைஞான சம்பந்தர், கமலை ஞானப்பிரகாசர், குருஞான சம்பந்தர் ஆகிய மூவரும் சைவ சமய நெறிகளான சரியை, கிரியை,யோகம், ஞானம் ஆகிய நெறிகள் குறித்துச் சிறியவும் பெரியவுமான பல நூல் செய்திருக் கிறார்கள். இவர்தம் நூல்களால் சைவ சமயம் மிக்க வளம் பெற்றிருக்கிறது. சந்தான ஆசாரியர் நூல் செய்யாத பல துறை களில் இவர்கள் சிறப்புடைய நூல்கள் பாடியிருப்பது மிகவும் போற்றற்குரியது.

இதே நூற்றாண்டில், மெய்கண்ட பரம்பரை யல்லாமல் மற்றொரு பரம்பரையும் தோன்றி வளர்ந்தது. கந்தப் பெருமான் தொடங்கி ஸ்கந்த பரம்பரையென்றும் வாமதேவ பரம்பரை யென்றும், பெயர் கொண்ட ஒரு புதிய சைவ ஞான பரம்பரை, சிவாக்கிரயோகி என்ற ஆசாரியரை இந்த நூற்றாண்டில் தலை

வராகக் கொண்டு சிறந்த ஞானபீடமாக நிலைபெற்றது. இச் சிவாக்கிரயோகி தமிழில் மட்டும் அன்றி வடமொழியிலும் மிகச் சிறந்த புலமையுடையவர். இவர் தமிழிலும் வடமொழியிலும் மிகவும் சிறப்புடைய மூல நூல்களும் உரைகளும் செய்திருக்கிறார்.

இக்காலத்தில் சிற்றம்பலநாடி என்ற பெயர் கொண்ட மற்றொரு சிவஞானி வாழ்ந்து இருக்கிறார். இவர் முன் சொன்ன சைவ சமய ஆசாரியர் பரம்பரையில் வந்த சீகாழி - சிற்றம்பல நாடிகளினும் வேறானவர். சைவ சமயப் பொருள்களையும் முருகன் துதியையும் அமைத்துத் திருச்செந்தூர் அகவல் என்ற ஓர் அரிய நூலை இவர் பாடி உள்ளார். இந்நூல் பலருக்கு மனப் பாடமான ஒரு தோத்திர நூலாக இருந்த போதிலும், சாத்திரம் என்றே கருதத்தக்கது. இவரும் இக்காலத்துக்குரியவர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் கன்னட நாட்டில் பசவர் தோற்றுவித்த வீர சைவ சமயம் மெல்ல வளர்ந்து, இந்த நூற்றாண்டில் தமிழ்நாட்டில் கால்கொண்டது என்று அறிகிறோம். வீரசைவரால் செய்யப்பட்ட முதல் இலக்கியம் இந்த நூற்றாண்டில் எழுகிறது. ரேவண சித்தர் என்ற ஒரு ஞானி சிறந்த தமிழ்ப் புலவராய் விளங்குகிறார். அவர் செய்த நூல்களில் புராணங்கள் மூன்று; அவை கிடைக்கவில்லை. மற்றொரு நூல் அகராதி நிகண்டு என்பது; இந்த நூல் நான்காம் அத்தியாயத்துள் ஆராயப் பெற்றுள்ளது. இவர் செய்த மற்றொரு சிறப்பான நூல் சிவ ஞானதீபம் என்பது. இது சைவ சித்தாந்தப் பொருள்களை எல்லாம் நன்கு அமைத்துக் கூறுவது.

மேற்சொன்ன ஆசிரியர் வரலாறுகளும் அவர்களுடைய நூல்களும் இந்த அத்தியாயத்தில் விளங்க ஆராயப்பெறும்.

மறைஞான சம்பந்தர், கமலை ஞானப்பிரகாசர், குருஞான சம்பந்தர், சிவாக்கிரயோகிகள் ஆகியோர் மிக்க ஆற்றல் வாய்ந்த பெரு ஞானிகள் மட்டுமல்ல, பெரும் புலவர்கள். முற்பட்ட காலங் களில் தோன்றிய எந்தப் புலவருக்கும் ஒப்பாக இலக்கியப் புலவர்களாய் விளங்க வல்ல ஆற்றல் பெற்றவர்கள். ஆயினும் காலமானது அவர்களை ஆட்கொண்டிருக்கிறது. சமயத் துறையில் அவர்கள் தங்கள் மனத்தைச் செலுத்திச் சைவப் பயிர் தழையச் செய்வதற்கான பல முயற்சிகளில் ஈடுபட்டு, சமய நூல் களும் உரைகளுமே செய்தார்கள். இலக்கியப் புலவர்களாகத் திகழ அவர்கள் விரும்பவில்லை; இலக்கிய உலகிற்கு விளைந்த நஷ்டம் சமய உலகுக்கு லாபமாயிற்று.

## மறைஞான சம்பந்தர்

### வரலாறு

சைவ சமயத்தில் சிறியனவும் பெரியனவும் ஆகிய எண்ணற்ற நூல்கள் செய்த பேராசிரியர் மறைஞான சம்பந்தர். இவர் களந்தை என்ற ஊரில் பிறந்தவர். இவர் இளைஞராய் இருந்த போது களந்தையில் சத்திய ஞான பண்டாரத்தின் சீடராகிய களந்தை ஞானப்பிரகாச பண்டாரம் என்பவர்* புகழ் வாய்ந்த ஆசாரியராக இருந்தார். இவர் அவரிடம் சமயக் கல்வி பயின்றார். அவர் முக்தியடைந்த பிறகு அங்கிருந்து காளத்தி சென்று அங்கிருந்த கண்ணப்ப பண்டாரம்❖ என்பவரிடத்தில் உபதேசம் பெற்றார். இக்கண்ணப்பர் வரலாறும் எதுவும் தெரியவில்லை. மறைஞான சம்பந்தர் உபதேசம் பெற்றபின் தில்லையில் வாழ்ந்தார். அது காரணமாகச் சிதம்பரம் மறைஞான சம்பந்த நாயனார் என்றும் இவரைச் சொல்வதுண்டு. சிதம்பரத்தில் இவர் சிவ யோகத்தில் திளைத்திருந்த காலத்தில் பக்குவமுதிர்ச்சி பெற்று இந்திரியங்கள் புறத்தே செல்வதை விரும்பாதபடி தம் கண்ணைக் கட்டிக் கொண்டு வாழ்ந்தார் என்றும், அது காரணமாகக் கண் கட்டி பண்டாரம் என்று மக்கள் இவரை வழங்கினர் என்றும் சொல்வதுண்டு. இவர் வாழ்ந்த இடம் கண்கட்டி மடம். இது சிதம்பரம் வீதியில் தென்கிழக்கு மூலையில் இருந்ததென்றும், சமீப காலத்தில் இடிக்கப்பட்டதென்றும் சோமசுந்தர தேசிகர் கூறுவார். இச்செய்திகள் வெள்ளியம்பல வாணத் தம்பிரான் எழுதிய முத்தி நிச்சயப்பேருரையாலும் விளங்குவன.

பெயர் திரு மறைஞான சம்பந்தர், தேசிகர் என்றெல்லாம் வழங்குவதுண்டு. இவர் பெயருக்கு அடைமொழியாக காளத்தி, சிதம்பரம், குகைமடம், கண்கட்டி மடம் முதலிய சொற்கள் வழங்கும். இங்கெழுதிய வரலாற்றாலும் 15ஆம் நூற்றாண்டு வரலாற்றில் ஞானப்பிரகாசர் குறித்து எழுதியவற்றாலும் இப் பொருள்கள் தெளிவுபடும். இவர் மாணாக்கர் செய்த பிராயச் சித்த சமுச்சயம் என்ற நூலில்,

---

* இவ்வரலாறுகளை எமது தமிழ் இலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

❖ பண்டாரம் என்றால் சிவஞானம் கைவந்த துறவி என்பது பொருள்.

ஆகமம் தமிழ் செய்
திங்க ளுரிஞ்சு மணிமாடத் தில்லைக்குகையில் திரைபோட்டுப்
பங்க மறவாழ் மறைஞான சம்பந்தனும் நம் பதியாவார்.

என்று தம்மாசிரியரைப் பாராட்டுவதால், தில்லை, குகை, கண் கட்டி என்ற அடைமொழிகளுக்கு விளக்கம் கிடைக்கும்.

கண்கட்டி மறைஞான சம்பந்தர் செய்த சிறுநூல் முத்தி நிலை என்பது. இதனுள் இவர் கூறுகின்ற முத்தியில் இயல்பு ஆன்மானந்த வாதம் என்பது. ஆன்மாவுக்கு இயல்பாய் உள்ள ஆனந்தம் மலத் தடையால் மறைபட்டு நிற்க, அருளால் மலம் நீங்கியபோது ஆன்மா ஆனந்தத்தை அனுபவிக்கிறது என்பது பொருள். இது சைவ சித்தாந்தக் கருத்தன்று என இதை மறுத்து, தருமபுரம் குருஞான சம்பந்தர் முத்தி நிச்சயம் என்றொரு சிறு நூல் செய்தார். அதற்கு வெள்ளியம்பலவாணத் தம்பிரான் விரிவான உரைகள் எழுதியிருக்கிறார். அங்கு மூல ஆசிரியரான குருஞான சம்பந்தர் கூற்றாக மறைஞான சம்பந்தரைச் சுட்டிப் பல செய்திகள் சொல்லுகிறார். அவற்றுட் சில கீழே தருகிறோம்.

'மறைஞான பண்டாரஞ் செய்த தமிழெல்லாம், இவற்றை நாம் படித்தால் நமக்கும் அவ்வாறு நாப் பழகிச் சந்தவின்பம் படச் சொல்லவராதெனப் பிறர் வழங்காமையுணர்க. இவ்வாறு அவர் செய்தன சிவதருமோத்தரம், சைவ சமயநெறி, பரமத திமிர பானு, பதிபசுபாசப் பனுவல், சங்கற்ப நிராகரணம், பரமோப தேசம், ஐக்கியவியல் முதலியன பலவுமாம். மறைஞான பண் டாரம் முதலிய பிறர், சிவாகமங்களிலும் தொல்லாசிரியர் வாய் மொழிகளினும் இல்லாதோர் விவகாரமான ஆன்மானந்த முத்தி, சிவசமதா முத்தி என்னும் இவற்றைத் தங்கள் குறிப் பாற் படைத்துப் பரமோபதேசம் சகலாகம சாரம் என்றாற் போலச் சில நூல் செய்தலாம்.' 'மறைஞான பண்டாரம் ஒரு நூலிலாயினும் குருக்களது சிறப்புப் பெயர் கூறி வழிபடாதது என்னை யோவெனின், அது கூறுதும்; மறைஞான பண்டாரம் சிறு வயதில் திருக்காளத்தியிற் சென்றுழி, அவ்வூர்க் கண்ணப்ப பண்டாரம் கருணையால் விசேட தீக்கை பரியந்தம் பண்ணி உடையவரும் எழுந்தருளப் பண்ணிக் கொடுத்துக் கல்வியுடை யராதற் பொருட்டு அனுப்பி வைத்தபின் அவர் சோணாட்டிற் சென்று கல்வியுடையவரான வழி விவேகம் உண்டாகுதலின், தாம் நைட்டிகராக நின்று ஒழுகுமாற்றல், கண்ணப்ப பண்டாரம் கிருகத்தரகாலின், அவரினும் உயர்ந்தாராகத் தன்மை நன்கு

மதித்து அக்கண்ணப்ப பண்டாரம் தில்லையில் தம்பால் வந்துழியும் வழிபடாமை கருதி, அவர் கேட்பச் சிவலிங்கம் விடுத்தலின், பூர்வாசிரியரோடு மாறுபாடாகலானும், பின்ன ரொரு குரவரை அடைதற்கு அனைவரும் கிருகத்தராகலின் தமக்குக் குருவாதற்குரியார் இலரெனவும், நைட்டிகருள் தம்மில் உயர்ந்தார் இலரெனவும் கருதி அடங்கியிருந்தமையின், உலகத் தார் வழிபாட்டின் உயர்ந்தாரகாலின் கண்கட்டி மடத்துள்ளே இருந்தாரன்றே, அதனானும், பிறிதொரு குரவரையடையாமை யானும், குரு வழிபாடு செய்திலரென்க,'* இங்கு காட்டிய பகுதிகளால் பல செய்திகள் முதன் முதலாகத் தெரிய வருகின்றன, தெளிவுபடுகின்றன. முதலாவது, மறைஞான சம்பந்தரே இங்கு மறைஞான பண்டாரமாகிறார். இவர் செய்த நூல்கள் பல. சிவ சமதாமுத்தி என்று இவர் குறிப்பிடுவது சிவ சம வாதம் போலும் முதலில் இவருக்குக் களந்தை மறைஞான பண்டாரம் என்று பெயர். பின்னர் காளத்தி - கண்ணப்ப பண்டாரத்தை வழிபட்டு ஒழுகினமையால் காளத்தி மறைஞான பண்டாரம் என்று பெயர் பெற்றார். கண்ணப்பர் கிருகத்தர், மறைஞானர் நைட்டிக சந்நியாசி, இவர் தில்லையில் பின்னர் வாழ்ந்தார். அச்சமயம் அங்கு கண்ணப்ப பண்டாரம் வந்தபோதும் அவரை இவர் வழிபடவில்லை. தம் கண்கட்டி மடத்துள்ளேயேயிருந்தார். இவ்வகைக் காரணங்களால் மறைஞானர் தம் நூல்களில் எந்தக் குருவழிபாடும் செய்திலர். இவர் செய்தன சிவதருமோத்தரம் முதலான பல நூல்கள்.

இவ்வாறு நாம் அறியும் செய்திகள் பெரும்பாலும் உண் மையே. இவர் தம் நூல்களில் எந்தக் குரு வணக்கமும் சொல்ல வில்லை என்பதும் உண்மையே. ஆயினும் வெள்ளியம்பல வாணர், குருஞான சம்பந்தர் மறுத்த காரணத்துக்காக இவர் நூலில் பல குற்றங்களை ஏற்றுகிறார். உதாரணமாக, கூறியது கூறல், மாறு கொளக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில் மொழிதல், மயங்கக் கூறல், கேட்போர்க்கின்னா யாப்பிற்றாதல், பழித்த மொழியான் இழுக்கம் கூறல், தன்னான் ஒரு பொருள் கருதிக் கூறல், என்ன வகையினும் மனங்கோளின்மை முதலான குற்றங்களை இவர் நூல்கள் மீது ஏற்றிச் சொல்கிறார். இது ஒரு தலைச் சார்பான கருத்தேயன்றி உண்மையாகாது. மறைஞான சம்பந்தர் ஓரிடத்தில் (சைவ சமய நெறி 15) 'சிவனே

---

* முத்தி நிச்சயப் பேருரை, தருமபுரப் பதிப்பு 1948, பக்கம் 37, 38, 45-46.

*குரவனெனச் சிந்தியேல்' என்று கூறுகிறார். இது, வழங்கும் சாத்திரக் கருத்துக்களுக்குப் பொருத்தமாகவே உள்ளது. ஆனால் வெள்ளி, காமிகம், விசுவ சாரோத்தரம் முதலான ஆகமங்களை எடுத்துக்காட்டி, இக்கருத்துப் பிழை என்கிறார். இவ்விடத்தில் வெள்ளியின் கருத்து ஏற்கக் கூடியதாயில்லை. இனி, இவர் வரலாற்றை அறிவதற்கு, இவர் பாடிய பதி பசு பாசப் பனுவல் என்ற நூலின் சிறப்புப் பாயிரமும் பொருந்துவதாயுள்ளது. இப் பாடல் பின்வருவது:*

காரூர் பொழிலும், தேரூர் வீதியும்,
வீதியின் மூவா யிரவர் விளக்கமும்,
மாதவர் கூட்டமும், மிதுறை தில்லையிற்
கனக சபையிற் பனக முனிவனும்.
போத மிகுந்த புலிக்கால் முனிவனும்,
மாதவ இரணிய வருமனும்: இறைஞ்சத்
திருமால் அயன் இந்திரன் இமை யோடும்
அருமா மறையால் அடிபணிந் தேத்தப்
பானு கம்பர் பணிலமும் வாண
னான குடமுழ வாதியும் முழக்க
மாண்தகு மதுர வாய்மொழி யிடமாய்த்
தாண்டவம் புரிவோன் சரண கமலம்
புந்தியில் நாளுஞ் சிந்தனை பண்ணி,
அப்பதி தன்னில் அருங்குகை மடத்தில்
எப்பதி யோரும் ஏத்தவு மிருந்தோன்,
இகமது தன்னிற் சுகனையொப் பானோன்
வெண்ணெயம் பதியில் மெய்கண்ட தேவன்
மண்ணிடை மீண்டும் வருதலொப் பானோன்,
அருந்தமி ழுணர்வால் அகத்திய முனியெனத்
திருந்துதொல் காப்பியஞ் சிவமயஞ் செய்தோன்
ஆசில் வடநூற் போச ராசன்,
ஆதி கமலா லயமுதற் புராணம்
ஓது மதியாற் சூதனை யொப்போன்,
மூவர் முதலா முதியவர் பாடல்
ஆவ லுடனே யடங்கலும் உணர்ந்தோன்,
நலமிகு நூல்கள் நானா விதத்துடன்
சிவதரு மோத்தரம் தமிழாற் செய்தோன்
ஆகம பண்டிதன், அருந்தவர் புகலும்
மோகமில் சாத்திர முழுதும் உணர்ந்தோன்,

நண்ணிய தவமறை ஞானசம் பந்தன் –
எண்ணிய முன்னூல் இயல் வழு வாமல்
அதிக சைவ வளவைமுன் காணப்
பதிபசு பாசப் பனுவல் செய் தனனே.

இவர் தில்லையில் குகை மடத்தில் இருந்தார்; மெய்கண்ட தேவன் மீண்டும் வருதல் ஒப்பானவர்; அகத்திய முனியெனத் திருந்து தொல்காப்பியம் சிவமயம் செய்தார்; வட நூலறிவில் போசராசரை ஒப்பார்; கமலாலய புராணம் முதலாயின பாடினார்; மூவர் பாடல் அடங்கவும் உணர்ந்தவர்; சிவதருமோத்தரம் தமிழாற் செய்தார்; ஆகம பண்டிதர்; சைவ அளவை காணும்படி பதிபசுபாசப் பனுவல் செய்தார் என்று அறிகிறோம். இங்கு குறிப்பிட்டுள்ள அடை மொழிகள் இவருக்கு நன்கு பொருந்தும் என்று பல இடங்களில் காட்டியிருக்கிறோம். சிறப்பாய் இங்கு குறிப்பிட விரும்பியது இரு கருத்துக்களை: ஒன்று இவர் குகை மடத்தில் இருந்தார்; இதை முன்னமே காட்டியிருக்கிறோம்; குகை மறைஞான சம்பந்தர் என்பவரும் இவரே. இரண்டாவது இவர் ‘தொல்காப்பியம் சிவமயம்’ செய்தார். இத் தொடரைப் பலர் பல விதமாய்ப் பொருள் செய்தனர். ஒருவர் தொல்காப்பியம், சிவமயம் என இரு நூல் செய்தார் என்றார்; ஒருவர் தொல்காப்பியத்தைச் சிவமயமாக்கினார் என்றார்; மற்றொருவர் தொல் காப்பியமும் சிவமயமும் ஒரே நூல்தான் என்றார். ஆனால் உண்மை இம்மூன்று மன்று, தொல் - காப்பியங்கள் எல்லாம் சிவமணம் கமழும்படி இவர் செய்தார் - என்பதே பொருளாகும். (அல்லது சிவமயமான தொல்காப்பியங்கள் செய்தார் எனலுமாகும்.) பழமையான நூல்களை - சிவ தருமோத்தர உபாகமம், அருணகிரி மான்மியம், கமலாலய மான்மியம் போன்றன - சிவமயம், சைவமே உயர்வு என்னும் படியாகச் செய்தார் என்பதே சரியான பொருள். இக்கருத்து முழுமையும் பொருந்துமென்பதைப் பல இடங்களிலும் எடுத்துக் காட்டியவற்றால் நன்கறியலாம். மறைஞான சம்பந்தர் நூல்களில் காணப்படும் சில பொது இயல்புகளை இங்கு குறிப்பிடலாம். புராணத் தன்மை வாய்ந்த சிவதரு மோத்தரம், அருணகிரி புராணம், கமலாலய மான்மியம் என்பன மட்டும் விருத்தப்பாவில் அமைத்திருக்கிறார். ஏனைய பெரும்பான்மையும் குறட்பாவிலேயே செய்கிறார்’ இவர் செய்த நூல்கள் பல சிறு நூல்களாயிருப்பினும், இவர் ஒரு சிறந்த சைவப் பேராசிரியர், பெருநூல் செய்த பெரும் புலவர்களோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்கவர். இவர் செய்த சிவதரு

மோத்தரத்தைப் பார்த்தால் இது நன்கு விளங்கும். பாடல்களில் உள்ள யாப்பு, சந்தம், மடக்கு முதலிய சொல்லணிகள், பொருளமைதி ஆகியவை இவர் ஒரு பெருங்காவியம் செய்யும் ஆற்றலுடையவர் என்பதை நன்கு விளக்கும். நூலில் காணப்படும் வருணனைகள் நீதிகள் முதலியனவும் இத்தன்மையைக் காட்டும். காலத்தின் நிலை, இவரைக் காவியத்தில் மனம் செலுத்தாமல் சமயத் துறையில் மனம் செலுத்தும்படி செய்திருக்கிறது. 16ஆம் நூற்றாண்டின் பொது இயல்பு, பெரிய புராணங்களும் சிறிய புராணங்களும் சமய சாத்திரங்களும் செய்யும் போக்காகும். இக்காலத்தில் தோன்றிய புலவர்களில் பெரும் பகுதியினர் புராணங்களே செய்துள்ளனர். சிறுபான்மையோர் சாத்திர நூல் செய்தனர். அன்றியும் இக்காலம், சைவ சமய ஆசாரிய பீடங்கள் தோன்றி நிலை கொண்ட காலம். ஆகவே, இவர் அந்த முறையிலேயே தம் நூல்களைச் செய்தார். புராணம் சாத்திரம் இரண்டையுமே அளவில் மிகவும் அதிகமாகச் செய்திருக்கிறார். இவரளவு நூல் செய்தோர் தொகை குறைவு.

இவருடைய நூல்களில் சிறு நூலாயினும் பெரு நூலாயினும், சில இயல்புகளைக் காண முடிகிறது. காரைக்காலம்மையாருக்கும் திருமாளிகைத் தேவருக்கும் இவர் தவறாது வணக்கம் சொல்கிறார். இது மிகவும் புதிய மரபு. இது இவ்விரு திருமுறை ஆசிரியரிடத்தும் இவருக்கு இருந்த ஈடுபாட்டைப் புலப்படுத்துகிறது. தம் ஆசிரியர் பெயரை இவர் எங்குமே சொல்லவில்லை. பிற ஆசிரியர் இதற்கு முற்காலத்திலும், பிற்காலத்திலும், நால்வர்க்கு மட்டுமே வணக்கம் சொல்லியிருக்கக் காண்போம்.

நூற்கு அதிகாரி என்பதை இவர் மிகவும் சிறப்பாய்க் கருதுகிறார். குறிப்பிடத்தக்க எல்லா நூல்களிலும் இந்நூலை நாத்திகருக்கும் ஆர்வமில்லாதவர்க்கும் சொல்லற்க; சொன்னால் சொன்னவரும் நரகத்தை அடைவார். மேலும் ஏட்டில் இதை எழுதற்க. எழுதினாலும் விரும்பாதவர் கண்ணில் காட்டற்க' என்று இவர் தவறாது கூறுகிறார். பின்வரும் சிவதரு மோத்தரப் பாடலைக் கருதுக.

போதகனு மும்மலமும் போக்கித் தன்னுட்
பொருவரிய பரம்பொருளைப் புணர வெண்ணும்
மாதவனுக் கறைக, இறை யமலன் வாக்கை
மற்றையவர்க் கறையற்க, மனத்துக் கெட்டா

ஆதியருள் வாக்கியத்தை அருத்தந் தன்னை
யருநிதியாற் புகழ்முதலா லயர்த்துங் கூறிற்
பாதகனே மோதகனு மவர்களோடும்
பற்றிடுவன் எரிநிரைய மங்கார் பற்றே.

*செவி வழியாக வந்த வேதம் போலத் தமிழிலும் சாத்திர நூல்கள் செவி வழியாகவே வரத்தக்கன, பக்குவமில்லாதவிடத்து இவை கற்பிக்கத்தக்கன அல்ல என்பது இவருடைய உறுதியான கருத்து.*

காலம்

*இவருடைய காலம் மிகவும் திட்டமாய்த் தெரிகிறது. கமலாலய புராணத்தின் சிறப்புப் பாயிரம் குறிப்பிடும் காலம்:*

ஆண்டுகலி யுகத்துக்கு நானூற்று
முப்பத்துஈ ராயிரத்துள்
ஈண்டிய நாலாயிரமும் அறுநூறும்
எண்ணைந்தும் ஏழும் செல்லப்
பூண்ட பராபவ ஆண்டின் மகரத்தில்
புதத்திரயோ தசிபூர் வத்திற்
காண்தகுதிங் களின்மானின் மயேந்திரத்திற்
கவுலவமென் கரணந் தன்னில்,

பொருவரிய திருவாரூர் புற்றிடங்கொண்டு
அருண்மூலத் தானன் என்னும்
பரமசிவன் பாங்கான சன்னிதிக்கு
வாமதலப் பாகந் தன்னில்
இரமுறுதே வாசிரய மண்டபத்துப்
பரமசிவன் வாக்கைத் தேர்ந்து
தருமமுதல் நெறியுணர்த்துஞ் சைவரும்வை –
திகருமுறுஞ் சங்கந் தன்னில்;

அருமைறைகள் ஒருநான்கும் ஆகமங்கள்
எழுநான்கும் அங்க மாறும்
திரிவறவா ராய்ந்து சிவன்பரம
தெய்வமெனத் தெளிந்த சைவர்
பொருவாரிய சிவனாரூர்ப் புற்றிடங்கொண்டு
அருள்புரிந்த புகழை எல்லாம்
உரைசெய்யும் ஆரியத்தின் பொருதமிழால்
உணர்த்துக என்று உரைக்கச் சொல்வாம்.

இவற்றால் கமலாலய புராணம் செய்த காலம் கலி. 4647 பராபவ ஆண்டு, அதாவது கிபி. 1546 என்பது தெளிவு. சைவரும் வைதிகரும் கூடிப் புற்றிடங் கொண்டார் புகழை ஆரியத்திலிருந்துத் தமிழில் சொல்லுக என்று வேண்ட இவர் செய்ததாகச் சொல்கிறார். இதே போல, அருணகிரி புராணத்தில் நூல் செய்யத் தொடங்கிய காலம் சொல்லப்பட்டிருப்பதும் அறியத் தகுந்தது:

ஆண்டுகலி யுகத்தினுக்கு நானூற்று மூப்பத்தீ ராயிரத்துள்
ஈண்டுறு நாலாயிரமு மறுநூறு மைம்பத்து நான்கும் நீங்க
ஈண்டு பிரமாதீச ஆண்டின் மகரத் தெழுவாய் ஏகாதேசி
தீண்டிரவி வாரத்தின் மான்மாகேந் திரம்வணிகம் திகழும் போதில்.

இங்கு குறிப்பிட்ட ஆண்டு கலி 4654 பிரமாதீச, அதாவது கி.பி. 1553. எனவே, மறைஞான சம்பந்தர், குறிப்பிட்ட ஆண்டு களான 1546 - 53 ஆகிய ஆண்டுகளில் வாழ்ந்து இந்த இரு நூல் களையும் செய்தார் என்பது தெளிவு. ஆகவே இவரது காலம் 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்பதும் நன்கு பொருந்துவதே.

### குறள் பா

தமிழ் இலக்கிய வரலாற்றில் இம் மறைஞான சம்பந்தருக்கு சிறப்பான இடம் உண்டு. ஒரு காரணம், இவர் குறட்பாவால் பல நூல்கள் செய்திருப்பது. குறளாசிரியர் திருக்குறள் செய்த பின், அந்நூலின் பெருஞ்சிறப்பினால் பின்னால் யாருக்குமே குறட்பாவினால் நூல் செய்யும் துணிவு வரவில்லை. எட்டாம் நூற்றாண்டில் தோன்றிப் பின்னர் இறந்து போன கல்லாடர் பாட்டியல் போன்ற சில இலக்கண நூல்களில் குறட்பாவைக் காண்கிறோம். அபூர்வமாய், அருங்கலச் செப்பு என்ற சைன அறநூல் குறட்பாவால் செய்யப் பெற்றுள்ளது. பின் உமாபதி சிவமே முதன்முதலாய்க் குறட்பாவால் திருஅருட் பயன் என்ற சைவ சித்தாந்த சாத்திரம் செய்திருக்கிறார்; அவ்வைக்குறள் என்ற நூலும் சாத்திர நூலே. அடுத்த காலத்தில் மறைஞான சம்பந்த ரொருவரே எண்ணற்ற குறட்பாக்களால் பல நூல்கள் செய் திருக்கிறார். இவர் செய்த நூல்களனைத்திலும் இன்று காணப் படும் குறட்பாக்கள் 2000க்கும் அதிகம். இறந்துபோன இவரு டைய பிற நூல்களையும் சேர்த்தால் பாடல்கள் பின்னும் அதிகமாயும் இருக்கும். இவ்வளவு அதிகமாய்க் குறட்பாவால் நூல் செய்தோர் இலர்.

வாழ்க்கை நெறியாகிய பெருந் தத்துவ நூலாகக் குறளா சிரியர் தம் நூல் செய்தபின், குறட்பாவில் நூல் செய்ய யாரும்

அஞ்சினர்; செய்த சிலரும் தத்துவ நூல்களே - இலக்கணம், தர்க்கம், சமயம் - செய்துள்ளனர். வேறு வகை நூல் எழவே இல்லை.

### நூல்கள்

மறைஞான சம்பந்தர் கணக்கற்ற நூல்கள் செய்திருக்கிறார். அவற்றுள் பல தெரியாமலே போயிருக்கின்றன. தெரிந்தவை பின் வருவன. சாத்திரப் பெரு நூல்களான சிவதருமோத்தரம், சைவ சமய நெறி, பதிபசுபாசப் பனுவல்; மற்றைய சங்கற்ப நிராகரணம், உருத்திராக்க விசிட்டம் முத்தி நிலை, பரமோப தேசம், வருத்தமற உய்யும் வழி, ஐக்கியவியல்; இன்று கிடைக்காத நூல்களான பரமத திமிரபானு, இறைவனூற் பயன்; வடமொழி நூலாகிய ஆன்மார்த்த பூஜாபத்ததி; சிறு நூல்களான மகா சிவ ராத்திரி கற்பம், மாத சிவராத்திரி கற்பம், சோம வார கற்பம், திருக்கோயிற் குற்றம்; புராணங்களான கமலாலய புராணம், அரு ணகிரிப் புராணம் என்பன. இந்நூல்களை இங்கு ஆராயலாம். புராணங்களான இரண்டையும் புராண இலக்கியம் என்ற இந் நூற்றாண்டு வரலாறு முதற் பாகத்தில் ஆராய்ந்திருக்கிறோம்.

### புவனகோசம்

மறைஞான சம்பந்தர் நூல்களில் புவனகோசமும் ஒன்றெனச் சொல்லப்பெறும். 16ஆம் நூற்றாண்டு முதல் புராணங்களில் பூலோகம் அல்லாமல், ஏனைய உலகங்கள், புவனங்கள், அண்டங்கள், இவற்றின் அளவு, இயல்பு முதலியவற்றை விரித் துச் சொல்வது மரபாயிருக்கிறது; இது புராணங்களின் பஞ்ச லட்சணங்களில் ஒன்று. இந்த முறையில் பிற்காலத்தில் பூகோள விலாசம் அண்டகோள விலாசம் முதலான பல நூல்கள் பாடப் பெற்றுள்ளன. தேவர்களையும் அரக்கர்களையும் மனிதரைப் போலவே பூவுலகில் எளிதில் உலவ்விட்ட நம் முன்னோருக்கு, அவர்களுடைய உலகங்களையும் அளந்துசொல்வது எளிதாகக் கைவந்த ஒரு நிலை போலும். இந்த நெறியில் புவனகோசம் என்றொரு நூல் மறைஞான சம்பந்தர் செய்ததெனச் சொல்வர். இது 128 விருத்தப்பாக் கொண்டது. தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்து இதன் ஏடு உள்ளது; நூல் அச்சாகவில்லை. இதன் இரண்டாம் பாடலை வெள்ளியம்பலவாணர் தம் ஞானாவருண பாடியத்துள் மேற்கோளாய்த் தருகிறார் (பக்கம் 853). இவர் இந்தத் தம் உரையுள் புவனங்களை விளக்கியுரைக்கு முகமாகக் கடல் போன்ற எண்ணற்ற தமிழ் வடமொழி நூல்களை மேற் கோள் காட்டுதல் குறிப்பிடத்தக்கது.

## சிவதருமோத்தரம்

சைவத்தில் முத்தி மார்க்கங்கள் நான்கு என்று சொல்லப் படும். இவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவற்றுள் சிவதரு மோத்தரம், சைவசமயநெறி, வாயுசங்கிதை, மச்சபுராணம், பிரமோத்தர காண்டம், உபதேச காண்டம் போன்றன சரியை கூறுவன. தத்துவப்பிரகாசம் கிரியைப் பகுதியைச் சிறப்பாகக் கூறுவது. சிவநெறிப் பிரகாசம், தத்துவ ரத்தினாகரம் முதலியன ஞானம் கூறுவன.

மறைஞான சம்பந்தர் வடமொழியிலிருந்து இவ்வுபாக மத்தை மொழிபெயர்த்துச் செய்திருக்கிறார். செய்தபோது, வடமொழியில் சொல்லப்படாத பல செய்திகளையும் சேர்த்துச் சொல்கிறார்; 'தமிழ்ச் சிவதர்மோத்தரத்தில் பிரகிருதியின் மேலுள்ளனவும் கூறியதென்னெனில், அந்த சிவதர்மோத்தரத் திற் கூறாதனவும் சிவாகமங்களிற் கண்டு கூட்டிக் கூறினாரென்க' என்பது காண்க (பாடியம் பக்கம் 962). மறைஞான சம்பந்தர் எழுதிய முத்திநிலை என்ற சிறுநூலைக் குருஞான சம்பந்தர் மறுத்து எழுதினார்; எனினும் குருஞான சம்பந்தர் மரபில் நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பின் தம்பிரானாய்ப் பேராசிரி யராய் விளங்கி, அந்த மறுப்பு நூலுக்கே சிற்றுரையும் பேருரை யும் எழுதிய வெள்ளியம்பலவாணத் தம்பிரான் அதே மறைஞான சம்பந்தருடைய சிவதருமோத்தரம் முதலான சில நூல்களைப் போற்றி எடுத்துக் காட்டுவது சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கது.

இது உபாகமங்களுள் ஒன்று எனப்படும். மூலாகமங்கள் 28. இவற்றுள் இருபத்து ஐந்தாவது ஆகமமாகிய சர்வோக்தம் என்பது சிவபெருமானுடைய ஈசான முகத்தில் தோன்றியது என்பது வரலாறு. இவ்வாகமம் 11 உபாகமங்களை உடையது. அவற்றுள் சிவதருமோத்தரம் என்பது முதலாவது. அகத்தியர் சிவ தருமங்களைக் குறித்து முருகக் கடவுளை வினாவ, அவர் கூறிய உத்தரங்களை இவ்வாகமம் கூறுகின்றபடியால், இது சிவ தருமோத்தரம் என்று பெயர் பெற்றது. சிவ தருமங்கள் பலவற்றைக் குறிப்பிட்டு அவற்றால் விளையும் சிவ புண்ணியங் களை இது நன்கு கூறுகிறது. அன்றியும், பதி பசு பாசம், சரியாதி நான்கு பாதம், சாலோகாதி நான்கு பாதம் ஆகியவற்றின் இலக்கணங்களையும் செவ்வனே தெரிவிக்கிறது.

இந்நூல் பாயிரப் பகுதியும் 12 இயல்களும் கொண்டது. மொத்தச் செய்யுள் தொகை 1224; நூல் செய்தார் மறைஞான சம்பந்தர்; இவை பின்வரும் பாடல்களால் விளக்கமாகும்:

முன்ன மாதி முருகன் முனிவர்க்குப்
பன்னி ராயிர மாகப் பகர்ந்தனன்,
அன்ன வுத்தரம் ஆயிரத் தெட்டுநூறு
என்ன மாமுனி வன்கொய் தியம்பினன்,
அந்த வாக்கினை நோக்கி அருகரும்
சிந்த வாதுசெய் தேசிக ஞானசம் –
பந்த னாமம் பரித்தோ னொருசதந்
சந்த நான்குநா லைம்பதுஞ் சாற்றினன்.

இனி முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது, இந்நூல் ஆசிரியர் சிறந்த தமிழ்ப் புலமை உடையவர் என்பது. நூல் சிறந்த தமிழ் நடையில் அமைந்தது. சந்தக் கவிகளும், சித்திரக் கவிகளும் அதில் உள்ளன. பாயிரப் பகுதியில் இவர் வணக்கம் கூறும்போது காரைக்கால் அம்மையார், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணி வாசகர் ஆகியோருக்கு வணக்கம் சொல்லுகிறார். இவ்வாறு கூறும் மரபு மிகவும் அருகி வழங்குவது. தேவார ஏடுகளை யெடுத்து ஆராய்ந்தால், முதலில் அம்மையார் திருவாலங்காட் டுப் பதிகம் இரண்டையும் எழுதி, அதன் பிறகு சம்பந்தர், அப்பர், சுந்தரர் பதிகங்களை எழுதியிருக்கக் காணலாம். இது பழைய மரபு. இந்த மரபை இவ் ஆசிரியர் நன்கு போற்றுகிறார். அன்றி, இவர் இங்கு சிவபெருமானுக்கு வணக்கப் பாடல் இரண்டும் சிவகாம சுந்தரிக்கு ஒரு பாடலும் பாடியிருக்கிறார். முருகனை அகத்தியர் கூற்றாக இயல்தோறும் பல இடங்களில் துதிக்கின் றமையால் இங்கு தனியாக பாயிரத்தில் முருக வணக்கம் சொல்லவில்லை போலும்.

முதல் இயல் பரம தருமாதி, இயல் என்ற பெயருடையது. இங்கு, சிரத்தையோடு செய்வதுதான் அறம், அன்பு இல்லாது செய்யும் ஈகை அறமாகாது என்று முதல் பாடலிலேயே கூறி யிருப்பது மிக்க சிறப்பு. அடுத்து, பிரணவத்தின் பெருமை, ஆசிரியர் சிறப்பு, பஞ்ச கவ்வியம், சிவபூசை முதலியன சொல்லப் படும். இந்த இயல் முடிவிலும் பின்னர் மிகப் பலவான இடங் களிலும் ஆசிரியர் பாடல்களைக் கடை மடக்காக நிரம்பப் பாடியிருக்கிறார். கடைசியாகப் பாடிய பாடலில்:

நினைத்த நன்பல மெளியதின் முடியும்
  நெருக்கி யண்டர்கள் முனிவர்கள் பணியத்
தனத்த னந்தன தனதன தனவென்
  சதிக்கி சைந்திட நடமிடு சதுரன்.

இங்கு இவர் கூறுகிற சந்தம் தக்கயாகப் பரணி, காப்புச் செய்யுளில் வைரவர் வணக்கமாக ஒட்டக்கூத்தர் அமைத்துள்ள 'தனன தந்தன தனதன தனதன' என்ற சந்தத்தை நினைவூட்டுகிறது.

இரண்டாவது சிவஞான தானவியல். சிவஞானத்தைத் தாய்மொழியிலும் அல்லது வடமொழியிலும் உபதேசிக்கலாம். அபக்குவர்க்கு ஞான நூலைப் பொருளாசையால் சொல்லக் கூடாது. சிவஞான சாத்திரம் தானம் செய்வது சிறப்பு. சாத்திரம் எழுத வெற்றேடு கொடுத்தல் முதலியன பெரும் புண்ணியம். அன்றியும் மிகவும் சீரணமாய்ப் போன ஏட்டைப் புதுப்பித்து வைத்தல் பெரும் புண்ணியம். புதிய ஆகமம் திருமுறை ஆகிய வற்றை எழுதி வைத்தால் பழைய நூலை நின்மலனாகிய சிவ னுக்குப் பசு நெய்யில் தோய்த்துச் சிவாக்கினியில் ஓமம் செய்க என்று சொல்லப்பட்டுள்ளது. புத்தக தானம், ஏடு தானம், எழுத் தாணித் தானம் முதலியன பெரும் புண்ணியமாகச் சொல்லப் பட்டிருப்பதைப் பாக்கும்போது, இக்காலத்தில் பள்ளியில் படிக்கும் பிள்ளைகளுக்குப் புத்தகம் முதலியன அளித்து உதவி செய்யும் கொடையை நம் முன்னோர் எவ்வளவு சிறப்பாய்ப் போற்றினார்கள் என்பது தெரிகிறது. மேலும், புதுப்பிக்கப்பட்ட பழைய பிரதிகளைப் பயனற்றுப்போன பின் அக்கினியில் ஓமம் செய்க என்று இவர் கூறியிருப்பது, இந்த நூற்றாண்டில் ஏடுகளைப் புதுப்பிக்காமலேயே, ஓமம் செய்ய வசதியில்லாக் காரணத்தால் காவேரியில் விட்டு விடுவதற்கு ஆதரவாக இருந் திருக்கிறது என்று எண்ணத் தோன்றுகிறது.

மூன்றாவது ஐவகை யாக இயல். ஐவகை யாகமாவது தன்ம யாகம், தபோயாகம், செப யாகம், தியான யாகம், ஞான யாகம் என்பன. இவற்றை இவ்வியல் விளக்கமாகக் கூறுகிறது. நான்கா வது பல விசிட்ட காரண இயல். இது முந்திய இயலில் கூறிய கன்ம யாகப் பலன்கள் அதிகமாவதற்குக் காரணமான தேச கால வர்த்தமானங்களை உணர்த்துகிறது. இங்கு ஏழு பாடல்களில் சுமார் 50 தலங்களின் பெயரைக் குறிப்பிடுகிறார். இவற்றுள் வெற்றியூர், காரிகரை, விரிஞ்சை, மூவலூர் ஆகிய வைப்புத் தலங்கள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. (மூவலூரைத் திருக் கோவையாரும் இரண்டிடங்களில் குறிப்பிடுவது இங்கு கருதுக.) ஐந்தாவது சிவதரும இயல். பொருள் வெளிப்படை. நூலெங்குமே சிவபூசையின் சிறப்புச் சொல்லப்படுகிறது. இயல் இறுதியில் திருவீழிமிழலையைக் கூறுகிறார்.

ஆறாவது பாவ இயல். இங்கு, சிவநூல் படிக்கும்போது இருக்கவேண்டிய ஆசாரம் நன்கு சொல்லப்பட்டுள்ளது. மேலும், உலக நீதிகள் பலவும், சிவதரும அடிப்படையில் சொல்லப்பட்டுள்ளன. மரங்களை வெட்டலாகாது என்று கூறியிருப்பது மிகவும் சிறப்பு. திருக்குறட் கருத்துக்களும் இங்கு காணப்படுகின்றன. இக்காலக் கண்ணோடு பார்க்கின், ஒருவர் அந்தரங்கமாகச் சேமித்து வைத்திருக்கும் பொருளை அரசனுக்குக் காட்டித் தரலாகாது என்பது வியப்புத் தருவது. இந்த இயலில் கூறப்பட்டுள்ள நீதிகளும் ஆசாரங்களும் வாழ்க்கையில் என்றைக்குமே நன்னெறி காட்டவல்லன.

ஏழாவது சுவர்க்க நரகவியல். இதன் பொருள் வெளிப்படை. இங்கு தீவினையுடையவர்கள் பரலோகம் சேருவர் என்று சொல்லுமிடத்தில் சந்தப் பாடலாக அனேகம் சுவைபடப் பாடியிருக்கிறார். புண்ணியம் செய்வோர் பெறும் சுவர்க்கப் பலனும் பாவம் செய்வோர் பெறும் நரகப் பலனும் விரிக்கப்பட்டுள்ளன. யம தூதர் செய்யும் நரக தண்டங்கள் மிகவும் பயங்கரமாகச் சொல்லப்பட்டுள்ளன. நரகங்களின் அமைப்பு முதலியன, இந்து சமயத்தில் சொல்லப்படும் அண்ட கோசங்களின் அமைப்பை ஒட்டிக் கூறுகின்றன. எட்டாவது சனன மரண இயல். பிறவியின் தோற்றமும் வகைகளும் சொல்லப்படுகின்றன. உடலின் நிலைமை, அது படும் துன்பங்கள், ஞானிகள் உடலைப் பற்றி இருக்கும் நிலைமை முதலியன இங்கு விளக்கப்படுகின்றன. ஒன்பதாவது சுவர்க்க நரக சேட இயல். இங்கு, செய்யும் நல்வினை தீவினை இரண்டுக்கும் பலனாகிய புண்ணிய பாவங்களை விரித்துக் கூறுகிறார்.

பத்தாவது சிவஞான யோக இயல். இது ஞானாசிரியனை யடைந்து சிவஞானம் பெற்று, சிவஞானயோகம் அடைவதைக் கூறுகின்றது. பதினொன்றாவது பரிகார இயல் என்பது ஆன்மாக்கள் இருவினைப் பலன்களை அனுபவிக்கும் இடத்தில் பாவம் போவதற்கான பரிகாரம் கூறுகிறது. இது ஆகமங்கள் சொல்லும் பிராயச்சித்த விதிப் படலக் கருத்தைக் கொண்டது. பன்னிரண்டாவது கோபுர இயல். உலக அமைப்பையும், அங்குள்ள உயிர்களையும் விளக்குவது. இறுதியில் நூற்பயன் கூறுகின்றார். புத்தகத்தைப் படிக்குமுன் பூசித்து அருச்சனை செய்யவேண்டும் என்பது இவருடைய கருத்து.

*ஆசிரியர் ஆகம நூலை அறிவிக்கும் தன்மையும் மாணாக்கன் கேட்கும் தன்மையும் கூறுவது பார்க்கத்தக்கது:*

ஆரியனும் பலன்கருதாது அறிவிக்க ஆராயும்
கூரியனும் இதற்கிதுகைம் மாறென்று குறியற்க;
மாரியினுக் குண்டோ கைம் மாறிந்த வையகத்துள்?
ஆரியனுக் கடிமையலால் ஆடகம்கைம் மாறாமோ?

*நூலின் இறுதியிலுள்ள பாடல் இங்கு, பாகுபாட்டைப் பதிகம் போல தொகுத்துணர்த்துகிறது.*

*இனி இவ்வாசிரியருடைய இயல்பு, ஒவ்வோரியலின் இறுதி நான்கு பாடல்களைத் துதியாக அமைப்பது; முதல் இரண்டும் சிவபிரான் துதி, கடை மடக்காக அமைந்துள்ளன. அடுத்தது சிவதருமோத்தரம் உபதேசித்த முருகன் துதி; கடைசிப் பாடல் உபதேசங்கேட்ட அகத்தியன் துதி; எடுத்துக்காட்டாகச் சில பாடல்களைக் கீழே தருகிறோம்:*

ஆனிடை ஐந்திணை ஆடினனே
அம்பர மன்றினும் ஆடினனே
கானிடை வேடனு மானவனே
காசிஎன் மாந்த ரானவனே
வானிடை மும்மல மாற்றினனே
வார்சடை மேல்வரு மாற்றினனே
யானெனும் மாசுமி லாதவனே
ஏனைய மாசுமி லாதவனே.

*முருகன் துதி:*

மலத்தை வல்வினை தனைமண வலியை
வதைக்க வல்லநன் மதியினை யுதவுந்
துவக்க வெண்பிறை யணிசடை முடியன்
துணைப்ப தந்தொழு மடியவர் துணைவன்
மலைக்கு நன்மகள் மதிநுதல் கணவன்
மலர்ப்ப தம்பெறு முறவினு நிறுவும்
அலக்க ணண்டர்கள் அறவொரு கரமுன்
அமைத்த சண்முகன் அருளிய மொழியே.

*மற்றும் சில இடங்களில் முருகன் துதியில் முழுமையும் சிவ பிரான் பெயர்களையே குறிப்பிட்டு, அவன் புதல்வன் என்று மட்டும் குறிப்பிடுவார். ஓர் எடுத்துக்காட்டு:*

அனகன் அச்சுதன் அரனு ருத்திர னழக னட்டதிண் புயவீரன்
பனவ ரைக்குநன் மகடனக்குளம் பரிவு பட்டுடம் பருள்பாகன்
தினக ரற்குமுன் பலையி றுத்தவன் சிரம றுத்தவன லரோனைப்
புனித னற்புதன் புதல்வ னற்புதம் புணர்வி ருப்பொடும் புகழ்வாமே.

நூல் இறுதியில் மட்டும் சிவபிரான் துதி நான்கு பாடல்கள் பாடுகிறார். அவற்றுள் ஒன்று மாலை மாற்று. இடையில் பாடுகின்ற துதிப் பாடல்களுக்குப் பின்வருவது எடுத்துக்காட்டாகும்.

அண்டங்க ளனைத்தும் ஆக்கும் அலர்மிசை அயனேபோற்றி
அண்டங்க ளனைத்தும் காக்கும் அரியெனும் அதிப போற்றி
அண்டங்க ளனைத்து மாற்றும் அதிபல அரனே போற்றி
அண்டத்தின் பேதத்தப்பால் அனாதியே அமல போற்றி.

சுவர்க்க நரகவியல் என்ற பகுதியில், நரக லோகத்தில் யமதூதர்கள் பாவம் செய்தவர்களை, அவர்களுடைய பாவச் செயல்களையெல்லாம் விவரமாய்ச் சொல்லச் சொல்லிக் கொடுமையாய்த் தண்டிக்கிறார்கள். அவர்கள் கூற்றுக்கு ஓர் எடுத்துக்காட்டு:

ஓர வழக்கினை மன்றிலிருந்து முரைத்தீரே
யாரெதி ரென்றுமையே மிகமேன்மை அறைந்தீரே
பாரெனவே பொறை யாரையும் நொய்மை பகர்ந்தீரே
நீரெனவே இனி யாரையும் வெல்ல நினைந்தீரே. (7, 191)

நரக வேதனையையும் யம தண்டனையையும் விரித்தும் பெருக்கியும் உரைப்பது காலத்தியல்பு. அறிவில் தாழ்ந்த மக்களை ஒழுக்கந் தவறாது நீதி வழி ஒழுகச் செய்வதற்கு அச்சமே பிரதான சாதனமாயிருக்கிறது. அதுபற்றியே புராண நூல்களில் இவ்வகைச் செய்திகள் விரித்தோதப்பட்டன.

சிவதருமோத்தரம் செய்யப்பெற்ற 16ஆம் நூற்றாண்டிலேயே திருவொற்றியூர் ஞானப்பிரகாசரால் மேற்கோளாய் எடுத்துக் காட்டப் பெற்றிருக்கிறது. 14ஆம் நூற்றாண்டில் சிவபூசைத் திரட்டு என்ற ஒரு சிறு நூல் தேவார திருவாசகப் பாடல்களைக் கொண்டதாய், சிவ பூசை செய்வோருக்கு ஒவ்வொரு கிரியைக்கும் பொருத்தமாகச் சொல்வதற்கேற்றவாறு திரட்டப் பெற்று, அச்சாகியிருக்கிறது. அதனுள் பிற்காலத்தில் (16 நூற்றாண்டில்) ஒன்றிரண்டு பாடல்கள் இந்நூலிலிருந்து சேர்க்கப்பட்டிருக்கவும் காண்கிறோம். சிவ தருமோத்தரம் நெடுங்காலமாக அச்சில் இல்லை. இந்நூல் எப்போதும் அச்சில் இருக்குமாறு செய்வது அவசியம்.

இது சிவ புண்ணியங்களைக் கூறியிருந்த போதிலுங்கூட, எல்லா மக்களும் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகவேண்டிய பொது நெறிகளையும் நீதிகளையும் நன்கு பாகுபடுத்திக் கூறுகின்றது; அனைவரும் பயில வேண்டிய சிறந்த நூல். நரகத்துன்பம் போன்ற கருத்துக்கள் இக்காலக் கொள்கைக்கு முழுமையும் பொருந்தா எனினும், பொதுக் கருத்துக்கள் எக்காலத்துக்கும் எல்லா மக்களுக்கும் பொருந்துவன. சிவதருமோத்தர நூல் சென்ற நூற்றாண்டு வரையில் சோழநாட்டில் எல்லா மக்களாலும் விரும்பிப் பயிலப்பட்டு வந்தது. வைதிகச் சைவர் வீடுகளிலெல்லாம் இந்நூலின் ஏட்டுப்பிரதிகள் இருந்தன. எனினும், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இந் நூலைப் படிக்க விரும்பியபோது எங்கும் இது கிடைக்கவில்லை என்றும், சாதுரியம் மிக்க ஒரு மாணாக்கர் திருச்சிராப்பள்ளியிலிருந்த ஒரு தேசிகரிடமிருந்து ஓர் ஏட்டைப் பெற்று வந்தாரென்றும் சுவையுடைய கதையொன்றை ஐயரவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

மறைஞான சம்பந்தர் பாடிய முத்தி நிலைக்கு மறுப்பாக குருஞான சம்பந்தர் எழுதிய முத்தி நிச்சயத்துக்கு உரை வகுத்த வெள்ளியம்பல வாணத் தம்பிரான் மறைஞான சம்பந்தருடைய பிற நூல்கள் சிலவற்றையும் எடுத்துச் சொல்லி மறுக்கிறார். அதனோடு அவர் காளத்தி பண்டாரத்துக்கு மாணாக்கராய் இருந்ததும், பிறகு தாம் துறவு பூண்டு அதனால் தம்மைப் பெரியவராகக் கருதி அதே கண்ணப்ப பண்டாரம் தம்மிடம் வந்த போது அவருக்கு மரியாதை செய்யாமல் இருந்ததையும் சொல்லிப் பழிக்கிறார். அப்படியிருந்தும் கூட அம்மறைஞான சம்பந்தருடைய சிவதருமோத்தர நூலை யெடுத்துப் போற்றுகிறார். அவர் உரையில் வடமொழிச் சிவதருமோத்தரப் பாடல் தமிழ்ச் சிவதருமோத்தரம் என்று இரண்டையும் குறிப்பிடுகிறார். புவனங்களின் அளவுகளைக் குறிப்பிட்ட இடத்தில் 'வடமொழிச் சிவ தருமோத்தரம் சர்வோக்தத்திற்கு உபாகமம் ஆயினும், பௌராணிக ரீதியால் பிரகிருதியந்த தத்தவ மாத்திரம் கூறியவாறே அத்துவாவும் கூறி ஒழிதலின் பதார்த்த சங்கிரகம் பண்ணிக் கூறியமையால் மேலுள்ளன கூறாது ஒழிந்தது' என்றும் கூறி விட்டு மேலும் எழுதுகிறார்.

'தமிழ் சிவதருமோத்தரத்தில் பிரகிருதியின் மேலுள்ளனவும் கூறிய தென்னெனில் அந்தத் சிவதருமோத்தரத்திற் கூறாதனவும் சிவாகமங்களிற் கண்டு கூட்டிக் கூறினாரென்க. முன்னர் அந்த

கார பூமியினியல்பு, சிவதருமோத்தரத்திற் கூறாதிருக்கவும் சிவாகமத்திற் கண்டது கூட்டிக் கூறியதும் பிறவும் போலும்.'

## பதிப்பு

மறைஞான சம்பந்த நாயனார் அருளிச் செய்த சிவதரு மோத்தரம் மூலமும் உரையும், திருநெல்வேலி சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகளால் முத்தமிழாகர அச்சுக்கூடத்தில் 1867 டிசம்பரில் பதிப்பிக்கப்பட்டது. மிகவும் அழகான பதிப்பு. பின் திருமலை வித்துவான் சண்முகம் பிள்ளை பார்வையிட்ட பதிப்பு: முந்திய உரையோடு, மீனாட்சியம்மை கலாநிதி அச்சுக்கூடம் 1888; இதுவும் மிக்க சிரத்தையோடு அச்சிட்ட திருத்தமான பதிப்பு. அச்சில் வராத பாடல்களில் பின் வருவது ஒன்று. நூல் இறுதியில் ஏட்டுப் பிரதிகளில் காணப்படுகிறது.

வடவரைக் கயிலையும் பொதிய மாமலையுமோ
கடுவிருட் கயிலையுங் கரைவிதக் கயிலையும்
படியினுட் பரமர்தென் கயிலையும் பணிகுவம்
உடலினைக் கடிவமே யொளிர் சிவத் துறைவமே.

## சைவ சமய நெறி

727 குறட்பாக்களையுடைய ஒரு சைவ சமய சாத்திரப் பெரு நூல். வெண்ணெய் நல்லூர்ப் பொல்லாப் பிள்ளையாருக்குக் காப்புக் கூறுகிறது. பாயிரப் பகுதியும், ஆசாரியரிலக்கணம், மாணாக்கரிலக்கணம், பொதுவிலக்கணம் என்ற மூன்று பிரிவு களும் உடையது. வழக்கம் போல் இங்கு மற்றையோருடன் கூட, காரைக்காலம்மை, திருமாளிகைத்தேவர் என்போருக்கும் வணக்கங் கூறுகிறார். சிவன் உயிருக்குயிராய் உள்ளான் என்று உணர்ந்தாருக்கு ஒரு வணக்கம் சொல்லுகிறார். வாழ்க அந்தணர் என்ற பாசுரத்தையொட்டி வாழ்த்தும், பெரியோருக்கும் விருந் தினருக்கும் உணவளிப்பாருக்கும், திருப்பணிக்கு நிதி உதவுவார் நிதியை வாங்கிச் செய்வார் ஆகியோருக்கும் வாழ்த்துரைக்கிறார். சைவாகமத்தை ஆய்ந்து இந்நூல் செய்வதாகச் சொல்லுகிறார். நூலின் இறுதிப்பாடல் ஆசிரியர் பெயர் உரைக்கும்:

சைவ சமயநெறி, சாற்றினன் சம் பந்தனுயிர்
மையலற வாய்க்க வரம்.

ஆசாரியர் இலக்கணம் என்ற பகுதி 117 குறட்பா உடையது. ஆசாரியர் நல்ல நதிக்கரையில் பிறந்தவர். நல்ல குலத்தில்

பிறந்தவர். மனக்குற்றம் அங்கவீனம் முதலியன இல்லாதவர். உடற்குற்றங்கள் யாவை, மனக்குற்றங்கள் யாவை, இவை நீங்கியவர். தீக்ஷை உடையவர். ஆகமம் வேதாந்தம் உணர்ந்தவர். ஆசாரியர் வகைமூன்று. ஐயம் திரிபு விபரீதம் அற்றவர். பதி பசு பாசம் உணர்ந்து சிவஞானம் கைவரப் பெற்றவர். ஆசாரியருக்குரிய முத்திரைகள். நித்தியம், நைமித்திகம், காமியம் என மூன்றும் செய்பவர் பிரமசாரிகிருகி இருவருமே தேசிகர். பெண்களுக்குமே தீக்ஷை உண்டு. ஆசாரியர் செய்யும் தீக்ஷைக்கான காலம் மாணாக்கன் தரும் பொருளில் மூன்றில் ஒரு பங்கு மட்டுமே வாங்கலாம் - என்ற பகுதிகள் இங்கு சொல்லப்பட்டன.

பின் மாணாக்கர் இலக்கணம். நல்ல நதிக்கரையில் பிறந்தவர். சமயி புத்திரகன் சாதகன் என்ற மூவகை. பூ வில்வம் எடுக்கும் முறை, குருவை வழிபடும் முறை, ஆசாரியன் சிவனாவன், ஆனால் சிவனை 'ஆசாரியனாகக் கருதலாகாது, குருவை வழிபடுதல் என்பன இங்கு சொல்லப்பட்டன.

பொதுவாக இவர் கூறிய கருத்துக்கள் சமயக் கல்விக்கு மட்டுமன்றி எல்லாக் கல்விக்குமே கைக்கொள்ளத் தக்கன.

மூன்றாம் பகுதி பொது இலக்கணம். ஆசாரியனுடைய நித்திய கருமங்கள். குளிர்ந்த நீராடுதலே சிறப்பு. ஆன்மார்த்த பூசை, பரார்த்த பூசை, சிவ சின்னங்கள், வணங்கும் முறை, போசன விதி, பிட்சை வகை, சைவாகமங்கள், இட்ட லிங்க பூஜை ஆகிய பொருள்கள் இப்பகுதியில் சொல்லப்படுகின்றன. இதுவே நூலின் விரிந்த பகுதி, 572 குறள். சிவபூஜை செய்வார் சிறப்பாக அறிய வேண்டிய எல்லாப் பொருள்களும் இங்கு சொல்லப்பட்டுள்ளன.

### பதிப்பு

ஆறுமுக நாவலர் பதிப்புக்கள் பல.

### பதி பசு பாசப் பனுவல்

337 குறள் வெண்பாவால் ஆன ஒரு சிறு சைவ சித்தாந்த சாத்திரம். பாயிரம், பிரமாணம், பதி சாதனம், பசுசாதனம், பாச சாதகம், பொது, போதகம் ஆகிய ஏழு இயல்களை உடையது. அச்சிட்ட பிரதியில், இடையே ஏட்டில் சிதைவால் சில பாடல்கள் கிடைக்கவில்லை. ஏட்டில் காணப்படுகின்ற காரூர் பொழிலும் என்ற சிறப்புப் பாயிரம் பாடல் மறைஞான சம்பந்தர் வரலாற்றில்

காட்டப்பட்டது. நூல் இறுதியில் காணப்படும் பின்வரும் வெண்பா நூலின் தொகையைக் காட்டும் பாடல்:

பிரமபுரத் தீசன்பால் பேதைமுலைப் பாலைப்
பருகியபா லன்பேர் பரிந்தோன் – நிருமலன்சொல்
ஆய்ந்துரைத்த செய்யுள்வகை முந்நூறும் ஆறாறும்
ஏய்ந்ததுணை பக்குவர்க்கென் றெண்.

பாயிர இயலில் ஆகமம் செய்தவர், ஆலவனத்து அம்மை, சம்பந்தன், வாக்கிறைவன், ஆரூரன், திருவாதவூரர், கஞ்சனூர் அரதத்தர், மதுரகவி மாளிகைத் தேவர், மெய்கண்ட தேவர், அவர் உரை விளக்கும் வித்தகரான அருணந்தி, தமக்கு உபதேசித்த குரு தேசிகர் ஆகியோர் வணக்கம் சிறப்பாகச் சொல்லத்தக்கது. அக்காலத்தில் அளவை அறிவு சமயத் தத்துவ உணர்ச்சிக்கு முக்கியமானது என்று ஆன்றோர் கருதினமையால், இவரும் பிரமாண வியலில் இதுபற்றி 68 குறட்பாக்கள் செய்திருக்கிறார். இவர் காட்டும் ஓர் உதாரணத்திற்காக இங்குக் கண்ணன் கரு முகிலோர் வண்ணன் என்று காட்டுவது நயமானது. அடுத்த மூன்று இயல்களும் சித்தாந்த சமயத்தின் முப் பொருள்களையும் உணர்த்துவன. இப்பகுதிகள் மெய்கண்ட சாத்திரம் பயில் வோருக்கும் சமயதத்துவ அறிவு விரும்புவோர்க்கும் சிறந்த தத்துவக் கருவூலங்கள். சைவ சமயம் ஆராய்வோர் மெய்கண்ட சாத்திரமே பயில்கிறார்களே. அன்றிப் பிற நூல்களை ஆராய் வதில்லை. இவற்றையும் ஆராய்வது உண்மையாகவே பெரும் பயன் அளிப்பதாய் இருக்கும். பொதுவியல் 8 பாக்கள் உடையது. இது சிவப்பேற்றைச் சொல்வது. போதக வியல் என்பது இறைவன் தேசிகனாய் வந்து மலப்பற்று அறுப்பன் என்று கூறி, சீவன் முத்தர் இயல்பு, உட்பூசை, அஞ்செழுத்து ஆகிய பொருள்களைக் கூறு கிறது. ஒவ்வோர் இயலின் இறுதியிலும் அந்த இயலைப் பொரு ளோடு உணர்பவர் சிவத்தைச் சேர்வார் என்று பலன் கூறுகிறார்.

இந்நூல் பாடல்களின் தெளிவுக்கு எடுத்துக்காட்டாகச் சில பாடல்கள் காண்க:

ஆகம் சடம்காண்; அணு அறியாது; இவ்விரண்டின்
யோகம் சிவனால் – என்று ஓர்.

வேண்டுவா ரில்லை விலங்கு: ஒருவன் காலிலது
பூண்டுறில் பூண்பித்தான் உண்டு.

பூட்டுவித்தான் தாள்பணியப் போம்விலங்கு; புன்குரம்பை
கூட்டுவித்தான் தாள்பணி; போம்கூடு.

சித்திரமென்னச் சிலையென்னச் செத்திருப்பார் –
வித்தகன் தாள் கட்டுள் விடார்.

## உருத்திராக்க விசிட்டம்

மறைஞான சம்பந்தர் நூல்கள் பெரும்பான்மையும் குறள் வெண்பா நூல்கள். ஆனால் இந்த நூல் வெண்பாவால் ஆனது. காப்பு உள்பட 108 பாடல் கொண்டது. ஜபமாலையிலுள்ள உருத்திராக்க மணிகள் 108 என்று மனத்தில் கொண்டு இவர் இவ்வாறு நூல் அமைத்தார் போலும். பின் வருவது இந்நூலின் சிறப்புப்பாயிரம்:

சாற்றினனே கண்டிவரந் தன்னையெண்ணிச் சம்பந்தன்
ஆற்றினையுஞ் செஞ்சடைமேல் ஆர்வித்தான் – கூற்றினைக் கொன்று
அந்தணனைக் காத்தான் அமர்ந்திலங்கு தில்லைவனத்து
அந்தமில்லான் தன்னருளால் ஆய்ந்து.

வழக்கம் போல் இங்கு தனியாக பாயிரப் பகுதி 15 பாடல் அமைத்திருக்கிறார். மதுரகவி மாளிகைத் தேவன் மெய் கண்ட தேவன் காரைக்காலம்மை ஆகியோருக்கு வணக்கம் சொல்லு கிறார். உருத்திராக்கத்தின் உற்பத்தி, அதன் பெயர், நிறம், இன்னா ருக்கு உரியதென்பது, முகங்கள், அம்முகங்களுக்குத் தெய்வங்கள், தரிக்குமிடம், தரிப்பதற்கு மந்திரம், உருத்திராக்கம் பூண்டால் விலக்கத்தக்க உணவுகள், உருத்திராக்கங்களைச் சேர்க்கும் முறைமை, செபமாலைக்குரிய அளவு, எண், மாலையின்றிச் செபிக்கலாகாது என்பது, மாலைக்கு இழை உச்சரிக்கும் முறை, பலன், செபம் செய்யும் நேரத்தில் இருக்க வேண்டிய முறை, செபிக்க வேண்டிய எண், ஆசனம், மாலையைப்பெட்டியினுள் வைக்கும் முறை - என்பன போன்ற பொருள்களை விரித்துக் கூறுகிறார்.

இந்நூற் பொருள்களை ஆகமத்திலிருந்தும் காந்த புராணத் திலும் கண்டு கூறுவதாகச் சொல்லுகிறார். வழக்கம் போல் நூற்கு அதிகாரியும் ஒரு பாடலில் சொல்லுகிறார்:

நாத்திகர் கேட்க நவிலற்க இந்நூலை;
ஆத்திகர்க்கார் வத்தா லறிவிக்க; – ஆத்திகருக்கு
அன்பா லுணர்த்தினரும் ஆராய்ந்த ஆத்திகரும்
இன்பார்ந் திருந்து நிலத்தின்.

இதன் பாடல்களில் ஒன்று:

தெரிசிக்கும் புண்ணியத்தில் தேரின் ஒருகோடி
பரிசிக்கின் ஆகுமெனப் பார்க்க: – பரிசுத்தர்
ஆகியே தாங்கின் அவற்றின் அதிகம்; செபிக்கின்
ஆகும் பலமளப்பார் ஆர்.

## சங்கற்ப நிராகரணம்

தமிழில் உமாபதி சிவாசாரியரே சைவத்தில் அகச்சமய வாதங்களைக் கூறி அவற்றுக்கு மறுதலையும் எழுதினார். அது நூற்பாவால் அமைந்த நூல், சங்கற்ப நிராகரணம் என்ற பெயருடையது. சிவஞான சித்தியார் பரபக்கமானது புறச் சமயங்கள் பலவற்றை விருத்தப்பாவால் மறுத்துரைப்பது. மறைஞான சம்பந்தர் செய்ததும் சங்கற்ப நிராகரணம் என்ற பெயருடையது. 424 குறள் வெண்பாவினால் அகச் சமயவாதிகள் எண்மர் கூற்றை மறுக்கிறது. பின்வரும் இரு பாடல்களும் சிறப்புப் பாயிரமும் நூற்கு அதிகாரியும் கூறுகின்றன:

நிரந்தவர்சங் கற்பம் நிராகரிக்கும் இந்நூல்
பரிந்துலகோர் உய்யப் பகர்ந்தான் – திருந்துமறை
ஓங்கி விளங்க உதித்தமணை ஒட்டினன்பேர்
தாங்கினனாய்ந் தாகம முத் தன்.

ஆரியனால் ஐயம் திரிவுமற ஆராய்ந்த
சூரியரே இந்நூல் குறித்தறிவார்: – தேரும்பா
வார்ந்தவர் தம் பாதத் தறிக, அவலமலம்
தீர்ந்துவிடும், வாய்க்கும் சிவம்.

பாயிரப்பகுதி 50 குறள். வணக்கம் சொல்லுமிடத்து இங்கும் மாளிகைத் தேவர் முதலியோருக்கு வணக்கம் சொல்லுகிறார். சில பாடல்களால் ஆதுலர்க்குச் சாலை அமைத்து அன்பால் மருந்தளித்தல், ஆரியமும் செந்தமிழும் ஆராய்தல், திருப்பணி செய்தல், பொருள் ஈதல் முதலிய அறங்களை வாழ்த்துகிறார். நூலுக்கு எந்த முறையில் பொருள் செய்ய வேண்டும் என்பதை விளக்குகிறார். உதாரணமாக,

கொண்டல்போ லுங்கரத்தான் என்றால் கொடையெனுவர்,
கொண்டலுரு கையிற் கொளார்.

எங்கும் சிவாகமத்தையே போற்றிப் பேசுகிறார். இதன் பின்னர் ஐக்கிய வாதி, பாடாண வாதி, பேத வாதி, சிவசமவாதி, சங்கிராந்த வாதி, ஈசுவர அவிகார வாதி, நிமித்த காரண பரிணாமவாதி,

சைவர் ஆகியோர் சங்கற்பங்களை முதலாவதாகக்கூறி அடுத்து முறையே ஒவ்வொன்றையும் மறுத்துரைக்கிறார். மூன்றிடங்களில் தாம் முத்திநிலை மொழிந்ததைக் குறிப்பிடுகிறார். சீன தர்ப்பணம் என்று ஒரு கண்ணாடியைக் கூறுகிறார். பொற்குன்றடைந்து காகம் கருநிறம் போய்ப் பொன்னாகும் என்கிறார்.

சாக்கியர் கல் எறிந்து அருள் பெற்றமை குறிப்பிடுகிறார். எங்கும் சைவ சித்தாந்தம் என்றே கூறுகிறார். காசி விசுவேசன் கழல் பணிய வேண்டும், தேசிகனுக்கும் அந்தணருக்கும் தீங்கு செய்வாரை வெல் என்கிறார்.

இவ்வாசிரியர் இங்கு கூறியுள்ள சங்கற்பமும் நிராகரணமும் நூலில் கூறியவாறு எட்டாகும். உமாபதியார் நூலில், தொடக்கத்தில் மாயாவாதி சங்கற்பமும் நிராகரணமும் காணப்படும், பின்னர் ஏனைய எட்டில் இவர் மாயாவாதியை விட்டு விட்டு ஏனையவற்றை மட்டும் கொண்டிருக்கிறார்.

### வருத்தமற உய்யும் வழி

17 குறட்பாக்கள். இதயத்தில் அரனைப் பூசிப்பதற்கு வழியைக் கூறுகிறார். உட்பூசை செய்தால், அஞ்செழுத்தைச் சொன்னால், சிவபுரத்து இன்புற்றிருக்கலாம். ஆசாரியன் வருத்தமற உய்யும் வழி என்ற இதைப் பக்தர்களுக்கு இரக்கத்தால் மொழிய வேண்டும் என்கிறார். பின்வரும் பாடல் நன்கறிந்தது. இப்பாடல் அட்டாங்க யோகக்குறள் என்ற சிறுநூலிலும் வந்துள்ளது:

> நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினை
> என்றுஞ் சிவன்தா ளிணை.

இந்நூல் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் பதிப்பிக்கப் பெற்றது. அங்கு ஆசிரியர் பெயர் சொல்லவில்லை.

### ஐக்கியவியல்

15 வெண்பாக்கள். ஐக்கியம் என்ற பொருளைத் தெளிவு படுத்துகிறது. இதில் குறிப்பிடும் ஒரு பாட்டு கருதத்தக்கது:

> தீட்டேல் இதழிலுற இந்நூலை: தீட்டிடினும்
> காட்டேல் ஊன் காயமுவ ரார்கண்ணில்; – காட்டிடுக
> ஆதிசம வாயவிலங் காக்கையிருள் ஆணவம் அ –
> நாதிசம வாயநஞ்சென் பார்க்கு.

### பரமத திமிர பானு

குறள் வெண்பாவால் ஆன இந்நூல் இன்று கிடைக்கவில்லை. சில பாடல்களைச் சித்தியார் உரையில் இந்நூலாசிரியன் மாணாக்கரான மறைஞானதேசிகர் காட்டுகிறார். திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் 180க்கும் அதிகமான பாடல்களைத் தமது சித்தி பரபக்க உரையில் தருகிறார். அவரும் இந்நூலாசிரியருக்கு மாணாக்கர் என்பதை அவர் வரலாற்றில் குறிப்பிட்டோம். இதுவும் பிற சமயங்களைக் கூறி மறுத்துரைக்கும். நூல் மிக விரிந்தது. கிடைக்கின்ற சில பாடல்களைவிட இன்னும் அதிகமாய்ப் பல நூறு பாடல்களைக் கொண்டிருந்தது போலும்.

### பஞ்சாக்கர தரிசனம்

இப்பெயர் கொண்ட ஒரு நூலை மறைஞான சம்பந்தர் செய்தார் என்று இவர் மாணாக்கரான மறைஞான தேசிகர் கூற்றால் அறிகிறோம்.

யாரை யிலிங்கமாம் நாளம் வகாரம்
சிகார மேற்பீடம் தெரிகின் – மகாரந்தான்
கண்டமே யாகும் கவினா ரடிப்பீடம்
பண்டிகழும் நம்மகானாம் பார்.

நகரமே சத்தியோ சாதமுகம், நாடின்
மகரந்தான் வாமம் மதிக்கில், – பகருங்கால்
சிகார வகாரம் புருட மகோரம்,
யகாரமீ சானமுக மென்.

என்றார் எமது குரவர்; ...... இவ்விரண்டும் பஞ்சாக்கார தரிசனம் என அறிக என்று எழுதுகிறார். எனவே, இது மறைஞான சம்பந்தர் பாடிய மற்றொரு வெண்பா நூலாக இருக்கும் போலும். நூல் இருப்பதாகத் தெரியவில்லை.

"ஒருநாழி உப்பும் ஒரு நாழி அப்பும்
இருநாழி; இந்த இரு நாழி – ஒருநாழி
யாமளவில் நீருள் அடங்கியிடும் உப்புப்போல்
ஆமுடலும் ஆவி யடைந்து.

என்றார் எமது குரவர்" என்று இவர் காட்டும் மற்றொரு பாடலும் பஞ்சாக்கர தரிசனத்துக்குரியதாயிருத்தல்கூடும். இது முத்தி நிலையைப் பேசுகிறது.

தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியர், ஒரு நாழிநீரும் அரை நாழி உப்பும் ஒன்றரை நாழியாகாது ஒரு நாழி நிரான வாறு போல என்று எழுதியிருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.

## இறைவனூற் பயன்

குறள் வெண்பாவால் ஆன கிடைக்காத மற்றொரு நூல். உரைகளில் இந்நூற் பெயரும் இரண்டொரு பாடல்களும் மட்டும் பயில்கின்றன.

## முத்தி நிலை

19 வெண்பாக்கள் உடைய ஒரு சிறுநூல். மறைஞான சம்பந்தருடைய சமயக் கொள்கை ஆன்மானந்த வாதம் என்று குருஞான சம்பந்தர் பெயரிட்டார். அதாவது, ஆன்மாவுக்கு இயல்பாகவே ஆனந்தம் உண்டென்றும், மலப் பந்தத்தால் அது தடைப்பட்டதென்றும், மலம் நீங்கவே ஆனந்தம் பிரகாசிக்கும், ஆன்மா அவ்வானந்தத்தை அனுபவிக்கும் என்றும் சொல்லுகின்ற மதம். இக்கருத்தை மறுத்துக் குருஞான சம்பந்தர் செய்த நூலே முத்தி நிச்சயம் என்ற சிறுநூல்.

முத்தி நிலையுள் ஆசிரியர் அகம் பிரமம் என்று கூறுவோரைக் கண்டிருக்கிறார். பிரம கீதையைப் பெயர் சொல்லி மறுக்கிறார். தாம் முத்தி நிலை பாடியதைத் தமது பிற நூல்களிலும் குறிப்பிடுகிறார். இவற்றைப் பார்க்கும்போது, இவர் பாடிய பிரதான நூலாகிய முத்திநிலை, இச்சிறு நூல்தானா அல்லது வேறு ஒரு பெருநூலாக இருக்குமோ என்ற ஐயம் எழுகிறது. இச்சிறு நூலின் முதற்பாடல் பின்வருவது.

> சிவ சத்தி யைத்திளைப்பர் சீவன் முத்தர்என்றும்
> அவசத்தி மாயா தகமென் – சிவசத்தி
> தன்னைக்கண் டிங்கருளால் சச்சிதா னந்தமெனும்
> மன்னைத் திளைத்து வாழ்வார்.

நூலிறுதியிலுள்ள சிறப்புப்பாயிரக் குறள் ஆசிரியரைக் குறிப்பிடும்:

> முத்தி நிலை, அணுக்கள் சேர மொழிந்திட்டான்
> சத்திய மெய்ஞ்ஞான சம்பந்தன்.

## பரமோபதேசம்

இது 41 குறள் வெண்பா உடையது. இறுதியில் காணப்படும் பாடல் இவர் பெயரைக் குறிப்பிடுகிறது.

செறிமா செறியும் பரமோப தேசம்
மறைஞான சம்பந்தன் வாக்கு.

இச்சிறு நூலிலும் விநாயகர் வணக்கம் முதலியன சொல்கிறார். தாம் சொல்லுகின்ற நூல்களின் முடிவான கருத்துக்களை இங்கு கூறினார். மேலும் இது பொதுவாக மனத்தில் தோன்றிய பல கருத்துக்களின் தொகுப்புப்போல் அமைந்துள்ளது. பிற இடங்களில் இவர் பாடிய பாடல்களின் வரியை அப்படியே இங்கு வைத்திருக்கிறார். சிவாகமம் பராசத்தியைச் சாத்துவி என்று சொல்லும். சிவஞான போதம் பத்தாம் சுலோகம் சிவானு பூதியைக் கூறும். உபநிடதம், பிரமகீதை, திருமந்திரம், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் பாடல்கள், திருவெம்பாவை, திருவிசைப்பா, நக்கீரர், அருள்நந்தி ஆகிய பாடல்களை யெல்லாம் முதற் குறிப்பால் கூறுகிறார். வசிட்டன் அருந்ததி முதலியோரையும் கூறுகிறார். 13 கண்ணகி தந்தோளை - கண் ணகி லந்தோளை எனத் திருத்தற்குரியது.

### பதிபசு பாசத் தொகை

இந்த நூல் 25 குறள் வெண்பாக்களை உடையது. பலமுறை உரையுடன் அச்சிடப்பட்டிருப்பினும் ஆசிரியர் பெயரை யாரும் குறிப்பிடவில்லை. எனினும், இது மறைஞான சம்பந்தர் செய்த தென்றும் உரை அவர் மாணாக்கரான மறைஞான தேசிகர் செய்ததென்றும் ஆன்றோரிடையே கருத்து வழங்குகிறது.

இந்நூல் காப்பு, சிவசத்தி, நந்தி முதலியோர் வணக்கத்தோடு தொடங்குகிறது. பதி பசு பாசம், அனுக்கிரகம், பலன் என்ற இயல் களைக் கொண்டது. பாடல்கள் மிகவும் எளிமையானவை.

### பதிப்பு

1. பழைய பதிப்பு, பால்வண்ண முதலியார் 1903.
2. தருமபுர ஆதீனப் பதிப்பு 1940.

### அட்டாங்க யோகக் குறள்

65 குறட்பாக்களுடைய ஒரு சிறுநூல்; பாயிரமும் அட்டாங்க யோகமாகிய இயமம் நியமம் ஆசனம் பிராணா யாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்ற எட்டு யோக உறுப்புக்களையும் கூறுவது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் 1923இல் சேரா. சுப்பிரமணிய கவிராயரால் பதிப்பிக்கப் பெற்றது. இதில் உள்ள 'நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினை

என்றும் சிவன் தாளிணை' என்ற குறட்பாடல், வருத்தமற உய்யும்வழி என்ற மறைஞான சம்பந்தர் நூலிலும் வந்துள்ளது. சரியை கிரியை ஞானம் ஆகிய பாதங்களுக்குப் பல நூல் செய்த மறைஞான சம்பந்தர் யோக பாதத்துக்கு இந்த நூல் செய்தார் என்று கருதுதல் பொருந்தும்.

### ஆன்மார்த்த பூஜா பத்ததி

இந்த நூல் மறைஞான சம்பந்தர் வடமொழியில் செய்தார் என்று வெள்ளி கூறுகிறார். இதிலிருந்து சில வரிகளையும் எடுத்துத் தருகிறார். "த்ரவ்விய சுத்த்யா கிம் சாத்யதே ஜலாதி த்ரவ்வியாணாம் ஸ்வத ஏவ சித்தத்வாத் இதி சேத்ந அசுத்த புலனோத்பன்ன மயேயஸ்ய த்ரவ்ய ஜாதஸ்யா சிவதயா சிவ போக அநர் ஹத்வாத் நசவ்யா பக சம்பதாத் சிவத்வம் தஸ்யேதி வாச்யம் சிவஸ்ய புஷ்கர பரணவது நிர்லேபதயா த்ரவ்யசம்பர்க்க அபாவாது தத்தச் சுத்திஹி அவஸ்யம் கார்யா" என்பது அவர் காட்டும் பகுதி. இது அகோர பத்ததியைத் தழுவி மறைஞான சம்பந்தர் செய்ததாகச் சொல்கிறார். இந்நூல் இப்போது கிடைக்க வில்லை.

### சிறு நூல்கள்

மறைஞான சம்பந்தர் செய்த விரதம் முதலியன பற்றிய சிறு நூல்கள் சில. அவற்றைச் சில சொற்களால் கூறுகிறோம். கீழே சொல்லப்பட்ட நூல்களில் முதல் நான்கும் குறட்பாக்கள்.

### 1. மகா சிவராத்திரி கற்பம்

இது 39 குறட்பா. இந்நூல் மாசி மாதத்தில் வருகின்ற சிவ ராத்திரி இன்ன நாளில் அனுட்டிக்கத்தக்கது, விர நியமங்கள் இன்னவை, அருச்சித்துப் பேறு பெற்றோர் இன்னவர், பலன் இன்னது என்று குறிப்பிடும்.

### 2. மாத சிவராத்திரி கற்பம்

14 குறள். மாதந்தோறும் இருக்கத்தக்க சிவராத்திரி விரதம். அப்போது செய்யத்தக்க சிவபூசை பாரணை முதலியன கூறு கின்றது.

### 3. சோமவார சிவராத்திரி கற்பம்

17 குறள். இது எந்த நாளில் எவ்வாறு விரதம் அனுட்டிக்கத் தக்கது, பூஜை செய்யும் முறை யாது விரதமுடையோர் என்ன பலன் பெறுவர் என்று சொல்லுகின்றது.

### 4. சோமவார கற்பம்

இது சோம வார விரதம் இருக்கும் முறையை விரிவாக 216 குறட்பாக்களால் உணர்த்துகின்றது. மதுரையில் எட்டெட்டு அருள் விளையாட்டு ஈசனுக்கு உரியது. சிவ பூஜை செய்யும் முறை முதலியன கூறும். அர்ச்சனை, நிவேதனம் நாகேசுவர பூஜை முதலியன செய்யத்தக்கன. விரதம் இருந்தவர் சிவபரத்தை உற்றிருப்பார். இங்கு விரதம் அனுட்டித்ததற்குச் சிறப்பாய் ஓதப் பட்ட தலங்கள் காசி மதுரை திருக்காளத்தி மன்று ஆரூர் (145).

### 5. திருக்கோயில் குற்றம்

இது இரண்டு எண் சீர் விருத்தங்கள் கொண்டது. 32 குற் றங்கள் செய்யத்தகாதன என்று பாடல்கள் சொல்லுகின்றன.

### பதிப்பு

மேலே சில நூல்களின் பதிப்பு வரலாறுகள் சொல்லப் பட்டன. சிறு நூல்கள் என்று குறிப்பிட்டவற்றை ஈக்காடு இரத்தினவேலு முதலியார் 1901இல் அச்சிட்டார். பின் இவற் றோடு பின்னும் சில நூல்களும் சேர்த்து திருவாவடுதுறை ஆதீன வெளியீடாக 1954இல் த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை வெளியிட்டார். அவற்றுள் முத்தி நிலையும் பரமோபதேசமும் வேறிடங்களிலும் பண்டித உலகநாத பிள்ளை வெளியிட்டிருக் கிறார். சங்கற்ப நிராகரணம் உரையோடு தஞ்சை சரசுவதி மகால் வெளியீடாகவும் வந்திருக்கிறது. (1964)

## மறைஞான தேசிகர்

### ஆசிரியர்

மறைஞான தேசிகர், சிவ புண்ணியத் தெளிவும் சிவஞான சித்தியார் உரையும் சிவதருமோத்தர உரையும் செய்தார்; இவர் வரலாறு அந்நூல்களை ஆராய்ந்த இடத்து (அத்தியாயம் 7) சொல்லப்பெறும், இந்நூல் சிவபுண்ணியச் செயல்களையும் அவற்றால் விளையும் நற்பலன்களையும் தெளிவாகச் சொல்லு கின்றது. இதன் பாடல்கள் காப்பு உள்பட 145. இந்நூல் பல முறை அச்சாகியிருக்கிறது. இருந்தபோதிலும் ஒரு பதிப்பிலும் ஆசிரியர் பெயர் சொல்லப்படவில்லை. இதற்குக் காரணம் ஏடுகளில் பெயர் காணப்படாமையே ஆகும். இதனாலேயே நூலாசிரியர் பெயர் தெரியவில்லை என்று சொல்லமுடியாது. 13ஆம் நூற்றாண்டு தொடங்கி எழுந்துள்ள மெய்கண்ட சந்தான

பரம்பரையில் வந்த சமய சாத்திர நூல்களை வரன் முறையாக ஆராய்ந்து வரும்போது எமக்குப் பல செய்திகள் தெளிவாகப் புலப்படுகின்றன.

சிவபுண்ணியத் தெளிவு என்ற இந்த நூல் கூறும் வணக்கப் பாடல்கள் கருதத்தக்கன. முதலாவது குகை மறைஞான தேசிகர்:

மாசிலா கமமெலாம் வரம்பு கண்டுயிர்ப்
பாசவே ரறத்தமிழ் பனுவல் செய்தவன்,
தேசமார் குகைமறை ஞான தேசிகன்
வாசமார் மலர்ப்பதம் வணங்கு வாமரோ.

இந்தப் பாடல் கூறும் முறை மிகவும் சிறப்பு வாய்ந்தது. 'ஆகமம் எலாம் வரம்பு கண்டு உயிர்ப் பாசவேர் அறத்தமிழ்ப் பனுவல் செய்தவன் குகை மறைஞான தேசிகன்' என்று பாடல் கூறுகிறது. ஆகமமெலாம் வரம்பு கண்டு தமிழ் செய்தவர் ஒருவரே உள்ளவர். அவரே சிதம்பரம் கண்கட்டி மடம் குகை மறைஞான சம்பந்தர். இவ் அத்தியாயத்திலேயே அவருடைய வரலாற்றையும் அவர் செய்த நூல்களையும் விரிவாக ஆராய்ந்திருக்கிறோம். அவ் வாராய்ச்சியைப் பார்க்கும் போது அவரை ஆகமக் கடல் என்று சொல்ல யாரும் தயங்கமாட்டார். அவர் தங்கியிருந்த இடம் குகை என்றும் குகை மடம் என்றும் பெயர் உள்ளது. சைவத் துறவிகள் தங்குகின்ற மடத்தை அக்காலத்தில் குகை என்று கூறுவது ஒரு மரபு. (குகை நமசிவாயர் என்ற பிற்கால வழக்கும் காண்க.) இந்த மறைஞான சம்பந்தரே இப்பாடல் கூறும் குகை மறைஞான தேசிகர் ஆவார். இவருக்கு ஒரு சீடர் இருந்தார் என்று குறிப்பிட்டோம். அவரே காழி மறைஞான தேசிகர். அவர் மறைஞான சம்பந்தர் நூலாகிய சிவதருமோத்தரத்துக்கு உரை செய்தார் என்பதையும் சித்தியார் சுபக்கத்திற்கு உரை செய்தார் என்பதையும் சைவ சாத்திர உரை என்ற அடுத்த அத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். அவரே சிவ புண்ணியத் தெளிவு செய்தார் என்றும், மேற்காட்டிய 'மாசில் ஆகம மெலாம்' என்ற பாடலால் அவரே தம் குருவைத் துதிக்கிறார் என்றும் நாம் கொள்ளுதல் தகும். தம்முடைய குரு விரிவாகச் செய்த சிவதருமோத்தரத்தின் கருத்தில் சில சுருக்கி இத் தெளிவில் கூறி யிருக்கிறார் என்று தெரிகிறது.

சித்திசேர் வெண்ணெய்மெய் கண்ட தேசிகன்
பத்திசேர் மரபினைப் பரித்த பண்டிதன்,

முத்திசேர் சிவபுர முதல்வன், எம்மையாள்
சத்திய ஞானிதன் சரணம் போற்றுவோம்.

சிவபுரம் சத்தியஞான பண்டாரம் என்பவர் 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு சிறந்த ஞானாசிரியர். அவருடைய மாணாக்கர் சிதம்பரம் கண்கட்டி மடம் குகை மறைஞான சம்பந்தர்; அவருடைய மாணாக்கர் இருவருள் களந்தை ஞானபிரகாசர் ஒருவர். அவருடைய மாணாக்கரே சிவபுண்ணியத் தெளிவு செய்த காழி மறைஞான தேசிகர்; தமது குருவான குகை மறை ஞான சம்பந்த தேசிகரை வாழ்த்தினார் என்றும் தமது சந்தான பரம்பரைக்கு* முதல்வரான சிவபுரம் சத்தியஞான பண்டாரத்தை இப்பாடலால் வாழ்த்தினார் என்றும் கருதுவது பொருத்தமே.

## நூல்

இந்நூல் பாயிரப்பகுதி 19 பாடல் உடையது. நால்வர் வணக்கத்தோடு நந்திதேவர், காரைக்காலம்மை, மெய்கண்டார் ஆகியோருக்கும் இவர் வணக்கம் சொல்லியிருப்பது இவருடைய குருவாகிய மறைஞான சம்பந்தர் தம் நூல்களில் சொல்லியுள்ள வணக்க மரபைத் தழுவியது. இவர் சித்தியாருக்கும் உரை எழுதி யவர் ஆதலால், மெய்கண்டாருக்குப் பின் அருள்நந்திக்கும் உமாபதிக்கும் தெரிந்து வணக்கம் சொல்லுகிறார். சிவம் சக்தி என்று சொல்லாமல் நடராசர் சிவகாமி என்பதாகச் சொல்லு கிறார். சிவதருமோத்தர இயல்தோறும் இறுதியில் அகத்தியர் வணக்கம் கூறுகிறார். நந்தி வணக்கத்திலுள்ள கருத்து காணத் தக்கது. ஆகமக் கருத்தை நந்தி பன்னிரு போத சூத்திரமாகப் புகன்றார் என்று கூறுகிறார்.

ஓதுமுப் பொருளையும் உணர்ந்து நாற்பதந்
தாதியா கமந்தழீஇ யதனைப் பன்னிரு
போதசூத் திரமதாப் புகன்ற நந்திதன்
பாதபங் கயமலர் பணிந்து போற்றுவாம்.

இந்நூலின் கருத்து சிந்திய விசுவ சாதாக்கியத்திலுள்ளது என்று கூறுகிறார். தொடக்கத்தில் ஆசாரியர் மடாலயத்தைக் குறிப் பிடுவது, குகைமடம் என்ற நினைவை ஊட்டுகிறது. ஆசாரிய வழிபாடு, நடந்து சென்று சிவாலயத்தை வழிபடுதல், சிவலிங்க தரிசனம், அருச்சனை, நந்தவனம், ஆவுக்கோர் வாயுறை, நமஸ்

* இந்தப் பரம்பரையின் வரலாற்றை எமது தமிழ் இலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு நூலில் விரிவாகக் காணலாம்.

காரம், தீர்த்தம், சிவயோகிக்குப் பிட்சை இடுதல், திருமஞ்சனம், பிற அபிடேகம், சிவபூசை, தான பலன், உபசாரங்கள், நிலதானம், பொருள்கள் தானம், தூபதீபம், திருப்பணிகள், தடாகம், கேள்வி, தேவியார் அருச்சனை, குருலிங்க சங்கம வழிபாடு, புறச்சமயம் அடையும் பலன், ஆகம பலன், அன்னதானம், முண்டிதமும் முன்சிகையும், திருவலகு, துதி, கீதம் சிவனடியார் வழிபாடு, அவருக்குக் கௌபீனம் முதல் திருநீறு மருந்து வரை பொருள்கள் கொடுப்போர் அடையும் பலன் - என்ற பொருள்களை விளக்க மாகச் சொல்லுகிறது. இறுதியாக ஆசாரியர் உபதேசம் வேண் டும், ஆசாரியர் மூவகை என்று சொல்லி முடிக்கிறது.

### பதிப்பு

பல. உலகநாத முதலியார் பார்வை. 1925 திருவாவடுதுறை ஆதீனம் 1954.

## சிவாக்கிர யோகிகள்

### பரம்பரை

14ஆம் நூற்றாண்டில் சீகாழி - சிற்றம்பல நாடிகள் மாணாக்கரான காஞ்சி ஞானப்பிரகாசர் வழியாகக் காஞ்சி புரத்தில் ஞானப்பிரகாசர் மடம் என்ற ஒரு மடமும் ஆதீனமும் தோன்றி வளர்ந்தன. உமாபதி சிவாசாரியருடைய ஒரு சாலை மாணாக்கராயிருந்து, பின் அவருக்கே சீடரான மச்சுச் செட்டி யார் என்னும் அருள் நமசிவாயருடைய சீடரான சித்தர் சிவப் பிரகாசர் வழியாகத் திருவாவடுதுறை ஆதீனம் தோன்றி வளர்ந்தது. சித்தர் சிவப்பிரகாசர் மூவலூரில் கார்காத்த வேளாளர் குலத்தில் தோன்றிய நமசிவாய மூர்த்தியை மாணாக்கராக, ஆட்கொண்டு திருவாவடுதுறையில் முதல் குருமூர்த்தியாக அமைத்தார். சிவப் பிரகாசர் பல நூறு ஆண்டுகள் வாழ்ந்தார் என்று சொல்வதை இக்கால ஆராய்ச்சி உலகம் நம்புவது கடினம். நமசிவாய மூர்த்திகள் 16ஆம் நூற்றாண்டில் திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவினார் என்பது உண்மை. மச்சுச் செட்டியார் (மச்சுறை வணிக யோகி). திருவையாறு சந்திரசேகரர் என்ற பிராமணருக்கு உபதேசம் செய்ய அவர் வழியே திருவையாறு சாமிநாத தேசிகர் முதலான 15 ஆசாரியர் தலைமை பூண்டு செப்பறை மடம் என்ற ஒரு பீடத்தை வளர்த்திருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் இல்லறத்தாரான வேளாளர்.

சிற்றம்பலநாடிகள் வழியே 5ஆவது சீடர் பரம்பரையில் கமலை ஞானப்பிரகாசர் தோன்றினார். அவருடைய மாணாக்கருள் ஒருவரான குருஞானசம்பந்தர் தருமபூர ஆதினத்தைத் தோற்றுவித்தார். மற்றொரு மாணாக்கரான நிரம்ப அழகிய தேசிகரென்பவர் துழாவூர் ஆதீனத்தைத் தோற்றுவித்தார் என்று தெரிகிறது. இவை யாவும் 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஆதீன மரபுகள், யாவும் சைவ சித்தாந்த மடங்கள். சந்திரசேகர ரென்பவர் தவிர ஏனையோர் அனைவரும் வேளாள குலத்தினர். செப்பறை மடத்தார் நீங்கலாக ஏனையோர் துறவிகள். இவர்கள் அனைவரும் மெய்கண்ட பரம்பரையில் வந்தவர்கள். இது நந்தி பரம்பரை என்றும் சொல்லப்படும்.

இவற்றையன்றி மற்றொரு பரம்பரை இதே நூற்றாண்டில் தோன்றி வளர்ந்தது. அந்தப் பரம்பரையே சிவாக்கிர யோகிகள் பரம்பரை. இதுவும் முன் சொல்லப்பட்டவை போல, திருக் கயிலாய பரம்பரை என்றே சொல்லப்பெறும். ஆயினும் இதனு டைய சந்தான முறை வேறு, ஸ்ரீகண்ட பரமசிவனிடத்தில் கந்தப் பெருமாள் உபதேசம் பெற்றார். அவர் வாமதேவ முனிவருக்குப் பிரணவார்த்தத்தையும், சர்வ ஞானோத்தரம் என்னும் ஆகமத் தையும் உபதேசித்தார். அவர் இவற்றை நீலகண்ட சிவாசாரி யருக்கும், அவர் விசுவேசுவர சிவாசாரியருக்கும், அவர் சதாசிவ சிவாசாரியருக்கும், அவர் சிவமார்க்கப் பிரகாச சிவாசாரியா ருக்கும், அவர் சிவாக்கிர யோகிகளென்னும் சிவக்கொழுந்து சிவாரியாருக்கும் முறையாக உபதேசம் செய்து ஆசாரியராக நியமித்தார்கள். கந்தனிடமிருந்து உபதேசம் வளர்ந்தமையால் இது கந்த பரம்பரையென்றும், வாமதேவ முனிவர் மூலம் பூலோகத்தில் வளர்ந்தமையால் இது வாமதேவ பரம்பரை யென்றும் வழங்கும். பரமகுருவாகிய சதாசிவ மூர்த்தியின் பெயரை வைத்து இந்தப் பரம்பரை சதாசிவ பரம்பரை என்றும் சொல்லப்படும். இங்கு இறுதியிற் குறிப்பிட்ட, சிவக்கொழுந்து சிவாசாரியர் வேளாள மரபில் வந்தவர். இந்தப் பரம்பரை மெய்கண்ட பரம்பரையினின்றும் வேறானது. இதற்கு மூலநூல் மேற்குறிப்பிட்டபடி சர்வ ஞானோத்தர ஆகமம்.

இச்சிவக்கொழுந்து சிவாசாரியர் அருக்கவனம் என்னும் சூரியனார் கோயில் தெற்கு வீதியில் தமக்கென ஒரு திருமடம் அமைத்து, தமது பரம்பரை ஞானத்தைப் பக்குவமுள்ள

மாணாக்கருக்கு உபதேசித்துக் கொண்டு வாழ்ந்து வருவாராயினர். இப்பரம்பரையில் விசுவேசுவர சிவாசாரியர் வரை காசியில் வாழ்ந்தவர்கள். ஏனையோர் தெற்கு நோக்கி வந்து தமிழ்நாட்டில் வாழ்ந்தவர்கள். இவர்களுள் சிவக்கொழுந்து சிவாசாரியர் வரையிலுள்ள அனைவரும் பிராமணர். மேலும், சதாசிவ சிவா சாரியர், தாம் சர்வஞானோத்தர ஆகம பரம்பரையில் வந்திருந்த போதிலும், ரௌரவாகமத்தின் பகுதி என்று அக்காலத்தார் கருதியிருந்த சிவஞான போத வடமொழிச் சுலோகங்கள் பன்னிரண்டுக்கும் விளக்கமான ஓர் உரை, சிவஞானபோத விருத்தி என்ற பெயரால் வடமொழியில் எழுதினார். (இதன் இரண்டாம் பதிப்பு, சென்னை அரசின் தொன்னூல் நிலையத்தின் வெளியீடாக அச்சிடப்பட்டுள்ளது).

## ஆசிரியர் வரலாறு

சூரியனார் கோயிலில் சிவக் கொழுந்து சிவாசாரியர் ஞான பீடத்தின் ஆசாரியராய் விளங்கி வந்த காலத்தில், அவருடைய புகழ் எங்கும் பரவி இருந்தது. அவர் இல்லற வாழ்வுடையவர் என்று தெரிகிறது. அக்காலத்தில் தொண்டை நாட்டில் தோன்றிய ஒரு பிராமணர் உலகப்பற்றை நீக்கும் எண்ணமுடையவராய் ஞானசிரியனை நாடிக் கொண்டிருந்தார். அவர் இந்த ஆசாரிய ருடைய பெருமையைக் கேள்வியுற்று அவரை அடைந்து வணங்கினார். அவருடைய அதிதீவிர பக்குவத்தைக் கண்டு ஆசாரியர் மகிழ்ந்து ஞானவதியால் நிருவாண தீட்சை செய்து அவருக்குத் தமது தந்த பரம்பரைக்குரிய பிரணவார்த்தத்தையும் சர்வஞானோத்தராதி சாத்திரங்களையும் உபதேசித்து, ஆசாரி யருக்குரிய அபிடேகத்தையும் செய்து, தம்முடைய பெயருக் குரிய வடமொழிப் பெயராகிய சிவாக்கிரயோகி என்னும் பெயரையும் சூட்டி, தமக்குப் பிறகு ஆசாரிய பதவியையும் நல் கினார். இச்சிவாக்கிரயோகிகளே இக்கட்டுரைக்குரிய தலைவர். சூரியனார் கோயிலில் தொடங்கிய புதிய சைவ சந்தானத்தில் சிவக்கொழுந்து சிவசாரியார் முதலாம் ஆசாரியர். இச்சிவாக்கிர யோகிகள் இரண்டாம் ஆசாரியர். இவர்களுடைய ஆன்மார்த்த பூசைக்குரிய மூர்த்தி திருக்காளத்திநாதர்.

இந்த யோகிகள் தாம் பெற்ற உபதேசத்தின் வழியே தியானம் செய்து தெளிந்து, பரமான்மாவாகிய சிவமும் தாமும் வேறற விளங்கும் சிவானந்த நிட்டையிலே இடையறாது வீற்றிருந்தார்.

இவர் வருணாச்சிரமங்களுக்கு அதீதராக விளங்கினமையால், இவரை அதிவருணாச்சிரமி* என்று ஆன்றோர் வழங்குவர்.

இந்த ஆசாரியர் சூரியனார் கோயிலில் இருந்த காலத்தில் இவர்களுடைய புகழ் எங்கும் பரவிற்று. அக்காலத்தில் சிவாக்கிரயோகி காவியுடுத்துத் துறவியாக வாழ்ந்து வந்தார். நாட்டை ஆட்சி புரிந்த மன்னன் இவர்கள்பால் மிக்க ஈடுபாடு கொண்டு பக்தி பூண்டு இவர்கள் ஏவல் வழி ஒழுகியும் வந்தான். ஒரு சமயம் சிவாக்கிரயோகிகள், திருவீழி மிழலையில் சம்பந்தரும் அப்பரும் பலநாள் தங்கி, வழிபட்டுப் பஞ்ச நிவாரணம் செய்து வாழ்ந்து வந்ததை நினைவு கூர்ந்து, தாமும் அங்கு நிரந்தர வாசம் செய்ய வேண்டுமென்ற தம் விருப்பத்தை அவ் அரசனிடம் தெரிவித்தார். அக்காலம் அங்கு தஞ்சை நாயக்க மன்னர் ஆண்டு வந்தனர். மன்னனும், யோகிகள் சொல்லைச் சிரமேல் தாங்கித் திருவீழி மிழலையில் தெற்கு வீதியில் ஒரு மடம் கட்டி அங்கு சிவாக்கிர யோகிகளை எழுந்தருளச் செய்து தக்கபடி வழிபட்டு உபசரித்து வந்தான். யோகிகள் அந்த மடத்திலேயே தங்கி, சைவ சந்நியாசிகள் பலர் சூழ நெடுங்காலம் வீற்றிருந்து சைவப் பயிரை வளர்த்து வந்தார். இது காரணமாக, இவருக்கு வீழிச் சிவாக்கிரயோகிகள் என்ற பெயரும் வழங்கும்.

அந்தக் காலத்தில் வருண பேதங்கள் அதிகமாக வழங்கின. சில பிராமண சந்நியாசிகள் தாங்களே உயர்வென்றும் சைவர் சந்நியாசம் பூணும் தகுதி இல்லாதவர் என்றும் பேசி வந்தார்கள். இதற்கு காரணங்களும் உண்டு. சூரியனார் கோயிலில் மட்டும் அப்போது பிராமண சந்நியாசி; மற்ற இடங்களில் சைவ சந்நியாசிகள். பிராமணர் ஸ்மிருதி வழி ஒழுகியவர். சைவர் ஆகம நெறி ஒழுகியவர். தவிர, அப்போது பிராமணர் உயர்வு என்று கருதிய காரணத்தால் சூரியனார் கோயில் மடம் பெரிய மடம் என்று வழங்கியதுண்டு. சூரியனார் கோயில் காவியுடை, ஏனையோர் துறவிகளாயினும் வெள்ளுடை இதனால் பிராமண சந்நியாசிகள் தங்களை உயர்வென்றும் பிறர் சந்நியாசிகளே அல்லர் என்றும் சொல்லி வந்தார்கள். ஆனால் உண்மை வேறு. சந்நியாசிக்குச் சாதி வேற்றுமை இல்லை. பிராமண சந்நியாசிக்குப் பூணூலும் இல்லை, மூலைக் கச்சமும் இல்லை. எல்லாச் சந்நியாசி

---

* சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வரும் முறையே பிரமசாரி, துறவி, கிருகத்தர், அதிவருணாச்சிரமி என்று கூறும் ஒரு மரபு உண்டு.

களும் ஒரே விதமாகத்தான் உடுத்த வேண்டும். எனவே, இவ்வித மான பொது நிலையில் பிராமண சந்நியாசிகளுடைய வாதம் பொருந்துவதன்று.

இதை முடிவு செய்ய வேண்டுமென்று இரு வகைச் சந்நியாசி களும் அரசனிடம் சென்று விண்ணப்பித்துக் கொண்டார்கள். அரசன் யோகிகளிடத்தில் இதைத் தெரிவித்தான். யோகிகள் அதன்மேல், பிராமணருக்கு மட்டுமன்றிச் சைவர்களுக்கும் சந்நியாசமும் தீட்சை பூசை முதலியனவும் உண்டு என்று ஆகம வாயிலாகத் தக்க பிராமணங்களுடன் நிருபித்து, கிரியா தீபிகை சைவ சந்நியாச பத்ததி என்று இரு வடமொழி நூல்கள் செய்தார். யோகிகள் பிராமண சந்நியாசி. ஆனால் தம் காலத்தில் ஏற்பட் டிருந்த பிற சைவ மடங்களுக்கும் எவ்விதக் குறைவும் வரலாகாது என்ற விரிந்த மனப்பான்மையோடு அவர்களையும் உயர்த்தி நூல் எழுதிய இவரது பெருந்தன்மை போற்றற்பாலது. இங்கு ஒன்று நினைவில் கொள்ள வேண்டும்: ஸ்மிருதிகள் வருணத்தை உயர்த்திச் சொல்லும், ஆனால் சைவ ஆகமங்கள் சைவ ஆசாரத்தை உயர்த்திச் சொல்லும்.

பிறகு இவர் அடிக்கடி சூரியனார் கோயில் சென்று தம் முடைய ஆசாரியரை வணங்கித் தரிசித்து வந்த காலத்தில், அவர் கட்டளைப்படி பல சாத்திரங்களும் உரைகளும் செய்து கொண்டிருந்தார். பின்னர் இவருடைய குருவாகிய சிவக் கொழுந்து தேசிக சிவாசாரியர் பரிபூரணம் அடையும் காலம் உணர்ந்து, சூரியனார் கோயில் வந்து தங்கி இருந்து ஆசாரியர் பரிபூரணமானதும் அவருக்கு அரசனைக் கொண்டு கோயில் கட்டுவித்து, குரு பூசை முதலியன நடத்தி வந்தார். உரிய காலத்தில் தம் மாணாக்கருள் சிறந்த நந்தி சிவாக்கிரயோகிகளை அடுத்த ஆசாரியராக அபிஷேகம் செய்து, சூரியனார் கோயிலிலேயே தங்கி இருக்கச் செய்து, தாம் முன்போல் திருவீழிமிழலையில் தங்கி மாணாக்கருக்கு உபதேசம் முதலியன செய்து வந்தார். உரிய காலத்தில் இவர் பரிபூரணமடைந்தார். அப்போது நந்தி சிவாக்கிர யோகிகள் தம் ஆசிரியருக்குச் சமாதியும் சமாதி கோயில் முதலியனவும் அமைத்து வழிபாடு செய்து, பின் தாம் சூரியனார் கோயிலிலேயே தங்கி மடத்தை நிர்வகித்து வந்தார். இவரும், இவருக்குப் பின்வந்த மற்றொரு சிவக்கொழுந்து தேசிகரும் பிராமணர். அடுத்து வந்தவர் திருமாந்துறைப் பண்டார சந்நிதி எனப் பெயர் பெற்ற சொக்கலிங்க தேசிகர்.

அவர் கார்காத்த வேளாளர். அவர் தொடங்கி வேளாளரே இங்கு ஆதீனத் தலைவர்களாக இருந்து வந்திருக்கிறார்கள்.

### சில கதைகள்

சிவாக்கிர யோகிகள் பற்றி இரு கதைகள் சொல்லப்படும். ஒரு கதை இவரைத் திருவாவடுதுறை குருமூர்த்தியாகிய நமசிவாய தேசிகரோடு தொடர்புபடுத்துவது. ஒரு சமயம் சிவாக்கிர யோகிகள் திருவாவடுதுறை சென்றார். அப்போது அங்கிருந்த நமச்சிவாய மூர்த்திகளைக் காணும் நோக்கத்தோடு மடத்துக்குச் சென்றார். செல்லும் வழியில் மூர்த்திகளின் சீடர் சிலர் சைவர் வீடொன்றில் பிட்சை ஏற்று நின்றனர். வருபவருடைய பெருமையை உணர்ந்திருந்தார்களாதலால், இவரைக் கண்டவுடன் கையிலிருந்த பிட்சா பாத்திரத்தை ஒரு திண்ணையில் வைத்து விட்டு ஓடி வந்து இவர் முன்னே நிலத்தில் வீழ்ந்து வணங்கினார்கள். அப்போது அவர்களை வாழ்த்தி அப்பால் சென்ற யோகிகள், அவர்களுக்குச் சைவசார சீலம் முழுமையும் கைவரவில்லையென்று நினைத்தார் போலும். மடத்தையடைந்து நமசிவாய மூர்த்திகளோடு அளவளாவியிருந்து திரும்புகின்ற நேரத்தில், மாணாக்கருடைய செயலை மூர்த்திகளுக்கும் உணர்த்தினார். மூர்த்திகளும், ‘சைவ மாணாக்கர் துறவியை எதிரே கண்டதும் தண்டம் போலக் கீழே விழ அல்லவா வேண்டும்? கையிலுள்ள பிட்சா பாத்திரத்தை வைக்க ஒரு திண்ணையை அவர்கள் தேடியது அவர்களுடைய பக்குவமின்மையைக் காட்டுகிறது’ என்று மறுமொழி கூறினாராம். யோகிகள் பிறகு தம் சூரியனார் கோயில் மடத்துக்குத் திரும்பி விட்டார். இச் செய்தியை யோகிகளுக்கு முற்பட்ட சிவக்கொழுந்து தேசிகரோடு தொடர்புபடுத்திச் சொல்வதுமுண்டு. இது வாய்மொழியாக வழங்கும் கதையேயன்றி, இதற்கு ஆதாரமில்லை.

### மற்றொரு வரலாறு

இக்காலத்தில் மணவாள மாமுனிகள் வைணவ சமயப் பிரசாரம் செய்ய எண்ணி அரசனோடு உசாவியபோது அவன் உடன்படவில்லை. காரணம் அவன் யோகிகளுடைய பெருமையை உணர்ந்திருந்தமை. ஆகவே அவர், ‘நான் யோகிகளோடு வாதம் செய்து வைணவ மதத்தை நிலை நாட்டுகிறேன்’ என்று சொல்லவே, அரசன் ஒரு பெருஞ் சபையைக் கூட்டினான். பதினெட்டு நாள் இருவருடைய வாதமும் நடத்துவதாகத் திட்டம். வாதத்திலே தோற்றவர் தம்முடைய சமயத்தைக் கைவிட்டு மற்றவர்

சமயத்தைச் சேர்ந்துவிடவேண்டும் என்பது நிபந்தனை. பதி னேழாம் நாள் வாதம் முடியும் வரையில் மாமுனிகளுக்குத் தோல்வியே ஏற்பட்டது. அதன் மேல் அவர் கூட்டத்தார் யோகி களை வாதத்தில் வெல்லமுடியாது என்று உணர்ந்து, அவர் தங்கியிருந்த திருமடத்திற்கு இரவிலே தீ வைத்துவிட்டு ஓடி விட்டனர். மறுநாள் இச்செய்தி யறிந்து யோகிகளைக் காணச் சென்ற அரசன், மடம் எரிந்திருந்ததைக் கண்டு வருந்தி, யோகி கள் ஊறு இன்றி இருந்ததை அறிந்து மகிழ்ந்து அவரைப் பெரி தும் போற்றினான்.

இவ்விரு கதைகளும் பொருந்துவன அல்ல. காலக்கண் கொண்டு நோக்கும்போது பிராமண சந்நியாசியாக இருந்த சிவாக்கிர யோகிகள் திருவாவடுதுறைக்குச் சென்றிருப்பார் என்பது ஏற்கத் கூடியதன்று. நமசிவாய மூர்த்திகளும் பெருஞானி என்பதில் ஐயமில்லை. இவர்கள் தங்கள் தங்கள் அளவில் சிவானு பவத்தில் திளைத்திருந்தவர்களேயன்றி, கலந்து உறவாடும் நிலை அன்று இருந்ததில்லை. இனி, மணவாள மாமுனிகள் வாழ்ந்த காலம் 1370 - 1443. ஆதலால், இவர் யோகிகளோடு வாதிட்டார் என்பது பொருந்தாது. ஒருகால் வேறு வைணவர் யாரேனும் அல்லது மாமுனிகளுடைய பரம்பரையில் ஒருவர் யோகிகளோடு வாதிட்டுத் தோற்றிருக்கலாம். தமிழ்நாட்டில் பல காலங்களில் சிறந்த சமயாசிரியர் தங்கள் தங்கள் இடங்களில் மேலான சமய வாழ்க்கை வாழ்ந்து வந்திருக்கிறார்கள். வாதம் செய்ய அவர்கள் வேறிடம் போனதில்லை என்பதை நினைவில் வைக்கவேண்டும்.

**காலம்**

யோகிகள் காலத்தில் விஜய நகரத்தை அரசாண்டவர் சதாசிவராயர் கி.பி.1542 - 1570. இக்காலத்தில் மதுரை நாயக்கனின் பிரதிநிதியாகத் தஞ்சையில் ஆட்சி புரிந்தவர் சேவப்ப நாயக்கர். இவர் சாதாரண சேவகனாய் இருந்து பெரும் பதவியை அடைந்தார். காலம் 1540 - 1580.

> ஸ்ரீ கர்ணாடர மாபதௌ கஜபதி ப்ராஜ்யோபதா அநேக
> பஸ்த்யாயத் தாநமஹாபகாலஹரிகாநாவ் யோயகண்டஸ்தலே
> அச்சேசார்பித கோடநிஷ்டுரபுர க்ஷுண்ணாரிராண் மண்டலீ
> கோடீரேந்த்ரமணௌஎ ஸதாசிவ மஹாராயே மஹீம் ரக்ஷதி
> தஸ்யாக்ஞா பரிபாலகே ரிபுமஹீ பாலாப்தி மந்தாசலே
> கந்யா தேநுஸஹஸ்ர பூரிதிலராச்யந் நாக்ரஹாரப்ரதே

ஸஹ்யோர் வீதர கந்யகாஸஹசரீம் பூதேவ தேவாச்ரயாம்
சோலக்ஷ்மாம் சிந்நசேவ்வயாச்யுதந்ருபே தஞ்ஜாபுரே சாஸதி
ஸதாசிவாசார்ய தயாநபாயச் சிவாகமாம் போநிதி கர்ணதார:
சிவாக்ரயோகீ ஜக தேமாந்யஸ்ஸ சைவஸந்யாசவிதிம் கரோதி.

இங்கு காட்டிய சுலோகங்கள் சைவசந்நியாச பத்ததியின் பாயிரத்தில் காணப்படுகின்றன. இங்கு சதாசிவ மகாராயர் உலகத்தை ரட்சிக்கிறார் என்றும் தஞ்சாபுரியில் சின்ன சேவ்வயாச்சுதன் ஆட்சிபுரிகிறான் என்றும் குறிப்பிடுகின்றார். ஆகவே காலம் தெளிவு. இவர் கி.பி.16ஆம் நூற்றண்டின் இடைப்பகுதியில் 1550 - 1575 ஆகிய எல்லையில் வாழ்ந்து நூல்கள் செய்தார் என்று நாம் கொள்ளலாம்.

### நூல்கள்

சிவாக்கிர யோகிகளுடைய பெருஞ் சிறப்பு, இவர் பல வைணவ ஆசிரியர் போல வடமொழியிலும் பெருநூல்கள் செய்திருப்பதாகும். சைவ பரம்பரையிலேயே வடமொழியில் நூல் செய்த பேராசிரியர் இவர் ஒருவரே (மறைஞான சம்பந்தர் வ்டமொழியில் ஆன்ம பூஜா பத்ததி என்ற ஒரு நூல் செய்தார் என்று சொல்வதுண்டு. அந்நூல் இன்று கிடைக்கவில்லை.) இனி, இவர் செய்த வடமொழி நூல்கள் பின்வருவன: கிரியா தீபிகை, சைவ சந்நியாச பத்ததி, சிவஞானபோத லகுடீகை, சிவஞானபோத சிவாக்கிர பாஷ்யம், சைவ பரிபாஷை. தமிழில் செய்த மூலநூல் சிவ்நெறிப் பிரகாசம். தமிழ்நூல் உரைகள் - சிவஞான சித்தியார் பரபக்க உரை, சுபக்க உரை. வடமொழி நூல் உரைகள் - சர்வ ஞானோத்தரம், தேவி காலோத்தரம், சுருதி சத்திமாலை என்பவற்றின் தமிழ் உரைகள். இந்த மூன்று உரைகளும் இன்று இல்லை.

### சிவநெறிப் பிரகாசம்

இந்த நூல் யோகிகள் அருளிச் செய்த சைவ சித்தாந்த மூல நூல். இது 215 திருவிருத்தங்கள் கொண்டது. இவர் தம்முடைய குருவாகிய சிவக்கொழுந்து சிவாசாரியருடைய புதல்வி சுவானந்த நாச்சியார், தமக்குச் சிவநெறியை உணர்த்தும்படி வேண்ட, அதன் பொருட்டுச் சிவாகமங்களிலிருந்து 1000 சுலோகங்களைப் பொறுக்கித் தொகுத்து அவற்றின் கருத்தைத் தமிழாலும் சிவ நெறிப் பிரகாசம் என்று பெயரிட்டு இந்நூலாகச் செய்து கொடுத்தார் என்று தெரிகிறது. இதை சிவநெறிப் பிரகாச நூல் உரை முடிவில் காணப்படுகின்ற வெண்பாவால் நாம் அறியலாம்:

தந்தை சிவக்கொழுந்தைத் தாள்பணிந்தே தான் தனுசை
எந்தை சிவநெறியிங் கேதென்னச் – சிந்தையால்
தேர்ந்து சிவாகமத்தைச் சேர்த்தா யிரமதனை
ஓர்ந்திடச் சொன்னான் தமிழா லும்.

எனினும், இவ்வாறு யோகிகள் தொகுத்த ஓர் ஆகமத் தொகுப்பு உண்டென்று எவரும் குறிப்பிடவில்லை, நூல் கிடைக்கவு மில்லை. சிவநெறிப் பிரகாசம் என்பது சிவப்பேறு பெறுவதற் கான வழியைக் காட்டும் விளக்கு என்று பொருள்படும். நூலின் பன்னிரண்டாம் பாடல் உரையில், 'சிவநெறிப் பிரகாசம் என்றது சிவானுபவ மார்க்கத்தைப் பிரகாசிப்பிக்கையால் சிவநெறிப் பிரகாசம். அதன்றியும் சிவநெறிப் பிரகாச சிவாசாரியராகிய பரமகுருவின் திருநாமத்தாலும் சொல்லப்பட்டது' என்று உரையாசிரியர் எழுதுவதும் காண்க. சிவமார்க்கப் பிரகாசம் சிவநெறிப் பிரகாசம் என்ற நூற் பெயராக அமைந்தது. சிவக் கொழுந்து - சிவாக்கிரம் (அக்கிரம் கொழுந்து). இது ஆசாரியர் பெயராக அமைந்தது.

இந்தநூல் மெய்கண்ட பரம்பரைக்குரிய சிவஞான போத வழியில் வந்ததன்று. இவ்வாசிரியர் வடமொழிச் சிவஞான போதத்துக்குத் தாமே ஒருவிரிந்த பாஷ்யமும் தமிழ்ச் சிவஞான சித்தியாருக்கு ஒரு சிறந்த உரையும் செய்துள்ளார். இவ்விரண்டும் பன்னிரு சூத்திரப் பாகுபாட்டை உடையன. ஆயினும், இவர்தாம் செய்த இந்த நூலில் அப்பாகுபாட்டை மேற்கொள்ளவில்லை.

இந்நூலானது அறுசீர் விருத்தங்களாயுள்ள 14 பாடல்கள் நீங்கலாக ஏனைய முழுமையும் எண்சீர்விருத்தங்களாக அமைந்தது. 211ஆம் பாடல் மட்டும் ஐந்து அடிகளாயுள்ளது (பழைய மூலப் பதிப்பில் நான்கு அடிகளே உள்ளன.)

இதன் பாயிரப் பகுதி, பன்னிரண்டு பாடல்கள். இங்கு கணபதி, நடராஜர், சக்தி, குமாரக் கடவுள், நந்திகேசுவரர், கந்த பரம்பரைக்கு முதல்வராகிய வாமதேவர் ஆகியோர் வணக்கம் சொல்லி, பிறகு முனிவர் நால்வர், சமய குரவர் நால்வர் வணக்கம் சொல்கிறார் முனிவராவார் துருவாசர், அகத்தியர், கௌதமர், ததீசி என்ற நால்வர். இந்நால்வரும் முறையே சந்நியாசம், வானப் பிரஸ்தம், கிருகத்தம், பிரமசரியம் என்ற நிலைகளில் நின்றவர் கள். பிறகு சிவனருள்சேர் மதலையாய் திரு அவதாரம் செய்கர வாத திருஞான சம்பந்தர், கல்மிதப்பாய் வந்தோர், அரனாரைத் தூதேவும் அவர், அரனார்தம் அடியார் என்ற நால்வரையும்

குறிப்படுகின்றார். அடுத்த பாடல் சத்தியமாம் சைவத்துள் சந்நியாச தாபகரான சதாசிவ தேசிகர், சிவநெறித் தேசிகர் (சிவ நெறிப்பிரகாசர்), சிவக்கொழுந்து என்ற மூவர் வணக்கமும், அடுத்த பாடலில் தமது குருவாகிய சிவக்கொழுந்து தேசிகருக்குத் தனி வணக்கமும், பின் அவையடக்கம் இரண்டு பாடல். பன்னி ரண்டாம் பாடல் நூலுக்கு அதிகாரியைக் கூறுகின்றது. இங்கு, பண்டை நல் தவத்தால் தோன்றிய சாங்குசித்தர் (சாமு சித்தர்) அல்லாமல், தேகமே ஆன்மா என்றிருக்கும் பிராகிருதரும் அல் லாமல், சற்குருவைத் தேடி உணர எண்ணும் வைநயிகரே நூலுக்கு அதிகாரி என்கிறார்.

இதனையடுத்து அளவை இலக்கணம் கூறுகிறார். இது பதினாறு பாடல்களால் சொல்லப்படுகிறது. அக்காலத்தில் சமயசாத்திரப் பெருநூல் செய்தோர் பிரமாணமாகிய அளவை இலக்கணம் கூறுவதையும் சாத்திர நூலின் அங்கமாகவே கொண் டார்கள். இதைச் சிவஞான சித்தியார், தத்துவப் பிரகாசம் முதலான பெரு நூல்களிலும் காணலாம். அளவையின் பின் பதி, பசு, பாச இலக்கணங்கள். பிறகு தத்துவ தாத்துவிக இலக்கணம், அவத்தைகள், நான்கு பாதங்கள். இதன் பிறகு ஆசாரியர் செய்யும் தீட்சை, அத்துவா சோதனை, உபதேச முறைமை, ஆசாரியன் இலக்கணம் ஆகிய செய்திகள். இறுதியாக, பிற சமயத்தார் கூறுகின்ற முத்திகள் முத்தியல்ல என்று கூறி, நூலை முடிக்கிறார். இங்கு மறுக்கப்பட்டோர் பாஞ்ச ராத்திரி, சாங்கியன், மாயா வாதி, வாமதட்சிண மார்க்கத்தார், சமாவேசவாதி, சமுற்பத்தி வாதி, சங்கிராந்தவாதி, அபிவியத்திவாதி, சிவாத்துவிதவாதி என் போர். சைவ சித்தாந்த முத்தியிலக்கணம் கூறும்போது அம்முத்தி யடைதற்கு உபாயம் ஞானநெறி பிரபத்திநெறி பத்திநெறி என்ற மூன்று; பக்தி நெறியானது அந்தரங்க பக்தி, பாஹிய பக்தி என இருவகை என்று கூறி நூலை முடிக்கிறார். இவ்வாசிரியர் கிரியா நெறியில் நின்று பல நூல்கள் செய்தவராதலால், இங்கும் கிரி யைக்கான பல பொருள்களைச் சொல்லுகிறார்.

இறைவன் சத்வன், உத்தியுத்தன், பிரவிருத்தன் என்ற மூன்று நிலை உடையவன் என்ற செய்தியை விளக்குகிறார். நந்தி தேவ ருடைய திருவுருவ வருணனை சொல்லப்படுகிறது. சந்தான குரவரான வாமதேவர் பஞ்சாக்கர மந்திரத்துக்கு ரிஷி என்று சொல்லப்படுகிறார். துருவாசர் முதலியோர் சைவ குரவர் என்று இவர் சொன்னதைப் பிறர் சொல்லவில்லை. இங்கு எழுதிய

அளவைக் கருத்துக்களை இவரே தம் சித்தியார் உரையில் மிகவும் விரிவாகக் கூறியிருக்கிறார். பதியிலக்கணம் கூறும் போது பதியின் சொரூப லட்சணம் கூறுகின்ற பின்வரும் பாடல் அப்படியே இதற்கு நேரான சிவப்பிரகாசப் பாடலைத் தழுவி யிருப்பது காணத்தக்கது:

அறிவரிதாய்ச் சச்சிதா னந்த மாகி
அகண்டமாய் நித்தியமாய் அநாதி யாகிப்
பொறிகரணங் குறிகுணங்கள் விகார மின்றாய்ப்
பூரணமாய் ஒப்பிலதாய் அமல மாகிச்
செறிவரிதாய் மிகச்சிறியவதாய்ப் பெரிது மாகிச்
சித்தசித்தாய் உள்ளதனைச் சேட்டித் தொன்றாய்ப்
பிறிவிலதாய்ப் பேரொளியாய்ப் பெண்ணலியா ணன்றாய்ப்
பெறும்பொருளாம் பதிசொருபம் பேசுங் காலே.

மூவகை ஆன்மாக்களாகிய சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என்ற மூவரின் இலக்கணத்தை நன்கு புலப்படுத்துகின்றார். இது போலவே பாச இலக்கணமும் சிவப்பிரகாசத்தைத் தழுவியிருப்பது காணலாம். சங்காரம் என்பது உயிர்கள் இறப்பு பிறப்பிலிருந்து இளைப்பாறுதல் என்று பிற நூல்களைத் தழுவியே சொல்லு கிறார். மகேசுவரர், ஸ்ரீகண்ட ருத்திரர் முதலியோருடைய உற்பத்தி கள் இந்நூலில்தான் சொல்லப்பட்டுள்ளன. ஆசாரியருடைய இலக்கணங்கள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன. (171 - 174 பாடல்கள்.) சொல்லப்பட்டவற்றுள், கல்லாமை பசு நூலை, சிவநூலே கற்றுணர்தல், பூமகனைத் திருமாலை நிந்தியாத புந்தியுளனாய் இருத்தல், ஆகமத்தே ஓரிலக்கம் உணர்தல் - என்பன குறிப்பிடத்தக்கன. ஞானம், பிரபத்தி, பத்தி என்று இவர் கூறிய நிலை பிற நூல்களில் கூறப்பட்டதில்லை. தசகாரியங் களைச் சுருக்கமாக ஒரே பாடலில் சொல்லி விடுகிறார்.

இவர் சித்தியார் உரை எழுதிய பின் இந்நூல் எழுதினார் என்று தெரிகிறது. அதில் சொல்லப்பட்ட எல்லாக் கருத்துக் களைத் தழுவியும் அதில் விடப்பட்ட பல கருத்துக்களை ஆக மங்களிலிருந்து எடுத்துச் சேர்த்தும் இவர் நூல் செய்திருக் கிறார். சைவ சித்தாந்தக் கருத்துக்கள் சிவஞானபோதம், சிவ ஞான சித்தியார், சிவப்பிரகாசம், பின் துகளறுபோதம், தத்து வப்பிரகாசம் என்று முறையாக வளர்ந்தும் விரிந்தும் வந்த நிலையில், சிவநெறிப் பிரகாசம் பின்னும் வளர்ச்சி பெற்ற மற்றொரு நிலையை நமக்குத் தருகிறது.

இந்த நூல் பதி, பசு, பாச இலக்கணங்களைக் கூறியதோடு அமையாது, ஞானப் பேற்றிற்கு இன்றியமையாத தீட்சை, அத்துவா சோதனை முதலியவற்றையும் சிவகாம வழியே விளக்குதலால், இதற்குச் சிவநெறிப் பிரகாசம் என்ற பெயர் பொருந்துவதே ஆகும். இவர் ஓர் ஆகமத்தைத் தழுவிச் செய்யவில்லை: பல ஆகமங்களிலும் சொல்லப்பட்ட தமக்கேற்ற கருத்துக்களைத் தொகுத்துக்கொண்டு இந்த நூல் செய்தார் என்ற கருத்துப் பொருத்தமே. ஆயிரம் ஆகம சுலோகங்களைத் திரட்டினார் என்பதும் பொருத்தமுடையதே.

சிறப்பான ஒரு செய்தி இந்த இடத்தில் குறிப்பிடாமல் இருக்க முடியாது. தமிழ்நாட்டில் முன்னமே நூல் செய்த ஆசிரியர் பெரும்பாலோர் கருத்துக்களை வெளியிடும்போது, ஆடூஉ முன்னிலையாகவும், மகடூஉ முன்னிலையாகவும் சொல்கிறார்கள்: சைனத் துறவிகளும் இந்தப் போக்குக்கு விலக்கல்ல. நாலடியாரில் மகடூஉ முன்னிலைப் பாடல்கள் 6, பழமொழி நானூற்றில் மகடூஉ முன்னிலைப் பாடல்கள் 54. இன்னும் பிற்காலத்தில் யாப்பருங்கலக் காரிகை செய்த அமிதசாகரர் இந்த தமது இலக்கண நூலில் 47 காரிகைகளில் 34 மகடூஉ முன்னிலையாக அமைத்திருக்கிறார். பிற்காலத்தில் குமரகுருபர சுவாமிகளும் சிவப்பிரகாச சுவாமிகளும் கூடப் பெண்ணை விளித்துப் பாடுகிறார்கள். இந்த நிலைக்கு முற்றிலும் மாறு சிவாக்கிரயோகிகள். இவர் இந்தச் சிவநெறிப் பிரகாச நூலைச் செய்தது ஒரு பெண் தம்மையடைந்து ஞான உபதேசம் கேட்டுச் செய்து அளித்ததாகும். நீதி நூல்களும் சாத்திர நூல்களும் முன்னிலை விளியைப் பொறுத்த வரையில் ஒரு படியாகவே வைத்து எண்ணத்தக்கன. ஆயினும், இவர் இங்கு மகடூஉ முன்னிலையாகப் பெண்ணை விளித்தோ பெண்ணின் உறுப்புக்களைக் குறிப்பிட்டோ ஒரு பாடலும் சொல்லவில்லை. இவர் இவ்வாறு விளி இல்லாது பாடியிருப்பது மிகவும் சிறப்புடையது. முன்னமே பாடிய ஆசிரியர்கள் மகடூஉ முன்னிலையாகப் பாடியது தவறு என்ற கருத்தோடு இவர் ஒருகால் பாடியிருக்கலாம் என்று கூட நாம் எண்ணத் தோன்றுகிறது. நூலின் இறுதிப் பாடல், 'உயிர்கட்கு உறுதி சிவபத்தி, அன்னே! உணர்ந்து கொள்ளே' என்று இவர் கூறுவதும் கவனிக்கத்தக்கது. அன்னே - தாயே என்கிறார் உரைகாரர்:

இந்த நூலுக்கு ஆசிரியரின் மாணாக்கரும் ஆதீனத்தின் அடுத்த தலைவருமான நந்தி சிவாக்கிர யோகிகளே அரிய உரை எழுதியிருக்கிறார்.

பதினாறுக்கு மேற்பட்ட இடங்களில் ஆசிரியர், என ஆகமங்கள் சொல்லும், எனப் புகலும் நூலே என்று எழுதுகிறார் (நூல் - ஆகமம்). தம் வடமொழி நூல்கள் - அனைத்திலுமிருந்து தம் கூற்றுக்கு ஆதாரமாக ஒவ்வோரிடத்திலும் தவறாது ஆகம மேற்கோளைத் தந்து செல்வது இவர் இயல்பு. ஆகமங்கள் மட்டுமன்றி, சிறந்த வடமொழிச் சாத்திரங்களையும் குறிப் பிட்டுச் செல்கிறார்: சித்தாந்த சாராவளி, பூஜாஸ்தவம், பிராசாத சந்திரிகை, ஞானரத்னாவளி, சித்தாந்த போதம், வாருணபத்ததி முதலியன குறிப்பிடத்தக்கவை.

இனி, இவர் நேர் முகமாய்த் தம் குருவின் மகளுக்கென்று நூல் செய்து கொடுக்கின்றாராதலினால், நடைமிகவும் எளிமை யாயும் ஓரளவு பேச்சு வழக்கைத் தழுவியதாயும் இருக்கக் காணலாம்.

இந்நூலின் தமிழ் நடையையும் ஆசிரியர் வாக்குத் திறனை யும் சமயப் பொருளை விளக்கும் திறனையும் நன்குணர்தற் பொருட்டு, இரு பாடல்களை மட்டும் இங்கு எடுத்துக்காட் டாய்த் தருகிறோம். ஆணவ இலக்கணம் (46):

ஏகமா யனேகமாஞ் சத்தியுள தாகி
எண்ணிலுயிர் ஞானத்தைத் தடுப்ப தாகி
மோகமுத லேழ்குணங்க ளுடைய தாகி
முடிவிலதா யனாதியுமாய் முத்தியுயிர்க் காகப்
பாகமாம் படியாதி சத்தியது பண்ணப்
படுவதுமாய்ப் பக்குவத்தை யடையுயிர்கள் பாலில்
ஆகமா திகள்யாவு மடையாது முத்தி
யடைவதற்குத் தானிங்கு மாணவமென் றறியே.

சிவன் முத்தர் இலக்கணம் (209)

செறிவரிய ஞானநிட்டை யெய்தி னோர்கள்
சீவன்முத்த ராய்ச்சரிக்குஞ் சிவமே யாவர்
அறிவரிதா மவர் செயலைப் பிராரத்த பேதம்
அனேகமுள வாதலினா லவ்வுடல்வா தனையால்
பிறிவரிதாய்ச் சிற்றின்ப மனைத்தினையும் பெற்றும்
பெரிதாய விச்சைவெறுப் பினராயும் பின்னும்
நெறியான வறமறந்து மறமே செய்தும்
நீங்கியிடார் சிவன்றனையெந் நேரமுமந் நிலையே.

இப்பாடல்களும் இவை போலப் பிறவும் அருணந்தி சிவத்தின் சிவஞான சித்திப் பாடல்களைத் தழுவியிருப்பது சாத்திரம் பயின்றோருக்குப் புலப்படும்.

சிவநெறிப் பிரகாசப் பாடல்கள் சில, திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் எழுதிய அவிரோத உந்தியார் உரையில் (17ஆம் நூற்றாண்டு) மேற்கோளாய்க் காட்டப்பட்டுள்ளன.

## பதிப்பு

சிவநெறிப்பிரகாசத்துக்கு மூலம் மட்டும் கையடக்கமான சிறுநூலாகச் சென்ற நூற்றாண்டில் வெளிவந்தது. பிறகு சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவரா யிருந்த அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் நந்தி சிவாக்கிர யோகிகள் இயற்றிய உரையோடு மிகவும் திருத்தமான அழகிய பதிப்பாக 1936இல் வெளியிட்டார். இங்கு விரிவான முன்னுரை யுடனும், அப்போது சூரியனார் கோயில் ஆதீனத்தில் தலைவரா யிருந்த மீனாட்சி சுந்தர தேசிய சுவாமிகளின் சிறப்புப் பாயிரத் தோடும் விரிவான பொருள் அட்டவணை வடமொழி மேற்கோள் அடிக்குறிப்புக்கள் பரிபாஷை அகராதி முதலியவற்றோடும் இது அமைந்துள்ளது. இதை அப்படியே திருவாவடுதுறை ஆதீனத்தார் 1968இல் அச்சிட்டார்கள்.

## வடமொழி நூல்கள்

வடமொழியில் பெரும்புலவரான சிவாக்கிரயோகிகள் சைவ சமய ஸ்தாபிதம் செய்யும் பொருட்டுப் பல நூல்கள் வடமொழியில் செய்தார். அவற்றுள் நான்கு நூல்கள் அச்சாகி யுள்ளன. அவையாவன - சைவபரிபாஷை, கிரியா தீபிகை, சைவ சந்நியாசபத்ததி, சிவாக்கிர பாஷ்யம் என்பன தமிழிலும் முதனூல் செய்து, மணிப்பிரவாளத்தில் உரைநூலும் செய்த இவருடைய தனித்த வடமொழி நூல்கள் பற்றியும் இங்கு சிறிது ஆராயலாம்.

## சைவ பரிபாஷை

சைவ பரிபாஷை என்று சொல்லப்படுகின்ற இந்த நூல் சிவஞான போதத்துக்கு விளக்கமாக, ஆகம அடிப்படையில் எழுதியதாகும். இது ஐந்து பரிச்சேதங்களையுடையது. உரை நடை பயின்ற நூல் 13 உபநிடதங்களையும் வேறு 30 வடமொழிச் சாத்திரங்களையும் மேற்கோளாய் எடுத்துக் காட்டுவது; அவற்றுள்ளும் பௌஷ்கரமும் மிருகேந்திரமுமே அதிகம். தொடக்கத்தில் அளவைப் பகுதியை விவரிக்கிறார். இந்த இயல்பு

இவருடைய சிவநெறிப்பிரகாசத்திலும் இந்த உரையிலும் காணப்படுவது. இது முதல் பரிச்சேதம். இரண்டாவது பதி லக்ஷணம், மூன்றாவது பசுலக்ஷணம், நான்காவது பாசலக்ஷணம், ஐந்தாவது சாதன இயல் முத்தியிலக்கணமும் ஆன்மா முத்தி பெறும் மார்க்கமும் கூறுவது. சிவானந்தானுபவமே முத்தி என்று கூறுவது.

### பதிப்பு

இவ்வளவு சிறப்புடைய இந்த நூலைத் தமிழ்நாட்டில் யாரும் அறிந்ததாகத் தெரியவில்லை. மைசூர் பல்கலைக்கழகத் தார் தேவகோட்டை சிவாகம பரிபாலன சங்கத்தார் உதவிய ஏட்டைக் கொண்டு இதை நாகரலியில் 1950இல் அழகு பெற அச்சிட்டிருக்கிறார்கள். ஆங்கில வடமொழி முன்னுரை, பொரு ளகராதி முதலிய அங்கங்களையுடையது.

### சைவ சந்நியாச பத்ததி

சுமார்த்த சந்நியாசிகட்கும் சைவ சாந்நியாசிகட்கும் சந்நி யாசம் பற்றிய வாக்குவாதம் முற்றி, அரசனிடம் இவ்வழக்குச் சென்றது. சுமார்த்தர்கள் சைவருக்குச் சந்நியாசம் கிடையாது என வாதாடினர். சிவாக்கிரயோகியின் பெருமை யுணர்ந்திருந்த அரசன் இதுபற்றி அவரைக் கேட்க அவர் தக்க சான்றுகள் காட்டி, சைவருக்கும் சந்நியாசமும் ஆசாரியத் தன்மையும் உண்டென்று ஆகம மேற்கோள் கொண்டு நிறுவினார். அவரு டைய வாதத்தைக்கண்டு மகிழ்ந்த அரசன் அவர் காட்டிய வற்றை ஒரு நூலாகச் செய்து தரும்படி வேண்ட, அதன்மேல் யோகிகள் செய்த நூலே சைவ சந்நியாசபத்ததி. இது வட மொழியில் உரைநடையில் முழுமையும் ஆகம மேற்கோள் களோடு எட்டுப் படலங்களாயுள்ளது.

முதல் படலம் சரியை முறைகள்.

இரண்டாம் படலம் விரிவான சிவ பூசாவிதிகள்.

படலம் 3 - தகரவித்தை யோகம் பஞ்சாட்சரம்.

படலம் 4 - சந்நியாசி பிட்சையேற்றல், அசபாமந்திரம்.

படலம் 5 - சாதுர் மாஸ்ய விரதம் முதலியன.

படலம் 6 - தீட்சைகள், பஞ்சாட்சர உபதேசம்.

படலம் 7 - சந்நியாச அதிகாரம், சடை, சந்நியாச பேதம், அபிஷேக விதிகள் முதலியன.

படலம் 8 - சந்நியாசி முத்தியடையும்போது செய்யத் தக்க கிரியைகள், சிவலிங்கப் பிரதிட்டை, பூசாவிதிகள். சந்நியாசம் பற்றிக் கூற எழுந்ததாயினும் இது பூசை, தீட்சை முதலான பல சைவச் சடங்குகள் பற்றிய விதிகளை உரைக்கும் ஒரு சிறந்த ஆதார நூலாக உள்ளது.

இதில் மேற்கோளாக வருபவை 27 ஆகம உபாகமங்கள், 27 பிற வடமொழி நூல்கள். இவ்வாசிரியரே செய்த கிரியா தீபிகையும் இங்கு காட்டப்பட்டுள்ளது.

### பதிப்பு

கிரந்த எழுத்தில் இந்நூல் மூலம் மட்டும் 932இல் போலகம் இராமசாஸ்திரிகளால் பரிசோதிப்பித்துத் தருமபுரம் ஆதீனத்தார் வெளியிட்டார்கள்.

### கிரியா தீபிகை

இது ஒரு பத்ததி நூல். சிவாக்கிர பத்ததி எனவும் சொல்லப்படும். சைவநெறிகள் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கில், முதல் மூன்றையும் அனுட்டிக்கும் முறையை விளக்கிச் சொல்லும் நூல்கள் பத்ததி எனப்படும். இந்த நூல் 8 படலங்களையுடையது. நூல் முழுமையும் ஆசிரியருடைய வசனங்களும் இடையே ஆகம சுலோகங்களும் கலந்து அமைக்கப்பட்டுள்ளது. பல பகுதிகளில் பக்கம் பக்கமாக வடமொழிச் சுலோகங்களே அமைந்திருக்கும். கிரியைப் பகுதிகளைச் சொல்வதால் முழுவதும் மந்திரங்கள் அமைக்கப்பெற்ற மந்திர சாஸ்திரமென்று இதைச் சொல்வது பொருந்தும்.

முதல் படலம் மங்களாசரணம் தொடங்கி, காலைக் கடன்கள் பிராணாயாமம் தர்ப்பணம் வரையிலுள்ள நித்திய கருமங்களுக்கான விதிகளைக் கூறுகின்றது.

இரண்டாவது படலம் சூரிய பூஜை தொடங்கி, சிவபூஜை முடித்து போஜன நியமம் வரையிலுள்ள விதிகளை விரிவாய்க் கூறுகிறது.

மூன்றாவது படலம் பவித்ரமும் சாதுர் மாஸ்யமம் கூறுகிறது.

நான்காவது படலம் தீட்சா விதி என்று தொடங்கி, நிர்வாண தீட்சை ஞான தீட்சை வகையில் சொல்லுகிறது.

ஐந்தாவது படலம் சைவ சந்நியாச விதிகளுக்குரியவற்றைக் கூறுகிறது.

ஆறாவது படலம் ஆசாரிய அபிஷேகம் தொடங்கிச் சிஷ்யாபிஷேகம் முதலியன கூறுகிறது.

ஏழாவது படலம் அந்திமக் கிரியைகளுக்கான விதிகளைக் கூறுகிறது.

எட்டாவது படலம் சமாதி முதலான பல்வேறு விதிகளைக் கூறுகிறது.

நூலில் ஆசிரியர் ஆகம உபாகமங்கள் 25, பிற வடமொழிச் சாத்திர நூல்கள் 15 மேற்கோளாகத் தந்துள்ளார்,

நூலின் பகுதிகள் முறையே 90, 150, 30, 60, 8, 7, 23, 10 ஆகிய பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

## பதிப்பு

இந்நூல் சூரியனார் கோயில் ஆதீனத்து அடியார்களுள் ஒருவரான முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகளால் கிரந்த லிபியில் 1929ல் அழகாக அச்சிடப்பட்டுள்ளது. நூலினிறுதியில் சைவாத்ம ஞான சிவாசாரியர் செய்த சைவ தத்துவார்த்த தீபிகையிலுள்ள சைவாகமாந்தரங்காசயம் என்ற சிறு பகுதி சேர்த்து அச்சிடப்பட்டுள்ளது.

## சிவஞானபோத லகுடீகை

இதை இவ்வாசிரியர் தம் குருவின் கட்டளைப்படி செய்தார். விரிவான பாஷ்யம் தனியே செய்துள்ளார் ஆதலினால் இது லகுடீகை (எளியவுரை) எனப்பட்டது. மூலம் நாகரத்தில் 1908இலும் தமிழ் மொழிபெயர்ப்போடு 1928இலும் (பிரம்மானந்த சுவாமி) அச்சிடப்பட்டன.

## சிவாக்கிர பாஷ்யம்

இது 12 ஆயிரம் கிரந்தங்களுடைய பெரு நூல். யோகிகள் வடமொழிச் சிவஞானபோத சூத்திரங்களுக்கு விரிந்த வியாக்கியானமாக இதைச் செய்திருந்தார். வடமொழிச் சிவஞான போதச் சூத்திரங்கள் பன்னிரண்டும், வடமொழியிலுள்ள ரௌரவாகமம் என்ற ஆகமத்தின் கண் உள்ளதாகச் சொல்லப்படும் பாசவிமோசனப் படலம் என்ற பகுதியில் காணப்படும் 12 சுலோகங்களின் மொழிபெயர்ப்பு என்று அக்காலத்தில் நம்பப்பட்டது. யோகிகளுக்கு முன்னிருந்த ஆசாரியருள் ஒருவரான சதாசிவ சிவசாரியர் (காலம் சுமார் 1450 - 1500) இதற்கு ஒரு விருத்தி எழுதியிருந்தார். சிவஞான போதம் தம் மரபுக்குரிய

நூலன்றாயினும், தம் ஆசாரியருள் ஒருவர் இதற்கு விருத்தியுரை எழுதிய காரணத்தால் யோகிகள் தாமும் இதற்கு விரிவுரை எழுதினார் என்று கருதலாம். இப்பெருநூல் சிதம்பரம் அம்பலவாண நாவலரால் 1920இல் அச்சிடப்பெற்றது. ஒன்று நினைவில் கொள்ளவேண்டும். கிடைத்துள்ள ரௌரவாகமப் பகுதி வித்தியாபாதக் கிரியா பாதங்களில் இச்சூத்திரங்கள் காணப் படவில்லை. இவற்றின் மொழியமைப்பு நியாய சாத்திர பாஷை யாயிருக்கிறதேயன்றி, ஆகம பாஷையா யில்லை; தமிழ் மூல நூலிலிருந்து இவை வடமொழியில் 14 - 15 நூற்றாண்டுகளில் மொழிபெயர்க்கப் பெற்றிருந்து, வடமொழியே மூலம் என்ற பிழையான கருத்து நிலை கொண்டது.* பிற்காலத்தில் (18 நூற்றாண்டிறுதி) சிவஞான சுவாமிகள் தமிழ்ச் சிவஞான போதத்துக்குச் சிற்றுரையும் பேருரையும் எழுத, யோகிகளுடைய இப் பேருரையே தூண்டுகோல். சிவாக்கிரபாடியத்தின் பெரும் பகுதியின் தழுவலாகவே சுவாமிகள் நம் தமிழ்ப் பாடியம் செய்தார் என்பது பலர் சொல்லும் வரலாறு.

### சித்தியார் உரை முதலியன

இவை சைவ சாத்திர உரைகள் என்ற அடுத்த அத்தியாயத்தில் ஆராயப்படும்.

### ஆதீனத்தின் பிற்கால நிலை

மேலே குறிப்பிட்ட சொக்கலிங்க தேசிகருக்குப் பின் ஆறு ஆசாரியர் தலைமைப் பீடத்திலிருந்தார்கள். அவர்கள் காலத்தில் சிறப்பாக எதுவும் நிகழவில்லை. இரண்டு செய்திகள் குறிப்பிடத்தக்கன. ஒன்று, தமிழ்நாட்டில் பல்வேறிடங்களிலுள்ள தேவஸ்தானங்களை நிர்வகித்து வந்த சைவர் சூரியனார் கோயில் ஆதீனத்தின் தலைவர்களுடைய பெருந் தகுதியைக் கண்டும் உணர்ந்தும் பல தேவாலயங்களை அவர்களே நிர்வகித்து வரும்படி தாங்களே முன்வந்து ஒப்படைத்தார்கள். அவ்வாறு ஒப்படைக்கப்பெற்ற திருவீழிமிழிலை, திருவிடை மருதூர், ஆவுடையார் கோயிலென்னும் திருப்பெருந்துறை என்ற சிறப்புமிக்க தேவஸ்தானங்களும், திருமங்கலக்குடி, சூரியனார் கோயில், வாணபுரம், திருநீலக்குடி முதலான பல் வேறு தேவஸ்தானங்களும் ஆகும். இவற்றை நிர்வகித்து வந்த காரணத்தால் சூரியனார் கோயில் ஆதீனத்திற்குப் பின்னும்

---

* இது பற்றி விளக்கத்தைச் சித்தாந்தம் இதழ்களில் விளங்க எழுதியிருக்கிறோம்.

சிறப்பும் வசதிகளும் பெருகின. மற்றொரு செய்தி, இந்தத் தேவஸ் தானங்களை (ஒன்பது) இந்த ஆதீனம் இழந்த செய்தி சைவ சமய வரலாற்றில் துயரம் தரும் செய்தியாகும். இந்த இழப்பு யார் காலத்தில், எப்படி, யாரிடத்து ஏற்பட்டது என்பதைத் தமிழுலகம் நன்கறியும். இந்த இழப்பின் பின், சென்ற நூற் றாண்டின் இறுதியில் (1888) ஸ்ரீ முத்துக்குமார தேசிக சுவாமிகள் என்ற ஆசாரியர் பட்டத்துக்கு வந்து 30 ஆண்டுக் காலம் பட்டத் திலிருந்தார். அக்காலத்தில் ஆதீனமென்றால் உண்மையிலேயே ஞானபீடம் என்ற உணர்வு தமிழ்நாடு முழுமையிலும் கிளர்ந்து நின்றது. இந்தச் சுவாமிகளை நேரில் புகலடைந்து உபதேசம் பெற்றோர் தங்கள் ஜன்மம் சாபல்யமடைந்ததாகக் கருதினர். இவர்களை அறியாத அல்லது இவர் அருள் நோக்கம் பெறாத கல்வியாளர் அல்லது சைவ சீலர் தமிழ் நாட்டில் அன்று இல்லை. இன்று தமிழுலகில் பரவியுள்ள சிவஞான போத மாபாடியம் இவர்களுடைய கொடையினால்தான் வெளிவந்து அச்சாயிற்று. தமிழுலகம் இதன் பொருட்டு இவர்களை என்றும் நன்றியோடு நினைவு கூர்வதற்குரியது.

இவர்களையடுத்துப் பட்டத்துக்கு வந்தவர் குவலயானந் தத்தைத் தமிழில் மொழிபெயர்த்த மீனாட்சி சுந்தரக் கவிராயர் மரபில் வந்த ஸ்ரீ மீனாட்சி சுந்தர பரமாசாரிய சுவாமிகள். 29 ஆண்டுகள் பட்டத்திலிருந்த இவர்கள் பிறருடைய சூழ்ச்சிக்கு இரையாகிப் பட்டத்தைத் துறந்து மடத்தை விட்டு வெளியேற நேர்ந்தது. ஆனால் பின் தமிழ்நாடு முழுமையுஞ் சுற்றி எண்ணற்ற சைவ மக்களுக்குச் சிவதீட்சை செய்து, சிவபூஜையும் எழுந்தரு ளப் பண்ணி வைத்து எல்லோர் மனத்திலும் குடிகொண்டு விளங்கி 1973இல் பரிபூரணம் அடைந்தார்கள். இவர்களுக் குப்பின் சூரியனார் கோயில் மடம் உள்ள நிலைமையை சொல் லாமலிருப்பதே நல்லது.

## கமலை ஞானப்பிரகாசர் *

இவர் மாயூரத்திற்கு அருகில் அமைந்துள்ள தருமபுரம் மடத்தை நிறுவிய மூல ஆசாரியரான குருஞான சம்பந்தருக்குக் குருவாய் இருந்தவர். இவருடைய காலமும் வரலாறுகளும் இவருடைய மாணாக்கர் வரலாறுகள் சிலவும் ஓரளவு திட்ட மாய்த் தெரிகின்றன.

---

* இவர் வரலாற்றின் சில செய்திகளை எமது தமிழ் இலக்கிய வரலாறு 9ஆம் நூற்றாண்டு முதல் பாகத்தில் காணலாம்.

## ஆசிரியர்

இவர் திருவாரூர் ஞானப்பிரகாசர், கமலை ஞானப்பிரகாசர், தேசிகர், பட்டாரகர் என்றும் வழங்கப் பெறுகிறார். இவருடைய தந்தை செட்டித் தெருவில் வாழ்ந்தமையால் செட்டித்தெரு* ஞானப்பிரகாசர் என்று பெயர் பெற்றிருந்தார். அவர் திருக்கயிலாய பரம்பரையில் சீகாழி - சிற்றம்பல நாடிகளின் மாணாக்கர் பரம்பரையில் சில தலைமுறைகள் கடந்த பின் வந்த ஒரு மாணாக்கர். அவரைச் செட்டித் தெரு பழுதை கட்டி ஞானப் பிரகாச பண்டாரம் என்று முத்தி நிச்சய உரையில் வெள்ளியம் பலவாணத் தம்பிராய் கூறுகிறார். பழுதை கட்டி❖ என்பது சிற்றம்பலநாடிகள் தொடங்கி வந்த ஒரு பட்டமென்று தெரிகிறது. இந்தப் பரம்பரையில் ஆசாரியர் பலர் இப்பட்டத்தைத் தரித்துக் கொண்டிருந்தார்கள். அக்காலத்தில் சைவ ஆசாரியர் எல்லோரும் பண்டாரம்✞ என்றே பெயர் பெற்றிருந்தார்கள். (நம் காலத்தில் தான் இச்சொல் சிறிது மதிப்பில் குறைந்து தேசிகர் முதலான சொற்கள் வழக்கத்திற்கு வந்திருக்கின்றன.) இந்த ஞானப் பிரகாசரும் இவருடைய முன்னோரும் வெள்ளை உடை அணிந்தவர்கள், இல்லறத்தார். இவருடைய குரு சிவபுரம் - தத்துவப் பிரகாச பண்டாரம் என்பவர். இந்தச் செட்டித் தெரு - ஞானப் பிரகாசர் சைவ மக்களுக்கு அக்காலத்தில் ஓர் ஆசாரியர் ஆகிய நிலையில் இருந்தவர் போலும். புதல்வர் இல்லாத கவலை யுற்றிருந்தார். சிலநாள் செல்ல, தியாகேசன் அருளால் இவருக்கு ஒரு பிள்ளை பிறந்தான். அப்பிள்ளைக்குச் சிதம்பர நாதன் என்ற பரம்பரைப் பெயரையே இட்டனர் பெற்றோர். உரியகாலத்தில் இப்பிள்ளை கல்வி கற்றுத் தேர்ச்சியடைந்து மணமாகித் தந்தை யின் தொழிலாகிய சைவாசாரியத் தொழிலை நடத்தி வந்தார். பண்டை நல்லூழின் பயனாய் ஆன்ம நெறியிலே மேம்பட்டு இறைவன் திருவருள் பெறவேண்டும் என்ற முனைப்பு இவரிடம் அதிகமிருந்தது.

சிற்றறிவைத் தெளிவாக்கும் குருவைக் காணோம்
சிவஞான சாத்திரத்தில் திறமை இல்லோம்
பற்றறவும் யோகவழி நிலைமை காணோம்
பரஞானம் பெறுவதற்கும் பாதை செல்லோம்.

---

* இச்செட்டித் தெருவின் பெயரைச் சோமசுந்தர முதலியார் தெரு என்று மாற்றிவிட்டார்கள். ஒரு வரலாற்றுச் சான்று போயிற்று.

❖ பழுதைகட்டி என்ற தொடரின் விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு நூலில் விளங்கக் காணலாம்.

✞ பண்டாரம் என்ற சொல்லின் விளக்கத்தை அதே நூலில் காண்க.

என்று இவர் வருந்தி நின்ற காலம். திருக்கயிலாய பரம்பரையில் வந்த போதிலும் கூட, திருவருள் கூட்டுவிக்கின்ற மெய்ஞ்ஞானம் கைவரப் பெறவில்லை. பல சமயம் இவர் தியாகேசன் திருவடியில் பணிந்து மனமுருகி வேண்டினார். ஒருநாள் இரவு இவருடைய கனவில் தியாகராசப் பெருமான் தோன்றி, 'நீ நமது சித்தீசுவரம் வந்து வழிபடு. நீ வேண்டியன யாவும் கிடைக்கும்' என்று சொல் லியதாக உணர்ந்தார். இதை ஞானப்பிரகாசர் சரித்திரம் கூறு கின்ற ஞானப்பிரகாச மான்மியம்* கூறுகின்றது என்று சோம சுந்தர தேசிகர் பின்வரும் மூன்று பாடல்களைத் தந்திருக்கிறார்:

அப்பொழுது தேசிகனும் துயிலுங் காலை,
அனந்தசென் மப்பயனும் அன்று சார,
ஒப்பில்பரி பக்குவமும் ஒன்று சேர,
ஒருவனாய் நின்ற சிவ பெருமா னேகி
எப்புவியும் அதிசயிக்கத் தேசி கன்பால்
எய்திச்சொற் பனமதனிற் றென்பால் தன்னில்
செப்புமொரு நாமுறையுங் கோயில்நண் ணித்
திகழ்சித்தீச் சுரமடைவாய் என்று சொன்னார்.

தேசிகனும் சாக்கிரத்தை நண்ணி யோர்ந்து
சிவபெருமா னன்றிவே றிலையென் றெண்ணி
மாசுடை யேன்என்றிருகை தலைமேற் கொண்டு
வாயாரத் தோத்திரித்து மகிழ்ந்து போற்றிப்
பூசமுறு மகரகுரு வாரந் தன்னிற்
புகல்நித்ய கன்மவிதி பொருந்தி மேன்மேல்
ஆசையெனும் சாகரத்தில் தீர்த்த மாடி
ஆலயத் துட் சென்று சித்தீச் சுரம டைந்தார்.

அடைந்துவலம் வந்து சந் நிதியிற் சென்றே
அடி பணிந்து கை கூப்பி அன்பி னோடு
மடந்தவிர்த்துக் கிருபை கூர்ந் தடியேன் தன்னை
வாழ்விப்ப துணையன்றி மற்றோர் காணேன்;
விடவரவைத் தரித்திடுமோர் பொருளே யென்று
மெய்ஞ்ஞானம் தமியேற்று விளங்கு மாறு
இடமறியா வறியன் மிக வெளியேன் யானும்
இன்புறவுங் கருணைசெய் வாயென்று போற்றி.

---

* இந்த நூல் தருமை சிதம்பரநாத முனிவர் செய்த தென்பதும் இது அச்சிடப்படவில்லை என்பதும் தேசிகருடைய குறிப்பு.

அப்போது பெருமான் அசரீரியாக நின்று 'இன்று முதல் நீ ஞானப்பிரகாசன் எனப் பெயர் பெறுவாய்' என்று கூறினார். திருவருள் கூடுதலும், பதி ஞானம் கைவரப் பெற்றார். சம்பிரதாய ஆசாரியாராயிருந்தவர் உண்மை ஞானாசிரியரானார். அது முதல் இவருக்கு ஞானப்பிரகாசர் என்ற பெயர் வழங்கலாயிற்று. அப்போது வயது முப்பது. அக்காலத்தில் இவர் மனமாகி இல்லறத்தில் வாழ்ந்த சைவ ஆசாரியராய் இருந்துவந்தார். இவருடைய தந்தை செட்டித்தெரு ஞானப்பிரகாசத் திருக்கயி லாய பரம்பரையில் மெய்கண்டார் வழிவந்த சிவபுரம் தத்துவப் பிரகாசரிடம் உபதேசம் பெற்றமையால் தந்தையிடம் உபதேச மும் ஆசாரிய அபிடேகமும் பெற்ற இவர் முறையாகத் திருக் கயிலாய பரம்பரைத் தொடர்பு கொண்டவர்.

அக்காலம் சைவருக்கு ஆசாரியத் தன்மை இல்லை, சைவ இல்லறத்தாருக்கும் ஆசாரியத்தன்மை அறவே இல்லை, சைவர் சூத்திரரே என்ற வாதங்கள் மிகவும் வலிமையாய் இருந்த காலம். இதன் பயனாய்ப் பல இடங்களிலும் சைவ சமய எழுச்சியும், நிலையங்களும் தோன்றிய காலம். இவரிடத்தில் சீடர் பலர் அமர்ந்திருந்தனர். தியாகேசர் கோயில் கட்டளைக் காரியங்களை இவர் நிர்வாகம் செய்து வந்தார். விசய நகரத்தை ஆண்ட அரச ரால் இவருக்குப் பல மானியங்கள் அளிக்கப்பெற்று அதிகாரமும் தரப்பெற்றிருந்தது. இவர் இறைவன் திருவருள் கொண்டு பல அற்புதங்கள் செய்தார் என்று கதைகள் வழங்கும். அவற்றை இங்கு சுருக்கிக் கூறுகிறோம். அக்காலம் அற்புத நிகழ்ச்சிக ளுக்கும் மதிப்பு மிகுதியாக இருந்தது. எனவே, சிறந்த ஆசாரிய ராயும் வாழ்ந்த இவருடைய வரலாற்றில் அற்புத நிகழ்ச்சிகள் பெருகி இருப்பதில் வியப்பில்லை.

ஒரு சமயம் இவர் கோயிலுக்குச் சென்றபோது அங்குத் தியாகேசர் திரு நடனம் நடந்தது. அப்போது திடீரென்று தியாகப் பெருமான் எழுந்தருளி வந்த தண்டு முரிந்தது. அது இற்று விழாவுக்கு ஊறு ஏற்படுவதற்கு முன்னே; இவர் பின்வரும் பாடல் பாடினார்; தண்டு உடனே கூடிற்று; விழா வழக்கம் போல் நிறைவேறிற்று:

அண்ட முழு தும்மாழ்ந்து போகாமல் என்றும் போற்
பண்டை நிலை நிறுத்தம் பாதனே – துண்டு பட்ட
அசபா நிருத்தம் அசையும் படி தண்
டிசையும் வகையருள் வாய் இன்று.

திருமறைக் காட்டில் வாழ்ந்த ஓர் அந்தணன் தம்மை வந்து வழிபடவும், அவனுடைய தொழுநோய் நீங்குமாறு இவர் பின்வரும் பாடல் பாடினார்:

> வேத வன மறையோன் மெய்யுறு குட்டமதின்
> வாதனையை நீக்கி மகிழுறவே – ஏதமிலாச்
> செய் சடையானே, பெருமானே, ஏவர்க்கும்
> ஐயமிலா திப் போ தருள்.

வல்லம் என்ற ஊரில் இருந்த அழகன் என்ற வணிகன் ஞானோபதேசம் வேண்டி இவரிடம் வந்தபோது, இவர் அவனுக்கு ஐயம் எல்லாம் நீங்கும்படி உபதேசித்து, அத்துவித சாரம் என்ற ஒரு நூலையும் செய்து அளித்தார்.

இந்த நிலையில் பின்னால் குருஞான சம்பந்தர் என்று புகழ் பெற்றுத் தருமபுரத்தில் மடம் அமைத்து ஆதீனம் நிறுவிய வராகிய குருஞான சம்பந்தர் இளம் பிள்ளையாக இவரிடம் வந்தடைந்தார். இந்த வரலாற்றை ஞானப்பிரகாச மான்மியமும் குருஞான சம்பந்தர் சரித்திர சங்கிரகமும் வெவ்வேறாகச் சொல்லும். சீவில்லிபுத்தூர் கார்காத்த குலம் குருபாலுடைய புதல்வர் தனபதி, தந்தை இறந்தபின் ஞானோபதேசம் நாடி, மதுரையடைந்து, கனவில் இறைவன் உணர்த்த இங்கு வந்தார் என்று மான்மியம் கூறும். அதே கார்காத்த குலத்தில் பிறந்த பிள்ளை மதுரையடைந்து பொற்றாமரை வாவியில் சொக்க லிங்கம் கைவரப் பெற்று இங்கு வந்தடைந்தார் என்று சரித்திர சங்கிரகம் கூறும். அவர் வருவதைத் தியாகேசப் பெருமான் முதல் நாள் இறுதியில் இவருடைய கனவில் இவருக்கு உணர்த்தி உப தேசம் செய்யுமாறு பணித்தான். அப்படியே இவர் மறுநாள் தம் கடன்களை முடித்துப் புதிதாக வருபவரை எதிர்பார்த் திருந்தபோது, அவர் வந்து வணங்கினார்.

அவருடைய பக்குவத்தை இவர் கண்ட போதிலும், சோதிக்க எண்ணி, அங்கே நிற்கப் பணித்து ஆலயம் சென்று வழிபட்டு மீண்டார். இடையில் பெய்த மழையில், வந்தவர் சிறிதும் அசையாது, அப்படியே நின்றார். அவர் மீது ஒரு மழைத்துளியும் படவில்லை. பார்த்த ஞானப்பிரகாசர் மிகவும் வியந்து, ஞான சம்பந்தர் என்று தீட்சா நாமம் சூட்டி, உபதேசம் செய்து சொக்கலிங்க பூசையும் எழுந்தருளுவித்தார். பின்னர் அவரை மாயூரத்தருகுள்ள தருமபுரத்தில் தங்கிச் சைவ சமய பரிபாலனம்

செய்து கொண்டிருக்கும்படி அனுப்பினார். ஞானசம்பந்தர் அப்படியே வந்து தங்கித் துறவு பூண்டிருந்தார்.

ஞானப்பிரகாசர் பின்னர் தலயாத்திரை தொடங்கி, மதுரையடைந்து ஆலய வழிபாடு செய்து, அங்கிருந்த கண்ணிழந்தவரான ஐயபட்டருக்குக் கண் தெரியும்படி செய்தார். அங்கிருந்து கானப்பேர் அடைந்து அங்கு இடையூறு புரிந்த சமணரை அடக்க வேண்டி, உடனே மழை பொழிவித்தார். (அக்காலத்தில் சமணர் நாட்டில் எந்த இடத்திலும் வலிமை பெற்றவராயில்லை. சமணரால் இடையூறு விளையவில்லை. ஆகவே இக்கதை கொள்ளத்தக்கதன்று.) அந்நாட்டுத் தலைவன் மகப்பேறு வேண்டியபோது, கமலையில் தீர்த்தமாடினால் மகப்பேறு உண்டாகும் என்று கூறியனுப்பி, பல இடங்களும் தரிசித்து திருவானைக்காவடைந்து தலபுராணங்கள் பாடி, காளத்தி ஏத்தி காஞ்சி கடந்து காசியடைந்து வழிபட்டார். அங்கு பாம்பு தீண்டிய ஒரு சிறுவனை எழுப்பினார். மக்கள் வேண்டுகோளுக் கிணங்கி மழை பெய்வித்தார். பின் மீண்டும் காஞ்சி வழிபட்டு, திருவாரூர் அடைந்து,

அரியசதா சிவமொரு ஆண்டையாக
அருளுமீ சுரன் தன்னைப் பள்ளராக
இருசக்தி யிணையுமே பள்ளீராக
இசைந்த நந்தி கணக்க னாகப்பின்னும்
மருள்சக்தி யினைத் தோழி யாகச் செய்து
மாலவனை உழவுதொழிற் கேயிசைத்து

பள்ளொன்று பாடினார் என்று மான்மியம் கூறுகிறது. இப் பள்ளு முன்னர் கோயிலிலே ஆவணிப் பவித்திரோற்சவ விழாவிலே உருத்திர கணிகையரால் நாடகமாக நடிக்கப்பெற்று வந்தது என்பர்.

இவர் காலத்தில் உலகநாத பண்டிதர் என்ற ஒரு பெரியார் வாழ்ந்திருந்தார். அவர் தூண்டவேதான் இவர் மழபாடிப் புராணம், தந்திவனப் புராணம் என்னும் திருவானைக்காப் புராணம் முதலியனவும் சிவ பூசையகவலும் பாடினார் என்று பாடல்களால் அறிகிறோம். மேலும் அவர் தூண்ட இவர், சாதி நூல் என்ற பெயரில் தாழ்வான சங்கம சாதிகளை விளக்கியுரைக்கும் ஒரு நூல் செய்தாரென்றும் தெரிகிறது. அவ்வுலகநாதர் ஒரு கவிராயராயும் விளங்கி இன்று உலகநீதி என்று வழங்குகிற சீறுநீதி நூலும் செய்தார் என்பது ஐயரவர்கள் கருத்து.

இவ்வாறு பலநாள் நீண்ட ஆயுளோடு வாழ்ந்திருந்தார். எண்ணற்ற மாணாக்கருக்குச் சிவஞான உபதேசம் செய்து, உரிய காலத்தில் முத்தியடைந்தார். இவர் மறைந்த நாள் ஐப்பசி தேய் பிறைச் சஷ்டி. இவர் சமாதியுள்ள இடம் திருவாரூரில் சிதம்பர நாதன் கொல்லை என்றும் அங்கு சமாதி மண்டபம் உள்ள தென்றும் சொல்வர்.

ஞானப்பிரகாசருடைய இயற்பெயர் யாதாகும் என்பது பற்றி இங்கு ஒரு கருத்தைச் சொல்லலாம். இவரது குடும்பப் பரம்பரைப் பெயர் சிதம்பரநாதன் என்று தெரிகிறது. இவர் தந் தைக்கும் இவருக்குமே இப்பெயர் வழங்குவதைக் காண்கிறோம். ஞானப்பிரகாசன் என்பது ஆரூர்ப்பெருமான் தந்தது: தீட்சா நாமம். மற்றொரு பெயர் இவர் நூல்களிலும் இவரைப் போற்றும் நூல்களிலும் அதிகமாய் வழங்குகிறது. இவரது சீடராய் தருமபுர ஆதீனம் நிறுவிய குருஞான சம்பந்தர் தம் நூல்கள் பலவற்றில் இவரைச் செங்கமலப் பொற்பாதன் என்றே குறிப்பிடுகிறார். பல பாடல்களில் ஞானப்பிரகாசன் என்று கூறுபவர், 4 இடங்களில் செங்கமலப் பொற்பாதன் என்றும் 3 இடங்களில் 'செங்கமலப் பொற்பாதன் ஞானப்பிரகாசன்' (சிவபோகசாரம் 5, 29, 32) என்கிறார். ஞானப்பிரகாச மாலையில் 'சிதம்பரநாதன் கமல பொற்பாதன்' (24) என்கிறார். இங்கெல்லாம் மாணாக்கர் தம் ஞானகுருவை செங்கமலப் பொற்பாதன் என்று சொல்வது மாணாக்கன் ஆசிரியனுக்குச் சொல்ல எண்ணும் உபசார மொழி என்று கருதத்தோன்றும். இவையல்லாமல், ஞானப்பிரகாசர் பாடிய இரு புராணங்களிலும், பாயிரப்பாடலாக, ஆசிரியர் பெயர் கூறுமிடத்து இதே தொடர் காணப்படுகிறது.

மாசிலா வயிரத் தூணர் மழுவையம் புராணந் தன்னை
ஆசில்செந் தமிழினாலே அணிபெற வகுத்தமைத்தான் –
பேசரும் புகழ்சேர் ஞானப் பிரகாசன், கமலை வாழும்
தேசிகன், அறிஞர் போற்றும் செங்கமலப் பொற்பாதன்.

கற்பார் மகிழத் தந்திவனக்
கடவுள் புராணக் கதைப் பொழிப்பின்
சொற்பான் மைபெறும் அவ் வடநூலைத்
துலங்கு தமிழால் தொடுத்து வைத்தான்:
நற்பார் புகழும் தென்கமலை
ஞானப் பிரகாசனாம் அந்தப்
பொற்பார் ஞான தேசிகனாம்
புகழ் செங்கமலப் பொற்பாதன்.

இவை முறையே திருமழைபாடித் தலப்புராணத்தும் தந்திவனப் புராணத்தும் காணப்படும் பாயிரப் பாடல்கள். இவற்றை ஊன்றி நோக்கும்போது, செங்கமலப் பொற்பாதன் என்ற தொடர் இவருக்கு உண்மையாக வழங்கிய பெயரேயன்றி பெருமை குறிக்கும்பொருட்டு மாணாக்கர் கூறிய பெயர் அல்ல என்பது நன்கு விளங்குகிறது. எனவே இத்தொடர் அல்லது இப்பெயர் இவருடைய இயற்பெயர் என்று கருதலாம். பிள்ளைப்பிராயத்தில் இவருக்கு இப்பெயர் இருந்து பின்னர் ஞானப்பிரகாசன் என்ற தீக்ஷா நாமம் வந்தது. 'இங்கு நம்மில்லங்கள் தோறும் எழுந் தருளிச் செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை' என்ற திருவாசகத் தொடர் நமக்கு நினைவு வருகிறது. திருமுறைகளில் தோய்ந்திருந்த ஆன்றோர் தம்மக்களுக்குத் திருமுறைத் தொடர் களைப் பெயராக வைத்திருத்தலை விரிவாகச் சாசனங்களில் பார்க்கிறோம். 16ஆம் நூற்றாண்டிலும் இவ்வாறு திருவாசகத் தொடர் நம் ஞானப்பிரகாசருக்குப் பிள்ளைத் திருநாமமாக இடப்பட்டதென்று இப்போது நாம் அறிகிறோம்.

### ஞானப்பிரகாசரின் மாணாக்கர்

இவருக்கு மாணாக்கர் பலர் இருந்திருக்கிறார்கள். அவர் களும் நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் வாழ்ந்தவர்கள். குரு ஞான சம்பந்தர் இவரால் மாயூரத்தையடுத்த தருமபுரம் சென்று அங்கு சைவ சமய பரிபாலனம் செய்து வருமாறு அனுப்பப் பெற்றவர். இச்சம்பந்தர் நிறுவியதே இன்றுள்ள தருமபுர ஆதீ னம், மடம். மற்றொரு சிறப்பான மாணாக்கர் நிரம்ப அழகிய தேசிகர். திருப்பரங்குன்றத்தில் வாழ்ந்த இவர் ஞானப்பிரகாசரின் மாணாக்கராயிருந்து, அவர் காலத்துக்குப் பின் துழாவூரில் சென்று மடம் அமைத்துக் கொண்டு வாழ்ந்தார். அழகியாரின் மாணாக்கரான அளகைச் சம்பந்தர், ஞானக்கூத்தர், சிதம்பரநாத பூபதி ஆகிய மூவரும் சிறப்பான புராணம் செய்தவர்கள். மற்றொரு மாணாக்கர் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் புராணமும் சாத்திர உரைகளும் செய்தார்; இவருடைய மாணாக்கர் திருவொற்றியூர் தத்துவப் பிரகாசர், சாத்திர உரை செய்தார். ஆன்மலிங்க மாலை என்ற சிறுநூல் பாடியவரும் இவருடைய மாணாக்கரே. இவ்வனைவருடைய வரலாறுகளும் இந்த 16ஆம் நூற்றாண்டு வரலாற்று இரு பாகங்களிலும் வேறிடங் களில் விரிவாய்ச் சொல்லப்பட்டுள்ளன. இவர் மாணாக்கரா யிருந்த கருவூர்ப் புராண ஆசிரியரும் பாவநாசப் புராண ஆசிரி யரும் அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்ப் புராணங்

களைப் பாடினார்கள். இவர்களையன்றி வேறு பல மாணாக்கரும் இருந்திருக்கக்கூடும். நூல் செய்தோர் பெயர்களே நமக்குத் தெரிகின்றன. ஏனையோர் பெயர்கள் தெரியவில்லை. இவருடைய மாணாக்கர் குறித்த அட்டவணை இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

இவருடைய மாணாக்கர் இவரைத் தங்கள் நூல்களில் பலவாறு துதித்திருக்கிறார்கள். அவையன்றி, இவர் துதியாகத் தனிப்பாடல்களும் உள்ளன. குருஞான சம்பந்தர் இவர்மீது பண்டாரக் கலித்துறை என்ற ஒரு தனி நூல் பாடித் துதித்திருக்கிறார். நெஞ்சுவிடு தூது என்ற நூல் பின்னால் இவர்மீது மாசிலாமணிச் சம்பந்தரால் பாடப்பெற்றுள்ளது. இவையன்றி, சத்திய ஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ் என்று பிரபந்தம் இவரைப் புகழ்வது என்று தேசிகர் எழுதியுள்ளார். உண்மை அதுவன்று சத்தியஞான பண்டாரம் என ஓர் ஆசிரியர் வாழ்ந்தார். அவர் காலம் 1425 - 1450. அவர் நூல் எதுவும் செய்யவில்லை. அவர் மாணாக்கர் இருவர் ஞானப்பிரகாசர் என்ற பெயருடையோர் என்று பிள்ளைத் தமிழ் கூறுகிறது. அவருடைய மாணாக்கர் அவரைத் தங்கள் நூல்களில்,

> கண்ணிற் சிறக்கும் ஆகமமுணர்ந் தினயதச
>     காரியம் தமிழினிற் செய்
> களந்தை வரு ஞானப்ர காசன் உல கத்தவர்கள்
>     கருதரு சிவப்ரகாசம்
> பண்ணிற் சிறக்கு முரை எழுதும் அன்பூர் அவனி
>     பரவுஞா னப்ரகாசன்
> பகரரிய இருவரும் தலைவணங்கக் கருணை
>     பாலிக்கும் ஒரு குரவனே.

என்று புகழ்வது காணலாம்.

இருவரும் சாத்திர நூல் செய்தார்கள். ஒருவர் களந்தை ஞானப்பிரகாசர். அவர் மாணாக்கரே கண்கட்டி மறைஞான சம்பந்தர். அந்த மரபு வேறு, கமலை ஞானப்பிரகாசர் மரபு வேறு.* சிற்றம்பலநாடி மாணாக்கரான சம்பந்த முனிவர் மாணாக்கர் பலருள், காவை அம்பலநாதத் தம்பிரான் வழிவந்தோர் சத்திய

---

* இதன் விளக்கத்தை எமது தமிழிலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு காவை அம்பல நாதர் தம்பிரான் பரம்பரை, கமலை ஞானப்பிரகாசர் பரம்பரை என்ற அட்டவணைகளிலும் 15 நூற்றாண்டு, சத்திய ஞான பண்டாரம் என்ற கட்டுரையிலும் காணலாம்.

ஞான பண்டாரம் முதலாயினோர். மற்றொரு மாணாக்கரான சிவபுரம் ஞானப்பிரகாசர் வழி வந்தவர் கமலை ஞானப்பிரகாசர். இருவருடைய காலமும் முறையே 1425 - 50, 1525 - 75 ஆகும். இருவருக்குமிடையில் நூறு ஆண்டுகளுக்கு மேல் கால இடையீடு உண்டு. இருவரும் ஒருவர் அல்லர்.

**காலம்**

கமலை ஞானப்பிரகாசர் காலம் நமக்குத் தெரிந்தது. இதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன. விசயநகர அரசரான சதா சிவ மகாராயர் காலத்தில் அவருடைய பிரதிநிதியாகத் தஞ் சையில் ஆட்சிபுரிந்த கிருஷ்ண தேவராயர் பேரரான கிருஷ்ண மகாராயரின் கட்டளையின் மேல் சகம் 1482இல் எழுந்த ஒரு கல்வெட்டு', 'விருபாட்ச நாயக்கர் சிக்கல் வடகுடி முதலான தேவஸ்தானங்களுக்குத் திருவாரூர் ஞானப் பிரகாச பண்டா ரத்தின் பிரதேச உத்தரவு கணக்கெழுத்தும் அடைத்துக் கொள் ளும் படி... கட்டளை இட்டபடியினாலே'... இந்தக் கல்வெட்டு எழுந்தது சகம் 1483க்கு நேரான கி.பி.1561.

இவர் இயற்றிய திருமழுவாடிப் புராணத்தில் புராணம் செய்த காலம் சகாப்தம் ஆயிரத்து நானூற்று எண்பத்தேழு ஆண்டு ஒழிந்தபின் குரோதன ஆண்டு என்று அந் நூலின் சிறப்புப் பாயிரம் சொல்லுகின்றது.* அதாவது சகம் 1488 - கி.பி. 1566. ஞானப் பிரகாசருடைய மாணாக்கர் நிரம்ப அழகிய தேசிகர். அவருடைய மாணாக்கர் அளகைச் சம்பந்த முனிவர் திருவாரூர்ப் புராணம் செய்தது 1592 என்று வேறிடத்தில் காட்டியிருக் கிறோம்.❖ இவற்றால் கமலை ஞானப்பிரகாசர் இந்த ஆண்டுக்கு நாற்பது அல்லது ஐம்பது ஆண்டுகட்கு முன்னே வாழ்ந்திருந் தார் என்று கருதலாம். அதாவது சுமார் கி.பி. 1550.

இம்மூன்று ஆதாரங்களைக் கொண்டும் நாம் பார்க்கும் போது, கமலை ஞானப்பிரகாசர் சிறப்புற்றிருந்த காலம் சுமார் கி.பி. 1550 - 75 என்று கொள்ளலாம்.

**நூல்கள்**

கமலை ஞானப்பிரகாசர் சிறப்பான சிறு சாத்திர நூல்கள் பல செய்திருக்கிறார். இவை சரியை, கிரியை, யோகம், ஞானம்

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 16ஆம் நூற்றாண்டு முதல் பாகம் பக்கம் 84.

❖ மேற்படி நூல். பக்கம் 111, 117

ஆகிய நான்கு பாதங்கட்கும் உரியனவாகும். சரியா பாதத்துக் குரியன அனுட்டான அகவல் புட்பவிதி பூமாலை என்பன. கிரியா பாதத்துக்குரியது சிவபூசை அகவல் என்பது, யோக பாதத் துக்குரியது பிராசாத மாலை என்பது. ஞான பாதத்துக்குரியது அத்துவிதசாரம், சிவானந்த போதம், அத்துவாக் கட்டளை என்பன. தனி இலக்கியங்களாக இவர் செய்தன அண்ணாமலைக் கோவை, ஆயிரப்பாடல், தியாகராாசர் கழி நெடில், சாதி நூல் என்பன. இவர் செய்த புராணகள் திருமழுவாடிப் புராணம், திரு ஆனைக்காப் புராணம் என்பன. பின்னும் வடமொழியில் இவர் தியாகராச லீலை என்று ஒரு நூல் செய்ததாகவும் சொல்வர். நூல்களைக் குறித்து விரிவாகக் கீழே குறிப்பிடுகிறோம். சில நூல்கள் கிடைக்கவில்லை. புராணங்கள் இரண்டையும் இவ் விலக்கிய வரலாறு முதல் பாகத்தில் ஆராய்ந்திருக்கிறோம்.

### சைவானுட்டான அகவல்

அந்தணர் காலை மாலை செய்கின்ற சந்தியா வந்தனத்தை ஒப்ப, சைவராயுள்ளோர் சிவாகமத்தில் விரித்தபடி செய்யும் நித்திய நியமச் சடங்குக்கு அனுட்டானம் என்பது பெயர். இந்த அனுட்டானத்தில் செய்ய வேண்டிய கிரியைகள் ஒவ்வொன்றும் முறையாக மந்திரத்தோடு செய்வதற்கு உதவியாக இவர் இந்த அகவல் செய்தார். அனுட்டானம் செய்பவர் அனேகர் இதை மனப்பாடம் செய்து இதன் உதவி கொண்டு ஒரு சிறு பகுதியும் விடாமல் முறையாகச் செய்வதைப் பார்க்கிறோம். இவரே சைவர்களுக்கு ஆசாரியராய் இருந்து தீட்சை பூசை முதலியன புரிவித்தமையால், இந்த அகவலை இவர் நன்கு அமைக்க முடிந்தது. இது 118 அடி கொண்ட ஆசிரியப்பா. இதன் இறுதியில் ஆசிரியர் பெயர் சொல்லப்பட்டுள்ளது.

சூலபா ணியனைத் தொழுதடி வணங்கி
நற்புகழ் கமலை ஞானப் பிரகாசன்
அற்புத மாகிய ஆகமப் படியே
நயவன் புடனே நவிலும் விதிப்படி
நியமம் புரிவோர் நீடு வாழ்பவரே.

### புட்ப விதி

காப்பு வெண்பா வொன்றும் 54 விருத்தங்களும் கொண்டது. நூலின் இறுதிப் பாடல் ஆசிரியர் பெயரும் நூல் வழியும் பயனும் கூறுகிறது:

ஆர்புனை சடையோன் சைவ ஆகமங் களையா ராய்ந்து
பேர்புனை கமலை ஞானப் பிரகாசன் தமிழாற் சொன்ன
வேர்புனை தளஞ்சேர் புட்ப விதிமாலைப் படியே பாரிற்
சீர்புனை பூசை செய்வோர் திருவருள் பெறுவர் தாமே.

இதன் முதல் பாடல் சிவத்துதி. கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, துளசி, வில்வம், நிர்மால்யம், மலர்களில் உயர்ந்தவை இழிந்தவை, வார புட்பம், பத்திரம், அட்ட புட்பங்கள், மாத புட்பம், விநாயகருக்குரியன, இன்ன தேவருக்கு இன்ன புஷ்பம் ஆகும் ஆகாது என்பது, காலமலர், பூசை செய்த உயிர்கள், மலரால் வரும் பாவ நீக்கம், மலர் இன்ன போகம் தரும் என்பது, செவ்வந்தி, தாழம்பூ, நந்தவனம், வியாக்கிரபாதர், மாவிளக் கிடுதல் ஆகிய பொருள்களை இது சொல்லுகிறது.

இது பலரால் பலமுறை பதிப்பிக்கப் பெற்றுள்ளது. பல பதிப்புக்களில் இதன் பின்னே 149 விருத்தப் பாடல் கொண்ட புட்ப பலன் என்ற நூல் சேர்த்தே அச்சிடப்பட்டு வருகின்றது. இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லையென்றே பதிப்புக்களில் சொல்லப்பட்டுள்ளது. ஒரு கால் கமலை ஞானப் பிரகாசராகவே யிருக்கலாம். இதனுள் நந்தவன மகிமை, கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, வில்வம், துளசி பிற பத்திரங்கள் இவற்றால் அருச்சிப்பதன் பலனும், இளநீர் பழங்கள் கருப்பஞ்சாறு முதலிய வற்றை அபிடேகம் செய்வதால் வரும் பலனும், புல்வகை வேர் வகை முதலியவற்றின் பலனும், பூக்களின் நிறத்துக்குரிய பலனும், தொடையல்களின் பலனும் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

## பூமாலை

இப்பெயரில் இண்டை கொண்டை மாலை முதலாய மாலை வகைகளையும் அவை சாத்த வேண்டிய முறைகளையும் விளக்கும் நூலொன்று இவர் செய்தாரென்று தேசிகர் எழுதி யிருக்கிறார்; விளக்கமில்லை.

## சிவபூசை அகவல்

இது முந்தைய அகவல் போலவே மிகவும் விரிவாக உரைத்த 444 அடி கொண்ட ஆசிரியப் பாவால் அமைந்தது. திருவாரூரில் இருந்த உலகநாதன் என்பவர் கேட்டுக் கொண்டபடி இவர் சிவாகமங்களை ஆராய்ந்து இந்நூலைச் செய்தளித்தார். நூலின் இறுதி அடிகளைக் காண்க:

நற்றவன் உலக நாயகன் விளம்பச்
சிற்குண னுரைத்த சிவாகமம் நோக்கி
நற்கம லையில்வாழ் ஞானப் பிரகாசன்
சொல்லிய பூசைத் தொகையினைப் பழுதற
வல்லவர் வீடுற வல்லவர் தாமே.

இது கிரியா பாதத்துக்குரியது. சிவபூசை என்ற கிரியை மிகவும் விரிவானது, நீண்டது, அதில் பல அங்கங்கள் அமைந்துள்ளன. அவற்றையெல்லாம் விடாமலும் முறை பிறழாமலும் செய்வது நெடுநாள் அனுபவத்தின் பின்தான் வரும் அவ்வனுபவம் விளைவதற்கு இச்சிறு நூலும் ஒரு துணை. இதன் தொடக்கத்தில் விநாயகர் காப்பு வெண்பா ஒன்று உண்டு. சூரிய பூசை, சிவ பூசை, சண்டேசுவர பூசை என்பன இதன் அங்கங்கள். இந்த அங்கங்களின் உட்பகுதிகளெல்லாம் நயமாகவும் மந்திரங்கள் பொருந்தவும் விளக்கமாகவும் இவர் அழகாகச் சொல்லிக் கொண்டு போகிறார். வடமொழித் தொடர் பலவருகின்றன. அனைத்தையும் இவர் மிக எளிய தமிழில் பா இலக்கணத்தில் அடக்கிச் சொல்வது பாராட்டற்குரியது. சூரிய பூசையின் முடிவில் தேஜஸ் சண்டன் பூசையும், சிவ பூசையின் முடிவில் அம்பிகை பூசையும் அதன் பின்னர்ச் சண்டேச பூசையும், விரிவாகச் சொல்லியிருக்கிறார். சத்திகள் நியாசம், முத்திரை முதலியன நன்கு சொல்லப்பட்டுள்ளன. பலவகை ஆசனங்கள், பலவகைப் பரிவார தேவதைகள், லயாங்க போகாங்க பூசைகள் யாவும் இங்கு சாத்திரத்தில் விதித்தபடி இருப்பதை ஆகம அறிவுடையவர்கள் நன்கு காணலாம். வடமொழி அறியாதவர்களுக்கு இது ஒரு சிறந்த கிரியைக் கருவூலம் என்பதில் ஐயமில்லை.

இந்த இரண்டு அகவல்களும் சேர்த்துப் பல முறை அச்சிடப்பட்டுள்ளன.

பிற்காலத்தில் இவ் அகவல் மனப்பாடத்துக்கு எளிதன்று என்று கருதி, எண்சீர் விருத்தத்தால் அந்தாதியாகச் செய்த சிவபூசை யந்தாதி என்ற ஒரு விரிந்த நூலும் உண்டு. அதன் பாடல்கள் 128. இவ்வந்தாதியின் சிறப்புப் பாயிரம் கூறுவதால், ஞானப்பிரகாசர் வடமொழியில் சிவபூசை நூலும் செய்தார் என்று எண்ணுமாறு உள்ளது.

### பிராசாத மாலை

பரம்பொருளை அடைவதற்குரிய நெறிகள் இந்து மதத்தின் பல பிரிவுகளில் பலவிதமாகச் சொல்லப்பட்டுள்ளன. சைவ

சித்தாந்தம் அவற்றைச் சரியை கிரியை யோகம் ஞானம் என நான்கு நெறியாகக் கூறும். 13ஆம் நூற்றாண்டில் செய்யப்பட்ட சிவஞான சித்தியார் தொடங்கி எழுந்த சாத்திர நூல்கள் இந்த நான்கையும் குறிப்பிடும். எனினும், சித்தியார் போன்றவை ஞானத்தையே பெரிதும் விரித்துப் பேசி இருந்தன. அதன்பின் தோன்றிய சைவ சாத்திர நூல்கள் ஒவ்வொரு பகுதியை மட்டும் விரித்துப் பேசுவனவாய் இருக்கும். தத்துவப் பிரகாசம் (14 நூ) கிரியை நெறியை மிக விரித்துப் பேசும். இவை யாவும் பெரு நூல்கள். யோகத்தை விரித்துப் பேசுகின்ற பெரு நூல் இல்லை.

சிவஞான சித்தியார் யோகத்தை 'சகமார்க்கம் புலன் ஒடுக்கி' என்ற ஒரு பாடலால் (273) சுருக்கி உரைக்கிறது. தத்துவப் பிரகாசம் தான் யோகத்தை விரித்துரைக்கிறது. இதனுள் யோகத்தில் கிரியை 6 பாடல்களும் யோகம் 18 பாடல்களும் சொல்லுகின்றன. இது மிகவும் விரிவான பகுதி. யோகத்தில் அட்டாங்கயோகம் என்பதே சாதாரணமாய் எல்லோரும் அறிந்தது. இது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டுப் பகுதிகளாக உள்ளது. இது பதஞ்சலி சூத்திரத்தின் வழியது. சைவம் இதை யோகம் என்று கருதுவதில்லை, யோகத்திற்கு அங்கமான ஆரம்பப்படிகள் என்றே இதைக் கருதுகின்றது.

சைவத்தில் சொல்லப்படுகின்ற யோகம் பிராசாத யோகம். இது 16 கலைகளாகிய உறுப்புக்களைக் கொண்டது.* இது மேதை முதல் உன்மனை வரையில் 16; இவை மேதை அருக்கீசம் விடகலை விந்து அர்த்தசந்திரன் நிரோதினி நாதம் நாதாந்தம் சத்தி வியாபினை வியோமரூபினி அனந்தை அனாதை அனாசிருதை சமனை உன்மனை என்பனவாகும். இந்தப் பதினாறுமே பிராசாதம் எனப்படும். இதன் வழிப் பிராண வாயுவை இயங்கச் செய்வது பிராசாத யோகம். தத்துவப் பிரகாசம் அட்டாங்க யோகமாகிய படிகளைக் கூறி, மேல் இந்தப் பிராசாத யோகத்தைக் கூறுகிறது.

பிராசாதம் பற்றித் தனி நூல் செய்தவர் 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த காவை அம்பலவாணத் தம்பிரான்; அவர் நூல் பிராசாத அகவல் என்று பெயர் பெறும். அதற்கு அவர்

* இக்கலைகள் பிரணவத்தின் கலைகள் எனப்படும். இவற்றுள் வியோரூபினி அனந்தை அனாதை அனாசிருதை என்ற நான்கையும் நீக்கித் துவாரசகலை (12); முதல் மூன்று அகார உகார மகாரம்.

மாணாக்கர் செய்த பழைய உரையும் உண்டு. 15ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் செய்யப்பட்ட பிராசாத தீபம் என்ற 37 விருத் தங்கள் கொண்ட நூலும் இந்த நெறியைக் கூறுகிறது. இவை விரிவானவை. இவற்றின் பின்வந்த மிகவும் சுருக்கமான நூல் கமலை ஞானப்பிரகாசர் செய்த 11 எண் சீர் விருத்தங்களும் காப்புச் செய்யுளுமுடைய பிராசாதமாலை என்ற சிறு நூல். இந்த நூல் முறையாக ஒவ்வொரு பாடலிலும் 16 கலைகளுக் குரிய உரிய நாமம், மாத்திரை, வியாபகம், அளவு, சூனியம், வடிவு, தேவதை, தத்துவம், ஒளி ஆகிய பொருள்களைக் கூறும். இந்த யோக மார்க்கத்தை அறிந்தவர்க்கன்றி ஏனையோர்க்கு இது சிறிதும் விளங்குவதன்று.

இவருக்குப்பின் இவருடைய மாணாக்கரான குருஞான சம்பந்தர் வடமொழியிலுள்ள பிராசாத ஷட்கம் என்ற நூலைத் தமிழில் 7 பாடல்களாக மொழிபெயர்த்துப் பாடினார். இவ் வளவே பிராசாதம் பற்றி உள்ள தமிழ் இலக்கியம். வடமொழி யில் பிராசாத ஷட்கம் பிராசாத சந்திரிகை (ஆகமப் பகுதி) என்ற நூல்கள் உள்ளன.

### பதிப்பு

பிராசாத மாலை தருமை நாகலிங்கத் தம்பிரான் பதிப்பு 1925. மேற்குறிப்பிட்ட நான்கு தனிப்பிராசாத நூல்களையும் பிராசாத நான்மணிகள் என்ற பெயரில் தருமபுரம் ஆதீனத்தார் 1972இல் வெளியிட்டுள்ளனர்.

### அத்துவித சாரம்

கமலை ஞானப்பிரகாசர் பாடிய சிறு சாத்திர நூல். காப்பு வெண்பா ஒன்றும் 60 விருத்தப் பாக்களும் கொண்டது. காப்பு மோன குருவான தென்முகக் கடவுள் வணக்கம்; இவ் வணக்கம் சாத்திர நூல்களுள் மிகவும் அருமை.

> சித்திதரு மெய்ஞ்ஞான வேத ரகஸ்யமெனும்
> அத்துவித சாரத்தை யானருள – முத்தர் மகிழ்
> மோனகுரு வாகிவரு முப்பொருளே இப்பொழுது
> ஞானமதை நன்குறவே நல்கு.

நூல் முழுமையும் மாணாக்கன் கேள்வி கேட்பதாயும் குரு விடை கூறுவதாயுமுள்ள வினாவிடை முறையில் அமைந்தது. தருமம் முதலியன வினையாதலினால் பிறவியைத்தான் தரும். ஞான

மொன்றே பிரமத்தை அடைவிக்கும். குருவருளே ஞானத்தை நல்கும். சரியை கிரியை தேர்ந்தவர்க்குக் குருகிட்டுவார். உலகத்தில் பொருள் பரசிவ மொன்றே, அதன் இயல்பு சச்சிதானந்தம், பிரமம் அனாதி, பிரமத்திற்கலந்தவர் மோன ஞானி. யோகிகளும் பிரமத்தையடைவது பேச அரிய ரகசியம். முத்திரையாகப் பிடித்த இரு விரலினாற் காட்டியது மோக்கம். சைவ சித்தாந்தம் சொல்லும் சிவம் என்பது வேறல்ல, இதுவே. ஆசிரியர் கருத்துக் களுக்கு எடுத்துக்காட்டாகச் சில பாடல்களைக் காட்டலாம்.

உருவாகி அருவாகி ஒளியு மாகி
உள்ளாகி வெளியாகிப் புறம்பு மாகி
கருவாகிச் சராசரமைம் பூத மாகிக்
கரந்ததத் துவமாகிக் காண்போர்க் கன்று
குருவாகி ஞானமாய்க் குணமு மாகிக்
கொண்டதோர் அத்துவித துவைத மாகி
அருளாகிச் சச்சிதா னந்த மாகி
அன்பர்களின் மனமாகி யான வாறே.

நாமரூபந் தரித்திடும் பொருளெலாம்
நாசமாம் முடிவினில் ஐய
தூமங் கண்டுள்ளோர் தூமத்தை ஈன்றிடும்
சொல்லுமக் கினியினால் அன்றோ
நேமமாகிய பிரமத்தை யன்றியே
நித்தியா னந்த சாயுச்சியம்
தாமதாகிய பேர்க்குறும் அல்லது
சகளரால் தருவதும் இல்லையே.

### தியாகராசர் கழி நெடில்

திருவாரூர்த் தியாகராசர் மீது கமலை ஞானப்பிரகாசர் பாடிய 10 பாடல் கொண்ட பன்னிரு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தப்பதிகம். 'அரவக்கிண் கிணிக் கால் காட்டி அரியாசனத் திருக்கும் கருணாநிதியை யாரூரிற் கண்டார் பிறவி காணாரே' என்ற மகுட முடையது. பாடல்களில் அவருடைய விசேடச் சின்னங்கள், திருவந்திக் காப்பு, திருச்சாள வாயில், மூவர் தமிழ், வீரசோழியம் என்ற சிங்காதனம், அசபாநடனம், பங்குனித் தேர்விழா, அபிடேகம், பங்குனி உத்திரம், கமலாலயம், திருவாசகத் தேன் திருவாதிரை ஆகியவை சொல்லப்பட்டுள்ளன.

**சாதி நூல்***

இந்நூல் கமலை ஞானப்பிரகாசர் பாடியது; "திருவாரூரில் எழுந்தருளியுள்ள ஞானப்பிரகாச சுவாமிகள் ஆரிய பாஷையிலுள்ள ஆகமபுராண இதிகாச நூல்களின் ஆதாரங்களைக் கொண்டு இயற்றியது; இஃது தொண்டை மண்டலம் மயிலை சந்திரசேகர நாட்டாரவர்களாலும் திருவல்லிக்கேணி சண்முக கிராமணியாரவர்களாலும் பரிசோதித்து சென்னை கலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது: சாலி. 1797க்குச் சரியான பவ வருஷம் 1875" என்பது இதன் முகப்பேடு. நூல் விருத்தப் பாவால் இயன்றது. காப்பு 2, பாயிரம் 9, சுத்த சாதியுற்பவம் 5, சங்கரசாதியுற்பவம் 1, அனுலோமருற்பத்தி 8, பிரதிலோமருற்பத்தி 7, அந்தராளருற்பத்தி 10, களவிற்பிறந்த அனுலோமருற்பத்தி 10, சுளவிற்பிறந்த பிரதிலோமருற்பத்தி 12, அனுலோமரிற் பிறந்த விராத்தியருற்பத்தி 8, பிரதிலோமரிற் பிறந்த விராத்தியருற்பத்தி 13, சுருதிமானிற் பிறந்த விராத்தியருற்பத்தி 3, பட்டசாலியனிரும் பூதியிற் பிறந்த விராத்தியருற்பத்தி 3, சைவ தீட்சைக்குரியவர் மூவர் 1, சாதியுயர்வு முறை 5, சாதித் தாழ்வுமுறை 5, வாழி 1, நூல் செய்தோர் பெயர் 1, அகப்பாடல் 104. இதில் சுத்தசாதி யுற்பவம் என்ற பகுதி நான்கு குலத்தைக் கூறுகிறது; ஏனைய நூல் முழுமையும் தாழ்ந்த சங்கம சாதிகளையே கூறுகிறது. கமலை ஞானப்பிரகாசரே அந்நூல் செய்தார் என்பதை இறுதிப் பாடலால் அறியலாம்:

வேதிய ராதியாக விரிந்திடும் எண்பத் தொன்றாம்
சாதியும் நூற்று நான்கு தமிழினாற் புனைந்த சாதி
நீதியும் தீக்கை பூண்போர் நிலைமையும் தொகுத்தான் வேதன்
ஆதியாங் கமலை வாழும் ஞானப்பிர காசன் தானே.

கமலை ஞானப்பிரகாசர் உலகநாதர் தூண்டி மழபாடிப் புராணமும் தந்திவனப் புராணமும் பாடியமை போல, இந்த நூலும் அவர் தூண்டியே பாடினார் என்று நூல் செய்ததற்குக் காரணம் கூறும் பாடல் சொல்லுகிறது:

புவனியிற் கலியி னீட்டம் பொருந்தலால் சாதி பேதத்
தவரவ ரொழுக்கம் குன்றா தாகமப் பொருளை யெல்லாம்
தவநெறி உலக நாதன் தமிழினிற் றருக வென்னச்
சிவனருள் கருதி யானும் செப்புவன் செய்யு ளாக.

---

* இந்த நூல் இருபகுதிகளாக உள்ளதென்று தெரிகிறது. இங்கு ஆராய்ந்தது ஒரு பகுதியே, விரிவுக்கு திருவான்மியூர் சுவடி IV பக்கம் 275 - 278 பார்க்க 3 ஏடுகள்.

உலகநாதரை வாழ்த்துச் செய்யுளிலும் குறிப்பிடுகிறார்: 'உலக நாயகன் தன் சாதி உலகினில் வாழி வாழி'. பாயிரத்துள் சைவ பேதம், சைவவியற்கை, ஆதிசைவர் தொழில், மகா சைவர் தொழில் என்று நான்கு பாடல் சொல்லி, அடுத்த பகுதியில் நான்கு வருணங்களின் தொழிலைச் சொல்லிப் பிறகு சங்கரசாதிகளைத் தொடங்குகிறார். 81 சாதிகள் இங்கு சொல்லப்பட்டுள்ளன. சாதிபற்றி இவர் ஒரு தனி நூல் செய்வதற்கான சூழ்நிலை விளங்கவில்லை.

இதன் பாடலுக்கு எடுத்துக்காட்டாக ஒரு பாடல் திண்டிம சாதி (அந்தராளர் உற்பத்தி 4):

மெத்திய காதல் தூண்ட வேதியன் தன்கு லத்துத்
தத்தையாம் வனிதை தன்னைத் தழுவிட வந்த மைந்தர்
பத்திதுத் தியங்க ளாகப் படித்ததிற் பரிசு வாங்கித்
துத்தியம் பெருக்கு கின்ற தொனிகொள்திண் டிமர்க ளாவார்.

திருவான்மியூர் சாமிநாதையர் நூல் நிலையத்தில் இந் நூலுக்கு உரையோடு கூடிய காகிதப் பிரதியும் உள்ளது.

### கிடைக்காத நூல்கள்

சிவானந்தபோத சாரம் என்ற ஒரு சிறு நூலை அச்சிட்ட ப.அ. முத்துத்தாண்டவராயப் பிள்ளை கமலை ஞானப்பிரகாசர் பல நூல்கள் செய்ததாக ஒரு பட்டியல் கொடுத்தார்; அதை அப்படியே எடுத்துச் சோம சுந்தர தேசிகர் விரித்துக் கொண்டார். அத்தனையும் ஞானப்பிரகாசர் செய்தார் என்பதற்கு எந்த ஆதாரமும் இல்லை. அவற்றைக் கீழே குறிப்பிடுகிறோம்.

### சிவானந்த போதம்

மேற்குறிப்பிட்ட சாரமானது சைவ சித்தாந்த நெறியில் கூறப்படும் முப்பது அவதாரம் என்ற நிலைகளைத் தசகாரியங்களில் அடக்கிக் காட்டுவதாகக் கூறுகிறது. சாரம் என்றமையால் இதற்கு மூலம் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்று கருதிச் சொன்னதே சிவானந்த போதம். இப்படியொரு நூல் ஒன்று இருப்பதாகத் தெரியவில்லை.

### ஞானப் பள்ளு

சோழமண்டல சதகப் பாடலொன்று இப்பெயருடைய பள்ளைக் குறிப்பிடுகிறது.

கருணாகரன் செய் திருப்பணியைக்
கருதி நலமாய்க் கண்டு செய்த
பொருளா னாலத் தொன்றுடையான்
பூமி யானைப் போலாரோ
திருவாரூரில் வன்மீகத்
தியாக ராசப் பள்ளுகந்தும்
மருவார் பணிய அரங்கேற்றி
வைத்தார் சோழ மண்டலமே. 88

இது கொண்டு திருவாரூர்த் தியாகேசர் பள்ளேசல் என்பதே மேற்குறித்த ஞானப்பள்ளு என்றும், இது ஞானப்பிரகாசர் செய்தது என்றும் சொல்வர். இது பொருந்துமென்று தோன்ற வில்லை. பள்ளுப் பாடல்களில் முதலாவதாகத் தோன்றிய பிரபந்தம் முக்கூடற் பள்ளு. அதில் உழவர் வாழ்க்கை குறித்த பாடல்கள் மட்டுமேயன்றி வேறு துதிப் பாடல்களோ அகத் துறைப் பாடல்களோ இடையில் வரவில்லை. அதைப் பார்த்துச் செய்த பிற பள்ளுப் பாடல்கள் அனைத்திலும் இவ்விரு வகைப் பாடல்களும் அதிகம் பெய்யப்பட்டுள்ளன. இது நூல்களின் இயல்பு. முதலில் வந்த நூல் எளிமையாய் இருப்பதும் பின் வந்தவற்றுள் பலவகை விரிவும் பெருக்கமும் அமைவதும், எல்லாப் பிரபந்த வகைகளிலும் காண்கிறோம். திருவாரூர்ப் பள்ளில் துதி வெண்பாக்கள், அகத்துறைப் பாக்கள் முதலிய பாடல்கள் அதிகமாய்க் காணப்படுகின்றன. சில வெண்பாக்கள் பழம் பாடல்கள்; பள்ளேசலில் இவை இடையில் பெய்யப் பட்டனவென்று தெரிகிறது. எடுத்துக்காட்டாக இரு பாடல்கள் தருகிறோம்; அகத்துறை, அன்னம் விட்ட தூது:

கமலையும் என்மனமும் காதலித்து வாழும்
அமலர் திருமுன்போய் அனங்காள் – சமரமதன்
துன்றுமிருந் தேன்பகழி தூற்றும்எனும், ஆருயிர்கொண்டு
இன்று மிருந்தேன் எனும்.

ஆதார மானதிரு வாரூர ரேந்தி
வேதாக மங்கள் விரும்பியே – காதல்
விருதாது காமனையும் வென்றநீர் மாதர்க்
கொருதூது செல்லலா மோ.

இத்தகைய பொருளமைப்புடைய பாடல்களுக்குப் பள்ளில் இடமில்லை. முக்கூடற் பள்ளில் கலிப்பாவும் தாழிசையும் மட் டுமே இருக்க, இதில் வெண்பா விருத்தம் முதலான பாக்களும்

அதிகம் உள்ளன. எனவே இது மிகவும் பின் வந்ததென்பதில் தடையில்லை. மேலும் இறுதிப் பாடல் கமலை ஞானப்பிரகாசரையே போற்றுகிறது.

நற்கவிதை கொண்டு பள்ளின் வர்க்க முரைத்த
ஞானப்பிர காசன் வாழி நற்புவி வாழி
விற்குலவு மாறன்மிகு மானேந்து கையான்
வித்தியா பதிமுதலி மெய்ப்புகழ் வாழி
நற்கமலை நகர்வாழி சாமந்தன் வாழி
தானமும் பரிகலமும் தழைத்து வாழி
மற்குலவு திண்புயத்தான் மல்லையபூபன்
வாழி பூமியான் எந்நாளும் வாழிவாழியே.

இதனால் இப்பள்ளு, பிற்காலத்தில் ஞானப்பிரகாசரைப் புகழ்ந்தும், வித்தியாபதி முதலி மல்லையபூபன் என்பாரைப் புகழ்ந்தும் பாடப் பெற்றது என்பது தெளிவு. சதகப் பாடல் நாலத் தொன்றுடையான் பூமியான் என்பவன் தியாகராசப் பள்ளை அரங்கேற்றி வைத்தான் என்பது மட்டும் கூறுகிறது. பூமியான் பெயர் மேற்காட்டிய பாடலில் வருகிறது. சதகத்தின் காலம் கி.பி. 1688 என்று அதில் சொல்லப்படுகிறது. முக்கூடற் பள்ளின் காலம் 1680 என்பது நிறுவப்பட்டுள்ளது.* எனவே, இப்பள்ளு முக்கூடற் பள்ளுக்குப்பின் எழுந்தது. இதையறிந்து சதகமுடையார் குறிப்பிட்டிருக்க முடியாது; அவர் குறிப்பிடும் பள்ளே வேறு. வெறும் பள்ளேசலாகவும் இருக்கலாம். மேலும் இச்சதகம் கூறும் செய்திகள் பல, வெறும் கதைகளேயன்றி வரலாற்றாராய்ச்சிக்குப் பயன்படுவன அல்ல. மேற்காட்டிய 'திருவாரூர்ப்பள்ளு'❖ ஞானப்பிரகாசர் செய்திருக்கவும் முடியாது. இது ஞானப்பள்ளும் அன்று. கமலை ஞானப்பிரகாசர் இப்பெயரால் ஒரு நூல் செய்தல் நிகழக்கூடியதும் அன்று: கூற்று வெறும் கற்பனையே. திருவருள் வழி நின்ற ஞானப்பிரகாசர் பள்ளுப் பாடல் பாடுபவரல்லர்; அன்றியும், வித்தியாபதி முதலிய மல்லையபூபன் பூமியான் என்போரை அவர் பாடுவார் என்பது நிகழக்கூடியது அன்று. அற்புதக் கதைகளைப் பெருக்கிச் சொன்னால் தான் பெருமை என்றெண்ணிய மாண்மியமுடையார் பள்ளுப் பாடினார் என்ற கதையையும் சேர்த்திருக்கிறார். மான்மியத்தின் காலம் 17 ஆம் நூற்றாண்டாகலாம்.

---

* முக்கூடற்பள்ளு. எமது இரண்டாம் பதிப்பு, 1943. முகவுரை பக்கம் 36 - 37 பார்க்க.

❖ இதைச் சோம சுந்தர தேசிகர் 1936இல் அச்சிட்டிருக்கிறார்.

ஞானப்பிரகாசர் தம் நூல்கள் பலவற்றில் தாம் பல நூல் செய்வதற்குக் காரணமாயிருந்த உலகநாதரைக் குறிப்பிடுகிறார்; திருமழபாடிப் புராணம், தந்திவனப் புராணம், சிவ பூசையகவல், சாதிநூல் என்பவற்றில் இக்குறிப்பைக்காணலாம். எனவே, இங்கு அவர் பெயரைக் குறிப்பிடாமை, இந்தப் பள்ளுப் பாடியவர் கமலை ஞானப்பிரகாசர் அல்லாமல் பின்வந்த வேறொரு ஞானப் பிரகாசர் என்பதைக் காட்டும். இங்குக் குறிப்பிட்ட வித்தியாபதி முதலி முதலியோரை இவர் வேறெங்கும் குறிப்பிடவுமில்லை.

### ஆயிரப் பிரபந்தம்

இப்பெயருடைய நூலொன்று இவ்வாசிரியர் செய்தாரென்று அதே சதகம் கூறும்.

> பகர்ந்த கமலை த்யாகேசர் பஞ்சாக் கரத்தின் பயனறிந்த
> திகந்த குரு ஆயிரப் பிரபந்தம் செய்த குரவன் திருவாரூர்
> உகந்த ஞானப்பிரகாச னுண்மைக் குருவினுயர் குலத் தோன்
> மகிழ்ந்த வாழ்வு பன்னாளும் வளஞ்சேர் சோழ மண்டலமே.

இப்படியொரு நூல் இருந்ததாகத் தெரியவில்லை. ஞானப் பிரகாசர் பரம்பரையில் வந்தவர்கள் இவர் ஆயிரப்பிரபந்தம் எனச் சில பாடல் சொல்வர் என்றும் அவை இவருடைய பிற நூல்களில் காணப்படுவன என்றும் தேசிகர் எழுதியிருக்கிறார். ஒருகால் ஞானப்பிரகாசர் பாடிய பாடல்களின் மொத்தத் தொகை ஆயிரம் என்றும், அது காரணமாகவே ஆயிரப் பாடல் என்று அவை வழங்கப் பெற்றன என்றும் கருதத் தோன்றுகிறது. இவர் செய்தனவாக இன்று கிடைக்கின்ற நூற் பாடல்கள் (திரு வாரூர்ப் பள்ளு நீக்கி இரு புராணங்களையும் கூட்டி 1387).

### அண்ணாமலைக் கோவை

முத்துத் தாண்டவராயபிள்ளை குறிப்பைத் தவிர வேறு செய்தி இல்லை.

### தியாகராசலீலை

வட மொழியில் இவர் தியாகராச சுவாமியின் திருவிளை யாடலைக் குறித்துப் பாடியதாகப் பிள்ளையே சொல்லுகிறார். ஆதாரமில்லை. நூல் இல்லை.

### அத்துவாக்கட்டளை

சிறு உரைநடை நூல். அத்துவா - வழி. மந்திரம் பதம் வண்ணம் புவனம் தத்துவம் கலை என்பன ஆறத்துவாக்கள். இவற்றை விரிவாகக் கூறும் கட்டளை நூல் இதுவாகும்.

## குருஞான சம்பந்தர்

பரம்பொருள் தனது அருள் விளக்கத்தைக் காலந்தோறும் நாடுகள்தோறும், மக்களினந்தோறும், சிறந்த ஞானிகள் மூலமாக வெளிப்படுத்துகிறது. இந்த 16ஆம் நூற்றாண்டில் சிவபெருமான் என்று பெயர் தாங்கிய அந்தப் பரம்பொருளின் விளக்கத்தை வெளிப்படுத்துமிடமாக குருஞானசம்பந்தர் என்றப் பெருஞானி அமைந்தார். இவர் இன்றளவும், 400 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழகத்தில் காவிரிக்கரையில் வளர்ந்தோங்கி வருகின்ற தருமபுர ஆதீனம் என்ற சைவ சித்தாந்த ஞான ஆசாரிய பரம்பரையைத் தோற்றுவித்தாரென்றும், சைவ சமயத்துக்குரிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நான்கு பாதங்களிலும் சிறந்த நூல்களியற்றிச் சைவப் பயிர் தழையச் செய்தாரென்றும் சுருக்கமாய்ச் சொல்லி, மேல் இருவருடைய வரலாற்றைச் சற்று விரிவாகவே விளக்குவோம்.

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானத்தில் பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய சைவ சித்தாந்த ஞான பீடங்கள் இரண்டு, அதை திருவாவடுதுறையும் தருமபுரமும், இருண்டும் தஞ்சை ஜில்லாவில் மாயுரம் தாலுக்காவிலேயே உள்ளன. பிற்காலத்தில் இவை ஆதீனங்கள் என்றும் வழங்கப் பெற்றன. ஆசாரியர் வாழ்ந்த இடம் மடம் எனப்பட்டது. சம்பந்தர் மதுரையில் தங்கிய இடத்தைச் சேக்கிழார், மடம் என்று சொல்வது காண்க. தலைமையாயிருந்து பல சீடரையும் கோயில்களையும் உடைமையால் ஆதீனம் என்று சொல்லப் படும். தருமபுரம் மடத்து ஞானபீடத்தை நிறுவித் தொடர்ந்து உபதேச பரம்பரையாக வருமாறு செய்தவர் குருஞான சம்பந்தர் என்ற ஆசாரியர்.

### வரலாறு – சீவில்லிபுத்தூர்

தென் தமிழ்நாடாகிய பாண்டி நாட்டில் சிறந்து பண்டைக் காலமுதல் விளங்கிவரும் தலங்கள் பலவற்றுள் ஸ்ரீவில்லிபுத்தூர் என்பதும் ஒன்று. இந்தத் தலத்தில் 8ஆம் நூற்றாண்டில் வைணவ சமயத்தில் விஷ்ணுசித்தன் என்று பெயர் படைத்த அடியவர் தோன்றித் திருமால்மீது திருப்பல்லாண்டும் ஏனைய 462 பாசுரங்களும் பாடித் தம்மைக் கண்ணனுடைய தாயாகவே பாவித்து மங்களாசாஸனம் செய்த அருமை காரணமாகப் பெரியாழ்வாரென்ற பெயர் பெற்ற ஆழ்வார் வாழ்ந்திருந்தார்.

சூடிக்கொடுத்த நாச்சியாரென்ற பெயர் தாங்கி இவ்வாழ்வாருடைய திருமகளாக வளர்க்கப்பெற்று, திருவெம்பாவையும், நாச்சியார் திருமொழி 143 பாடல்களும் பாடி, ஆண்டாளென்ற அருமைத் திருநாமத்தால் போற்றப்பெறுகின்ற கோதையாரும் இத்தலத்திலே தோன்றியவர். இவ்வளவு சிறப்புடைய தலத்தில் 16ஆம் நூற்றாண்டில் இக்கட்டுரைத் தலைவராகிய குருஞான சம்பந்தர் அவதாரம் செய்தார்.

இங்கு கார்காத்த வேளாளர் மரபில் சுப்பிரமணிய பிள்ளை என்பவரும் அவர் மனைவி மீனாட்சி அம்மையாரும் செய்த தவத்தின் பயனாய் ஒரு சோமவார தினத்தில் நன் மைந்தரொருவர் தோன்றினார். சிவபக்தி மிக்கவர்களாகிய பெற்றோர் அக் குழந்தைக்கு ஞானசம்பந்தன் என்று பெயரிட்டார்கள்.

இவர் பண்டை நற்றவத்தால் தோன்றியவர் ஆதலால் இவருக்குக் கலை ஞானங்களெல்லாம் கல்லாமே கை வந்தன. தமிழும் வடமொழியும் நன்கு கற்றுச் சாத்திரங்களுந் திருமுறைகளும் ஓதி உணர்ந்து இக்குழந்தை வளர்ந்து வந்தார்.

**மதுரை**

ஒருநாள் பெற்றோர் இக்குழந்தையோடு தாங்கள் வழிபடும் மூர்த்தியாகிய மதுரைச் சொக்கலிங்கப் பெருமானை வழிபடும் பொருட்டு ஆலவாய் சென்று அங்கயற்கண் அம்மையோடு கூடிய சோமசுந்தரப் பெருமானை வழிபட்டு அத்தலத்திலேயே தங்கியிருந்தார்கள். சில காலம் சென்றபின், அங்கிருந்து மீண்டும் தங்கள் ஊருக்கு வர எண்ணி ஆலயத்துட் சென்று பெருமானை வணங்கித் திரும்பியபோது, புதல்வர் இறைவன் சந்நிதியிலிருந்து பிரிந்து பெற்றோருடன் திரும்ப மறுத்துவிட்டார். உலகனைத்துக்கும் அம்மையும் அப்பனும் ஆகியவர் இங்கு எழுந்தருளியிருக்கிறார்கள். உயிருக்குத் தந்தை தாயாகிய இவர்களைப் பிரிந்து உடலுக்குத் தந்தை தாயாகிய உங்களோடு வர என் மனம் ஒருப்படவில்லை. அன்புகூர்ந்து நீங்கள் என்னை இங்கு விட்டு மனஅமைதியோடு மீளுக' என்று பணிவாகப் பெற்றோருக்குத் தெரிவித்துக்கொண்டார். அவர்களும் வேறு மறுமொழி கூற இயலாதவர்களாய், ஒரு கால் காலம் இவருடைய மனத்தை மாற்றலாம் என்ற நம்பிக்கை உடையவர்களாய் ஸ்ரீவில்லி புத்தூர் மீண்டார்கள்.

பெற்றோரைப் பிரிந்த ஞானசம்பந்தர் நாள்தோறும் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, சோமசுந்தரரையும் மீனாட்சி

யம்மையையும் காலந்தோறும் வழிபட்டு வந்தார். பொற்றமரைக் கரையில் பூவும் நீருங்கொண்டு சிவனடியார் பலர் தங்கள் ஆன்மார்த்த மூர்த்திக்கு நித்தமும் பூசை செய்துதோத்திரம் பாடி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து பரவச நிலையில் அமர்ந்திருத் தலைக் கண்டார். தாமும் அவ்வாறே பூசனை செய்து இறைவன் திருவடியில் தம் மனத்தை ஈடுபடுத்தவேண்டும் என்ற எண்ணங் கொண்டார். இவ்வெண்ணத்தை நாள்தோறும் இறைவன் சந்நிதியில் விண்ணப்பித்து வந்தார். அடியவர் கருத்தறிந்து முடிப்பவனாகிய தென்கூடல் திருவாலவாய்ச் சிவபெருமான் இவர் கனவில் ஓரிரவில் தோன்றி 'ஞானசம்பந்தா, இப் பொற் றாமரைப் பொய்கையில் ஈசான திக்கில் ஒரு பெட்டகத்துள் இலிங்கவடிவில் நாம் அமர்ந்திருக்கின்றோம். நீ பெற்றுப் பூசிப் பாயாக' என்று அறிவித்தருளினார்.

விழித்தெழுந்த ஞானசம்பந்தர் பெருமான் திருவருளை யெண்ணி வியப்புற்றார். வழக்கம்போல் தீர்த்தக்கரை சென்று பெருமான் குறிப்பை மனத்தில் கொண்டு நீராடி ஈசான திக்கில் மூழ்கிய பொழுது, திருவருளால் சொக்கலிங்கப் பெருமானது இலிங்க வடிவைத் தாங்கிய ஒரு பெட்டகக் கோயில் அவரது கரத்தில் வந்து பொருந்திற்று. மிக்க வியப்பும் களிப்புமடைந்த ஞானசம்பந்தர் சந்நிதியிற் சென்று பெருமானை வணங்கி, இந்த நிகழ்ச்சியை முதற்பாடலிற் குறிப்பிட்டு ஒரு பதிகம் பாடினார்:

**கண்ணுக் கினிய பொருளாகி யேஎன் கரத்தில் வந்தாய்,**
**விண்ணும் பரவிடும் அற்புத மேஎன்ன விஞ்சையிதான்,**
**மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே**
**நண்ணும் படிசெய், மதுரா புரிச்சொக்க நாயகனே.**

இப்பதிகம் சொக்கநாதக் கலித்துறை என்று பெயர்பெறும் இதன்மேல், 'பெருமானே, என் கருத்து முற்றுவித்ததனோடு யானும் ஆசார சீலர் வழியே முறையே பூசை செய்யும் கிரமத் தையும் அதற்கேற்ற ஞானத்தையும் அந்த ஞானம் தரவல்ல ஞானாசிரியனையும் அருள்வாயாக' என்று மீண்டும் வேண்டி னார். மறுபடியும் இரவில் அவருடைய கனவில் ஆலவாய்ப் பெருமான் எழுந்தருளி, 'நாம் உபதேசித்த ஞானம் பரம்பரை யாக வந்து திருவாரூரின்கண் வாழும் ஞானப்பிரகாசனிடம் உள்ளது. அவனிடம் நீ சென்று ஞானோபதேசம் பெற்று உன் விருப்பப்படி நம்மை முறையறிந்து வழிபடுவாயாக' என்று அருளிச் செய்தார்.

இவ்வாறு கனவு கண்ட ஞானசம்பந்தர் மிக்க மகிழ்ச்சி யடைந்து, பொழுது புலர்ந்தபின் ஆலயம் சென்று இறைவனை யும் அம்பிகையையும் முறைப்படி வழிபட்டு விடை கொண் டார். தமக்குக் கிடைத்த பூசைப் பெட்டகத்துடன் குருநாதரைத் தேடி மதுரை நோக்கிச் செல்லலானார். வழியில் திரு ஆனைக்க முதலான தலங்களைப் பணிந்து ஒரு திங்கட்கிழமையில் திரு வாரூரையடைந்தார்.

### திருக்கயிலாய பரம்பரை

இந்த ஆரூர் ஞானப்பிராகாசர் என்பவர் கமலை ஞானப் பிரகாசர் என்றும் வழங்கப் பெறுகிறார். (கமலை - இலக்குமி, திரு; இலக்குமி வழிபட்டதால் திரு ஆரூர்)

இவர் திருக்கயிலாய பரம்பரை என்று வழங்குகின்ற ஞானாசாரிய பரம்பரையில் உபதேசம் பெற்று ஆசாரியத் தலைமை பூண்டு வாழ்ந்தவர். இவர் வரலாறு தனியே சொல்லப் பட்டது. சைவ சமயத்தில், பரம்பொருளாகிய சிவபெருமானே முதல் ஆசாரியர். நந்தியம் பெருமானாகிய அவரிடம் உபதேசம் பெற்றவர் சனகர் சனாதனர் சனந்தனர் சனற்குமாரர் என்ற முனிவர் நால்வர். அவர்களுள் சனற்குமார முனிவரிடம் உபதேசம் பெற்றவர் சத்திய ஞானதரிசனிகள், அவரிடம் உபதேசம் பெற்ற வர் பரஞ்சோதி முனிவர். இந்நான்கு ஆசாரியரும் சைவமரபில் புறச்சந்தான குரவர் எனப்படுவர். இவர்கள் கயிலாசவாசிகள்.

பரஞ்சோதி முனிவர் திருவெண்ணெய் நல்நூர் மெய்கண் டாருக்கு உபதேசம் செய்தார். அவர் திருத்துறையூர் அருள் நந்தி சிவாசாரியருக்கும், அவர் கடந்தை மறைஞான சம்பந் தருக்கும், அவர் தில்லை வாழந்தணருள் ஒருவரான உமாபதி சிவாசாரியருக்கும் உபதேசம் செய்தார். இந்நால்வரும் சைவசமய சந்தான ஆசிரியர் என்றும் அகச்சந்தான குரவர் என்றும் சைவ மரபில் வழங்கப் பெறுவர். இந்த ஞான பரம்பரை, திருக்கயிலா யத்தில் சிவபெருமானிடம் தொடங்கியமையில், திருக்கயிலாய பரம்பரை என்று பெயர் பெறும். இப்பரம்பரை வரலாற்றை வெள்ளியம்பலவாணத் தம்பிரான் தமது முத்தி நிச்சயப் பேரு ரையில் இருமுறை விரிவாகக் கூறியிருக்கிறார்.

சந்தான குரவர் செய்த சிவஞானபோதம் சிவஞான சித்தியார் சிவப்பிரகாசம் முதலான சாத்திர நூல்கள் மெய்கண்ட சாத்திரம் எனவும் சித்தாந்த சாத்திரம் எனவும் வழங்கப் பெறும்.

உமாபதி சிவத்திடம் உபதேசம் பெற்றவர், அவருடன் ஒரு சாலை மாணாக்கராய் மறைஞான சம்பந்தரிடம் பயின்று, அவர் முத்தியடைந்த பின் உமாபதி சிவத்திடமே உபதேசம் பெற்ற மச்சுச் செட்டியார் என்னும் அருள் நமசிவாய தேசிகர். அருள் நமசிவாயர் ஞான பூசாகரணம் முதலான ஐந்து சமய நூல்கள் செய்தார். அவரிடம் அருள் பெற்றோரில் காழி - கங்கை மெய் கண்டார் என்பவர் ஒருவர். அவர் நூல் செய்யவில்லை. அவரிடம் அருள் பெற்ற சீடர் சீகாழி - சிற்றம்பல நாடிகள். இவர் துகளறு போதம் முதலான பல சாத்திர நூல்கள் செய்தார். காஞ்சி ஞானப்பிரகாசர் ஆதீனத்தின் மூல குரு இவரே. இவருடைய மாணாக்கர் பலராவர். அவர்களுள் சிறந்தவர் சம்பந்தமுனிவர். அவர் சிவானந்த மாலை முதலான பல சாத்திர நூல்கள் செய்தார். அவர்களுள் சிறப்புடையவர் சிவபுரம் ஞானப்பிரகாசர். அவருடைய மாணாக்கர் சிவபுரம் தத்துவப் பிரகாசர். இவ்விருவரும் கார்காத்த வேளாள குலத்தினர்.

**கமலை ஞானப்பிரகாசர்**

இத்தத்துவப்பிரகாசருடைய மாணாக்கர் திருவாரூர் செட்டித் தெரு ஞானப்பிரகாசர். இவருடைய புதல்வராயும் மாணாக்கராயும் விளங்கிய ஆசாரியர், கமலை ஞானப்பிரகாசர்; இவருக்கு ஞானப்பிரகாச பட்டராகர், சிதம்பரநாத ஞானப் பிரகாசர் என்ற பெயர்களும் வழங்கும். இவர் இல்லறத்தார்.

ஞானசம்பந்தருடைய நற்றவம் பலிக்கு நேரம் நெருங்கியது. ஒருநாள் இரவில் ஆரூர்த் தியாகராசப் பெருமான் ஞானப் பிரகாசர் கனவில் தோன்றி, 'அன்பனே, வரும் சோம வாரத்தன்று மதுரையிலிருந்து ஞானசம்பந்தன் வருவான். அவனுக்கு முறைப் படி தீட்சைகள் செய்து ஞானோபதேசம் புரிந்து சிவ பூசையும் எழுந்தருளுவிப்பாயாக' என்று கட்டளையிட்டு மறைந்தார். கனவில் கண்ட காட்சியால் ஞானப்பிரகாசர் வியப்பும் மகிழ்ச்சியும் எய்தியவராய், குறித்த சோமவார தினத்தில் முறைப்படிக் கமலாலயத்தில் நீராடித் தமது நித்திய கருமங்களை முடித்து ஆன்மார்த்த மூர்த்தி பூசையையும் நிறைவேற்றி, ஆரூர்ப் பூங் கோயிலினுட் சென்று வழிபாடுகள் செய்து, அங்கு சித்தீசுவரத்தில் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சென்று ஞானசம்பந்தர் வரவை எதிர்நோக்கியிருந்தார்.

*திரு ஆரூர்*

இவர் இவ்வாறிருக்க, சோமவார தினமாகிய அன்று திருவாரூர் அடைந்த ஞானசம்பந்தர் கமலாலயத்தில் நீராடி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு, திருவாரூர்ப் பூங்கோயிலையடைந்து இறைவனையும் அம்பிகையையும் தியாகேசரையும் வழிபட்டு, குருநாதரைக் காணும்பேறு எந்நேரம் வாய்க்குமோ என்ற கவலையுற்ற மனத்தினராய்ப் பிரகாரத்தில் வலம் வந்தார். வந்தபொழுது, சித்தீச்சுரத்தில் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் கிழக்கு நோக்கி அமர்ந்திருந்த ஞானப்பிரகாசரைக் கண்டார். திருவருள் உணர்த்துதலும், இவரே தமது பவ இருள் நீக்கும் ஞானபானு என உணர்ந்து இவர் திருவடியில் அடியற்ற மரம் போல் வீழ்ந்து தம்மை ஆட்கொள்ளுமாறு வேண்டினார். இவர் வருகைக்காகவே அங்கு காத்திருந்த ஞானப்பிரகாசர் இவரை அருட்கண் சாத்தித் தழுவி எடுத்து ஆதரவோடு இன்மொழி கூறினார். பின் இவரை அங்கேயே வடக்கு நோக்கி இருத்தி, பரிசம் நயனம் வாசகம் ஆகிய தீட்சைகளால் ஆட்கொண்டு திருவடி சூட்டிச் சிவஞான உபதேசமும் செய்தார். இவர் கையில் கொண்டு வந்திருந்த சொக்கலிங்கப் பெருமானையே வழிபடுதற்குரிய ஆன்மார்த்த மூர்த்தியாக அமைத்துச் சிவலிங்க பூசையையும் எழுந்தருளச் செய்து தந்து, ஆகம ஞானபூசா விதிப்படி பூசிக்கும் முறையையும் உணர்த்தியருளினார். சிவஞான போதம் சிவஞான சித்தி வாயிலாகச் சைவ சமயத்தின் அடிப்படையான முப்பொருள் இயல்பையும் நன்குணர்த்தினார். (சித்தியாரை ஞானசம்பந்தர் தமது சிவபோக சாரத்தில் குறிப்பிடுவது காணத்தக்கது.) இவ்வாறு ஆட்கொள்ளப்பெற்ற ஞானசம்பந்தர் மிக்க மனமகிழ்வெய்தி, தாம் வேண்டியவற்றை இறைவன் கைகூடும்படி செய்த பெருங்கருணைத் திறத்தையும் ஞானப்பிரகாசருடைய அருள் திறத்தையும் மனமார உணர்ந்து, பிறவிப் பெருங்கடலிலிருந்து தாம் கரையேறுமாறு அருள் நோக்கம் செய்த குருவின் பெருங்கருணையை உணர்ந்த மன நெகிழ்ச்சியால் அவர்மீது ஞானப்பிரகாச மாலை என்ற சிறந்த தோத்திர நூலைப் பாடித் துதித்தார்.

திருவார் கமலையுள் ஞானப்ர காசன் திருவடிக்கீழ்
வருவா ரவர்வழி வாரான் சமனும்; மலரயனும்
கருவாய் இடுவதற் கெண்ணான்; எந்நாளும் கருத்தினில் நீ
வருவாய்; சுகத்தினில் வாழ்வாய்; பரானந்தம் மேவிடுமே.

என்பது அதன் முதற்பாடல்.

பின் ஆன்மார்த்த மூர்த்தியையும், ஆரூர்ப் பெருமானையும் வழிபட்டுக்கொண்டு குருநாதரை அகலாது அவர் ஏவல் வழி நின்றார்.

### கைவிளக்கு நிகழ்ச்சி

ஒருநாள் ஞானப்பிரகாசர் சீடரோடு சிவாலயம் சென்று அர்த்தயாம தரிசனம் செய்து திரும்பி வந்தபோது ஞானசம்பந்தரும் ஏனைய சீடரோடு கூட உடன்வந்தார். திரும்பும்நேரம் வழக்கமாய்க் கைவிளக்கை ஏந்திவரும் பணியாளன் உறங்கிவிட்டான். இதைக் கவனித்த ஞானசம்பந்தர் தாமே குருவுக்கு முன்னால் விரைந்து சென்று கைவிளக்கைப் பிடித்து வழிகாட்டிக் கொண்டுவந்தார். ஞானப்பிரகாசரோ சிவதரிசனத்தினால் விளைந்த ஆனந்தத்தில் திளைத்தவராய் நிகழ்ந்ததொன்றும் அறியாது இல்லம் நோக்கி நடந்தார். இல்லத்தின் வாயிலையடைந்ததும் வழக்கமாய் நில் என்று சொல்லிப் பணியாளனை நிறுத்தி உள்ளே செல்வது போல இன்றும் நிற்க என்று சொல்லி உள்ளே சென்றுவிட்டார். வழக்கமாய் வரும் பணியாளன் அதன் பின் தான் தங்குமிடம் சென்றுவிடுவான். அதையறியாத ஞானசம்பந்தர், நிற்க என்று ஆணையை மட்டும் காதில் வாங்கிக் கொண்டு அப்படியே வாயிலிலே நின்றிருந்தார். இரவு முழுதும் சென்றது. கைப்பந்தத்துக்கு எண்ணெய்விடாமலே இரவு முழுதும் எரிந்தது. அது மட்டுமல்ல. அன்று சோதனையாக விடாமழை பெய்தது. தம்மை மறந்து தம் ஆசாரியர் தமக்குத் தந்த சிவானுபத்திலேயே திளைத்திருந்த ஞானசம்பந்தர் மீது ஒரு மழைத்துளியும் விழவில்லை. அவர் கையில் இருந்த விளக்கும் அணையவில்லை. அவர் நின்ற இடத்துக்கு ஒரு கோல் அப்பால் மழைவெள்ளம் ஓடிற்றே தவிர அந்த ஒரு கோல் இடத்துள் மழை புகவில்லை.

பொழுது புலரும் நேரம் தெருப்பெருக்கிச் சுத்தம் செய்வதற்காக வெளியே வந்த ஞானப்பிரகாசருடைய பத்தினியார் இரவு முழுதும் மழை பெய்திருந்ததையும், அம்மழையில் நனையாது இப்புதிய மாணாக்கர் ஏந்திய விளக்கோடு நின்றிருந்ததையும் கண்டு வியந்து தம் கணவருக்கு இந்நிலையை உணர்த்தினார். பெருவியப்பெய்தி வெளியே வந்து பார்த்த ஞானப்பிரகாசர், ஞானசம்பந்தர் நின்ற நிலையையும் அவரிடம் காணப்பட்ட அருள் விளக்கத்தையும் உணர்ந்து பின்னும் வியப்பெய்திய தோடு மேல் நிகழ்வனவற்றையும் சிந்தித்தார். கண்களில் நீர்

ததும்ப தமது இரு கைகளாலும் ஞானசம்பந்தரைத் தழுவிக் கொண்டு "அன்பனே, இப்போது நீ உலகு அனைத்துக்குமே அருளொளி வழங்கும் தகுதியுடைய ஞானாசிரியன் ஆகிவிட்டாய். இனி நீ தகுந்த இடத்தில் சென்றிருந்து உன்னை வந்தடைகின்ற பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவஞான உபதேசம் செய்து ஆட்கொண்டு சைவ சமய பரிபாலனம் செய்து வருவாயாக" என்று வாழ்த்தினார்.

கேட்ட ஞானசம்பந்தர், வேறிடம் என்ற மட்டில் மனம் பதைத்து, தேவரீரைவிட்டு அடியேன் எங்ஙனம் பிரிந்திருப்பேன்' என்று தம் பிரிவச்சத்தையும் தெரிவித்து, இருப்பினும் குருவாணையைத் தவிரத் தமக்குத் தனிச்செயல் யாதும் இல்லை என்பதைப் பின்வரும் பாடலால் வெளியிட்டார்:

**கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை**
**கண்டதுண்டோ?**
**எனக்கும் உடற்கும் எனதிச்சை யோ – இணங்?**
**கார்புரத்தைச்**
**சினக்கும் கமலையுள் ஞானப்ர காச,**
**சிதம்பர, இன்று**
**உனக்கிச்சை எப்படி அப்படி யாக**
**உரைத்தருளே.**

### தருமபுரம்

இம் மறுமொழியைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த ஞானப்பிரகாசர், நல்லது, "காவிரியின் தென்கரையில் மாயூரத்து அருகே வில்வாரண்யம் என்ற ஒரு தலம் உள்ளது அங்கு யமதர்ம ராசன் வழிபட்டுப் பேறு பெற்றிருக்கிறான். அங்கு நீ சென்று ஒரு மடம் அமைத்துத் தங்கியிருந்து சைவ சமயத்தை வளர்த்து வருவாயாக" என்று வாழ்த்தி விடையளித்தனுப்பினார். எப்போது ஆசாரியரை வந்து தரிசிக்கலாம் என்று ஞானசம்பந்தர் கேட்டலும், குரு வாரந்தோறும் நீ இங்கு வரலாமென்று விடையளித்து ஞானப்பிரகாசர் அவருக்கு அப்போது குரு ஞானசம்பந்தர் என்ற பட்டத்தையுஞ் சூட்டியனுப்பினார்.

அவ்வண்ணமே அவர் ஆரூரினின்றும் நீங்கி, மாயூரம் வழிபட்டு வில்வாரண்யமடைந்தார். அங்கு தருமபுரீசுவரரையும் அபயாம்பிகையையும் பணிந்து தாம் தங்குவதற்கு ஒரு சிறு குடிலமைத்துக் கொண்டு தாம் கொண்டு வந்த சொக்கலிங்கப் பெருமானைத் தக்க கோயிலமைத்து அங்குப் பிரதிட்டை

செய்து முறையாகப் பூசித்து வந்தார். அவருடைய ஞான ஒளி எங்கும் பரவவே, மெய்யறிவை நாடிப் பல பகுதிகளிலிருந்தும் பக்குவமுள்ள சீடர் வந்து சேரலாயினர். வில்வாரண்யமாக இருந்த சோலை நாளடைவில் தருமபுரமென்ற சிற்றூராக மாறிற்று. தருமபுரீசுவரர் ஆலயத்தைப் பரிபாலித்து அங்கு வாழ்ந்து கொண்டிருந்த முனிவர்கள், இவருடைய பெருமைகளை நன்குணர்ந்து ஆலயத்தையும் பூசையையும் இவரிடத்து ஒப்படைத்து வேறிடம் சென்றார்கள். குருஞானசம்பந்தர் அங்கிருந்து குருவாரந்தோறும் திருவாரூர் சென்று ஆரூர்ப் பெருமானையும் தம் குருநாதரையும் வணங்கி வந்தார்.

ஒரு சமயம் இவர் தில்லை நடராசப் பெருமானை வழிபட்டு வந்தபோது ஓர் அற்புத நிகழ்ச்சி நிகழ்ந்தது. ஒரு நாள் அங்கு ஆயிரக்கால் மண்டபத்தில் தங்கி நிட்டை கூடிவிட்டார். சிவகாமி அம்மையாருடைய திருவருளால் இவருக்கு, அம்மையார் நிவேதனத்துக்காக வைத்திருந்த பாயாசம் முதலியன பிரசாதமாகக் கிடைத்தன. இவ்வற்புத நிகழ்ச்சியால் இவர் புகழ் மேலும் பெருகிற்று. பின்னர் இவர் தருமபுரம் மீண்டார்.

இந்த நிலையில் இவர், பிராசாத யோக நிலைகளை விளக்கிப் பிராசாத சட்கம் என்னும் யோக நூலையும் சைவத்தின் அடிப்படையான முப்பொருள்களுக்குமுரிய பத்து நிலைகளையும் விவரிக்கின்ற திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல் என்று சிறு ஞான நூலையுஞ் செய்தார்.

அக்காலத்தில் தில்லையில் மறைஞான சம்பந்த பண்டாரம் என்ற சிறந்த ஞானி வாழ்ந்திருந்தார். அவர் மிகவும் சிறப்புடைய பல சமய நூல்களும் புராணங்களும் செய்தவர். முத்தி நிலை என்ற நூல் எழுதினார். அதனுள் முத்தி பெற்ற ஆன்மாவானது முத்தி நிலையில், இதுகாறும், தனக்குள் ஆனந்தத்தை மறைத்த அறியாமையைச் சிவபெருமான் நீக்க, இப்போது தானே தன் ஆனந்தத்தை அனுபவிக்கிறது என்ற ஒரு கொள்கையைச் சொல்லியிருந்தார். இக்கொள்கை சைவ சித்தாந்தக் கொள்கைக்குப் புறம்பானது. அவரும் சைவசித்தாந்த மரபில் வந்திருந்தாலுங்கூட, அக்கொள்கை பிழை என்று எடுத்துக்காட்டித் திருவருள்தான் ஆனந்தம் தருவது என்பதை வலியுறுத்தி, முத்தி நிச்சயம் என்ற ஒரு சிறு நூல் செய்தார்.

பின்னும் சிலகாலம் செல்லவும், திருவாரூரில் ஞானப் பிரகாசர் முத்தியடைந்தார். இதையுணர்ந்த குருஞானசம்பந்தர்

அவருடைய சமாதியையடைந்து வழிபட்டு, தமது துயரத்தைப் புலப்படுத்தி ஞானப்பிரகாச நவரத்தினமாலை என்ற ஒரு நூல் பாடினார்.

### சமாதி

இவ்வாறு நூல் செய்தும், ஞான உபதேசம் செய்தும், மாணாக்கர்களை வளர்த்துவந்த காலத்தில், தாம் முத்தி பெறும் காலம் நெருங்கியதையுணர்ந்தார். உணர்ந்தபோது சைவ சமயத்தைப் பரிபாலித்து வரவேண்டும் என்று தமது ஞானாசிரியர் தமக்குக் கட்டளையிட்டதை நினைவு கூர்ந்தார். அப்போது, தமக்குப் பின் தருமபுரத்தில் நடைபெற வேண்டிய பரிபாலனச் செயல்கள் பல இருந்தமையையும் நினைவில் கொண்டார். முனிவர் பூசித்துத் தம்மிடம் ஒப்படைத்த தரும புரீசர் ஆலய பூசை நடைபெற வேண்டியிருந்தது. தாம் பூசித்து வந்த சொக்கலிங்க மூர்த்தியின் பூசையும் நிறைவேற வேண்டியிருந்தது. தவிர, அங்கு தம்மை நாடி வந்து உபதேசம் பெற்று வாழ்ந்து கொண்டிருந்த பக்குவிகட்கும் ஒரு ஞானாசிரியன் வேண்டியிருந்தது. இவற்றையெல்லாம் மனத்துக்கொண்டு தமக்குப் பின், ஞானாசிரியராய் அமர்ந்து இக்காரியங்களை நடத்தும் நிலையில் ஒருவரை அமர்த்த எண்ணினார்.

அப்போது ஞானபுரீசுவரர் என்ற பெயரால் புதிதாக ஒரு சிவலிங்கப் பிரதிட்டை செய்து, கோயிலும் எழுப்புவித்தார். உடன், தம் மாணாக்கர்களில் சிறந்தவர் என்று தாம் கருதிய ஆனந்த பரவசர் என்பவருக்கு முடிவான ஞான உபதேசம் செய்து, தமது ஆசாரியத் தலைமையையும் நல்கி, தாம் அச்சிவலிங்கப் பெருமான் திருவடி நிழலிலே சிவ சமாதி கூடினார். ஆனால் அவ்வானந்த பரவசரோ, முன்னமே அதிதீவிர பக்குவம் பெற்றிருந்தார், அதனால் தம் ஆசாரியர் தமக்கு அபிஷேகம் செய்வித்த உடனேயே உலகவாதனை முழுமையும் நீங்கப்பெற்று ஆசாரியரை வணங்கி, ஞானபுரீசர் ஆலயத்துக்கு மேல் திசையில் சென்று அதன் சிகரத்தை நோக்கியவாறே நிட்டை கூடி சிவசமாதியில் அமர்ந்து சிவபரிபூரணம் எய்திவிட்டார்.

அங்கிருந்த அடியவரும் மாணாக்கரும் அப்போது கூடி தங்களுக்கு ஞானாசிரியன் இல்லையே என்று மீண்டும் கவலையுற்றார்கள். ஆகவே அவர்கள் ஞானபுரீசுவரர் சந்நிதியில் சிவ சமாதி கூடியிருந்த பரமாசாரியர் திருமுன் சென்று தங்கள் நிலையை விண்ணப்பித்துக் கொண்டார்கள். அப்போது திரு

வருளால் குருமூர்த்திகள் தம் சமாதியினின்றும் வெளிப்போந்து, தருமை ஞானபீடத்தை நிலை நிறுத்தும் பொருட்டும் அடியார் களுக்கு ஞானாசாரியத் தலைமை வழங்கும் பொருட்டும், மற்றோர் ஆசாரியரைத் தேர்ந்தெடுத்தார். ஆனந்த பரவசருக்கு அடுத்த பக்குவியாக இருந்தவர் சச்சிதானந்தர் தேசிகர் என்பவர். உலகத்தில் பக்குவம் உடையவர்கள் அல்லாதவர்கள் என்ற இரு திறத்தாரும், இன்று போலவேதான் அன்றும் இருந்திருக்கிறார் கள். இவருக்குப் பக்குவம் வாய்க்கவில்லை; நிட்டை கை கூட வில்லை. ஒருபுறம் ஆனந்த பரவசர் எதிர்பார்த்ததற்கு அதிகமான பக்குவம் அடைந்து முத்தியடைந்தேவிட்டார். மறுபுறம் குரு மூர்த்திகள் எதிர்பார்த்த பக்குவம் சச்சிதானந்த தேசிகருக்கு விளையவேயில்லை. அதன்மேல் அவர் இவரை நோக்கிப் பின் வரும் பாடலைப் பாடினார்:

தானந்தம் ஆதிநடு இல்லா தோங்கும்
சச்சிதா னந்தமயந் தானே ஆன
ஆனந்த பரவசனைக் கண்டும் கண்டும்
அந்தந்தோ பரகதியை அறிந்தீ ரில்லை;
மானந்தான் வடிவாகிநிற்ற லாலோ?
மலமாயை கன்மம் இவை மடியா தாலோ?
ஞானந்தான் உமதுளத்தில் உதியா தாலோ?
நாம் அறியோம், உமதுமயல் நவிற்று வீரே.

இதைச் சொல்லி மீண்டும் அவர் மீது தம் ஞான நோக்கத்தைச் செலுத்துதலும், சச்சிதானந்தருக்கு, மலமாயை கன்மங்கள் பற்றுவிட்டன. உண்மை ஞானம் பிறந்து நிட்டானுபூதி நிலை யையும் எய்தினார். மகிழ்ந்த ஆசாரியர் ஆசாரியத் தலைவரா யிருந்து ஆலயங்களைப் பாதுகாத்துச் சைவ சமய பரிபாலனம் செய்து வரும்படி பணித்து, வைகாசித் திங்கள் அமரபக்கத்துச் சஷ்டிதிதியில் சிவ சமாதியெய்தி சிவபரிபூரண மெய்தினார். இவ்வாறு இவர் சமாதி கலைந்து மாணாக்கரைத் தலைமை யிலிருத்தி மீண்டும் பூரணசமாதி பெற்றமை ஜீவசமாதி என்று சொல்வார்கள். இது சம்பிரதாயமாக வழங்கிவரும் வரலாறு.

### ஆதீனத்தின் பிற்கால நிலை

குருஞானசம்பந்தர் தோற்றுவித்த ஆசாரிய பீடம் அவர் காலமாகிய 15ஆம் நூற்றாண்டினிடைப் பகுதி முதல் இன்று வரை வளர்ந்து வந்திருக்கிறது. அவர் தொடங்கி இன்றுவரை 26 ஆசாரியர் இதில் தலைமை தாங்கி வந்திருக்கிறார்கள். நான்காவது

ஆசாரியர் மாசிலாமணி தேசிகர். அவர் காலத்தில் சீவைகுண்டத்தில் தோன்றிய குமரகுருபரர் இங்கு வந்து அவருடைய அருளுபதேசம் பெற்றுக் காசிக்குச் சென்று ஹிந்துஸ்தானி மொழிகற்று அங்கு சைவ சமயத்தின் சிறப்புக்களை எடுத்துக் கூறி, காசியிலிருந்த முகலாய மன்னனிடம் பெருஞ்சிறப்புப் பெற்றார். அவர் அங்கு நிறுவிய குமாரசுவாமிமடம், இன்றும் பெரும்புகழ் பெற்று விளங்கிவருகிறது. மடத்தின் தலைமை யிடம் அங்கிருந்து திருப்பனந்தாளுக்கு 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மாற்றப் பெற்று, இங்கு சிறப்பாக நடைபெறு கிறது. குமரகுருபரர் கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மதுரைக்கலம்பகம், சிதம்பரச் செய்யுட் கோவை, நீதிநெறி விளக்கம் முதலான பல அருள் நூல்களைச் சிறந்த இலக்கியங்களாகப் படைத்திருக்கிறார். ஐந்தாம் ஆசாரி யரிடம் உபதேசம் பெற்ற வெள்ளியம்பலவாணத் தம்பிரான் என்ற அடியவர் வடமொழியிலும் பெரும் பண்டிதராய்ச் சிறந்த தமிழ்த் தோத்திரங்களும் சாத்திர உரைகளும் செய்தார். இவர் காலத்தில் அழகிய திருச்சிற்றம்பல தேசிகரென்ற பெயருடைய ஓர் அடியவர், தாயுமான சுவாமிகளுக்கு உடன் காலத்தவராய்ப் பல தோத்திர நூல்கள் செய்தார். இவர் சொர்க்கபுரம் என்ற ஒரு தனி மடத்தைச் சொர்க்கபுரத்தில் நிறுவினார். இம்மடம் 20ஆம் நூற்றாண்டினிடைப் பகுதியில் சீர்கெட்டு மறைந்து விட்டது. ஆறாவது தலைவராயிருந்த திருஞான சம்பந்த தேசிகர், சம்பந்த சரணாலயர் என்ற அடியவருக்குக் குரு. இந்த அடியவர் மைசூர் மன்னனிடம் சிறப்புப் பெற்றதோடு, கந்தபுராணச் சுருக்கம் என்ற சிறந்த இலக்கியமும் படைத்தவர். அடுத்த ஆசாரியர், திரு அம்பல தேசிகரென்பவர் வடமொழியில் வருணாசிரம சந்திரிகை என்ற சிறந்த நூல் செய்து சிவஞானிகள் வேத வரையறைகளைக் கடந்தவரென்று நிரூபித்தார். ஒன்பதாவது ஆசாரியர் திருநாவுக் கரசு தேசிகர். இவர் காலத்தில் இலக்கியத்தில் புகழ்பெற்ற படிக்காசுப்புலவர் வாழ்ந்து புள்ளிருக்கு வேளூர்க்கலம்பகம் பாடினார். பத்தாவது ஆசாரியராயிருந்தவர் சிவஞான தேசிகர். இவர் காசிவரையில் யாத்திரை சென்று அங்குள்ள விசுவநாதர், விசாலாட்சியம்மை, அன்னபூரணி, தட்சிணாமூர்த்தி, துண்டி விநாயகர், கால பைரவர் முதலான 11 மூர்த்திகளுக்குப் பதிகம் பாடினார். இப்பதிகங்கள் திருவருட்பா என்று வழங்கும்.

இப்போது இந்த ஆதீனத்தின் தலைமையில் இருபத் தாறாவது ஆசாரியராக இருப்பவர்கள் ஸ்ரீசண்முக தேசிக பரமா

சாரிய சுவாமிகள். இவர்கள் தமது புலமையினாலும், பக்தியினாலும், சீலத்தாலும், தமிழ் மக்களினம் அனைத்தின் உள்ளத்தையும் கவர்ந்தவர்கள்.

இந்த ஆதீனத்தின் சிறப்புக்களிலொன்று 27 சிறப்புடைய தேவாலயங்களின் நிர்வாகம் இதன் வசம் இருப்பது. அட்ட வீரட்டங்களில் யம சங்காரம் செய்த திருக்கடவூர், காம சங்காரம் செய்த திருக்குறுக்கை, தக்கயாக சங்காரம் செய்த திருப்பறியலூர்; சம்பந்தர் அவதாரத்தலமான சீகாழி, முத்தித்தலமான திருநல்லூர்ப் பெருமணம், தட்சிண கைலாசமாய்ச் சிவபெருமான் அப்பருக்குக் காட்சியளித்த திரு ஐயாறு, சம்பாதி சடாயு வழிபட்ட புள்ளிருக்கு வேளூர் என்னும் வைத்தீசுவரன் கோவில், ஒரு பெண்ணின் பக்திக்காகச் சிவபெருமான் தம் கழுத்தை வளைத்த திருப்பனந்தாள், சனிக்குச் சிறப்புடைய திருநள்ளாறு ஆகிய சிறப்புமிக்க தலங்கள் இவ்வாதீனத்தின் பராமரிப்பில் இருந்து வருகின்றன. மூன்றாம் குலோத்துங்க சோழன் சரப மூர்த்திக்காகக் கட்டிய அபூர்வமான திருபுவனம் கோயிலும் இதனுடைய பராமரிப்பிலுள்ளது.

## நூல்கள்

குருஞான சம்பந்தர் செய்த நூல்களில் 8 செய்யுள் நூல்கள் 1948இல் தருமபுர பண்டார சாத்திரம் முதல் தொகுதி என்ற பெயரோடு முதலில் ஒரு தொகுப்பாக வெளியிடப்பட்டன. பின்னர் இந்த எட்டு நூல்களும் 1971இல் விரிவான முன்னுரையோடு, வரலாற்றுச் சித்திர விளக்கத்துடன் குருஞான சம்பந்தர் அட்டகம் என்ற பெயரில் வெளியிடப்பட்டன. இங்குள்ள நூல்கள் பின்வரும் எட்டு, 1. சொக்கநாத வெண்பா, 2. சிவ போகசாரம், 3. சொக்கநாதக் கலித்துறை, 4. ஞானப்பிரகாச மாலை, 5. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், 6. சோடச கலாப் பிராசாத சட்கம், 7. முத்தி நிச்சயம், 8. நவரத்தினமாலை. இவற்றுள் 1, 3, 4, 8 - தோத்திர நூல்கள், 6 - யோக நூல். 2, 5, 7 - இவை ஞான சாத்திர நூல்கள். இவற்றுள் 1, 2, 7, மூன்றும் வெண்பா நூல்கள். 3, 4, 8, கட்டளைக் கலித்துறை. 5 அகவல். 6 விருத்தம். இவற்றின் மொத்தப் பாடல் தொகை 334.

இவற்றுள் சிவபோகசாரம் தமிழ்நாடெங்கும் சென்ற நூற்றாண்டிலேயே மிகவும் பிரசித்தமாக வழங்கிவந்த நூல். சொக்கநாதக் கலித்துறையும் ஓரளவு, ஆதினத்துக்கு வெளியே வழங்கிவந்தது. சொக்கநாதக் கலித்துறை மட்டும் குருஞான

சம்பந்தர் சரித்திரமெழுதிய பெரும்புலவராய் விளங்கிய தரும புரத்துத் தம்பிரான் ஸ்ரீ சண்முக சுவாமிகளால் சரித்திரத்தோடு சேர்த்து அச்சிடப்பட்டது. (இந்த சுவாமிகள் 1926இல் சமாதி யடைந்தார்.) பிராசாத சட்கம் ஆதீனத்து அடியவரான நாகலிங்க முனிவரால் 1931ஆம் ஆண்டில் முதன்முதலில் வெளியிடப் பட்டது. ஏனைய நூல்கள் ஆதீனச் சார்பில் பல்வேறு சமயங் களில் முன்னமே வெளிவந்துள்ளன.

இவையன்றிப் பின்னும் இருநூல்கள் குருஞான சம்பந்தர் செய்தவை: ஞானாவரண விளக்கம், சிவபூசா பத்ததி என்ற இரண்டு. இவற்றைப் பின்னே விரிவாக ஆராய்வோம். சண்முக சுவாமிகள் எழுதிய சரித்திரத்தில், பேரானந்த சித்தியாரும் குரு ஞான சம்பந்தர் செய்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் சரித்திரம் எழுதிய காலம், ஆதீனங்களைப் பற்றியோ, அங்குள்ள குருமுதல்வர்களைப் பற்றியோ நூல்களைப் பற்றியோ சிறிதும் விளக்கமில்லாத காலம்; சண்முக சுவாமிகளே முதல் முதல் வரலாறு எழுதினார். பேரானந்த சித்தியார்* குருஞான சம்பந்தர் செய்ததன்று. இப்படியே பரமானந்த தீபம் (விளக்கம்) என்ற ஒரு நூலும் குருஞான சம்பந்தர் செய்ததாகச் சொல்லப்பட்டது. இதுவும் பிழை. இந்நூல் 18ஆம் நூற்றாண்டில் எழுந்த சாமானிய நடையுடைய வேதாந்த நூல். இவற்றை இங்கு நாம் கருதவில்லை.

### சொக்கநாதக் கலித்துறை

தோத்திர நூல்; ஆசிரியரது முதல்நூல். 11 கட்டளைக் கலித்துறை. இதன் முதல் பாடல் வரலாற்றில் காட்டப்பட்டது. சிவபெருமானை நினைந்து பாடியாடும்படி செய் என்று வேண்டு வதோடு, தம் கையில் எழுந்தருளிவந்த மகாலிங்கத்தில் என்றும் மகிழ்ந்து உறைந்து, அன்பர்களுக்குப் பவத்துயர் மாற்றி என்றும் சிவானந்தப்பேறு அளிக்க வேண்டும் என்றும் வேண்டுகிறார்:

ஏறாத விண்ணப்பம் கூறாநின் றேன், அஃ தேதெனிற்கேள்;
மாறாமல் இந்த மகாலிங்கந் தன்னின் மகிழ்ந்திருந்தே
ஆறாப் பவத்துயர் ஆற்றிச் சிவானந்தம் அன்பர்க்கென்றும்
பேறாக நல்குதி, மாமது ராபுரிப் பிஞ்ஞகனே. 5

எல்லாப் பாடல்களிலும் உலகியல்பைத் தம்மேல் ஏறிட்டுக் கொண்டு சொல்கிறார்.

---

* பேரானந்த சித்தியார், கண்ணுடைய வள்ளல் பாடியதென்று கருதத்தகும். எமது தமிழிலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு நூலில் பார்க்க.

கல்லது நெஞ்சம்; இரும்பே இருசெவி; கண்கள் மரம்;
சொல்லுவதும் பொய்; அவமே தொழில்; துக்க சாகரமாம்
அல்லலென் பங்கு; நின் அன்பர்பங் கானந்த மாக வைத்தாய்!
நல்லது; நல்ல மதுரா புரிச்சொக்க நாயகனே. 3

தம்முடைய விருப்பம் அனைத்தையும் ஒரு பாடலில் அழகாகச் சொல்லுகிறார்.

பாடும்படி செய்; நினைநினைந் தேத்திப் பணிந்தெழுந்தே
ஆடும்படி செய்; மலம்ஐந்து மேஅடி யேன்உளத்தே
வீடும்படி செய்; நின் ஆனந்த சாகரம் மேல் எனவே
நாடும்படி செய்; மதுரா புரிச் சொக்க நாயகனே. 4

இந்நூல் பாடல்கள் யாவும் மதுராபுரிச் சொக்க நாயகனே, பிஞ்ஞகனே என்ற முடிபுகளையுடையன.

ஞானப்பிரகாச மாலை

இதுவும் தோத்திர நூல்; கமலை ஞானப்பிரகாசர் தம்மை ஆட்கொண்ட சமயம் பாடியது. 46 கட்டளைக் கலித்துறைப் பாடல்கள். அக்காலத்தில் ஆசாரியருக்கு வழங்கிய ஒரு கௌரவ மான பெயர் பண்டாரம் என்பது; ஞானநிதி என்பது பொருள்; அதுபற்றி இந்நூல் பண்டாரக் கலித்துறை என்றும் பெயர் பெறும். ஒவ்வொரு பாடலிலும் ஞானப்பிரகாசர் தமக்கு அருள் செய்த திறத்தைச் சொல்லிப் பாடுகிறார். திருவாரூரில் வாழ்ந்த கமலை ஞானப்பிரகாசர் தம் சீடரை ஆட்கொண்ட சமயம் அவர் பக்குவத்தை உணர்ந்து, "நீ வடக்கே சென்று வில்வாரண் யத்தில் தங்கிச் சைவ சித்தாந்த நெறிக்கே தொண்டு புரிவாயாக" என்று கட்டளையிட்டபோது, குருஞான சம்பந்தர் பாடிய பாடல் 'கனக்கும் பொதிக்கும் எருதுக்கும்* என்பது. ஞானப் பிரகாச மாலைப் பாடல்கள் மாலை என்ற நூலாகத் தனியே பாடப்பெறவில்லை; முதலிற் சிலபாடல்களை மட்டும் தமக்கு ஆசாரியர் அருள் செய்தபோது ஒரு பதிகம் போலப் பாடினார். ஏனைய பாடல்கள் இவர் குருவாரந் தோறும் திருவாரூர் சென்று தம் குருநாதரை வணங்கியபோது பாடியனவாகும். இதனுள் அப்போது பின்னும் பல பாடல்கள் இருந்திருக்கக்கூடும். அவை

* இப்பாடல் பழைய பதிப்புக்களில் ஞானப்பிரகாசமாலையில் சேர்த்தே பதிப்பிக்கப் பெற்றுள்ளது. ஆனால் தொகுப்பு நூலாகிய ஞானசம்பந்தர் அட்டகத்தில் தனிப்பாடலாகப் பின்னே சேர்க்கப்பட்டுள்ளது.

கிடைக்கவில்லை. பாடல்களில் குருவை கமலை ஞானப்பிர காசன் சிதம்பரநாதன் கமல பொற்பாதன் மதுரேசன் ஞான சம்பந்தன் என்றெல்லாம் பாடித் துதிக்கிறார். மதுரேசன் சம்பந்தன் என்று சொல்வது இவர் மதுரைச் சொக்கலிங்கத்தைப் பூசிக்குமாறு குருநாதர் பூசை எழுந்தருளப் பண்ணியமையி னாலும் மதுரையில் திருஞான சம்பந்தர் நிகழ்த்திய அற்புதங் களின் நினைவினாலும் என்று கருதலாம் (அல்லது சம்பந்தரைக் குறிப்பிடும் இறுதி 2 பாடல்களும் (34, 36) குருஞானசம்பந்தரைப் பின்வந்தோர் பாடிய பாடல்களாகவும் இருக்கக்கூடும்). 35ஆம் பாடல் 'பெருவேதனையுறும் காயத்தை நீக்கி' என்பது; இது நவரத்தினமாலைப் பாடல், ஞானப்பிரகாச மாலைக்குரியதன்று.

இந்நூற் பாடல்கள் முழுமையும் ஆசாரியர் திருவடியில் தாம் பூண்ட தொண்டையும் தமக்கு அவர் அருள் செய்த பெருமையையும் அதனால் தம் மனத்தில் தோன்றிய பெருமித உணர்ச்சியையும் பாடுவன. சிறப்பான சில பாடல்கள் பின்வருவன.

ஆரார் பகைக்கினும் ஆரார் நகைக்கினும் ஆவதென்ன?
சீரார் கமலையுள் ஞானப்ர காசன்என் சிந்தையுள்ளே
பேரா திருந்து சிவானு பவந்தரப் பெற்றதனால்,
வாராது சென்மமும், போகாது பேரின்ப வாரியுமே. 12

தந்தையும் தாயும் தமர்களும் போகமும் தாரணியும்
எந்தையும் எந்தம் உயிர்க்குயி ரானும் இரவினுக்கே
சந்தையும் பெற்ற கமலா லயனும் தனுவும் என்றன்
சிந்தையும் ஞானப் பிரகாச தேசன் திருவடியே. 14

கவுளிய மார்க்கங் கலந்தழித் தோன்,கம லாலயத்தோன்,
இவுளி நரித்திர ளாக்கிவைத் தோன்,இசைப் பாணனுக்குப்
பவுளி யுரைத்தருள் ஞானப்ர காசன் பயின்மடத்தில்
கெவுளி உரைக்கும் பதிபசு பாசத்தின் கேள்விகளே. 19

'ஞானப்பிரகாசன் பயில்மடத்தில், கெவுளி உரைக்கும் பதிபசுபாசத்தின் கேள்விகளே' என்று இவர் இங்கு கூறும் கூற்று பெரியபுராணத்தில் திருநகரச் சிறப்பைக் கூறுமிடத்து,

உள்ளமார் உருகாதவர், ஊர் விடை
வள்ளலார் திருவாரூர் மருங்கெலாம்
தெள்ளுமோசைத் திருப்பதி கங்கள்; பைங்
கிள்ளை பாடுவ, கேட்பன பூவைகள்.

*என்று வரும் திருவிருத்தத்தை நினைவூட்டும். எவ்வாறு கடின மான தமது நெஞ்சை உருக்கி அதில் ஞானப்பயிர் விளைத்தார் என்பதைப் பயிர்த்தொழில் முறையையொட்டிச் சொல்லிய பாடல் அழகானது:*

செத்திப் படுத்தித் தெளிவாக்கிச் செந்நெல் தெளிப்பதுபோல்
புத்திக் கடினங் கரைத்தமன்னே, இன்ப பூரணத்தைச்
சத்திக்கு மேலினைக் கீழினை மும்மலத் தன்மைதனைத்
தித்திக்கச் சொன்னது ஞானப்ர காசன் திருவுளமே. 25

*மதிப்புயர்ந்த பொன் அணிகலன்களோடு புல்லும் கல்லும் என்பும் இறகும் தரிப்பதுபோல், பக்தி நிறைந்த அன்பர் உரை யோடு என் அன்பில் சொல்லும் கேட்டருள் என்று கூறியது சுவையுடையது:*

பொன்பதினாயிர மாற்றுள்ள மாலையும் புல்லும் கல்லும்
என்பும் இறகும் தரித்தது போல், இனி தாயவுள்ளத்து
அன்பர் உரையையும், ஆரூர, என்னுடை அன்பில் சொல்லும்
இன்புடன் கேட்டருள் ஞானப்ர காச எழிற்குருவே. 80

*பின்னே இவருடைய சிவபூசாவிதி என்ற நூல் பற்றிச் சில சொற் கள் கூறுகிறோம். அங்கு ஞானப்பிரகாசர் துதியாகக் காணப் படும் பின்வரும் பாடலும், ஞானப் பிரகாசமாலைக்குரியதா கவே இருக்கலாம்:*

தானே வரக்கண்டும் கைப்பாணி வாங்கியிற் தாரணியில்
ஊனே வளர்த்துத் திரிவதல்லாலுண்மை யாம்சிவத்தில்
யானே இறக்க இருப்பதெந் நாட்சொல், எனதுளத்தில்
தேனே கமலையில் ஞானப்ர காச சிதம்பரனே.

*பின்னால் 'முத்தி நிச்சயம்' பாடிய இவர் எது முத்தி நிச்சயம் என்று இங்கு ஒரு பாடலில் சொல்லுகிறார்:*

வல்லான் கமலையுள் ஞானப்ர காசன் வசனமுணர்ந்து
எல்லாம் வெறும்மித்தை என்றுகண் டேன், இன்ப வாரியுள்ளே
செல்லாமற் சென்றதைத் தேக்காமற் றேக்கித் தினந்தினமும்
நில்லாமல் நின்றுகொ ண்டேன்,இது வேமுத்தி நிச்சயமே. 7

*இப்பாடல்களில் பலவிடத்தில் அருணகிரிநாதருடைய தொடரும் கருத்தும் காணப்படும்.*

## சொக்கநாத வெண்பா

குருஞானசம்பந்தர் தம் ஆன்மார்த்த மூர்த்தியான சொக்க லிங்கப் பெருமானை மனமுருகித் துதித்த வெண்பாக்கள் 100 கொண்டது. இவை தனித்தனிப் பாடல்களாக வெவ்வேறு சமயங்களில் பாடப்பட்டமையால் பொருள் தொடர்புடைய வையாயும் இரா, பொருளமைதியும் வெவ்வேறாயிருக்கும். 94 மட்டும் நூலென்றும் மற்றவை மிகை என்றும் அச்சிட் டிருப்பதில் பொருளில்லை; நூறுமே நூலாகும். இறுதிப் பாட லான 'தண்டுவரும் குண்டுவரும்' என்பது இந்நூலுக்குரியதல்ல வென்று புலப்படுகிறது. 10 பாடல்கள் தவிர ஏனையவை யாவும் சொக்கநாதர் என்ற மகுடத்தோடு முடிவன. பாடல்கள் எளிய நடையில் கருத்துக்களைச் சுவைபடச் சொல்லுகின்றன.

பாடிய காலம் வெவ்வேறு என்பதற்குப் பின்வரும் பாடல் எடுத்துக்காட்டு:

> எல்லார் கருத்தும் இதமா உரைக்கறியேன்,
> நல்லாங்கு தீங்கிதெனு நாடெறியேன், – எல்லாரும்
> நீரூரும் வேணி நிமலா, மதுரையில்வாழ்
> ஆரூரா, சொக்கநா தா. 53

ஆரூரா என்றமையால் இது இவர் ஆரூர் அடைந்து குரு உப தேசம் பெற்றபின் பாடியதென்று கருதத்தக்கது. இப்பாடலில் வரும் நல்லாங்கு என்ற சொல்லாட்சி சிறப்பு. இது பொல்லாங்கு என்ற சொல்லுக்கு மாறு: நன்கு (நன்மை), நல்லாங்கு என வரு கிறது. மேலும் பல அரிய சொல்லாட்சிகள்: அகிர்த்தியம், கருணாநிதி, தன்மதுரை, தேகாபிமானம்; பரதேசிகாவலன், பாடாவிதி, மலகடினர், மோகாபிமானம், வேதசிகை சொக்கநாதப் பெருமானைச் செங்கமலப் பொற்பாதன் என்றும் உரைக்கிறார் (27).

அருணகிரிநாதர் கூறும் பேசா அனுபூதியை இருமுறை குறிப்பிடுகிறார். 'யான் செய்தேன் பிறர் செய்தார் என்னது யான் என்னும் இக்கோண்' என்னும் சிவஞான சித்தி வரியை, 'என்னது யான் என்பதுவும் யான் பிறர் செய்தார் எனலும்' என்ற வரிகளில் (60) எடுத்து ஆளுகிறார். 'ஆறாறு தத்துவமும் ஆணவமும்' என்ற உண்மை விளக்கத் தொடர் அப்படியே பலமுறை இங்கு வருகிறது. திருவிளையாடற் கதைகளில் எல்லாம் வல்ல சித்த ரானது, கால்மாறியாடியது, கேழற்குட்டிக்கு முலை கொடுத்தது, பரிநரியாக்கியது, பழிக்கஞ்சியது, சுந்தர பாண்டியராக அரசு புரிந்தது ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார். எல்லாம் வல்ல சித்தர்

*என்று பல முறை கூறுகிறார். நீ வன்பர்க்கு அருள்புரியாய் என்றால் உன்னை எல்லாம் வல்ல சித்தர் என்பது எவ்வாறு?' என்று கேட்கிறார்.*

அன்பர்க் க்ருள்புரிவ தல்லாமல் தேவரீர்
வன்பர்க் கருள்புரிய மாட்டீரேல் – உம்பர்தொழு
நல்லார் புகழ் மதுரை நாதரே, தேவரீர்க்
கெல்லாமும் வல்ல சித்த ரேன்? 79

*நூல் முழுமையும் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் நிரம்பியிருப்பது இயல்பு. சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலர் என்ற மூவகை ஆன்மாக்களுக்கும், குருவாக மானிட உருவில் தோன்றியும், இடபாரூடராக வந்தும், உள்நின்றும், பெருமான் உணர்த்துகிறார் என்பதைத் தெளிவாக உரைக்கிறார்:*

ஆரிடத்தில் வந்தும், அடியேன் உளத்திருந்தும்,
ஓரிடத்தில் உற்பவித்தும், உள்ளபடி – பாரிடத்தில்
நாயேன் உளமகிழ நன்றா உணர்த்திடுவாய்,
தாயே நீ சொக்கநா தா. 15

*ஆன்மா தானே பதியைத் தேடியடைய முடியாது, இறையருள் வேண்டும் என்று கூறுகிறார்:*

என்னால் உனையடைய வல்லேன் எனில், இடரில்
இந்நா ளளவும் இருப்பேனோ? – பன்னாகம்
புண்டவா, வேணிப் புனிதா, மதுரைநகர்
ஆண்டவா, சொக்கநா தா. 71

*அட்டாங்க யோகத்தால் முத்தி கிட்டாது . அவ்யோகம் நீங்கியே ஒழியாச் சிவானந்தம் விளையும்:*

இட்டா சனத்தில் இரவுபக லற்றிடத்தில்
முட்டா திருக்கஅருள் முற்றுந்தா – அட்டாங்க
யோகந்தான் நீங்கி ஒழியாச் சிவானந்த
ஆகம் தா சொக்கநா தா. 69

*தமது பொய்யும் கவடும் அகிர்த்தியமும் இறைவன் செய்விப்பனவே:*

வாக்கிலுரை பொய்யே, மனம் நினைப்ப தும்கவடே,
ஆக்கை தினம்செய்வ தகிர்த்தியமே; – நோக்கில்
திரிவிதமும் இப்படிநீ செய்வித்தால், முத்தி
தருவிதமென், சொக்கநா தா. 41

*'உன்னைச் சிங்காரித்து உனதழகு பாராமல், என்னைச் சிங்காரித்து இடர்ப்பட்டேன்' என்ற இவரது (92) வரிகளைத் தாயுமானவர் அப்படியே எடுத்து,*

உன்னைச் சிங்காரித் துனதழகு பாராமல்
என்னைச் சிங்காரித் திருந்தேன் பராபரமே.

*என்று அமைத்திருக்கிறார்.*

*இந்நூல் நயத்துக்கு எல்லாப் பாடல்களையும் எடுத்துக் காட்டாய்த் தரலாம். சில மட்டும் கீழே காண்க:*

பேரன்பன் அல்லன், பிழைசெய்யான் தானல்லன்,
ஓரன்பும் இல்லா உலுத்தனேன் – பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா. 68

நானோ தனுகரணம், நானோ மலமாயை,
நானோ இவைகள் நடத்துவது? – நானோதான்
பூண்டவினை அறுப்போன், புண்ணியபா வம்புரிவோன்?
ஆண்டவனே, சொக்கநா தா. 81

நின்னளவி லானந்த நின்கருணை சற்றேனும்
என்னளவில் தோற்றா திருந்தக்கால் – நின்னளவில்
பூரணம் பொய், அனந்தம் பொய், கருணை பொய், உரைத்த
ஆரணம்பொய், சொக்கநா தா.

**நவரத்தின மாலை**

*இது 9 கட்டளைக் கலித்துறைப் பாடல்களாலான சிறுநூல். பாடல்கள் ஞானப்பிரகாச மணியே என்ற முடிபையுடையன. அவர் பரிபூரணமான நிலையில் குருஞான சம்பந்தர் இப்பாடல்களைப் பாடினார் என்பது வரலாறு. குரு வாரந்தோறும் திருவாரூர் சென்று குருநாதரை வணங்கத் தாம் அனுமதி பெற்றிருந்ததை ஏழாம் பாடலில் குறிப்பிடுகிறார். தம்மை இங்கே நிறுத்தி அவர் போய்விட்டார் என்ற குறிப்பைப் பல பாடல்கள் உணர்த்துகின்றன. 'அடியேன் தனக்கு ஒரு வாசகமின்றி என்னைப் பிரிவது உனக்கழகோ, திருவாசகமுரை' என்பது ஏழாம் பாடல். எனினும், ஞானப்பிரகாசமாலையில் காணப்படும் பொருட் சிறப்பும் நடைச் சிறப்பும் இப்பாடல்களில் இல்லை.*

குருவாரந் தோறுமே வந்துனைப் போற்றவும், கூறியசொற்
கருளேநின் காயத்தை நீக்கினை யேல்,அடி யேன்தனக்கு
ஒருவா சகமின்றி என்னைப் பிரிவ துனக்கழகோ?
திருவா சகமுரை, ஞானப்ர காச சிகாமணியே. 7

## சிவபோக சாரம்

*குருஞான சம்பந்தர் நூல்களில் சைவ உலகம் மிகவும் நன்கறிந்த நூல் இது. 139 வெண்பாக்களுடையது. இந்நூல் நெடுங்காலமாக அச்சில் இருந்தபடியாலும், சிறந்த பொரு ளுடைமையாலும், குருஞானசம்பந்தரை அறியாதவர்களும் இந் நூலை நன்கு பயின்றிருந்தார்கள். நூலின் ஆசிரியர் தாம் பெற்ற சிவானுபவத்தின் பலனை எளிய சொற்களால் பிறர் அறிந்து உய்யுமாறு உணர்த்துகிறார். தமது குருவை வணங்குகின்ற சித்திதருநாதன் என்ற காப்புச் செய்யுள் பழமையானது.*

*சாத்திரம் படிப்பதும் துதிப்பதும் பூசிப்பதும் பயனற்றது என்று இவர் ஒரு பாடலில் சொல்கிறார்:*

உரையிழந்தால், உன்னும் உணர்விழந்தால், மாயைத்
திரையிழந்தால் காண்கின்ற தேவை – வரைபெருக
வாசிப்பதும், நாவால் வாழ்த்துவதும், நாடகமாய்ப்
பூசிப்பதும், சுத்தப் பொய். 13

*இது கருவி கரணங்களுக்கு எட்டாத நிலையை உணர்த்த வந்ததே யன்றி, வழிபாடு கூடாது என்று சொல்ல வந்தது அன்று. சிவ பூசையை வலியுறுத்திச் சொல்கின்ற பின்வரும் பாடலைக் காண்க:*

ஆசையறாய், பாசம்விடாய், ஆனசிவ பூசைபண்ணாய்,
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்; – சீசீ,
சினமே தவிராய்; திருமுறைகள் ஓதாய் –
மனமே, உனக்கென்ன வாய். 138

*ஒரு பாடல் சிறப்பான சிவ தலங்களின் பெயரைச் சொன் னாலே முத்தி என்கிறது:*

தில்லைவனம் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் கூடல் முதுகுன்றம் – நெல்லைகளர்
காஞ்சி கழுக் குன்றம் மறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும். 139

*தலங்களுக்கு அடைமொழி இன்றியே சொல்லியிருப்பது சிறப்பு. இங்கு 15 தலங்கள் உள்ளன.*

*'எவ்வுயிரும் காப்பதற்கோர் ஈசனுண்டோ இல்லையோ' என்பது பழம்பாடல். அவ்வையாருடன் பிறந்ததாகக் கூறப்படும் திருவள்ளுவர் தம்மைத் தாய் கைவிட்டுச் சென்றபோது பாடிய தாக வரலாறு; பழம்பாடலில் அன்னாய் என்றிருக்கும் விளி இக்கதையை ஆதரிக்கும். இப்பாடல் சிவபோக சாரத்தில் 'அன்னாய்' என்ற சொல்லை 'நெஞ்சே' என மாற்றி அமைக்கப் பெற்றுள்ளது (78) இதைச் சிவபோக சாரத்தில் சேர்ப்பது பிழை.*

*சித்தியாருக்கே விளக்கமாக ஞானாவரண விளக்கம் என்ற விரிவான நூல் செய்த இவர், சித்தியாரைப் போற்றிப் பாடுவதில் வியப்பில்லை.*

ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப் – பேறாகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
ஓர் விருத்தப் பாதிபோ தும். 23

*இதைத் தழுவித் தாயுமானவர் பாடியிருப்பதும் இங்கு அறியத் தக்கது:*

பாதி விருத்தத்தால் இப்பார் விருத்த மாக உண்மை
சாதித்தார் பொன்னடியைச் சாருநாள் எந்நாளோ.

*இங்கு குறிப்பிட்ட சித்தியிலே ஓர் விருத்தப் பாதி என்பது பின்வரும் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்தின் முதற்பாதி யாகும்:*

அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
　　அறிவுதனை அருளினான் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
　　கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்
பிறியாத சிவன் தானே பிரிந்து தோன்றிப்
　　பிரபஞ்ச பேதமெல்லாம் தானாய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
　　நின்றென்றும் தோன்றிடுவன் நிராதார னாயே. 282

---

* *எனினும், இப்பாடல் சென்ற நூற்றாண்டில் அச்சிடப்பட்ட சிவ போகசாரப் பதிப்புக்களிலும் காணப்படுகிறது.*

குருஞான சம்பந்தர் காலத்தில் தமிழ் நாடெங்கும் சைவா சாரியர் மிகுந்திருந்தனர். திருவாரூரில் ஒரு ஞானப்பிரகாசர், காஞ்சியில் ஒரு ஞானப்பிரகாசர். கமலையாரிடம் மாணாக்க ராயிருந்த நிரம்ப அழகியாரும் ஒரு மடத்தின் தலைவராய்த் தென்னாட்டில் விளங்கினார். திருவீழிமிழலையில் சிவாக்கிர யோகி, அனைவரையும் விடப் பிரசித்தமான ஆசாரியர். தில்லையில் மறைஞான சம்பந்தரும் அவர் குருவான களந்தை ஞானப் பிரகாச ரும், சீடரான மறைஞான தேசிகரும் பெருவிளக்கம் பெற்றுத் திகழ்ந்தார்கள். விளக்குள்ள இடத்தில் இருள் சூழுவது போல, பெருஞானிகள் வாழ்ந்த இடத்தே, இன்றுபோல அன்றும் போலிக் குருமார் ஏராளமாக முளைத்திருந்தார்கள். இவர்களை எண்ணி மனம் நொந்து குருஞான சம்பந்தர் ஒரு பாடல் பாடுகிறார்:

தன்னை அறியார், தலைவன் தனையறியார்,
முன்னை வினையின் முடிவறியார்; – பின்னைக்
குருக்களென்றும் பேரிட்டுக் கொள்ளுவர்கள், ஐயோ
தெருக்கள் தனிலே சிலர். 126

குருஞான சம்பந்தர் வந்த திருக்கயிலாய பரம்பரையில் சில தலைமுறைக்கு முன் இருந்த ஆசாரியர் சம்பந்த முனிவர் என்பவர். அவர் செய்த நூல்களில் ஒன்று, சிவானந்த மாலை என்பது. இதன் பாடற் கருத்துக்களையும் சொற்களையும் வைத்து இவர் பாடுகிறார். இரண்டைக் குறிப்பிடுவோம்:

அறிவென்று உனையறிந்தால் ஆனந்த போதச்
செறிவும் பொய், ஆணவத்திற் சேர்வும் – பிரிவும்பொய்
யானா விதாகிதத்தி லாட்டுங் கருவினீ
போனாலும் பொய்பொய்பொய் பொய்.

என்பது சிவானந்த மாலைப் பாடல். பொய் என்பதை இவரும் மூன்றுமுறை ஒரு பாடலில் எடுத்தாளுகிறார்.

துரத்தியுன்னை ஆசை தொடராமல் என்றும்
விரத்தியினால் ஆங்கவற்றை விட்டுப் – பரத்திலன்பு
செய்யடா செய்யடா, சேரப்ர பஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய். 107

'சும்மாயிருப்பது சுகம்' என்ற கருத்தைச் சம்பந்த முனிவர் பல முறை சொல்லுகிறார். அவரிடமிருந்து இதைக் கற்று அனேகர் பாடல் பாடியிருக்கிறார்கள். அருணகிரிநாதர் பாடிய கந்தரனு பூதிப் பாடல்,

சும்மாஇரு சொல்லற என்றலுமே
அம்மா பொருளொன்றும் அறிந்திலனே.

*என்பது சைவ உலகம் நன்கறிந்தது. ஒரு சிவானந்த மாலைப்பாடல்:*

ஓடாதே, தேடாதே, உன்னாதே, ஓசையெழப்
பாடாதே, சாத்திரங்கள் பன்னாதே, – கேடு பிறர்க்கு
உம்மாலே செய்யாதே, ஒன்றாதே, ஒன்றுமறச்
சும்மா விருக்கை சுகம்.

*இந்தக் கருத்தை வாங்கி, குருஞான சம்பந்தர் அப்படியே மாற்றிச் சொல்லுகிறார்;*

அருளறிந்து தானாம் அறிவறிந்தே ஆங்குட்
பொருளறிந்து தானடங்கிப் போத – இருளகல
விம்மா திருந்து விகற்பமற ஒன்றாகிச்
சும்மா விருக்கை சுகம். 63

*உலகத்து நீதியாகப் பல பாடல்கள் சொல்லுகிறார். ஒவ்வொன்றும் சிறந்த பொருளை உள்ளடக்கியது. ஒன்று கீழே காண்க. செருக்கு வரும்போது நம்மிற் பெரியாரை நினைக்க வேண்டும்; நம்மைத் தாழ்வாக நினைக்கும்போது நம்மிலும் தாழ்ந்தோரை எண்ணிச் சஞ்சலத்தை வெல்லவேண்டும்:*

நின்னை மதிக்கின் நினக்கதிகர் செல்வம் நினை;
நின்னை வறிஞன்என நீ நினையின் – நின்னின்
சிறியார் வறுமை நினை; சிந்தையுக என்றும்
குறியா இடும்பை துக்கம் கோள். 120

பரபரக்க வேண்டாம், பலகாலுஞ் சொன்னேன்
வரவரக்கண் டாராய் மனமே, – ஒருவருக்கும்
தீங்கு நினையாதே, செய்ந்நன்றி குன்றாதே,
ஏங்கி யிளையா திரு. 132

*ஒரு பாடலில் சிவஞானிகளைப் பிள்ளைகாள் என்றழைத்து சிவாத்துவிதம் எய்திருக்கும்போது உடலைப் பிரிந்தோம் என்ற துவித உணர்ச்சி ஏன் வருகிறது என்று கேட்கிறார்:*

உள்ளமலம் நீங்கி ஒழியாச் சிவானந்த
வெள்ளந் துளைந்து விளையாடும் – பிள்ளைகாள்
அத்துவித மானீர்நம் மாகம் பிரிந்தோமென்று
இத்துவிதம் எண்ணுவா னேன். 120

சைவ சித்தாந்தத்தின் சிறப்பு சற்காரிய வாதம் என்பது. அதையும் ஒரு பாடலில் சொல்லக் காண்கிறோம்:

உள்ளதுதான் போமோ,மற் றில்லா ததுவருமோ?
பள்ளமே வெள்ளம் பரவாதோ? – கள்ளமாய்ப்
பித்துப்போ லேபிதற்றும் பேதைமட நெஞ்சமே.
செத்துப் போனானோ சிவன்?* 123

வினையின் தொடர்பை ஒரு பாடலில் விளக்குகிறார்.

சும்மா தனுவருமோ, சும்மா பிணி வருமோ,
சும்மா வருமோ சுகதுக்கம்? – நம்மான்முன்
செய்தவினைக் கீடாச் சிவனருள்செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி இரு. 101

பிறவியே சிறை என்று ஒரு பாடல் கூறுகிறது:

ஆகம் சிறைச்சாலை, அக்கரணம் காவலாள்,
போகம் புவனம் பொருந்துமிடம்; – ஓகோ,
இதனுட் படுமுயிர்கட் கீடேற்றஞ் செய்வான்
அதனுக் கிறைவன் அரன். 118

ஒரு பாடல் பதி பசு பாசம் மூன்றையும் சுட்டி விளக்குகிறது:

என்னை அறிவென்றான், என்னறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான், சந்ததமும் – என்னையுன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான்: இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம். 26

இந்த அறிவெல்லாம் ஏட்டுச் சுரைக்காயாக இருந்து பயனில்லை. அனுபவத்தில் வரவேண்டும். அதற்கு வழி சற்குருவையடைந்து அவருடைய உபதேசத்தைப் பெற்றுத்தான் என்பதை இழந்து சிவமாக நிற்றல்:

நெருப்பென்றால் வாய்சுடுமோ? நெய்பால்தேன் கட்டி
கருப்பென்றால் தித்தியா, காண்நீ, – விருப்பமுடன்
நீபிரமம் என்றக்கால் நீபிரமம் ஆயினையோ?
நீபிரமம் சற்குருவால் நில். 42

குருஞான சம்பந்தருடைய சரித்திர சங்கிரகத்தில் அவர் சொக்கலிங்க பூசை குருவின் மூலம் பெற்றுக்கொண்டபோது

---

* இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதி விட்ட சிவ னும் செத்துவிட்டானோ என்ற அவ்வை தனிப்பாடலும் காண்க.

குருவை 'அருவும் உருவும் அருவுருவுமில்லா ஆண்டான்' என்னும் வெண்பாக்களால் பலவாறு தோத்தரித்தார் என்று சொல்லப் படுகிறது. அத்தகைய வெண்பாக்கள் பல உள்ளன. அவை குரு வைப் புகழ்வன. அவை தவறாகச் சிவபோகசாரத்தில் சேர்க்கப் பட்டுள்ளன போலும். இந்த நூல் அனுபூதி நிலையில் எழுந்தது. துதிப்பாடல்களைத் தனியே எடுத்துப் பதிப்பித்தல் நல்லது. சென்ற நூற்றாண்டில் அச்சிட்ட பதிப்புக்களில் இப்பாடல்கள் இல்லை. துதிப்பாடல்களுக்கு உதாரணமாக ஒரு பாடல்:

செங்கமலப் பொற்பாதன்* சீர்பாத வல்லபங்கள்,
நங்கமலை வாழ்கிளியே! நாடிக்கேள்: – சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதன் தத்துவத்தைக் காட்டியருள்
தத்துவத்தைக் காட்டியது தான். 28

குருஞான சம்பந்தர் காலத்தில் நாட்டில் நிலவிய அலங் கோல நிலையைக் காட்டும் பாடல்களும் சில உள்ளன (105, 106). அன்னிய சமயங்களின் மோதலால் நாட்டில் வைதிக சமயம் ஒடுங்கிக் கொண்டிருந்தது. இந்த நிலை எல்லோர் மனத்தையும் வாட்டியது. சில அன்பர் இதை இவ்வாசாரியரிடம் தெரிவித்து வருந்தினார்கள் போலும். இதை எண்ணி அவர்களுக்கு விடை கூறும் முகமாக இவர் பாடுகிறார். வைதிக சமயம் அழிகிறது என்றால் அதற்குத் தலைவனாயுள்ள ஈசன் பலவீனன் என்பது பொருளாகிறது. ஈசனே அனைத்தையும் தோற்றுவித்துக் காத்து ஒடுக்கவும் செய்கிறான். இந்த உண்மையை நாம் நன்குணர்ந்தால் அவனுடைய சம்மதத்தாலேயே யாவும், அழிவும்கூட, நடை பெறு கின்றன என்ற உணர்வு வரும்; பிறரை நோவதால் என்ன பயன்?

ஈசன் பலவீனன் என்றக்கால், ஆலயங்கள்
மோசம் வந்ததென்று மொழியலாம்; – ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தானானால்,
நோக்குவதென், யாம்பிறரை நொந்து? 105

சமயக் கருத்துப் பொதிந்து சுவை நிரம்பிய சில பாடல் களைக் கீழே காண்க. முதற் பாடல் பதி பசு பாசம் மூன்றையும் நன்கு விளக்குகிறது.

எங்கும் இருக்கும் அறிவுநீ, ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்; – பொங்கு

* செங்கமலப் பொற்பாதன் என்ற தொடரின் விளக்கத்தைக் கமலை ஞானப்பிரகாசர் வரலாற்றில் காண்க.

மலமறைத்தல், மாயை மயக்கல், விகாரப்
பலமனைத்தும் கன்மலம், பார். 27

ஆர்க்குந் தெரியாத ஆனந்த இன்பவெள்ளம்
மேற்கொண்டு கொண்டு விடுகுதில்லை; – யார்க்கும்
தெரியாப் பரப்பிரமஞ் சேர்த்தாய்; உனக்குச்
சரியார், சிதம்பர நாதா. 43

இன்னவினை இன்னதலத் தின்னபொழு தின்னபடி
இன்னதனால் எய்தும் எனஅறிந்தே – அன்னவினை
அன்னதலத் தன்னபொழு தன்னபடி அன்னதனால்
பின்னமறக் கூட்டும் பிரான். 32

ஆர்பெரியர், ஆர்சிறியர் ஆர்உறவர், ஆர்பகைஞர்?
சீர்பெரியர், ஆனந்த சிற்சொரூபர், – பேர்பெரியர்,
எங்கெங்கும் தாமாய் இருந்து, சட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவதா னால். 96

கற்கஇடர்ப் பட்டுமிகக் கற்றஎல்லாம் கற்றவர்பால்
தற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ? – நற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க் காளாகி
உள்ளம் அடங்கவல்ல வோ? 128

*இறையனுபவத்துக்குச் செலுத்தும் ஆன்ம நிலைகள் பத்து என்று முன்னமே காட்டினோம்; இவை தத்துவரூபம் முதல் சிவபோகம் வரையுள்ள பத்து. முடிவான அனுபவம் சிவபோகம். இச்சிவபோகத்தின் அனுபவத்தைப் பிழிந்து தருவதால் இந்நூல் சிவபோக சாரம் எனப் பெயர் பெற்றது.*

இன்பதுன்பம் வந்திடத்தில் எந்தைசெயல் என்னாது
நம்பியொரு முன்னிலையை நாடுவதென் – வெம்பிக்
கொடுவாளைக் கும்பிடுமோ கோழைமட நெஞ்சே,
இடுவானை நாடி இரு.

*என்பது ஏட்டில் காணப்படும் மிகைப் பாடல்களில் ஒன்று.*

### *பதிப்பு*

*சிவபோக சாரம் தருமபுர ஆதினத்துக் குரு முதல்வரால் செய்யப் பெற்றிருந்த போதிலும் கூட, நூல் நாடு முழுமையும் பிரசார மெய்திப் பலரால் பல முறை பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது.*

வி. சந்தர முதலியார் பதிப்பு 1890; ரிப்பன்பிரஸ் பதிப்பு 1923. தருமபுரப் பதிப்பு பலமுறை.

ஆனால் பழைய பதிப்புக்களுக்கும் ஆதீனப் பதிப்புக்களுக்கும் வேறுபாடு அதிகம்; பழையவற்றில் காப்புச்செய்யுளும் 103 வெண்பாக்களுமே உள்ளன. ரிப்பன்பிரஸ் பதிப்பில், 'இறவாத இன்ப அன்பு' என்ற பெரிய புராணப்பாடல் தவறாக இறுதியில் சேர்க்கப் பெற்றுள்ளது. தருமபுரம் பதிப்பில் இறுதியில் சேர்க் கப்பட்ட தனிப்பாடல்கள் பல 'ஆய்வார்' சம்பந்த சரணாலயர் பாடியது. 'கனக்கும் பொதிக்கும்' 'எல்லாம் உனது செயல்' இரண்டும் ஞானப்பிரகாசமாலை. கதிவாழ்க - பிற்காலத்தில் குரு முதல்வரைத் துதிப்பது. 'அவரவர் வினைவழி' என்ற பாடல் மட்டும் சிவபோகசாரத்தின் இறுதிக்குரிய தனிப்பாடல் போலும். இப்பதிப்பில் வெண்பாக்கள் 139; 36 பாடல்கள் மிகையாக வுள்ளன. மேற்குறித்த ஆராய்ச்சி இப்பதிப்பை ஆதாரமாக வைத்து செய்யப்பெற்றது; எனினும் இப்பாடல்கள் பிற்கால இடைச்செருகல் அல்லது ஆசிரியரின் தனிப் பாடல்கள் என்றே கருத வேண்டும். ஞானப் பிரகாசரின் அருளைப் போற்றுகின்ற பாடல்கள் இங்கு 18 உள்ளன. இவை பழைய பதிப்புக்களில் இல்லை. மேலும் பிரசித்தமாய் வழங்குகின்ற சில பாடல்களும் அவற்றுள் காணப்படவில்லை. 1936ஆம் வருட ஆதீனப் பதிப்பில், பாடல்களின் வரிசையை மாற்றிச் சில தலைப்புக்களில் தொகுத்து நூல் அச்சிடப்பட்டுள்ளது. இத்தொகுப்பும் மாற்றமும் பழைய பதிப்புக்களில் இல்லை. இப்பாகுபாட்டை ஆதீனத்தின் 1948 ஆம் வருட உரைப்பதிப்பும் கொள்ளவில்லை.

சென்ற நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் பதினெண் சித்தர் ஞானக்கோ(ர்)வை என்ற பாடல் தொகுப்பைத் தொகுத்த ஆசிரியர், பதினெண்சித்தர் என்ற வழக்குப்பற்றி சித்தர் பதி னெண்மர் என்ற எண் அமையவேண்டும் என்ற ஆர்வத்தில், சித்தர் அல்லாத பலர் பெயரையும் அங்கு சேர்த்திருக்கிறார். அப்பெயர்களுள் குருஞான சம்பந்தர் பெயரும் ஒன்று. அக் காலம் இவரைப்பற்றி எந்த வரலாறும் தமிழுலகம் அறியாத காலம். ஆகவே, இவரையும் சேர்த்து, இவர் பாடல்களில் கிடைத்த சிவபோகசாரம் சொக்கநாத வெண்பா இரண்டையும் சித்தர் பாடலாக அவர் அச்சிட்டிருக்கிறார். சிவபோகசாரத் தலைப்புக்கள் அப்பதிப்பிலும் காணப்படுகின்றன.

பிராசாத சட்கம்

சட்கம் - ஷட்கம்; ஆறு பாடல், வடமொழியில் பிராசாத ஷட்ஸ்லோகீ என்ற ஆறு பாடல் கொண்ட சிறு நூலின் மொழி பெயர்ப்பு; வடமொழி நூலுக்கும் பழைய வியாக்கியானம் உள்ளது, தமிழ் நூலுக்கும் பழைய உரை உண்டு. இங்கு ஏழு எண்சீர் விருத்தங்கள் உள்ளன. இந்நூல் சோடச (பதினாறு) கலாப் பிராசாத ஷட்கம் என்றும் வழங்கும்: ப்ரா - ஸா - தம் என்பது வடமொழி; சிவஞான - கதியைத் - தருவது என்பது இதன் பொருள். பிரணவ கலைகள் 16; அவை அகாரம் உகாரம் மகாரம் விந்து அர்த்தசந்திரன் நிரோதினி நாதம் நாதாந்தம் சக்தி வியாபினி வியோமரூபினி அநந்தை அநாதை அநாசிருதை சமனை உன்மனை என்பன. அகார உகார மகாரம் மூன்றும் மேதை அர்க்கீசம் விடகலை என்றும் கொள்ளப்படும். (அவற்றுள் வியோம ரூபிணி அநந்தை அநாதை அநாதசிருதை என்ற நான்கையும் நீக்கித் துவாதச கலை (பன்னிரண்டு) என்று வழங்கும் வழக்கும் உண்டு.) ஆன்மாவினிடத்திலே குண்டலினி சக்தியை மேல் நோக்கிச் செலுத்துவதால் இப்பதினாறு கலைகளையும் முறையாகத் தரிசித்து, அப்பால் மேல் சென்று சிவத்துடன் இரண்டறக் கலத்தல் பிராசாத யோக நெறி என்று சைவ சித்தாந்த ஆகம நூல்கள் கூறும். அட்டாங்க யோகம் என்று எங்கும் பெரு வழக்காயுள்ள யோக நெறியாகிய இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணைதியானம் சமாதி என்ற எட்டும் இந்த நெறிக்குரிய படிகளேயாகும்: அட்டாங்க யோகம் ஒரு முடிவன்று.

திருமூலர் 'மேதாதி ஈரெட்டுமாகிய மெல்லியல்' (1070) என்ற வரியில் பிராசாத யோகத்தைக் குறிப்பிட்டுள்ளார். பிராசாத யோகத்தை முதன் முதலில் சீகாழித் தத்துவப் பிரகாசர் தத்து வப் பிரகாசம் என்ற பெருநூலில் 15 பாடல்களால் உரைத்தார். அடுத்துக் காவை அம்பலநாதத் தம்பிரான் இதை பிராசாத அகவல் என்ற தம் நூலில் விரிவாக விளக்கினார். இருவரும் 14ஆம் நூற்றாண்டினர். சில ஆண்டுகள் கழிந்த பின் கண்ணுடைய வள்ளலின் மாணாக்கரொருவர் (15ஆம் நூற்றாண்டு) இதைப் பிராசாத தீபம் என்ற தம் நூலில் 37 விருத்தப் பாக்களால் விளக்கியுரைத்தார். இவையே பிராசாதம் கூறும் தமிழ் நூல்கள். இப்பதினாறாம் நூற்றாண்டில் கமலை ஞானப்பிரகாசர் இதைப் பிராசாத மாலை என்றும் விருத்தம் என்றும் வழங்கும் ஒரு சிறு நூலாகச் செய்தார். இதன்பின் எழுந்ததே இங்கு குறிப்

பிட்ட பிராசாத ஷட்கம் என்ற குருஞான சம்பந்தரின் நூல். இப்பிராசாத யோக நெறி என்பது, சிற்றம்பல நாடி வழியே வந்த ஒரு யோகநெறி. பிற பரம்பரையினர் இதுபற்றி எதுவும் சொல்லவில்லை. மேற்குறிப்பிட்ட ஆசிரியர் அனைவரும் சிற்றம்பல நாடி வழிவந்தவரே (மெய்கண்ட பரம்பரை).

தருமபுரத்தில் பதினாறு ஒடுக்கம் என்ற பதினாறு பகுதி கொண்ட ஒரு தனி யோக மண்டபம் உண்டு. அங்கு, பக்குவம் பெற்ற அடியவர்கள் தங்கிப் பதினாறு கலைகளையும் முறையாக அப்பியசித்து வந்திருந்தார்கள்.

இந்நூல் சோடச கலைகளுக்கும் வன்னம் தானம் அளவு வடிவு தேவதை மலநிலை சோதனைப்படும் தன்மை மாத்திரை சூனியம் ஆறு என்ற பொருள்களைக் கூறும். இவை இந்நூலின் 1931ஆம் ஆண்டுத் தருமபுரப் பதிப்பில் விளக்கமாய் ஓர் அட்டவணையாகக் காட்டப்பட்டுள்ளன. மேற்குறித்த நான்கு பிராசாத நூல்களும் பிராசாத நான்மணிகள் என்ற தனி நூலாகத் தருமபுரம் ஆதீனத்தாரால் 1972இல் செம்மையாக அச்சிடப்பட்டுள்ளன.

### திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்

திரிபதார்த்தம் - முப்பொருள்: பாசம் பசு பதி. ரூபாதி தசகாரியம் - ரூபம் முதலாகச் சொல்லப்படும் எட்டுத் தன்மைகளை அடக்கிய தசகாரியங்கள். நூற்பெயரின் விளக்கத்தை இவ்வாறு கொள்ளுக. தசகாரியம் என்பது தத்துவ ரூபம் தத்துவ தரிசனம் தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம் ஆன்ம தரிசனம் ஆன்ம சுத்தி, சிவரூபம் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகம் என்ற பத்துப் படிகளைக் குறிப்பிடும். இவற்றுள் ஆன்மரூபம் முதலான சில நிலைகள் அவ்வப் பெயராலேயே உமாபதியார் செய்த சிவப்பிரகாசத்தின் இறுதியில் கூறப்பெற்றுள்ளன. உண்மை நெறி விளக்கம் என்ற சித்தாந்த சாத்திரம் இப்பத்தையும் கூறுவதற்கென்றே எழுந்த ஆறு பாடல் கொண்ட சிறு நூல். தத்துவப் பிரகாசம் ஆகிய பெருநூல் இவற்றை நன்கு விளக்கிக் கூறுகிறது. இவற்றின் வரிசையில் பல நூல்கள் எழுந்தன. களந்தை ஞானப் பிரகாசர்* செய்த தசகாரியம் 302 பாடல்களுடையது; மிகவும் விரிவானது. காலம் 15ஆம் நூற்றாண்டு. இதுவுமன்றிச் சைவச் சிறு நூல்கள் சிலவும் உள்ளன.

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 15ஆம் நூற்றாண்டு நூலில் பார்க்க.

தசகாரியத்தைப் பின்னும் பிரித்து, தத்துவம் ஆன்மா சிவம் என்ற முப்பொருளுக்கும் தனித் தனித் தசகாரியம் என்று பிற்காலத்தில் ஒரு கட்டளை நூலின் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.* இந்த விரிந்தமுறையைத் தத்துவப் பிரகாசத்திலேயே முதன் முதலாகக் காண்கிறோம். தத்துவரூபம் ஆன்மரூபம் சிவரூபம் என்ற படிகளில் ஒவ்வொன்றையும் விரித்து உருவம் சொரூபம் சுபாவம் விசேடம் வியாத்தி வியாபகம் குணம் வன்னம் என்ற எட்டையும் சேர்த்துப் பத்தாக்குகிறார். சிவரூபம் பொறுத்தவரையில் எட்டோடு தரிசனம் சேர்த்து ஒன்பதாக்கி, இயல்பாகவே பூரண சுத்தனாகிய சிவத்துக்கு சுத்தி என்பது பிழையாதலால், 'சுத்தி பதியாது அங்கு அழுந்தல்' என்று முடிக்கிறார். இதே முறையில் முப்பொருளுக்கும் தசக்கிரமம் கூறவந்த நம்மாசிரியர் இந்தக் கிரமங்களை வரிசை மாற்றிச் சொல்கிறார்; சுபாவம், வியாத்தி, வியாபகம், குணம், விசேடம், ரூபகம், ரூபம், சொரூபம், தரிசனம், சுத்தி என்று அமைக்கிறார். வன்னம் என்பதை இவர் ரூபம் என்று ஆக்கியிருக்கிறார். ஆன்ம தசகாரியம் சொல்லும்போது ஆன்மலாபம் சேர்த்துப் பதினொன்றாக்கிக் கூறுகிறார்; ஆன்மலாபம் சிவப்பிரகாசம் சொல்லுவது. சிவத்துக்குச் சொல்லும்போது, சுத்திக்குப் பதிலாக யோகம் போகம் கூட்டிப் பதினொன்றாகச் சொல்லுகிறார்.

இந்நூலமைப்பு மூன்று அகவற்பாக்களாயுள்ளது போல் தெரிகிறது; பாச தசகாரியம் ஆன்ம தசகாரியம் சிவ தசகாரியம் என்பன; முறையே 56, 36, 46 அடிகள் கொண்டவை. இறுதியில் இவற்றை ஞானப்பிரகாசர் அறிவித்தபடி சொல்லியதாகச் சொல்கிறார்:

**ஆக ஆகமம் அறைந்த திதுவெனத்**
**தேசிக மாமணி தென்கம லாபுரி**
**நாசமில் சீர்த்தி ஞானப்ர காசன்**
**அருளிய அட்ட வணையி னடைவே**
**பெரிதும் பயனுறப் பேசினன் அறியே.**

## முத்திநிச்சயம்

இது குருஞான சம்பந்தர் செய்த முக்கியமான நூல்களில் ஒன்றென்று கருதப்படுகிறது. நூலானது 22 வெண்பாக்கள்

---

* இது தசக்கிரமக் கட்டளை என்ற பெயரால் பல ஆண்டுகளுக்கு முன் சித்தாந்தம் இதழ்களில் எம்மால் வெளியிடப்பட்டுள்ளது.

உடையது. முதல் பாடலில் ஆசிரியர் சிதம்பரநாதன் என்ற பெயரால் வழங்கும் கமலை ஞானப்பிரகாசருக்கு வணக்கம் சொல்கிறார். நூலில் சித்தாந்த முத்தியை நிச்சயிக்கிறேன் என்கிறார். இந்நூல், மாணாக்கர் கேட்கின்ற வினாக்களுக்கு ஆசாரியன் விடை சொல்வதாக முதலில் இருந்து கடைசி வரையில் உள்ளது. இந்நூலின் கருத்து, ஆன்மாவுக்கு ஆனந்தம் உண்டு என்ற மறைஞான சம்பந்தருடைய கொள்கையை மறுப்பது; "ஆன்மாவுக்கு இயற்கையாக ஆனந்தம் இல்லை; ஆன்மா சிவத்தோடு கலந்து நிற்றலே முத்தி; பேரின்பம், சார்ந்த பொருளாகிய முதற் பொருளான சிவத்துக்குரியது; ஆன்மா சார்ந்த தன் வண்ணமாய்ப் பேரின்பத்தை அனுபவிக்குமேயன்றிப் பேரின்பம் அதற்கு உரியதன்று; பேரின்பம் மலத்தைப் போக்குவது; அது ஆன்மாவின் இயல்பு ஆகாது; ஆனந்தம் சிவத்தின் இயல்பன்று ஆன்ம இயல்பு எனச் சொல்வது ஆகமங்களுக்கு மாறு, அது சித்தாந்த முத்தி நிலையுமன்று" என்பதாகும். இந்நூலுக்கு வெள்ளியம் பலவாணத் தம்பிரான் சிற்றுரையொன்றும் பேருரையொன்றும் எழுதியிருக்கிறார். திருவாவடுதுறை அடியவரான சிவஞான சுவாமிகள் சிவஞான போகத்துக்குச் சிற்றுரை பாஷ்யம் என இரு வேறுரைகள் எழுதியிருப்பது காலத்தால் வெள்ளியம்பல வாணருக்குப் பின்னர் ஆகும்.

மேற்குறிப்பிட்ட 22 வெண்பாக்களையன்றி, வேறு ஆறு வெண்பாக்கள் நூலின் இடையே உள்ளன. இவற்றுக்கு வெள்ளி யம்பலவாணத் தம்பிரான் உரை எழுதாமையால், இவை மிகைப் பாடல்கள் என்று தனியே அச்சிடப்பட்டுள்ளன. இவையும் நூலுக்குரியனவென்றே கருதுமாறு உள்ளன. இவற்றின் இறுதிப் பாடல் ஆசிரியர் பெயர் கூறுகிறது:

முத்தி நிலையணுக்கள் சேர மொழிந்திட்டான்,
சத்திய மெய்ஞ்ஞான சம்பந்தன்: – முத்திதனை
ஈவா னுடன்பேறும் கொள்வானும் எந்நாளும்
ஆவான் அனன்னியமென் றாய்ந்து.

முத்தி நிச்சயம் என்ற பெயர் உடைய வடமொழி நூல் ஒன்றை வெள்ளியம்பலவாணத் தம்பிரான் தமது ஞானாவரண விளக்கவுரையில் எடுத்துக் காட்டுகிறார்.

இந்நூலின் பாடல்களுக்கு எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல்களை இங்கு குறிப்பிடலாம்.

அண்ணலைப் போலானந்தம் ஆன்மாவிற் குண்டாகில்,
எண்ணில் பிறப்பிறப்பை எய்துமோ? – கண்ணிருளை
ஒட்டாதோ ஆதவனுக் கொத்தஒளி உண்டாகில்,
கேட்டாயோ கேட்டிலையேற் கேள். 21

உள்ளமலம் நீங்கி ஓங்கு சிவானந்த
வெள்ளம் திளைத்ததுவாய் மேவுதலே – கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு. 22

நூலின் முதல் பாடல் ஞானப்பிரகாசருக்கு வணக்கம் கூறி, நூற்பெயரை உணர்த்தும்.

பதிப்பு:

சிற்றுரைப் பதிப்பு, ஆங்கிலமொழி பெயர்ப்போடு 1934; பேருரைப் பதிப்பு 1946 தருமபுரம்.

ஞானாவரண விளக்கம்

இது சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் என்ற இரு பகுதியின் பொருளையும் விரித்துரைக்கும் பெரும் விளக்கமாக குருஞான சம்பந்தர் செய்த நூலாகும். ஞானம் - சிவஞானம்; ஆவரணம் - மறைப்பு. ஞானாவரணம் - சிவஞானச் சூழல், அச்சூழலை விளக்குவது ஞானாவரண விளக்கம். இந்த நூல் முழுமையும் கிடைக்கவில்லை. சில சில பகுதி மட்டுமே கிடைத்து அச்சிடப்பட்டுள்ளது. ஆதலால் முழு நூலும் எப்படியிருக்கு மென்று இங்கு அறிவதற்கில்லை. இது இரண்டு பிரிவாக அச்சிடப் பட்டுள்ளது. முதல் பிரிவு மூன்று பாகமுடையது: பரபக்கம் ஞானாந்தம் அளவியல் என்பன. இரண்டாம் பிரிவு நான்காம் பாகமாகிய சுபக்கம் என்பது. ஞானாவரண விளக்கம் என்பது விருத்தப் பாக்களால் ஆன ஒரு நூல். இது சிவஞான சித்தியாருக்கு விளக்கமாயினும், வேறு தனிநூல் அன்று: சிவஞான சித்தியாரின் பாடல்களை வைத்து இதற்கு விளக்கமான பாடல்கள் சிலவற் றையும், குருஞான சம்பந்தரே புதிதாகச் செய்த பாடல்கள் பல வற்றையும் ஒன்றாகக் கோவைப்படுத்தி, அமைத்த ஒரு நூல். இது பெரு நூலாயிருந்திருக்க வேண்டும். வெள்ளியம்பலவாணத் தம்பிரான் இதற்கு அரும்பத விவேகம் என்ற உரை எழுதினார். இது மிகவும் விரிவானது, மூலத்தை ஞானாவரண தீபிகை என்றும், தம் உரையை அஸ்பஷ்ட பத போதனீயம் என்றும் அவர் சொல்லுகிறார். திருவாரூர் நிர்மல மணி தேசிகரிடம்

(விலசத களங்க மணி நாம பகவத்பாதர்) அவர் உபதேசப் பெற்று இந்த உரை செய்ததாகச் செய்கிறார்.

மூன்று பாகங்கொண்ட முதல் புத்தகம் பாயிரப் பகுதி இரண்டாம் புத்தகத்தில் இரண்டாம் சூத்திரம் முடியவுள்ளன முதலிரு பாகங்களில் 253 செய்யுட்களும், மூன்றாவதான அளவைப் பகுதியில் 167 செய்யுட்களும், முதல் இரு சூத்திரம் கூறும் பகுதியில் 741 செய்யுட்களும் இருந்தனவாகத் தெரிகிறது. செய்யுட்கள் இன்று இல்லை. பெரிதும் பழுதாய்ப் போன ஓர் ஏட்டை வைத்து நூல் அச்சிட்டிருக்கிறார்கள். ஏடு வெள்ளியின் உரையை மட்டுமே தருகிறது; மூலச் செய்யுளைத் தரவில்லை. உரையில் அரும்பதம் மட்டும் எடுத்துத்தந்து உரை கூறுகிறார். இவ்வரும்பதத் தொடர்களை எடுத்து ஒருங்கு சேர்த்தால் சுமார் 25 செய்யுட்கள் மட்டுமே கிடைக்கின்றன. சிவஞான சித்தியார் செய்யுட்களையும் பிறநூல் சிலவற்றின் செய்யுட்களையும் தாம் செய்த அதிகமான செய்யுட்களையும் சேர்த்தே ஞான சம்பந்தர் 1161 செய்யுட்கள் கொண்ட பெரு நூலாக்கினார். இவ்வாறு இவர் சேர்த்துள்ள செய்யுட்கள் பின்வருவன என்று இப்போது தெரிகிறது: அருணமச்சிவாயர் செய்த ஞானபூசைத் திருவிருத்தம் 18 பாடல்; தத்துவப் பிரகாசர் செய்த தத்துவப் பிரகாசம் 2 பாடல்; நம்மாழ்வார் பாடிய திருவாய் மொழிப் பாடல் (3016). முழு நூலும் எல்லாச் செய்யுட்களும் கிடைத்தால் இந்நூல் சுமார் 2000 பாடல் கொண்ட பெரு நூலாயிருக்கும். இல்லாதது சைவ மக்களுக்குப் பெரு நஷ்டம்.

அருள் நமசிவாயர் இவருடைய ஆசாரிய பரம்பரை முன் னோரில் ஒருவர். அருணமசிவாயரும் தத்துவப் பிரகாசரும் மெய்கண்டார் மரபில் வந்த பெருஞானிகள். அவர்கள் பாடலை ஞானசம்பந்தர் எடுத்துத் தொகுத்தது இயல்பே. ஆனால், வைணவ சமயத்தில் வேதாமாயுள்ள திருவாய்மொழிப் பாடலை எடுத்துத் தொகுத்தது இவருடைய விரிந்த மனப்பான்மையைக் காட்டுவதென்றே சொல்லலாம்.

இனி இவர் தாமாகப் பாடித்தந்த விளக்கப் பாடல்களுக்குச் சில எடுத்துக்காட்டுத் தரலாம். முன்னே காட்டிய திருவாய் மொழிப் பாடலை எடுத்துத் தந்த இடத்தில் முன்னும் பின்னும் மூன்று பாடல்கள் ஞானசம்பந்தர் செய்தனவாக உள்ளன. அவற்றுள் மூன்று பாடல்கள், 'அன்பிலாதவரைக் கண்டால் அம்ம நாமஞ்சுமாறே' என்ற திருவாசக அச்சப்பத்தின் முடிபையுடையன.

உறுமலம் போனால் மீண்டும் உலகறி வல்லா தில்லை
இறையருள் என்று நூற்கும் எழுதுவன் உரைநான் என்று
குறியிடு சொற்கிடக்கை கொண்டுதான் பொருள் வேறாக்கும்
அறிவிலா தவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சு மாறே.

கருதுயிர் அசத்த னுந்தான் கணிகம் என்பவரைப் போலத்
தருமுயிர் சிவன்போலென்று சைவமோரிடத்தில் சொல்லும்
பொருளைமுற் றுவமை யாக்கிப் புகல்பவர்க் கென்றும் ஈசன்
அருள்செயான் அவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே.

தம் காலத்தில் சாத்திரங்களுக்கு, மரபுக்கு முரணாகப் பொருள் கூறுவதை எண்ணி நொந்து இவர் இவ்வாறு கூறினார் போலும்.

குருஞான சம்பந்தர் திரிபதார்த்த ரூபாதி தசகாரியம் சொன்னவர். ஆகவே இந்த ஞானாவரண விளக்கம் இரண்டாம் சூத்திரப் பகுதியிலும், நூலில் பேசப்படும் பொருள் பிரிவுகளுக்கு ரூபாதி தசகாரியம் கூறுகின்றார். இங்கு பிருதிவி தத்துவம் என்று சொன்னவிடத்து, அதைத் தொடர்ந்து வரும் புவனங்கள், உலகங்கள், அண்டங்கள், நரகவகை, பாதாளம், சூரிய சந்திர மண்டலம் முதலாயின, இவற்றின் அளவு முதலியன 77 பாடல் களால் சொல்லி, அப்பால் தத்துவசுத்தியாகிய பிருதிவிசுத்தி சொல்லுகிறார். உலக அளவு தோற்றம் ஒடுக்கம் சொல்வது புராணங்களின் பஞ்ச இயல்புகளில் ஒன்று. சாத்திர விளக்கத்தில் ஞான சம்பந்தர், தத்துவ சுத்தி செய்யவேண்டி ஏன் இவ்வளவு விரிவு செய்தார் என்பது சிந்திக்கத்தக்கது. புராணங்களின் சிறப்பும் இங்கு அமையட்டும் என்று கருதினார் போலும்.

வெள்ளியம்பலவாணர் உரையில் வடமொழி ஞானாவரண பாஷ்யம் என்ற பெயரில் செய்யுள் வடிவில் உள்ள ஒரு நூலை எடுத்துக்காட்டுகிறார். இது சிவஞான போதத்துக்கு வடமொழி யில் எழுந்து ஒரு பேருரை போலும். அதனுள் சிவஞான போத வெண்பா அப்படியே காணப்படுகிறது. பின்வருவன காண்க:

மாயா தனுவிளக்காம் மற்றுள்ளம் காணாதேல்
ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய் – வீயாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றாம் காட்டம்போல்
தன்னைமலம் அன்றணைதல் தான். (வெண்பா. 27)

இதற்கு நேரான ஞானாவரண பாஷ்யம் பின்வருவது:

நாமாயா தநுதீபேந வேத்தி தந்மய:
காஷ்டேநேவ அநலோய: அணுரானவேந ந்ருத்யதே.

இந்த ஒற்றுமையைப் பார்க்கும்போது, இவ்வடமொழி ஞானாவரணம் 15ஆம் நூற்றாண்டில் செய்யப்பெற்ற நூலாயிருக்கலாம் என்று சொல்லக்கூடும்.

## பதிப்பு

ஞானாவரண விளக்கமும் மாபாடியமும் தருமபுரம், முதல் புத்தகம் 1957, இரண்டாம் புத்தகம் 1959.

## சிவபூசா பத்ததி

சிவாலயங்கள் தோன்றிய அன்றே பூசை முறைகளும் தோன்றின. ஆகமங்கள் இவற்றை வடமொழியில் முறைப் படுத்திக் கொடுத்தன. அந்த முறையிலேயே பிற்காலத்தில் ஏறக் குறைய இரண்டாயிரம் ஆண்டுகளாக ஆலய பூசை முறைகள் ஏற்பட்டு நடந்து வருகின்றன. இது பரார்த்த பூசை எனப்படும். இதேபோல, தனி மனிதர் தீட்சையும் உபதேசமும் பெற்று, தம்மில்லத்தில் செய்கின்ற மூர்த்தி பூசை ஆன்மார்த்த பூசை எனப்படும். இவ்விருவித பூசை முறைகளும் ஆகமங்களில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. யாவும் வடமொழியில்தான். ஆசாரியராயுள்ளவர்கள் வடமொழியறிவினால் இம்முறைகளை நன்குணர்ந்து தம் சீடர்களுக்குத் தீட்சை செய்து பூசை எழுந் தருளுவிக்கும்போது இம்முறைகளைப் பழக்கிவைப்பார்கள். தமிழ்ச் சித்தாந்த சாத்திரங்களில் விரிவாகப் பூசை முறை சொல்லப்படவில்லை. சிவபூசை செய்வது, கிரியாமார்க்கம்; புத்திரமார்க்கம் என்றும் சொல்லப்படும். இது சுருக்கமாகச் சிவஞான சித்தியாரில் ஒரே பாடலால் சொல்லப்பட்டுள்ளது.

புத்திரமார்க் கம்புகலில் புதியவிரைப் போது
  புகையொளி மஞ் சனம்அமுது முதல்கொண்டைந்து
சுத்திசெய்தா சனம் மூர்த்தி மூர்த்தி மானாம்
  சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினால்அருச்சித்துப் பரவிப் போற்றிப்
  பரிவினொடும் எரியில்வருகாரியமும் பண்ணிக்
நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்
  நின்மலன் தன் அருகிருப்பர் நினையுங் காலே.

இது ஆகம பூசை எனப்படும். ஆகமத்தைச் சேக்கிழார் மிகவும் விளக்கமாகப் பெரியபுராணத்தில் பலமுறை குறிப்பிடுகிறார்.

திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்தில் அம்மை காஞ்சி நகரில் பெருமானைப் பூசித்தார் என்று சொல்லுமிடத்து ஆகமப்படி என்று பலமுறை சொல்லுகிறார். இந்த ஆகம பூசையைத் தமிழில் சொல்லுகின்ற செய்யுள் நூல், சீகாழிச் சிற்றம்பல நாடிகளின் மாணாக்கரான சீகாழித் தத்துவப் பிரகாசர் செய்த தத்துவப் பிரகாசமாகும் (16 நூ) இதன்பின் குருஞான சம்பந்தர் ஒரு பூசாவிதி உரைநடையாகச் செய்தாரென்று தெரிகிறது. தஞ்சைச் சரசுவதி மகாலில் உள்ள ஓர் ஏட்டுச் சுவடியில் அடங்கிய பூசாவிதி இவர் செய்ததெனக் கருதும்படியுள்ளது. இவ்வித துவார பூசையில் தொடங்கி அட்டபுட்ப பூசை இறுதியாக மிகவும் விரிவாகச் சொல்லுகிறது. நூலின் இறுதியில் உள்ள இரு பாடல்களும் கமலை ஞானப்பிரகாசரைத் துதிப்பன. இவற்றுள் 'பெரு வேதனையுறும் காயத்தை விட்டு' என்ற முதல் பாடல் குருஞான சம்பந்தர் செய்த ஞானப்பிரகாச மாலையிலும் நவ மணிமாலையிலும் காணப்படுகிறது. மற்றப் பாடல் குருஞான சம்பந்தர் நூல் எதிலும் காணப்படவில்லை. அது பின்வருவது: 'தானே வரக் கண்டும்' என்று முன்காட்டிய பாடல் (பக்கம் 242).

தானே வரக் கண்டும், கைப்பாணி வாங்கியும், தாரணியில்
ஊனே வளர்த்துத் திரிவதல்லால், உண்மை யாம்சிவத்தில்
யானே இறக்க இருப்பதெந் நாட்சொல், எனதுளத்தில்
தேனே, கமலையில் ஞானப்ர காச சிதம்பரனே.

இது ஞானப்பிரகாசர் துதியானமையாலும், ஒரு பாடல் அவர் நூல்களில் காணப்படுவதாலும், மற்றதும் செய்தவர் அவரே என்பது தெளிவு. அப்பாடலைத் தாம் செய்த பூசாவிதியின் இறுதியில் அவரே அமைத்திருத்தல் இயல்பு. இந்நூல் அச்சாகவில்லை.*

### குறிப்பு 1

தருமையாதீனத்தின் நான்காம் குரவராகிய மாசிலாமணி தேசிகரிடம் உபதேசம் பெற்ற குமரகுருபர சுவாமிகள் தம் தேசிகரை ஞானப்பிரகாசராகவும் சம்பந்தராகவும் கொண்டு பாடுவது கருதத்தக்கது: பண்டார மும்மணிக்கோவைப் பாடல்கள்:

பெரும்பதி புரக்கும் பேரருட் குரிசில்
நான்மறை நவின்ற நற்பொருள் இவைஎன
மோனவா சகத்தான் முப்பொருள் நவிற்றுபு
நன்னலம் புரியும் ஞானப் பிரகாசன்; 507

* தஞ்சைச் சரசுவதிமகால் சுவடியே இதற்கு ஆதாரம்.

*ஞானசம்பந்தன் (பலமுறை); தருமையம்பதி வாழ் சற்குரு; ராயன் (570); ஆரூரமர்ந்த ஞானசம்பந்தன் (579); கமலை நன்னகர் புரக்கும் ஞானதேசிகன் .... ஞானசம்பந்தன் (585), ஆரூரே ஊர் (585)*

தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநக ராக அரசுவீற் றிருக்கும்
மாசி லாமணித் தேசிக ராய,
சம்பந் தப்பெயர் தரித்தமையால் எமைச்
சம்பந் தம் செயத் தகும்தகும் நினக்கே. 573

அங்கயற் கண்ணி பங்கில்வீற் றிருந்த
செக்கர் வார்சடைச் சொக்க நாயகனை
ஈரெண் திறத்துப சாரமும் வாய்ப்பப்
பூசனை புரியும் தேசிக ராய. 588

*என்ற வரிகளிலும் தொடர்களிலும் குருஞான சம்பந்தர் வரலாற்றுத் தொடர்பான செய்திகள் பல காணலாம்.*

## குறிப்பு 2

*பாண்டி மண்டல சதகமுடையார் குருஞான சம்பந்தரைக் குறிப்பிடுகிறார்; ஆனால் இது மிகமிகப் பிற்காலம்:*

திருந்திய சீவில்லி புத்தூரில் ஞானத் திருவுருவாய்ப்
பொருந்து சொக்கேசர் அதிகார மாய்வைத்துப் பூசை செய்தே
அருந்த வராகித் தரும புரத்தில் அருள்புரிய
வருந்திரு ஞான சம்பந்தரும் பாண்டியன் மண்டலமே. 77

## குறிப்பு 3

*பிற்காலத்தில் -முதல் ஆசாரியராய் விளங்கிய குருஞான சம்பந்தரைப் போற்றி அடியவரும் புலவரும் பாடிய துதி நூல்களும் பிரபந்தங்களும் பல உள்ளன. நிரம்ப அழகிய தேசிகர் பாடியதாக, குருஞான சம்பந்தர் தசமணிமாலை என ஒரு நூல் வழங்கும்.* வெள்ளியம்பலவாண முனிவர் பள்ளியெழுச்சி, சமுக மாலை, தாலாட்டு முதலான பல நூல்கள் பாடினார். பின்னும் பல. இவையன்றி, குருஞான சம்பந்தர் உலா என ஒரு நூல் திருவான்மியூர் சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ளது. இது தருமபுரம் திருவம்பலத்தம்பிரான் பாடியது. இவை போல்வன பின்னும் பல.*

---

* *எமது தமிழ் இலக்கியவரலாறு 16ஆம் நூற்றாண்டு முதற்பாகம் பார்க்க.*

## தருமபுர ஆதீன பரம்பரை

### திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்



**அருள் நமசிவாயர்**

|

**காழி – கங்கை மெய்கண்டார்**
(1325 - 35)

|

**காழி – பழுதை கட்டி – சிற்றம்பல நாடிகள்**
(1325 - 1350)
(துகளறுபோதம் முதலியன)

|

**காழி பழுதை கட்டி – சம்பந்த முனிவர்**
(1350 - 1375)
(சிவானந்த மாலை முதலியன)

|

**சிவபுரம் – ஞானப்பிரகாசர்**
(1375 - 1425)

|

**சிவபுரம் – தத்துவப்பிரகாசர்**
(1425- 1475)

|

**செட்டித்தெரு – பழுதைகட்டி – ஞானப்பிரகாசர்**
(1475 - 1525)

|

**கமலை – ஞானப்பிரகாசர்**
(1525 - 50)
(சிவபூசையகவல், பிராசாதமாலை, புட்பவிதி,
மழபாடிப் புராணம், தந்திவனப் புராணம் முதலியன)

|

**ஸ்ரீ குருஞான சம்பந்தர்**
(1550 - 75)
(சொக்கநாதக் கலித்துறை, வெண்பா, ஞானப்பிரகாச மாலை,
நவரத்தினமாலை, திரிபதார்த்த அகவல், பிராசாத சட்கம்,
சிவபோகசாரம், ஞானாவரண விளக்கம் முதலியன)

## திருச்செந்தூரகவல்

சிற்றம்பல நாடிகள் பாடிய திருச்செந்தூரகவல் என்ற ஒரு நெடும்பாட்டு சைவர் பலருக்கு நன்கு தெரிந்தது. இது 426 அடி கொண்டே ஒரே நீண்ட பாட்டு. செந்தில் முருகப் பெருமான் தமக்கு வந்து மெய்ஞ்ஞானத்தைப் புகட்டி ஆட்கொண்ட செய்தியைச் சொல்லி, 'உலகத்தீரே, நீங்களும் இவ்வாறு அருள் பெறுவீராக' என்று ஆற்றுப்படுத்தும் முறையில் நூல் அமைந் துள்ளது. தொடக்கத்தில் காப்பு வெண்பா ஒன்று உள்ளது.

முதல் 24 அடிகள் முருகன் பெயர்களைச் சொல்லித் துதித்தல்; ஆறுபடை வீடுகளையும் இங்கு குறிப்பிடுகிறார். சிவபெருமானுக்கு 'ஓம்' எனும் தாரக ஒண்பொருள் மொழிந் தவன்' என்று தொடங்குகிறார். 68 அடிவரை அவனுடைய திருவுருவ வருணனை:

> மன்னிரு மகளிர் மாட்டலால் வணங்காச்
> சென்னி சேர்ந் தொளிரும் சேகரச் சிறப்பும்.

என்பது காண்க. அம்முருகன் மானுடச் சட்டை சாத்தி, 'உனக்கு உபதேசிக்க வந்தோம். உனக்கு முத்தி வழங்குவோம்' என்றான் (83). நான் துதித்து, பின் நீராடி வரவும், எழுத்தஞ்சும் என் செவியிற் புகட்டி என் உடல் பொருள் ஆவியும் கொண்டான் (98) 'சஞ்சிதம் நம் பார்வையால் ஒழிந்தது; பிராரப்தம் உடம்பளவில்; ஆகாமி யங்கள் பற்றில; நம் பெருவடிவை நாடுக' என்று தீட்சை செய் தான் (108). பின்னர் பூசை. குரு, கணபதி வணக்கம், சங்கற்பம், கங்கை பூசை, முத்திரை திக்குபந்தனம் முதலாயின. நியாசங்கள் தருப்பணம், நீறணிந்து அஞ்செழுத்தோதி ஆதவன் பணிதலாகிய சைவானுட்டானர், துதி (120) எண்ணான்கறமும் செய்க (128). சரியைத் தொண்டினால் சாலோக பதவி 136, சிவலிங்க பூசனை சாரூப்பியம் தரும் (146). பின்னர் யோக பாதத்தை உபதேசித்தான். பிராணன் வெளியே ஓடுவதை நிறுத்தி, குண்டலியெழுப்புங் கொள்கை ஈது என்றான் (176) பிராணனை உள்ளே நிறுத்தும் இயற்கையும் விண்டான் (196). எல்லாத் தெய்வங்களும் நானே என்று சொல்ல, சக சிராரத்தில் துலங்கும் நடனசோதியும் காட்டி, அஞ்செழுத்தில் திரோதையும் மலமுமாகிய ந ம இரண்டையும் தீர்த்து, அதனில் வாகியை நிறுவி, சிவாயவாசி என்று விளம்புக; இது முத்தியஞ் செழுத்து; இப்பால் வாசிவா என்பது முதிர்ந்த பேறு; அப்பால் வாசி என்னும் ஈறெழுத்து அதிசயம் 222; பின்னர்,

சீ எழுத் தொன்றே சிந்தையிற் கருதத்
தூயநற் சுடராய்த் தோன்றுவை என்றான்.

நடன குஞ்சிதத்தால் சிலம்பொலி கேட்கும் திறம் பாலித்தான் (234). ஞானத்தில் அட்டாங்கயோகம் உணர்த்தி, ஞானயோக அட்டாங்க முணர்தி என்றான் (260). மூன்று பாதங்களும் நானெனும் போத நாட்டமேயன்றி, உணர்வுக்கு இன்பங்காணேன் என்று நான் கூறினேன் (265).

அவன் நகைத்து, பாச ஞானம் பசு ஞானம் ஈச ஞானம் என ஞானம் மூன்று. இவற்றின் முன் இயல்பைச் சொல்லி, மும்மல முடைய சகலன் நீ, உன்னை மலம் நீக்கி ஆட்கொண்டருளுமாறு மானுட வடிவாய் வந்தனம் (303), தெய்வம் சிவமே, சிவனருள் சமயம்: சைவம் சிவத்தோடு சம்பந்தம் என்று அறிவித்து (304), கருவிகள் அகற்றி, உனக்குச் செயலேதும் இல்லை என்று தன் செயல் நோக்கிச் சார்கென மொழிந்தான் (334).

சும்மா விருக்கச் சொன்னதோர் வார்த்தை
அம்மா அதிசயம் ஆருடன் புகல்வேன்! (336)

என் செயல் அகன்றேன், ஈசன் தன் செயல் நடக்கும் தன்மையுங் கண்டேன் (342). தன்னுளே சகமும் சகத்துளே யானும் பின்ன மற்றிருக்கும் பெற்றியும் கண்டேன் (360).

ஓங்கும் பரைக்குள் உள்ளொளி யாகித்
தேங்கு மானந்தச் செழுஞ்சுடர் கண்டேன்;
உள்ளொளிக் குவமை ஒன்றும் காணேன்.
விள்ளவும் தரமோ? மீமிசை விளங்கித்
தெளிபடும் சுடரைச் சிவமென் றுணர்ந்து
கண்படு ஞானக் கண்ணினாற் கண்டேன்.
பார்த்திடு மென்னைப் பசையற விழுங்க
அர்த்ததில் வீழ்ந்துற் றானந்த மானேன்.
தன்னைத் தந்தான், என்னைக் கவர்ந்தான்.
பின்னைப் பெறுமோர் பேற்றை யுங்காணேன்.

'சிற்றம்பலவன் செய்யுளாற் புகன்றான்' என்கிறார் (398). இதுவே செந்தூர்ப் பெருமான் தந்த பேறு. 'உலகத்தீரே நீவிரும் இப்பேறு பெறுவீர்' என்று சிற்றம்பலவன் செய்யுளாற் கூறினான். 'நீங்களும் இதைத் தெரிந்து கற்றுத் துதித்தால், அட்டமா சித்தியும் கொடுக்கும் சரியை கிரியை சார்ந்திடும் யோகம் தெரிதரு ஞானமும் செறிந்து வாழ்குவிர்' என்று ஆசிரியர் பாடலை முடிக்கிறார்.

சைவ சித்தாந்தப் பொருள்கள் பலவும் இதனுள் நன்கு சொல்லப்பட்டுள்ளன. இதன் ஆசிரியர் சிற்றம்பல நாடிகள். இவர் 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சிற்றம்பல நாடியினும்'* வேறாவர். இங்கு, முப்பதவதரங்களுள் பல விளக்கங் கூறுதலால், இந்நூலாசிரியர் தத்துவப் பிரகாசர் (14 நூ.) காலத்துக்குப் பிற்பட்டவர்; சுயம்பிரகாசம் சொரூபானந்தம் என்ற தொடர்களையும் காண்க. சிவ பூசை அதிகமாய் வலியுறுத்தப் பெற்றதும், அது பற்றிய சாத்திரங்கள் அதிகம் தோன்றியதுமாகிய காலம் 16ஆம் நூற்றாண்டு. இதுவே இவர் காலம் என்று கருதுகிறோம். இவர் ஆதி சிற்றம்பல நாடி வழிவந்த மற்றொரு சிற்றம்பல நாடிகளாக இருக்கலாம். விளக்கம் இல்லை.

திருச்செந்தூரகவல் பலமுறை பலராலும் பதிப்பிக்கப் பட்டுள்ளது. இது சாத்திர நூலாகவும் தோத்திர நூலாகவும் கொள்ளத்தக்கது. திருமுறைகளுள் 10ஆம் திரு முறையான திரு மந்திரமே தோத்திரமும் சாத்திரமும் ஆன முதல்நூல். 'சாத்திரமும் தோத்திரமும் ஆனார்தாமே' என்பது அப்பர் திருவாக்கு. பிற் காலத்தில் வைராக்கிய சதகம், கலைஞான தீபம் முதலான சில நூல்கள் ஒரு பாதி சாத்திரமாகவும், ஒரு பாதி தோத்திரமாகவும் அமைந்திருக்கின்றன.

முப்பதவதாரங்களை ஆதி சிற்றம்பல நாடிகளே தம் துகளறு போதத்துள் கூறுகிறார். இருப்பினும், இந்நூலின் நடையமைப்பும், முருகன் துதியும், இது அவர் செய்ததன்று' 16ஆம் நூற்றாண்டுக்குரியது என்று கருதச் செய்கின்றன. சிற்றம்பலவன் புகன்றான் என்று சொல்லியிருந்தால், அவர் 'உபதேசித்தார், இந்நூலாசிரியர் அவருடைய மாணாக்கர் என்று கருதக்கூடும்; செய்யுளாற் புகன்றான் என்றமையால் இத்தொடர் நூலாசிரியரையே குறிக்கிறது, இவர் மற்றொருவர் என்று முடிவு செய்கிறோம்.

## ஆன்மலிங்க மாலை

இது 14 சீர் ஆசிரிய விருத்தப் பாடல் 11 கொண்ட ஒரு சைவ நூல். சிவ பூசையில் பஞ்ச சுத்திகளைக் கூறுகிறது. பஞ்ச சுத்தியாவன பூத சுத்தி, ஸ்தல சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி,

---

* அவர் வரலாற்றை எமது 14ஆம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாறு நூலில் பார்க்க.

லிங்க சுத்தி என்பன. இந்த ஐந்தையும் சொன்ன பிறகு, சிவாலய தரிசனம் சாத்திர உபாய நிட்டை, சிவனடியார் திருவடி வணக்கம், சீவன் முத்தியனு போகம், பரமுத்தி விரும்பல் என்ற பொருள் களையும் கூறுகிறது. பாடல்தோறும்,

– கடாட்சம் வைத்தருள்
சிவோக மாயிருக்கச் சிதம்பரனே,
கமலை வாழ் தியாகா, காசிவிச் வேசா,
கயிலாய பதி எனும் குருவே.

என்னும் மகுடமுடையது. சிதம்பரன் - கமலை வாழ் தியாகன் என்பது, சிதம்பரநாதன் என்ற பெயருடைய கமலை ஞானப் பிரகாசரை. இவ்வாறு துதிப்பதால், இப்பாடல்களின் ஆசிரியர் அவருடைய சீடர் எனக் கருதப்பெறுகிறார்; ஒரு பாடலில், அவருக்கு வழங்கிய சத்திய ஞானி என்ற பெயரையும் 'சத்திய ஞான சுயம்பிரகாச சர்வக்ஞசரணனே' என்று குறிப்பிட்டுப் பாடுகிறார். சீவன் முத்தியனு போகம் என்ற தலைப்பில், அத்துவித முத்திக்கு உதாரணம் பல கூறுகிறார். கதிரவன் - கண், காட்டம் - கனல். அங்கி - இரும்பு, கங்கை - பொன், அண்டம் - வளி, ஆவி - உடல், லவணம் - நீர், ஆன்மா - ஆணவம், இரும்பு - காந்தம் என. இறுதிப்பாடலில் 'தேகம் மண்மேல் விழு முன்னம் காசி கங்கையங் கரைக்கு வந்து உமையுடன் நீ தாரக உபதேசம் செய்து சனனசாகரங் கடந்து நின் கருணைக் கடலுள் மூழ்கிச் சிவோக மாயிருக்கக் கடாட்சம் வைத்தருள்' என்கிறார். ஞானப்பிரகாசர் காலம் 1565 என முன்னர்க் குறிப்பிட்டோம். இவர் காலமும் அதையடுத்த தாகிய 16ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி என்பது தெளிவு.

## இரேவண சித்தர் - சிவஞான தீபம்

இது ரேவண சித்தர் செய்த சாத்திர நூல். இவர் வரலாறு முன் அகராதி நிகண்டு ஆராய்ந்த இடத்தில் (பக்கம் 90) சொல்லப் பட்டது. இந்நூலானது எண் சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத் தத்தால் 174 விருத்தங்கள் உடையது. ஆசிரியர் மூல சித்தாந்த சாத்திரங்களாகிய சிவஞான சித்தியாரையும் சிவப்பிரகாசத்தை யும் நன்கு பயின்று, அவற்றுள் நன்கு பயிலும் நெடிலடி விருத் தத்தால் இந்நூலைச் செய்திருக்கிறார். அவ்விரண்டையும் போலவே இதுவும் பாயிரம் (6 பாடல்) பொது இயல்பு (41 பாடல்) உண்மை இயல்பு(127) என்ற பாகுபாட்டை உடையது.

பாயிரப் பகுதியில் விநாயகர் சபாபதி அம்மையார் குரு வணக்கம் கூறி அவையடக்கம் கூறுகிறார். பாடல்கள் யாவற்றிலும் முன் நூல்களின் சொற்களையும் கருத்தையும் தொடர்களையும் அப்படியப்படியே எடுத்துப் பெய்திருப்பதைப் பாயிரத்துள்ளும் காணலாம். குருவணக்கம் என்பது தட்சிணாமூர்த்தி வணக்கமே அகராதி நிகண்டில் தம் ஆசிரியர் யார் என்று புலப்படுத்திப் பாடியவர் இங்கு எதையுமே புலப்படுத்தவில்லை; நூற்பெயர் சிவஞான தீபம் என்பதொன்று மட்டுமே சொல்லுகிறார் (பாட்டு 5).

சிவப்பிரகாசத்தில் பொது அதிகாரம் என்ற பகுதி நூலிற் பாதியாகும்; இங்கு இப்பகுதி அளவாற் குறுகியது. தீக்கை முறைகள் சொல்லிச் சைவ சீலம், விபூதி (திருநீறு) சொல்லுகிறார். திருநீற்றை விரித்துச் சொல்லுகின்ற நூல்கள் சென்ற (15) நூற்றாண்டு வரையில் இல்லை. இந்த நூற்றாண்டில் இடைப் பகுதியில் தான் மறைஞான சம்பந்தர் தம் நூல்களில் இதைச் சொல்லுகிறார். திருநீற்றை விரித்துரைக்கும் மரபு இந்நூற்றாண்டில்தான் புராணங்களிலும் மிகுதியாகத் தொடங்குகிறது. ஒருகால் ரேவண சித்தரும் மறைஞான சம்பந்தர் போன்றோரை அறிந்திருந்தார் என்று கருதக்கூடும். திருநீற்றை அடுத்து யாக்கை நிலை, வாயுக்கள், மும்மண்டலம், ஆதார யோகம், நவபேதம், பரசமய நிராகரணம், முத்திபேதங்கள், தருக்கம், பதி பசு பாச இயல்புகள் என்பன கூறுகிறார். பரசமய நிராகரணம் ஏழு பாடலில் முடிக்கிறார். இறுதிப் பாடலில் பிராசாத கலையைக் குறிப்பிடுகிறார்.

அடுத்து உண்மை இயல்பு என்ற பகுதியில், தத்துவங்கள், வாக்குக்கள், மூவேடணை, குணம், காமாதியான பகை, வாயு, பஞ்சகோசம், அவத்தைகள், பொருள்களின் சொரூபம் வியாபகம் முதலான தன்மைகள், தத்துவத் தோற்றம், ஒடுக்கம், தத்துவம் இருபத்தேழு என்ற வேதாந்தக் கூற்று, பஞ்சீகரணம், முப்பொருளும் அனாதி எனல், கலைகள் 38. கருவிகள், சிவலிங்கத் தத்துவம், அஞ்செழுத்தின் தத்துவம், நடராசத்துவம், முத்தி நிலை, சீவன் முத்தர்நிலை, அருளின் நிலை, குருலிங்க சங்கமம், ஆன்ம சொரூபம், ஆனந்தநிலை, உண்மை நிட்டை, அருள் ஞானம், சிவயோகம், ஐந்து சுத்தி, சத்திநிபாதம் ஞான பூசை, அருச்சனை பூசா பலன் என்ற பொருள்களைச் சொல்கிறார்.

*உண்மை விளக்கத்தைத் தழுவிப் பஞ்சாக்கர நடனம் கூறுகிறார். இவற்றின்பின் ஐந்து பாடல்களில் சிவலிங்க தாரணை, ஏகலிங்க பூசை, ஆசூசம் என்பனவற்றைக் கூறுகிறார். இவ்வைந்துமே வீர சைவக் கருத்து என்று சொல்லத்தக்கன. பின் முத்தி நிலையும் அருள் ஞானமுணராதார் தன்மையும் கூறி நூலை முடிக்கிறார். இறுதிப்பாடல் ஒன்று மட்டும் ஏழுசீர்ச் சந்தவிருத்தம்; அடியார் தன்மையைக் கூறுவது.*

*எடுத்துக்காட்டாக நூலிலுள்ள சில கருத்துக்களையும் பாட்டுக்களையும் குறிப்பிடலாம். எந்தத் தலத்தையும் இவர் குறிப்பிடாவிட்டாலும் பெரும்பற்றப்புலியூரை மட்டும் (127) ஒரு பாடலில் கூறுகிறார். இது காரணமாகத்தான் இவருக்குப் புலியூர் ரேவணசித்தர் என்ற பெயரும் வழங்குவது, நூலினிடையில் தத்துவப் பிரகாசத் தொடர்களும் கருத்துக்களும் நிரம்பப் பயில்கின்றன. முன்னூல்களை இவர் தழுவிப் பாடுவதற்கு உதாரணமாகப் பசு இலக்கணம் கூறும் பாடலைக் காட்டலாம்; இது சிவப்பிரகாசத்தை எடுத்து வைத்தது:*

செப்பருமா ருயிர்வருக்கம் அளப்பரிதாய் என்றும்
செறிதரும் ஆணவஇருளால் அனாதிமறைப் புளதாய்த்
தப்பரிய இருவினையின் துய்ப்பதனுக் கிசைந்த
தனுவாதி விதமாயை தர அவற்றைப் பொருந்தி
அப்பரிசே உயர்திணையோ டஃறிணையாய் விரிந்தே
அருநிரயஞ் சுவர்க்கநில மிசையிதமோ டகிதம்
எய்ப்புறநின் றருந்தியல மரும் இறைவன் அருளால்
இருவினையொத் திடிலரிய பரபதமுற் றிடுமே. 39

*ஈசானாதிமுகங்களில் 38 கலைகள் தோன்றின என்பது ஆகமக் கருத்து. முதன் முதாலாகக் கோவையுரையில் பேராசிரியர் இதைக் குறிப்பிடுகின்றார். பின்னர் தத்துவப் பிரகாசம், சதாசிவரூபம் முதலியவற்றிலும் இதுசொல்லியிருக்கக் காணலாம். பரமானந்த நிலையை இவர் கூறும் பாடல் பின்வருவது:*

உகைத்தாடுங் கயிறகன்ற ஊசல் போலும்
உலவாது திரிவொழிந்த கறங்கே போலும்
மிகைத்தாடும் விசையறும் பரமே போலும்
விளங்கொளி சேர் தாழ்ந்தமணி நாவே போலும்
செகத்தாப சித்திரத்தி னிலையே போலும்
சிவபோகத் தடங்கியுயிர் செயலொன் றின்றி

அகத்தாய நம்போதப் பற்று நீங்கி
அசைவறநிற் பதுபரமா னந்த மாமே. 44

*தத்துவப் பிரகாசப் பாடல் பின்வருவது:*

கயிறற்ற ஊசல் போலுங் கதிர்மணி யிருத்தல் போலும்
செயலற்ற பாசம் போலும் சித்திரத் துருவம் போலும்
வியலுற்ற பம்ப ரத்தின் விசையறல் போல ஆடும்
செயலற்ற கறங்கு போலும் அடங்கிடச் சிவம் உதிக்கும்.

*16ஆம் நூற்றாண்டில் காசிக்கு மிகுந்த சிறப்பு ஏற்பட்டிருந்தது. இதை அதிவீரராமர் காசி கண்டத்தை மொழி பெயர்த்தால் அறியலாம். ரேவண சித்தர் ஓரளவு இவற்றை யெல்லாம் மனத்தில் கொண்டு காசியும் ஆரூரும் அம்பலமும் அவரவர் உள்ளத்துள்ளே உள்ளன என்று கூறுகிறார்:*

கருவிகணா லொன்பதுவும் வேற தாகக்
கண்டகன்ற அதீதநிலை காசி யாகும்;
மருவுமுயிர் தனையறிவென் றறிந்து யாமே
மன்னனென நின்றநிலை ஆரூ ராகும்;
கருவிசட மென்றுயிர்கள் தம்மைக் காணக்
கண்ணிரவி எனவுயிர்க்குக் காட்டா நின்ற
அருளையுணர்ந் தியாவுமரன் செயலாம் உண்மை
அத்துவித நடந்தொழல் அம்பலம் தாமே. 153

*ஆதி சங்கரர் 'காசி க்ஷேத்திரம் இதன் சரீரம் திரிபுவன ஜனனி வியாபினீ ஞான கங்கா' என்று பாடியிருப்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. பாச ஞானம் பசு ஞானம் சிவ ஞானம் ஆகிய வற்றை விளக்கும் பாடல் தெளிவானது:*

இருவகையா மாயையிலுண் டான ஞானம்
எவ்வளவுண் டவ்வளவும் பாச ஞானம்;
மருவியதற் போதத்தாற் சித்தி முத்தி
மதித்தழுந்து நிட்டைபசு ஞான மாகும்;
பரவுமிசை யஞ்ஞானம், பாச ஞானம்
பசு ஞானஞ் சுதந்திரகீ னந்தான் என்றே
இருவகை ஞானமும் நீங்கி அருளால் ஆவி
ஈசனடி கூடலிறை ஞான மாமே. 154

*முத்திவகை மூன்று என்று இவர் சொல்லுவது கருதத்தக்கது. உத்தம முத்தி உடலைப்போடாது ஏகாது இங்கே பெறும்*

முத்தி. மத்திமமுத்தி உடலுடன் போய்ப் பெற்றிடுதல். அதம முத்தி உடலை நீத்துப் போதல். மூன்றுக்கும் இவர் உதாரணமாகக் கவுணியர் கோன் நாவரசனையும், ஊரனையும் சேரலனையும், மெய்ப்பொருள் ஏனாதிநாதரையும் குறிப்பிடுகின்றார் (பாட்டு 172). இது ஒரு புதுமையான கருத்து, இவர் கருத்தின்படி உடலைக் கொண்டு போகாமல் இங்கேயே கரைத்து ஒன்றிவிடுவது, மற்றொன்று உடலோடு சென்று பெறுவது, மூன்றாவது உடல் இறக்க ஆன்மா போய் முத்தி பெறுவது என்பதாகும்.

முத்திநெறி மூன்று: உடல் போடாவுடல் கொண்டேகா
முத்தியையிங் கேபெறுவ துத்தமமாம் முத்தி;
மத்திமமாம் உடலுடன் போய்ப் பெற்றிடுதல்; கனிட்டம்
மண்ணினுடல் விட்டருளை நண்ணுவதாம்; அவத்தை
ஒத்துறிலும் பவமுளவாம்; அவாவறுகல் துறவிங்
குண்டாகின் முத்திபெறும்; உவமையிதற் குலகில்
சித்தமுறுங் கவுனியர்கோன் நாவரையன் ஊரன்
சேரலன் மெய்ப்பொருள் ஏனாதிநாதன் முதற்றெளியே. 172

இந்த நூலில், பல நூல்களில் காணத்தக்க நுட்பமான பொருள்களையெல்லாம் ஆராய்ந்தெடுத்து ஒருசேரத் தொகுத்துக் கூறுகின்றார். செய்யுட்கள் மிகவும் எளிமையானவை. சிறந்த சம்பிரதாயச் செய்திகளையும் கருத்துக்களையும் இங்கே காணலாம். இந்நூற்பாடல்களில் பத்தைத் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் தம் உரையில் மேற்கோளாய் எடுத்துத் தந்துள்ளார். அதத்துவித வெண்பா உரையிலும் நிட்டானுபூதி உரையினும் இந்நூல் மேற்கோள் வருகின்றது.

ரேவண சித்தரையோ அவர் செய்த சிவஞான தீபத்தையோ அறியாதவர்களும்கூட, பிரசங்கிகள் சொல்லிச்சொல்லி,

எவ்வுயிரும் பராபரன்தன் சந்நிதிய தாகும்
இலங்கும்உயிர் உடலனைத்தும் ஈசன்கோயில்

என்ற வரிகளை நன்கு கேட்டறிந்திருப்பர். இவ்வரிகள் சிவஞான தீபத்தில் 11ஆம் பாடலின் முதல் அடியாகும். ஏனைய அடிகள் பின்ருவன:

எவ்வுயிரும் எம்முயிர்போல் என்று நோக்கி
இரங்காது கொன்றருந்தும் இழிவி னோரை
வவ்வியபின் தூதரருந் தண்டம் செய்து
வல்லிரும்பை உருக்கியவர் வாயில் வார்த்து

**வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறா**
**வேதனை செய் திடுவரென விளம்பும் நூலே**

*இது கொர்லை மறுத்தலைக் கூறும் பாடல், புலால் அருந்துபவர் எத்தனைக் கொடிய நரகத் துன்பமடைவர் என்று கூறுகிறது.*

பதிப்பு

*1910 சிவஞான பாலைய தேசிகர் ஆதீனம் இராமலிங்க சுவாமி பதிப்பு, மனோன்மணி விலாச அச்சுக்கூடம். இப்பதிப்பில் இந்த சுவாமி 'பேராளம் ரேவணாராத்திரி தேசிகர் அருளிச் செய்தது' என்று அச்சிட்டார்; இவர் வீர சைவர் ஆனமையால் இவ்வாறு கருதினார் போலும்.*

*2. திருவாவடுதுறை ஆதீனப் பதிப்பு 1962, த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை.*

*3. தஞ்சை சரசுவதி மகால் பதிப்பு 1970, அடிகளாசிரியர் பொழிப்புரை. ஏட்டுச் சுவடியில் நூலின் இறுதியில் காணப்பட்ட நான்கு பாடல் கொண்ட சித்தலிங்கேசன் வணக்கம் என்ற பகுதியையும் இங்கு சேர்த்து அச்சிட்டிருக்கிறார்.*

*1950 இல்சிவஞான தீபம் சென்னைத் தொன்னூல் நிலையச் சார்பில் தி.பொ. பழனியப்பப் பிள்ளையால் பரிசோதிக்கப் பெற்று ஒரு பதிப்பு வெளிவந்துள்ளது. இப்பதிப்பாளருக்கு முன்வந்த பதிப்பு விவரம் தெரியாமையால், பெரிதும் தெளி வில்லாத நிலையிலேயே நூலை வெளியிட்டிருக்கிறார்; இப் பதிப்பில் பல இடங்கள் தெளிவில்லாமல் பிழையாக உள்ளன. முன் அச்சான செய்தி அறியும் வாய்ப்பில்லாமையும் அச்சான பிரதி கிடைக்கும் வாய்ப்பில்லாமையும் இவ்வித இடர்களுக்கும் காரணம். மேலும் இந்த நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர் வரலாறு எழுதிய தேசிகர், ரேவண சித்தர் எழுதிய நூல்களில் ஒன்றாகச் சிவஞான தீபத்தைக் குறிப்பிட்டாரேயன்றி, நூலை ஆராய்ந்து எச்செய்தியும் சொல்லவில்லை, அவருக்கும் நூல் கிடைக்க வில்லை போலும்; இவையெல்லாம், அக்காலத்தில் நூல் ஆராய்ச்சி செய்தோர் இருளிலேயே தடமாடிக்கொண்டிருக்க நேர்ந்திருக்கிறது என்பதைக் காட்டுகின்றன. முன் குறிப்பிட்ட 1910க்கும் முன்னதாக மற்றொரு பதிப்பும் இருக்கிறது. வீரசை வத்தில் ஆசாரியர் ஐவர், பஞ்சாசாரியர் எனப்படுவர்; அவர்களில் ரேவணாராத்திய ஆசாரியரும் ஒருவர் என்றும் சொல்வர்.*

## குறிப்பு

நூலின் இறுதிப்பாடல் எழுசீர்ச் சந்தப் பாடல் என்று முன்னமே சொல்லப்பட்டது. அப்பாடல் பின் வருவது, அது தனிப்பாடல் என்று கருதத்தக்கது; நூலின் பகுதி என்று கொள்ளுமாறு இல்லை.

கருமுகில் நிகரன குழல்மட வரலியர்
களபமென் னகிலிணை கலவாரே
மருமல ரயனுடன் அரிமக பதிமிக
மகிழ்பத மணமுற மதியாரே
ஒருவுதல் இருவினை விதிமதி விபரிதம்
உறுபிற வியினெறி உழலாரே
அருமறை முடிவினில் நடமுடை யவனிணை
அடிதொழும் அடியவ ரடியாரே.

## ஆதார நூல்கள்

### அத்தியாயம்

1. ஏட்டுச் சுவடிகள், புரூரவசரிதை: செந்தமிழ் 1922-25.
புரூரவச் சக்கரவர்த்தி வாசகப்பா அச்சு 1860. நைடதம்.

2. வெற்றி வேற்கை, உலக நீதி : கா. நமசிவாய முதலியார், எஸ். ராஜம் பதிப்புக்கள்.
தினகர வெண்பா: வையாபுரிப் பிள்ளை பதிப்பு 1932.
நீதிவெண்பா: நமசிவாய முதலியார் பதிப்பு 1931.

3. குலோத்துங்க சோழனுலா உரை: ஐயரவர்கள் பதிப்பு.
கோயிற்புராணவுரை: நாவலர் பதிப்பு, ஏட்டுச் சுவடிகள்.

4. சூடாமணி நிகண்டு: நாவலர் பதிப்பு, நா. கதிரைவேற் பிள்ளை பதிப்புக்கிணங்க வித்தியா ரத்நாகரம் அச்சுக் கூடப்பதிப்பு 1935.
அகராதி நிகண்டு; மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு 1921.
பிரபந்த மரபியல்: அரசியலார் தொன்னூல் நிலையப் பிரதி சென்னை, காகிதம்.
சிதம்பரப் பாட்டியல்: மு. இராகவையங்கார் மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப்பு 1922.

*இரத்தினச் சுருக்கம்: பல பதிப்புக்கள். மாறனகப் பொருள் 1932, பாப்பாவினம் 1932, மாறனலங்காரம், நாராயண ஐயங்கார் பதிப்பு 1929, மதுரைத் தமிழ்ச் சங்கம்.*

5. *சிதம்பரப் பாட்டியலுரை, காரிரத்தினக் கவிராயர்: மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்புக்கள், செந்தமிழ் இதழ்கள்.*

6. *வெள்ளியம்பலவாணத் தம்பிரான் உரைப்பதிப்பு. தருமபுரம் அத்துவிதசாரம்: சித்தாந்தம் இதழ்கள்.*

*சாதி நூல்: பதிப்பு 1875. திருவாரூர்ப் பள்ளு - சோமசுந்தர தேசிகர் 1935.*

*குருஞான சம்பந்தர்: சண்முக சுவாமிகள் எழுதிய சரித்திர சங்கிரகம் 1928; தருமபுரம் நூல்கள், பண்டாரசாத்திரம் 1940, அட்டகம் 1971, பிராசாத நான்மணிகள் 1972, முத்திநிச்சயப் பேருரை 1946, ஞானாவரண விளக்கம் 1957, 1959. பூஜாபத்ததி - தஞ்சைச் சரசுவதிமகால் ஏடு. சிவபோக சாரம்.*

*திருச்செந்தூரகவல்: நாவலர் பதிப்பு 1927 ஆன்மலிங்க மாலை, சித்தாந்தம் இதழ். சிவஞான தீபம்:*

*சோமசுந்தர தேசிகர் எழுதிய தமிழ்ப்புலவர் வரலாறு 16ஆம் நூற்றாண்டு 1936; மு. இராகவையங்கார் பெருந்தொகை 1935, ஆராய்ச்சித் தொகுதி 1938. சேதுநாடும் தமிழும் ரா. ராகவையங்கார், 1928. கொன்றை மாநகரம் சண்முகசுந்தர முதலியார் - சித்தியார் அறுவருரைப் பதிப்பு 1898.*



## சூரியனார் கோயில் ஆதீன மரபு



ஸ்ரீ கண்ட பரமசிவம்

கந்த சுவாமி

வாமதேவ ரிஷி

நீலகண்ட சிவாசாரியர்

விசுவேசுவர சிவாசாரியர்

சதாசிவ சிவாசாரியர் *1450 - 1475*

சிவமார்க்கப் பிரகாச சிவாசாரியர் *1475 - 1525*

சிவக்கொழுந்து தேசிகர் (சிவாக்கிர யோகி)
ஆதீனம் நிறுவியவர் *1500 - 1550*

வீழி சிவாக்கிர யோகிகள் *1550 - 1575*
*(சாத்திரங்கள் செய்தவர்)*

நந்தி சிவாக்கிர யோகிகள் *1560 - 1600*
சிவநெறிப்பிரகாச உரை செய்தவர்

சிவக்கொழுந்து தேசிகர் *(1600 - 1640)*

சொக்கலிங்க தேசிகர் *(1640 - 1680)*
(திருமாந்துறைப் பண்டார சந்நிதி)

ஏழு ஆசாரியர்; இடையில் அம்பலவாண தேசிகர் என
ஒருவர் மட்டும் மலையாள நாட்டுப் பிராமணர் *1680 - 1688*

முத்துக் குமார தேசிகர் *(1888 - 1918)*

மீனாட்சி சுந்தர தேசிகர் *(1918 - 1947)*
*சமாதியடைந்தது 1973இல்*

*இவர்களில் சதாசிவ சிவாசாரியர் வடமொழிச் சிவஞான போத விருத்தி எழுதியவர். வீழிச் சிவாக்கிரயோகியே பெருநூல்கள் செய்தவர். ஆதீன முதல்வர் என்றும் கொள்ளப் பெறுபவர். நந்தி சிவாக்கிரயோகி, சிவநெறிப் பிரகாச உரை செய்தவர். மீனாட்சிசுந்தர தேசிகர் இறைஞான போதம் முதலான நூல்கள் செய்தவர்.*

| ஞானப்பிரகாசர் பெயர் அட்டவணை | | | |
|---|---|---|---|
| எண் | பெயர் | காலம் | நூல் |
| 1. | காஞ்சி ஞானப்பிரகாசர் I (பழுதைகட்டி) | 1350 | இல்லை |
| 2. | காஞ்சி ஞானப்பிரகாசர் II | 1350 - 1375 | இல்லை |
| 3. | சிவபுரம் ஞானப்பிரகாசர் | 1375 - 1425 | இல்லை |
| 4. | களந்தை ஞானப்பிரகாசர் | 1450 - 1500 | தசகாரியம் சகலாகமசாரம் |
| 5. | மதுரை ஞானப்பிரகாசர் | 1450 - 1475 | சிவப்பிரகாச உரை |
| 6. | செட்டித்தெரு ஞானப்பிரகாசர் | 1475 - 1525 | இல்லை |
| 7. | கச்சி ஞானப்பிரகாசர் | 1475 - 1500 | இல்லை |
| 8. | கச்சி ஞானப்பிரகாசர் | 1500 - 1525 | கச்சிக் கலம்பகம் மஞ்சரிப்பா |
| 9. | கமலை ஞானப்பிரகாசர் | 1525 - 1575 | மழுவாடிப் புராணம் |
| 10. | திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் | 1550 - 1575 | சித்திபரபக்க உரை |
| 11. | திருவண்ணாமலை ஞானப்பிரகாசர் (சாலிவாடிபுரம்) | 1550 - 1600 | சித்தி சுபக்க உரை |
| 12. | பனையூர் ஞானப்பிரகாசர் | 1634 | இல்லை |
| 13. | வேதாந்த ஞானப்பிரகாசர் | 17 நூ. | இல்லை |
| 14. | நாவினால் மழு எடுத்த ஞானப்பிரகாசர் | 17 - 8 நூ. | வீரநாராயண விஜயம் |

| ஆசாரியர், மாணாக்கர் | வேறுகுறிப்புக்கள் |
|---|---|
| சிற்றம்பல நாடி சீடர் | அவரோடு சமாதி கொண்டார். |
| காஞ்சி ஞானப்பிரகாசர் 1 இன் சீடர் | காஞ்சி ஞானப்பிரகாச மடத்தின் மூலவர். |
| சம்பந்த முனிவரின் மாணாக்கர் | சிவபுரம் தத்துவப் பிரகாசரின் குரு. |
| கண்கட்டி மறைஞான சம்பந்தரின் குரு | சத்திய ஞான பண்டாரத்தின் சீடர். |
| மதுரைச் சிவப்பிரகாசரின் குரு | களந்தை ஞானப்பிரகாசரின் சீடர் |
| கமலை ஞானப் பிரகாசரின் குரு | சிவபுரம் தத்துவப் பிரகாசரின் சீடர். |
| புராணத் திருமலை நாதரின் குரு | காஞ்சி மடத்தின் தலைவர். |
| பரஞ்சோதியின் குரு | கச்சி ஞானப்பிரகாசரின் சீடர். தனிப்பாடல்கள். |
| செட்டித்தெரு ஞானப் பிரகாசரின் சீடர், புதல்வர் | தருமபுரம் மடம் நிறுவிய குருஞான சம்பந்தரின் குரு. |
| கண்கட்டி மறைஞான சம்பந்தரின் சீடர் | ஒற்றியூர் - தத்துவப் பிரகாசரின் குரு. |
| | சிவஞான சுவாமியின் மறுப்பு; சிதம்பரம் |
| ஞானப்பிரகாச குளம். | |
| சிவதருமம் என்ற நூலின் ஆசிரியரின் குரு | சிவதருமம் 58 பாடலுடையது 17 நூ. |
| திருவலஞ்சுழி சிவப்பிரகாசர் குரு | பரிபூரணசித்தியாசிரியரின் குரு |

| மறைஞான சம்பந்தர் | | | | | |
|---|---|---|---|---|---|
| எண் | ஆசிரியர் | காலம் | நூல் | ஆசிரியரும் மாணாக்கரும் | பிற குறிப்புக்கள் |
| 1 | கடந்தை மறைஞான -சம்பந்தர் | 1300 | சதமணிக் கோவை | அருணந்தி சிவத்தின் மாணாக்கர். உமாபதி சிவத்தின் குரு | சைவ சந்தான ஆசாரியருள் மூன்றாமவர். மருதூர், பெண்ணாகடம் - ஊர்கள். அந்தணர், பராசர மரபு. |
| 2 | சிதம்பரம் கண்கட்டி - மறைஞான சம்பந்தர் | 1625 - 1675 | அருணகிரிப் புராணம், கமலாலய புராணம், சிவதருமோத்தரம், சைவ சமய நெறி, பதி பசுபாசப் பனுவல், சங்கற்ப நிரா கரணம், பரமத திமிரபானு முதலான பல; முத்திநிலை | களந்தை ஞானப் பிரகாசரின் சீடர், மறைஞான தேசிகரின் குரு | மறைஞான சம்பந்த நாயனார், குகை மறைஞான சம்பந்தர் என்றும் பெயர். சில நூல்கள் கிடைக்க வில்லை. முத்தி நிலையைக் குருஞான சம்பந்தர் மறுத்து முத்தி நிச்சயம் எழுதினார். இவர் வேளாளர். |
| 3 | சீகாழி மறைஞான தேசிகர் | 1650 - 1700 | சிவ புண்ணியத் தெளிவு, சித்தியார் உரை, சிவதருமோத்தர உரை, பதிபசு பாசத் தொகையுரை. | 2. மறைஞான சம்பந்தரின் மாணாக்கர். | |

குறிப்பு: ஞானசம்பந்தர் என்ற பெயர் முதன் மூன்று தேவாரத் திருமுறைகள் பாடிய திரு முலைப்பாலுண்ட சீகாழி திருஞான சம்பந்தருக்குரிய பெயர். இதைப் பின்னே பலர் சூட்டிக் கொண்டனர். மேற்காட்டிய பெயர்களெல்லாம் அப்பெயரின் வழி வந்தனவே. தருமபுர ஆதினக் குரு முதல்வரும் ஒரு ஞானசம்பந்தர்: அவர் பெயர் குருஞான சம்பந்தர்.

## கமலை ஞானப்பிரகாசரின் மாணாக்கர்

### கமலை ஞானப்பிரகாசர் 1525 – 1550

சிவபூசையகவல், புட்ப விதி, திருவானைக்காப் புராணம், அத்துவித சாரம், பிராசாத மாலை, மழபாடிப் புராணம்



ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணை

| காலம் | இலக்கியம் உரை | இலக்கணம் உரை | சைவம் | வைணவம் | பிற |
|---|---|---|---|---|---|
| 1500 -1525 | அரிச்சந்திரபுராணம் | மண்டல புருடர் சூடாமணி நிகண்டு பிரபந்த மரபியல் | புராணத்திருமலை நாதர். செட்டித்தெரு ஞானப்பிரகாசர் | செவ்வைச் சூடுவார், அரிதாசர் | வலிவல மும்மணிக்கோவை - கச்சிஞானப்பிரகாசர், கயிலாய சித்தர் |
| 1525 -1550 | நாககுமார காவியம் | பரஞ்சோதி திருக் குருகைப் பெருமாள் மாறன் அகப்பொருள் அலங்காரம் பாப்பா வினம் | கண்கட்டி மறைஞான சம்பந்தர் கவிராச பண்டிதர். கோயிற் புராண உரை | அருளாள தாசர் பிள்ளை லோகம் ஜீயர். குருகை மான்மியம் | திருவாரூர் தத்துவப் பிரகாசர் குமார சரகவதி தோணியப்பர் சைன தோத்திர நூல்கள் சில. பாண்டி கவிராசர் |
| 1550 -1575 | அதிவீரராமர் நைடதம் | இரத்தினச் சுருக்கம் | திரு ஒற்றியூர் ஞானப் பிரகாசர் | | குமார சுவாமி அவதானி |
| | வெற்றி வேற்கை | காரி இரத்தினக் கவிராயர் | மறைஞான தேசிகர், சிவாக்கிரயோகி | | வீரை - அம்பிகாபதி. கொக்கோகம் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | நிரம்பவழகியர் -<br>சேது புராணம்,<br>உலக நீதி<br>உரை | தண்டியலங்கார உரை<br>சிதம்பரப் பாட்டியல் | கமலை ஞானப்<br>பிரகாசர்<br>குருஞான சம்பந்தர்.<br>நிரம்ப அழகியதேசிகர்<br>வரகுணராமர்<br>வரதுங்கராமர்<br>குகை நமசிவாயர்<br>எல்லப்ப நாவலர் | | வீரவெண்பா மாலை<br>சித்தர்கள் |
| 1575<br>-1600 | அனதாரி - சுந்தர<br>பாண்டியம்<br>சேறைக் கவிராச பிள்ளை<br>ஐயம்பெருமாள்<br>புரூரவ சரிதை.<br>தினகர வெண்பா,<br>நீதி வெண்பா,<br>உத்தண்டன் கோவை | ரேவண சித்தர்<br><br>அகராதிநிகண்டு | திரு அண்ணாமலை<br>ஞானப்பிரகாசர்<br>அளகை சம்பந்தர்<br>சிதம்பரநாத பூபதி<br>குருநமச்சிவாயர்<br>நந்தி சிவாக்கிரயோகி<br>ஆனந்தக்கூத்தர்<br>குருஞானசம்பந்தர்<br>திருச்செந்தூரகவல்<br>ஒற்றி தத்துவப் பிரகாசர்<br>சிவஞான தீபம். உந்தி<br>களிறு பொழிப்புரை | கூடற் புராணம் | பழனிக்கோவை<br><br>காசிக் கலியன்<br>கவிராயர்<br>ஆன்மலிங்க மாலை.<br>பரமேசுரப் புலவன். |

| பரஞ்சோதி | | | | |
|---|---|---|---|---|
| என் | பெயர் | காலம் | நூல் | வரலாறு |
| 1 | பரஞ்சோதி | 7 நூ. | இல்லை | 63 நாயன்மாருள் ஒருவரான சிறுத்தொண்டர்; பெரியபுராணம் இவர் வரலாற்றை 88 பாடல்களால் சொல்கிறது. ஊர் திருச்செங்காட்டங்குடி. மன்னவர்க்கு (நரசிம்மபல்லவன்) தண்டுபோய் வாதாபி வடபுலத்துத் தென்னகரம் துகளாக்கியவர்; அப்போது இவர் பெயர் பரஞ்சோதி |
| 2 | பரஞ்சோதி மாமுனிகள் | 12 நூ. | இல்லை | திருக்கயிலாய பரம்பரையில் சத்தியஞான தரிசனிகள் மாணாக்கராய் ஆகாய வீதிவழியே வந்து மெய்கண்டாருக்குச் சிவஞான உபதேசம் செய்தவர். கயிலாயவாசி. |
| 3 | பரஞ்சோதி | 16 நூ. | சிதம்பரப் பாட்டியல் | புராணத் திருமலை நாதரின் புதல்வர்; கச்சி ஞானப்பிரகாசரின் மாணாக்கர். |
| 4 | பரஞ்சோதி முனிவர் | 1700 - 25 | திருவிளையாடற் புராணம் | சிறப்பான இந்நூல் பாடிப் பெரும் புகழ் பெற்றவர். பலபட்டடைச் சொக்கநாதப் புலவரால் போற்றப் பெற்றவர். திருஞானசாகர வெண்பா ஆசிரியர், சுப்பிர தீபக்கவிராயர் முதலியோருக்குக் குரு. கூடற் பரஞ்சோதி முனிவர் எனப்படுவார். |

# மேற்கோள் செய்யுள் முதற்குறிப்பு

# பொருள் அகராதி

# சிறப்புப் பெயர் அகராதி



முன்னெழுதி வெளிவந்த
எமது நூற்றாண்டு வரலாறுகளுக்கும்
இந்த 16ஆம் நூற்றாண்டு வரலாற்றுக்கும்
ஒரு வேறுபாடு உண்டு.
முந்திய நூல்களில் ஓர் ஆசிரியரையும்
அவர் செய்த நூல்களையும்
ஒரே இடத்தில் ஆராய்ந்திருக்கிறோம்.
இங்கு அப்படியல்ல.
புராணம், சமய தத்துவ நூல்,
உரை நூல், இலக்கண நூல்,
தோத்திர நூல் என்ற
பல்வேறு துறைகளில்
சில புலவர் நூல் செய்திருக்கிறார்கள்.
இவ்வகை ஆசிரியர்களின் நூல்களை
ஒரே இடத்தில் ஆய்வு செய்யாமல்
பொருத்தமான அத்தியாயங்களிலேயே,
அவ்வக் கருத்துக்களின்
வளர்ச்சி புலப்படும் முறையில்,
ஆராய்ந்திருக்கிறோம்.
இலக்கிய வளர்ச்சியை எண்ணும்போது
இவ்வகை ஆய்வு
அவசியமாகின்றது.



The PARKAR